# பொருளாதார முன்னேற்றம்: அன்றும் இன்றும்

(economic development: past & present)

ஆசிரியர்:
ரிச்சர்ட் டி. கில்

தமிழாக்கம்:
அ. குழந்தை

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க. வெ.) வரிசை எண் — 872

# பொருளாதார முன்னேற்றம்: அன்றும் இன்றும்

ஆசிரியர்
**ரிச்சர்ட் டி. கில்,**
ஹார்வர்டு பல்கலைக்கழகம்.

தமிழாக்கம்
**அ. குழந்தை, பி. ஏ. (ஆனர்ஸ்),**
பொருளாதாரப் பேராசிரியர்,
அரசு கலைக் கல்லூரி,
உடுமலை, கோயமுத்தூர்.

தமிழ்நாட்டுப்
**பாடநூல் நிறுவனம்**
சென்னை

First Edition—August, 1981
Number of Copies—1000

T. N. T. B. S. (C.P.) No. 872



**ECONOMIC DEVELOPMENT: PAST AND PRESENT**

*Author*
RICHARD D. GILL

*Translated By*
A. KULANDAI

**Price Rs. 12-50**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*
N. L. R. C. Press,
21, North Usman Road,
T. Nagar, Madras- 17

# அணிந்துரை

( திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர் )

தமிழைக் கல்லூரிக் கல்விமொழியாக ஆக்கி இருபத்தோ ராண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங் கலை வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர் களின் ஊக்கம், பிற, பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல் கள் எழுதித்தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகை யில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாண வர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற் சியைப் பெறுவதற்கு மதுரைக் காமராசர் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெரு முயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

அகராதியியல், அரசியல், இயற்பியல், உயிரியல், உளவியல், கணிதவியல், சட்டவியல், தாவரவியல், புவியமைப்பியல், புவியியல், புள்ளியியல், பொருளியல், பொறியியல், மனையியல், மெய்ப்பொரு ளியல், வரலாற்றியல், வானியல், விலங்கியல், வேதியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் நூல் களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான பொருளாதார முன்னேற்றம் : அன்றும் இன்றும் என்னும் இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 872 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க்குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 907 நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு, கல்வி, சமூகநல அமைச்சகத்தின், 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளி யிடும் திட்ட'த்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங் களையும, அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங் களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எங்கும் தமிழ்; எதிலும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரித்தாகுக !

செ. அரங்கநாயகம்

# நவீனப் பொருளாதாரத் தொடர் வெளியீடுகள்

**(Foundations of Modern Economics Series)**

கடந்த சில ஆண்டுகளாகப் பொருளாதாரம் மிக விரைவாக வளர்ச்சியடைந்து வந்துள்ளதால் அதன் விரிவும் செறிவும் எவ்வளவோ அதிகரித்துவிட்டன; அதோடு, அனுபவ வாயிலாகப் பொருளாதார இயலை அணுகும் புதியதொரு முறையும் தற்போது செல்வாக்குப் பெற்று வருவதால் பொருளாதாரத்தின் இயல்புகூட எவ்வளவோ மாற்றமடைந்துவிட்டது. எனவே, பொருளாதார இயலை முழுமையாக எந்த ஒரு நூலாலும் விளக்கமுடியாத நிலை ஏற்பட்டுவிட்டது. இதனால்தான் நவீனப் பொருளாதாரத் தொடர் வெளியீடுகள் (Foundations of Modern Economics Series) என்னும் தொடரில் நூல்கள் உருவாக்கப்பட்டுள்ளன. பொருளாதார இயலைச் சார்ந்த துறை ஒவ்வொன்றின் அமைப்பு, பொருளடக்கம், அதிலுள்ள சில முக்கியமான அறிவியல் பிரச்சினைகள், கொள்கைப் பிரச்சினைகள் ஆகிய அனைத்தையும் பிரதிபலிக்கும் வகையில் சிறு சிறு நூல்கள் வெளியிடுவதுதான் இந்தத் தொடர்வெளியீட்டின் நோக்கமாகும். அதற்காக, அந்தந்தத் துறையில் சிறப்பும் புகழும் வாய்ந்த வல்லுநர்களால் எழுதப்பட்ட சிறிய நூல்கள் இந்தத் தொடரில் வெளியிடப்பட்டுள்ளன. கல்லூரி மாணவர்களின் ஓராண்டுக் கால அடிப்படைப் படிப்பிற்கு இந் நூல்கள் போதுமானவை. இவ் வரிசையில் வெளிவந்துள்ள 'Prices and Markets', 'National Income Analysis' ஆகிய இரு நூல்களும் பொருளாதார ஆய்விற்கு அடிப்படையானவை. 'The Price System' என்னும் நூலோ நுண்ணினப் பொருளாதாரத்தினை (Micro Economics) அறிமுகப்படுத்தும் நூலாகும். மேலும், இவ் வரிசையில் வெளிவந்துள்ள 'Evolution of Modern Economics', 'Economic Development: Past and Present' என்னும் இரு நூல்களையும் பொருளாதாரத்திற்குத் தொடக்க நூல்களாகக் கொள்ளலாம். எனவே, பொருளாதாரம் பயிலாதவர்கள் கூட இவ்விரு நூல்களையும் எளிதாகப் புரிந்துகொள்ள முடியும்.

மூன்றாம் பதிப்பாக வெளிவந்துள்ள இந்த நூல் முழுமையாக மறுபரிசீலனை செய்யப்பட்டு, திருத்தப்பட்டிருப்பதுடன், இன்றைய நிலைக்குப் பொருத்தமுடையதாகவும் செய்யப்பட்டுள்ளது. இன்று முக்கியமானதாகக் கருதப்படும் பகுதிகள் புதிதாகச் சேர்க்கப்பட்டும் விரிவுபடுத்தப்பட்டும் உள்ளன. இந்நூல் சிறியதாயும் சுருக்கமான தாயும் இருந்தால் நல்லதென்பதற்காக, பழைய பொருள் விளக்கங்கள் நீக்கப்பட்டுள்ளன. தொழில் நிறுவனங்களில் நிருவாகத் தீர்மானங்களை எடுப்பதற்குப் பொருளாதார ஆய்வுமுறை எப்படித் துணைசெய்ய முடியும் என்பதை முழுமையாகக் காட்டும் வகையில், 'Managerial Economics' என்னும் நூலும் இவ் வரிசையில் வெளியிடப்பட்டுள்ளது.

கடந்த சில ஆண்டுகளாக, பொருளாதார அறிஞர்கள் வலியுறுத்திவரும் முக்கியமான பிரச்சினைகள் வருமானப் பிரச்சினை பற்றியதும் சூழ்நிலைக்கேற்பப் பொருளாதாரம் அமைய முற்படுவது பற்றியதுமாகும். எனவே, இவ் வரிசையில் வெளிவந்துள்ள நூல்களில் இப் பிரச்சினைகளின் அடிப்படையும் ஆராயப் பட்டுள்ளன. பொருளாதார அமைப்பிலுள்ள அம்சங்களில் எவை எவை இப் பிரச்சினைகளை ஏற்படுத்துகின்றன என்பதும் ஆராயப் பட்டுள்ளது. வருமானப் பங்கீடுபற்றிய விரிவான விளக்கங்களை எத்தனையோ நூல்களில் காணலாம். அதோடு, பொருளாதாரச் சூழ்நிலைபற்றிய ஆய்விற்கு 'Economics and the Environment' என்னும் தலைப்பில் புதியதொரு நூலும் இதே வரிசையில் வெளிவந் துள்ளது. வருமானப் பங்கீட்டுப் பிரச்சினைகளோடு பொருளாதார அமைப்புப் பற்றிய பிரச்சினைகளையும் இந் நூலில் காணலாம்.

வழக்கமாகப் பயன்படுத்தப்பட்டுவரும் பழம்பெரும் நூல் களுக்குப் பதிலாக, பொருளாதார ஆசிரியர்கள் இந்த வரிசையில் வெளிவந்துள்ள நூல்களைப் பயன்படுத்தலாம். அப்படிப் பயன் படுத்தும்போது, பாடத் திட்டங்களைத் தத்தம் பாணியில் அமைத்துக் கொள்வதற்கும், அடிப்படையான தத்துவங்களை நன்கு புரிந்துகொண்டு, பாடத் தலைப்புகளை வரிசைப்படுத்தி, வேண்டிய பகுதிகளை விளக்கமாகச் சொல்லித் தருவதற்கும் இந் நூல்கள் உதவும். அதோடு, இந் நூல்கள் அனைத்திலும் அக்கறை யில்லாத ஆசிரியர்கள் தமக்கு வேண்டிய நூல்களை மட்டும் நன் றாகப் படித்து, விரிவாகச் சொல்லித்தரவும் இவை உதவக்கூடும். மேலும், நுண்ணினப் பொருளாதாரத்தையோ (Micro Economics) பருவினப் பொருளாதாரத்தையோ (Macro Economics)

அரையாண்டுப் பருவத்திற்குள் சொல்லிக் கொடுப்பதற்கும் இந் நூல்கள் பெரிதும் உதவக்கூடும். இவ்வாறாக, பொருளாதார ஆசிரியர்கள் இந்நூல்களை எத்தனையோ வழிகளில் பயன்படுத்தக் கூடும்.

புதிய முறையில் பாடம் கற்பிப்பதற்கென்றுதான் இந் நூல்கள் வெளியிடப்பட்டு வருகின்றன. ஒவ்வொரு பொருளாதாரப் பாடத்திற்கும் தனித்தனிச் சிறு நூல்களாக வெளியிட்டு வரும் எங்களுக்குக் கிடைத்துள்ள பேராதரவு எங்களை மேலும் ஊக்குவித்து வருகிறது. இந் நூல்கள் பெற்றுள்ள செல்வாக்கும், இவற்றைப் பின்பற்றிச் சொல்லித்தரும் ஆசிரியர்களிடமிருந்து வந்துள்ள விமர்சனங்களும் சேர்ந்து இந் நூல்களை மூன்றாம் பதிப்பாக வெளியிடச் செய்துள்ளன. பாட நூல்களுக்குப் பதிலாக இந்த நூல்களைத் தாம் பல ஆசிரியர்கள் பின்பற்றி வருகின்றனர். அதோடு, தொடக்கநிலைப் படிப்பிற்கும் இடைநிலைப் படிப்பிற்கும் இவை துணை நூல்களாகவும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

இந் நூல்கள் திட்டவட்டமான முடிவுகளைத் தருவதில்லை. மாறாக, ஒவ்வொரு நூலும் அதனதன் முக்கியமான பிரச்சினைகளை மட்டும் எடுத்துக்காட்டி, அவற்றைப் பொருளாதார ஆய்வு முறைப்படி புத்திசாலித்தனமாகத் தீர்ப்பதெப்படி என்பதைச் சுட்டிக் காட்டுகின்றது. அதோடு, மாணவனைச் சிறந்த குடிமகனாக ஆக்கவும், பொருளாதாரத் துறையில் மேலும் ஈடுபாடு கொள்ளச் செய்யவும் இந்நூல்கள் உற்சாகமளிக்கின்றன.

ஆட்டோ எக்ஸ்டீன்
பதிப்பாசிரியர்

# பொருளடக்கம்

பக்கம்

பக்கம்

# தொடக்கவுரை

உலக வரலாற்றில் மனிதன் உயிர் வாழ்வதெப்படி என்ற பிரச்சினைதான் பெரும் பிரச்சினையாக இருந்துவந்துள்ளது. வரலாற்றில் எந்தக் காலத்தை எடுத்துக்கொண்டாலும், அந்தந்தக் காலத்தில் மன்னர்களென்றும், பிரபுக்களென்றும், குறுநில மன்னர்களென்றும் எத்தனையோ செல்வந்தர்கள் சுகபோகமாகவும், வீண் ஆடம்பரமாகவும்கூட வாழ்ந்திருக்கின்றனர் என்பது தெளிவாகத் தெரியும். சில சமயங்களில் பொருளாதார நிலை முன்னேற்ற மடைந்ததும் உண்டு ; அப்படி முன்னேற்றம் ஏற்பட்டபோதெல்லாம் கலைகளும் தொழில்நுட்பமும்கூட ஓரளவிற்கு வளர்ச்சி பெற்று ஏழை மக்களுக்குச் சிறிதளவு வசதியும் கிட்டியுள்ளது. ஆனால், அம் முன்னேற்றம் மிக மெதுவாகத்தான் ஏற்பட்டிருக்கின்றது. முன்னேற்றம் ஏற்பட்டதைக்காட்டிலும் பொருளாதாரச் சீர்குலைவுதான் அடிக்கடி ஏற்பட்டது. சொல்லப்போனால் நல்ல காலத்தைத் தொடர்ந்து கஷ்ட காலமும், செழிப்பான காலத்தையடுத்துப் பஞ்சகாலமுமாக மாறிமாறி ஏற்பட்டுவந்தன. எனவே, மக்கள் எவ்வளவு நேரம் பாடுபட்டாலும் மிகக் குறைந்த ஊதியமே பெற்றுக் கஷ்டப்பட்டு வாழ்க்கையை எப்படியோ நடத்திவந்தனர்.

ஆனால், இன்றைய உலகமோ அப்படியின்றி, புதுமையான பொருளாதார முன்னேற்றத்தைக் கண்டுள்ளது. ஐரோப்பாவில் தொடங்கிய இம் முன்னேற்றம் அமெரிக்கா, ஜப்பான், ஆஸ்திரேலியா போன்ற பல நாடுகளுக்கும் பரவியுள்ளது; அதனால் கடந்த 200 ஆண்டுகளாகப் பொருளாதார வளர்ச்சி வீதம் எத்தனையோ மடங்கு அதிகரித்துவந்துள்ளது. இப்படி முன்னேற்றமடைந்துள்ள இந் நாடுகளின் மொத்த உற்பத்தி சிறிது சிறிதாகவும் விட்டுவிட்டும் அதிகரிக்காமல், மிக வேகமாகவும் தொடர்ச்சியாகவும் அதிகரித்து வந்துள்ளது; தலா உற்பத்தியோ மொத்த உற்பத்தியைக் காட்டிலும் துரிதமாக அதிகரித்து, பல மடங்கு பெருகியுள்ளது. பழங்காலத்தில் பல நூற்றாண்டுகளாக, ஏன் யுகங்களாகக்கூட ஏற்பட்டிருக்கக் கூடிய முன்னேற்றம் இன்று ஒருசில ஆண்டுகளிலேயே நிகழ்ந்துள்ளது. அத்துடன் இம் முன்னேற்றத்தினால் செல்வந்தர்கள் மட்டுமன்றிச் சாதாரண மக்களும்கூட நல்ல பலனடைந்து உயர்ந்த வாழ்க்கைத்தரத்தை அடைந்துள்ளனர்.

மிக விரைவாகவும் தொடர்ச்சியாகவும் ஏற்பட்டுவந்துள்ள இம் முன்னேற்றம்தான் பொருளாதார வளர்ச்சியில் மிக முக்கியமானது.

எனவே, இப்படிப்பட்ட பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிக்கும் காரணிகள் யாவை? கடந்த ஓரிரு நூற்றாண்டுகளில் ஒருசில நாடு கள் மட்டும் இவ்வளவு விரைவாக முன்னேற்றம் அடைந்ததெப்படி? அதேசமயம், ஏனைய பல நாடுகளோ முன்னேற்றமேயின்றித் தேங்கிவிட்டதும், அவற்றில் சில சீர்கேடுற்றுப்போனதும் எதனால்?

இப் பிரச்சினைகள் வெறும் பாடப் பிரச்சினைகள்தாம் என்று எண்ணிவிட வேண்டாம். ஏனெனில், ஒருசில ஆண்டுகளாக உலகி லுள்ள எல்லா நாடுகளுமே பொருளாதார முன்னேற்றத்தில் தீவிர மான அக்கறை காட்டிவருகின்றன. அமெரிக்கா, ரஷ்யா, இன்னும் பிற தொழில்வளமிக்க நாடுகள் ஒன்றோடொன்று போட்டியிட்டு முன்னேற்ற மடைந்துவருவதையும் நாம் பார்க்கின்றோம். அத் துடன் அப்படி முன்னேற்றமடைந்துவருவதால், மனிதன் உயிர்வாழ் வதற்கு இன்றியமையாத இயற்கைச் சூழ்நிலையும் சுற்றுப்புறமும் கெட்டுவருகின்றதே என்ற கவலையும் ஏற்பட்டுள்ளது. மாறாக, ஏழை நாடுகளான ஆசியா, ஆப்பிரிக்கா, இலத்தீன் அமெரிக்கா நாடு களோ இவ்விதக் கவலையேயின்றி, பொருளாதார முன்னேற்றத்தி லேயே அக்கறைகொண்டு வருகின்றன; மேற்கத்திய நாடுகளைப் போல் தாமும் விரைவாக முன்னேற்றமடைந்து தத்தம் வருமானத் தை உயர்த்திவிட வேண்டுமெனத் துடித்துக்கொண்டிருக்கின்றன. இவ்வாறாக, பின்தங்கியுள்ள நாடுகள் துரிதமாக முன்னேறிவிட முயன்றுவருவது குறிப்பிடத்தக்கது; ஏனெனில், இனி வரும் 50 ஆண்டுகள் வரை உலக நாடுகள் மேற்கொள்ளக்கூடிய முக்கியமான சமூக, பொருளாதாரப் பணிகளில் இம் முயற்சியும் ஒன்றாக இருக்கப் போகின்றது.

பொருளாதார வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் அடைவ தற்கான வழிமுறைகள் யாவை என்பதைப் பொருளாதாரம் அறி வுறுத்துகின்றது. அவற்றைப்பற்றித்தான் இந்நூலில் நாம் தெரிந்து கொள்ளப்போகின்றோம். நமது ஆய்வு, பொருளாதாரப் பிரச் சினைகளைமட்டுமன்றி, வரலாறு, சமூகவியல், அரசியல் சம்பந்தப் பட்ட பிரச்சினைகளையும்கொண்ட பரந்த ஆய்வாகும். இவ்வாய் வில், நாம் தெரிந்துகொள்ள வேண்டிய இன்னும் எத்தனையோ பிரச்சினைகளும் உள்ளன என்பது புலனாகும். எனினும்,கடந்த 20 ஆண்டுகளாக மேற்கொள்ளப்பட்ட நுணுக்கமான பல ஆராய்ச்சி களின் பலனாகப் பல அடிப்படையான உண்மைகளையும் நாம் தெரிந்துகொண்டுள்ளோம். சமூக நடவடிக்கைகளில் அக்கறை கொண்டுள்ள மாணவன் அவற்றைக்கொண்டுதான் தன் ஆய்வை மேற்கொள்ள வேண்டியுள்ளது. இந்த அடிப்படையான உண்மை கள் யாவை என்பதைத்தான் இந் நூலில் குறிப்பிட முயன்றுள் ளோம்.

# 1. பொருளாதார முன்னேற்றத்தின் பொதுக் காரணிகள்

நவீன உலகில் விரைவான பொருளாதார முன்னேற்றம் என்றாலென்ன என்பது நன்கு தெளிவாகிக்கொண்டுவருகிறது. பொருளாதார முன்னேற்றம் அடைந்துள்ள ஐரோப்பிய, வட அமெரிக்க நாடுகள் 150 ஆண்டுகளுக்கு முன்னர்ச் செய்த தலா உற்பத்தி (per capita output), முன்னேற்றம் குறைந்துள்ள ஆசிய, ஆப்பிரிக்க, இலத்தீன் அமெரிக்க நாடுகள் செய்ததைக் காட்டிலும் இரண்டு மூன்று மடங்குதான் அதிகமாயிருந்தது. ஆனால், இன்றோ அதன் வேறுபாடு பத்து, பதினைந்து, இருபது மடங்கு கூட அதிகமாகிவிட்டது. மேலும், உலகின் ஒரு பகுதியில் தொழில் வளம் பெருகி, தொழில்நுட்ப முன்னேற்றம் கொண்ட நகர மக்கள் தாம் அதிகமாக வாழ்கின்றனர்; ஆனால், அதேசமயம் மற்றொரு பகுதியிலோ மிகப்பழமையான முறைகளில் விவசாயம் செய்துவரும் குடியானவர்களைத்தாம் அதிகமாகக் காண்கின்றோம். மேற்கத்திய நாடுகளில் விரைவாக ஏற்பட்டுவரும் முன்னேற்றத்தினால் அங்கு வாழும் செல்வந்த மக்களுக்கு எத்தனையோ பிரச்சினைகள் தோன்றியுள்ளனவே என்று கேட்கலாம்; ஆனால், அதேசமயத்தில் அந் நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரத்திற்கும் ஏனைய ஏழை நாடுகளில் வாழும் மக்களின் வாழ்க்கைத்தரத்திற்கும் எவ்வளவோ வேறுபாடு ஏற்பட்டுள்ளதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

இவ்வாறாக, நாட்டிற்கு நாடு பொருளாதார முன்னேற்றத்தில் வேறுபாடு தோன்றியதற்குப் பல காரணங்கள் உள்ளன; அவற்றில் அந்தந்த நாட்டின் வரலாறு, கலாசாரம், இன்னும் எத்தனையோ சூழ்நிலைகளும்தாம் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவை. நாடுகளிடையே இவ்விதமான சூழ்நிலை வேறுபாடுகள் இருந்தபோதிலும், எல்லா நாடுகளுக்குமே பொதுவாக இருக்கக்கூடிய முக்கியமான சில முன்னேற்றக் காரணிகளைப் பொருளாதார அறிஞர்கள் நன்கு அறிந்துள்ளனர். அதாவது, ஒரு நாட்டிலுள்ள உற்பத்திச் சாதனங்களின் அளவு, தரம், அமைப்புமுறை ஆகியவற்றிலிருந்து

தோன்றுவதுதான் முன்னேற்றச் சக்திகள். இச் சக்திகளெல்லாம் ஒன்றுசேர்ந்து ஒரு நாட்டில் எப்படி இயங்குகின்றன என்பதைப் பொருளாதார அறிஞர்கள் விளக்கி வருகின்றனர்; எனவே, அவ் விளக்கத்தைக்கொண்டு நமது ஆய்வைத் தொடங்குவோம்.

## உற்பத்தி அமைப்புமுறை

உற்பத்தியின் தன்மைகளில் சில எல்லா நாடுகளுக்குமே பொது வானவைதாம். முதலாவதாக, உற்பத்தி செய்வதற்குச் சில அடிப் படையான காரணிகள் தேவை; இவற்றைத்தாம் நாம் உற்பத்திக் காரணிகள் என அழைக்கின்றோம். அதாவது உழைப்பு, இயற்கை வளங்கள், இன்னும் சில வகையான கருவிகள், தளவாடங்கள் போன்ற முதற்கருவிப் பொருள்கள் (capital goods) இருந்தால் தான் உற்பத்தி செய்ய முடியும்.

உற்பத்திக் காரணிகள் இருந்தால்மட்டும் போதாது; உற்பத்தி செய்யக்கூடிய விதத்தில் அவற்றையெல்லாம் உசிதமான வழியில் ஒன்றுசேர்த்து அமைக்கவேண்டும். அத்துடன், சமுதாயத்தினர் விரும்பும் வகையில் உற்பத்தி நடைபெற வேண்டுமாயின் ஓரளவு திறமையும் தொழில்நுட்ப அறிவும் தேவை. எனவே, சமுதாயம் விரும்பும் பொருள்களையும் பணிகளையும் உற்பத்தி செய்வதற்கு வேண்டிய சாதனங்களே இல்லாமல் போய்விட்டாலும் சரி, அல்லது அச் சாதனங்கள் இருந்தும் அவற்றை ஏதாவதொரு வகையில் ஒருங்கிணைக்க முடியாமல்போயிருந்தாலும் சரி, மனிதன் காட்டு மிராண்டியாகத்தான் வாழ நேர்ந்திருக்கும்.

பொருள்களை உற்பத்தி செய்வதற்கு உற்பத்திக் காரணிகளை ஒருங்கிணைக்கும் முறையைத்தான் உற்பத்திச் சார்பு (production function) எனப் பொருளாதார அறிஞர்கள் அழைக்கின்றனர். காரணிகளின் உள்ளிடுகைக்கும் (input) பண்டங்களின் வெளிப்படு கைக்கும் (output) உள்ள தொடர்பைக் காட்டுவதுதான் உற்பத்திச் சார்பாகும். பெரும்பாலும், எந்தப் பண்டத்தை உற்பத்தி செய்ய வேண்டுமானாலும், அதற்கென்று பல உற்பத்திக் காரணிகளைத் தொகுக்க வேண்டியுள்ளது என்பதைத்தான் இது புலப்படுத்துகிறது. சான்றாக, வெறும் உழைப்பைமட்டும் கொண்டு உற்பத்தி செய்ய இயலாது; உழைப்போடு இயற்கை வளங்களும் முதற் கருவிப் பொருள்களும் சேர்ந்தால்தான் உற்பத்தி செய்யமுடியும். அப்படி யென்றால், பொருள்களை உற்பத்தி செய்யும்போது பெரும்பாலும் ஏதாவதொரு காரணியைச் சிறிதளவு குறைத்துவிட்டு, அதற்குப் பதிலாக ஏனைய காரணிகளைச் சிறிதளவு அதிகரிக்கக்கூடும்

என்பதுதான் இதன் பொருள். சான்றாக, இரயில் பாதை அமைப்பதற்குச் சிறிதளவு இயந்திர சாதனங்களையும் அதிக உழைப்பாளிகளையும் பயன்படுத்தலாம்; அல்லது உழைப்பாளிகளைக் குறைத்துக் கொண்டு, அதிகமாக இயந்திர சாதனங்களைப் பயன்படுத்தியும் அமைக்கலாம். இவ்வாறாக, தொழில்நுட்ப முறை குறிப்பிட்டதொரு நிலையில் இருக்க, உற்பத்திக் காரணிகளின் உள்ளிடுகையை வெவ்வேறு விகிதங்களில் தொகுத்து உற்பத்தி செய்தால் உற்பத்தியின் அளவும் வெவ்வேறாக மாறுகின்றது என்பதைத்தான் இந்த உற்பத்திச் சார்பு புலப்படுத்துகின்றது.

இவ்விதமான உற்பத்திச் சார்பு ஒன்றினை 1–1 வரைபடத்தின் வாயிலாகவும் விளக்கக்கூடும். சான்றாக, மிக எளிமையானதொரு சமுதாயத்தை ஊகித்துக்கொள்வோம்; அச் சமுதாயத்தினர் மிகப் பழங்காலக் கருவிகளையும் தொழிலாளரையும் பயன்படுத்தித் தமக்கு வேண்டிய குடிநீர்க் கிணறுகளைக் கட்டுவதாகவும் வைத்துக் கொள்வோம். அவ்வாறாயின், அச் சமுதாயத்தினர் பயன்படுத்தும் தொழில் நுட்பம் பற்றிய பல விவரங்களை 1–1 வரைபடம் புலப்படுத்துகின்றது எனலாம். முதலாவதாக, குறிப்பிட்ட எண்ணிக்கையில் (உதாரணமாக, 100 என்று வைத்துக்கொள்வோம்) கிணறுகளைக் கட்டிமுடிப்பதற்கு அச் சமுதாயத்தினர் எத்தனையோ வழிகளைப் பின்பற்றலாம். சான்றாக, அச் சமுதாயத்தில் வேலையாள்கள் அதிகமாகவும் கருவிகள் மிகக் குறைவாகவுமிருந்தால் $A$ புள்ளி காட்டும் முறையில் கிணறுகள் கட்டப்படும். அதாவது, அச் சமுதாயத்தினர் $OL_2$ வேலை மணி நேரத்தையும் $OT_2$ கருவிகளையும் பயன்படுத்தி அந்த 100 கிணறுகளைக் கட்டி முடிக்கக்கூடும். ஆனால், இந்த 1–1 வரைபடம் மற்றொன்றையும் சுட்டிக் காட்டுகிறது; அதாவது, அச் சமுதாயம் குறைந்த அளவு உழைப்பையும் $(OL_1)$ அதிக அளவு கருவிகளையும் $(OT_1)$ பயன்படுத்தியும் அதே நூறு கிணறுகளைக் கட்டி முடிக்க முடியும். அச் சமுதாயத்தில் கொள்ளை நோய் ஏற்பட்டு உழைப்பாளிகளின் எண்ணிக்கை குறைந்து விட்டால், அப்போது $B$ புள்ளி காட்டும் முறையைத்தான் கடைப்பிடிக்க நேரிடும். இதற்கு நேர் மாறாக, முன்னேற்றமடையாத நாடுகளில் பெரும்பாலும் மக்கள்தொகை அதிகமிருப்பதால், அந் நாடுகள் $A$ புள்ளி காட்டுவதைப்போல் அதிக உழைப்பைப் பயன்படுத்தும் முறையைத்தான் மேற்கொள்ளும்.

பொதுவாகக் கூறின், உழைப்பையும் கருவிகளையும் வெவ்வேறு தொகுப்புகளில் எப்படியெல்லாம் சேர்த்து அதே 100 கிணறுகளைக் கட்ட முடியும் என்பதைத்தான் $A$, $B$ புள்ளிகளுள்ள வளைகோடு காட்டுகிறது. அதேபோல், எப்படி எப்படியெல்லாம் உழைப்பையும்

கருவிகளையும் வெவ்வேறு வீதங்களில் தொகுத்து 150 அல்லது 200 கிணறுகளைக் கட்டக்கூடும் என்பதை மற்ற இரு வளைகோடுகளும் காட்டுகின்றன. சான்றாக, $OL_3$ உழைப்பையும் $OT_3$ கருவிகளையும் சேர்த்து 200 கிணறுகளைக் கட்டி முடிக்கக்கூடும் என்பதை $C$ புள்ளி காட்டுகிறது. ஆனால், இப்படி உற்பத்தி அளவை அதிகரிக்க வேண்டுமாயின், ஏதாவதொரு காரணியையோ இரண்டு காரணிகளையுமோ அதிகமாகப் பயன்படுத்த வேண்டும் என்பதை இதிலிருந்தே நாம் யூகித்துக் கொள்ளலாம். எனவே, உற்பத்தி பெருகப் பெருக இவ் வளைகோடுகள் தோற்றுவாயிலிருந்து (origin) வடகிழக்குத் திசையில் நகர்ந்துகொண்டே செல்கின்றன. இக்கோடுகளை, 'சம அளவு' என்ற பொருளில், 'சம உற்பத்திக் கோடுகள்' (isoquants) என்று அழைப்பது வழக்கம்.




படம் 1-1. ஓர் உற்பத்திச்சார்பு

இச் சம உற்பத்திக் கோடுகள், உண்மையில், கடல் மட்டத்திலிருந்து சமஉயர இடங்களைக் காட்டும் சம உயரக்கோடுகளைப் (contour lines) போன்றதுதான். எனவே, $O$ புள்ளியிலிருந்து மற்றோர் அச்சு ($Z$ அச்சு) இத்தாளின் தளத்திற்குச் செங்குத்தாக நிற்பதாக இப்போது நாம் யூகித்துக் கொள்ள முடிகிறது. இந்த அச்சில் உற்பத்தியின் அளவு — அதாவது நமது சான்றின்படி கட்டி முடிக்கப்படும் கிணறுகளின் எண்ணிக்கை —அளவிடப்படுவதாக வைத்துக் கொள்வோம். அவ்வாறாயின், இந்த இருபரிமாணப் படத்தில் முப்பரிமாணப் படம் பிரதிபலிக்கும் வகையில் இச் சம உற்பத்திக் கோடுகள் செய்துவிடுகின்றன. எனவே, ஒரு மலையின் தளத்தைப் போல் இந்த உற்பத்தித் தளமும் மேலே செல்வதுபோல் நீங்கள் எண்ணிப் பார்க்கக்கூடும்; அப்போது, சம உயரங்களிலுள்ள இடங்களைக் காட்டும் சம உயரக் கோடுகளைப்போலவேதான், இச் சம உற்பத்திக் கோடுகளும் வடகிழக்குத் திசையில் உயர்ந்து கொண்டே செல்லும் தன்மையுடையனவாகக் காட்சியளிக்கும்.

இச் சம உற்பத்திக் கோடுகள் தோற்றுவாயை நோக்கிக் குவிந்திருக்கும் வகையில் வரையப்பட்டுள்ளன. இதற்குக் காரணம் உண்டு. அதாவது இக் கோடுகள் புலப்படுத்துவதுபோலவேதான் உற்பத்தி நடைமுறையும் உள்ளதென்று நம்புகின்றனர். இப்போது

*A* புள்ளியையும் *B* புள்ளியையும் ஒப்பிட்டுப்பார்த்தால் இக்கோட்டின் அமைப்பு ஏன் இப்படியுள்ளது என்பது தெளிவாகத் தெரியும். சம உற்பத்திக் கோடு தோற்றுவாயை நோக்கிக் குவிந்திருப்பதால்தான், அதன் சரிவு *B* புள்ளியில் இருப்பதைக் காட்டிலும் *A* புள்ளியில் அதிகமாயுள்ளது. இப்போது, இக் கோட்டில் நாம் பயன்படுத்தும் காரணிகளில் மிகச் சிறிய மாறுதல்கள் — பொருளாதார அறிஞர்கள் கூறுவதுபோல் இறுதிநிலை மாறுதல்கள் (marginal changes)— ஏற்படுவதாக யூகித்துப்பார்த்தால், கோட்டின் சரிவிலுள்ள வித்தியாசத்தின் பொருளை நாம் எளிதாக அறிந்துகொள்ளலாம். சான்றாக, *A* புள்ளியில் பயன்படுத்தப்படும் கருவிகள் சிலவற்றை நாம் எடுத்து விட்டு, உற்பத்தி குறைந்துவிடாமல் அதே 100 கிணறுகளைக் கட்ட வேண்டுமாயின், அதற்கு மேலும் சில தொழிலாளர்களை வேலைக் கமர்த்தவேண்டும். ஆனால், *B* புள்ளியில் அதே அளவு கருவிகளை எடுத்துவிட்டு அதே நூறு கிணறுகளைக் கட்டிமுடிக்க ஒருசில தொழிலாளர்களை மட்டும் அதிகமாக அமர்த்தினால் போதும். எனவே, *A* புள்ளியில் கருவிகளுக்குப் பதிலாக அதிக உழைப்பாளிகளைப் பயன்படுத்துவதைக்காட்டிலும் *B* புள்ளியில் பயன்படுத்துவதுதான் நல்லது. காரணம், *B* புள்ளியிலிருப்பதைக் காட்டிலும் *A* புள்ளியில்தான் தொழிலாளர் அதிகம்; அதேபோல் *A* புள்ளியைக் காட்டிலும் *B* புள்ளியில்தான் கருவிகள் அதிகம். இவ்வாறாக, சம உற்பத்திக் கோடு தோற்றுவாயை நோக்கிக் குவிந்திருப்பதிலிருந்து என்ன புலப்படுகிறதெனின், சம உற்பத்திக் கோட்டில் நாம் நகர்ந்துகொண்டே சென்றால் அதிகமாகிக்கொண்டே வரும் காரணியைப் பதிலீடு செய்வது எளிதாகிக்கொண்டேபோகிறது; அதேசமயம் குறைந்துகொண்டேவரும் காரணியைப் பதிலீடு செய்வதோ கடினமாகிக்கொண்டேபோகிறது என்பதுதான்.

உற்பத்திச் சார்பின் ஏனைய பண்புகளைப்பற்றி நாம் மேலே போகப்போகப் பார்க்கலாம்[1]; இப்போது நமது பொருளாதார முன்னேற்ற ஆய்விற்கே திரும்பிவிடுவோம். ஒரு நாடு பொருளாதார முன்னேற்றமடையக்கூடிய பல வழிகளில் ஒன்றை மட்டும்தான் 1–1 வரைபடம் காட்டுகிறது. அதாவது *A*, *B* புள்ளிகளில் 100 கிணறுகளைக் கட்டி முடிப்பதற்குப் பதிலாக, மேலும் அதிகமான கருவிகளையும் தொழிலாளரையும் பயன்படுத்தி *C* புள்ளியில் 200 கிணறுகளைக் கட்டமுடியும். எனவே, பொருளாதார முன்னேற்றமடைவதற்கு,

[1] உற்பத்திச் சார்பைப்பற்றி விரிவாகத் தெரிந்துகொள்ள விரும்புவோர் இதே வரிசையில் இரண்டாம் பதிப்பாக வெளியாகியுள்ள 'Robert Dorfman' அவர்களின் 'Prices and Markets' என்னும் நூலைப் (பக்கம் 95) பார்க்கவும்.

உற்பத்திக் காரணிகளின் உள்ளிடுகையை அதிகரிப்பது முக்கியமான தொரு வழியாகும். இவ் வழியைப்பற்றிப் பொதுவாக ஆராய வேண்டுமாயின், பொருளாதார முன்னேற்றத்திற்குக் காரண மாகும் மூன்று முக்கிய அம்சங்களைத் தெரிந்துகொள்வது நல்லது. அவை :

(1) மக்கள்தொகை வளர்ச்சி.

(2) இயற்கை வளங்கள்.

(3) மூலதனத் திரட்சி.

இங்கு, ஒன்றை நாம் மறந்துவிடக் கூடாது. அதாவது, காலம் செல்லச்செல்ல, ஒரு நாடு தன்னிடமுள்ள உற்பத்திக் காரணிகளைப் பயன்படுத்தும் முறையில் முன்னேற்றம் ஏற்படலாம்; அப்போது குறிப்பிட்ட காரணிகளைக்கொண்டே முன்பைவிட அதிகவளவு உற்பத்தியைப் பெறக்கூடும். உற்பத்தி செய்யும் முறையை முன் னேற்றுவதன் வாயிலாகவும், உற்பத்திச் சார்பை நகர்த்துவதன் வழி யாகவும் உற்பத்தி அதிகரிக்க முடியும். ஆனால், 1–1 வரைபடமோ தொழில்நுட்ப அறிவு மாறாமல், குறிப்பிட்டதொரு நிலையில் அப்படியே இருப்பதாக அனுமானிக்கப்பட்டு வரையப்பட்டுள்ளது. ஆனால், நடைமுறையில் தொழில்நுட்ப அறிவு வளரக்கூடும். (சொல்லப்போனால் முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் தொழில் நுட்ப அறிவு வளர்ந்துகொண்டுதான் இருக்கிறது.) அவ்வா றாயின், நமது சம உற்பத்திக் கோடுகள் மேல்நோக்கி நகர்ந்துவிடு கின்றன; அப்போது, காரணிகளின் பழைய தொகுப்பு ஒவ்வொன் றையும் கொண்டு முன்பைவிட அதிக உற்பத்தியைப் பெற முடி கிறது. எனவே, ஒவ்வோர் உள்ளிடுகை அலகிலிருந்தும் அதிக உற்பத்தியைப் பெறமுடிவதால் பொருளாதார முன்னேற்றத்திற் கான காரணிகளின் பட்டியலை நாம் விரிவுபடுத்த வேண்டி யுள்ளது.

(4) பேரளவு உற்பத்தி அல்லது சிறப்புத் தேர்ச்சி (specialization) முன்னேற்றம்.

(5) உற்பத்தித் திறன் அதிகரிப்பு.

(6) தொழில்நுட்ப முன்னேற்றம்.

இக் காரணிகளைப்பற்றி இந் நூலில் நாம் அடிக்கடி குறிப்பிட வேண்டியுள்ளது; எனவே, இவை ஒவ்வொன்றைப்பற்றியும் சுருக்க மாக இவ் வதிகாரத்தில் பார்ப்போம்.

## மக்கள்தொகை வளர்ச்சி

நமது ஆய்வை மக்கள்தொகை வளர்ச்சியைக்கொண்டு தொடங்குவதுதான் இயல்பானது. ஏனெனில், பொருளாதார நடவடிக்கைகள் அனைத்தும் மேற்கொள்ளப்படுவது மக்களுக்காகத் தான்; அவற்றை மேற்கொள்வதும் மக்கள்தாம். இதைக்காட்டிலும் முக்கியமான காரணம், இந்த நவீன காலத்தில்தான் மக்கள்தொகை வியக்கத்தகுந்த வகையில் பெருகிவந்துள்ளது என்பதுதான். பழங் காலத்தில் மக்கள்தொகை இவ்வளவு துரிதமாக வளர்ச்சி அடைந்த தில்லை. சான்றாக, கிறித்தவ சகாப்தம் தொடங்கியதிலிருந்து 17ஆம் நூற்றாண்டுவரை உலக மக்கள்தொகை இரண்டு மடங்கு கூடப் பெருகவில்லை; 17ஆம் நூற்றாண்டின் மத்தியில்தான் இரண்டு மடங்காக அதிகரித்தது. ஆனால், இன்று வளர்ந்துவரும் போக்கைப் பார்த்தால் 40 ஆண்டுகளிலேயே உலக மக்கள்தொகை இரண்டு மடங்காகப் பெருகிவிடும்போல் இருக்கிறது. 1970ஆம் ஆண்டிலிருந்த உலக மக்கள்தொகை 3·5 பில்லியன் என்றும், பிறப்பு வீதம் 2 சதவிகிதமென்றும் மதிப்பிடப்பட்டுள்ளது. இந்த வேகத்தில் மக்கள்தொகை வளர்ச்சிபெற்றுவந்தால், 600 ஆண்டு களுக்குப் பின்னர் இவ்வுலகில் ஒவ்வொரு மனிதனுக்கும் சராசரி ஒரு சதுர கெஜ நிலம்தான் இருக்கும். அதனால்தான், ஒருசிலர் எச்ச ரிக்கை செய்கின்ற தோரணையில் ‘இவ்வுலகில் நிற்பதற்குக்கூட இடம் கிடைக்குமா’ என்ற கேள்வியைக் கேட்கின்றனர்.

மக்கள்தொகை வளர்ச்சிக்கும் பொருளாதார முன்னேற்றத் திற்குமுள்ள தொடர்பு முக்கியமானதுமட்டுமன்று, சிக்கலானதும் கூட. மக்கள்தொகை பெருகினால்தான் உற்பத்தி செய்வதற்கு அடிப்படையான உழைப்பும் அதிகரிக்கும் என்பது உண்மைதான். சான்றாக, நவீன காலம் தொடங்கும்வரை பொருளாதார முன்னேற் றம் ஏற்பட்டதற்கு முக்கியமான காரணமே மக்கள்தொகை வளர்ச்சி தான் என்பதை வரலாறுகூடப் புலப்படுத்துகின்றது. இதை எவரும் மறுக்கமுடியாது. ஆனால், பரம்பரைபரம்பரையாகப் பயன்படுத்தப் பட்டுவந்த ஏதோ சில புராதனக் கருவிகளைக்கொண்டு உற்பத்தி செய்யப்பட்டு வந்த அக்காலத்தில் உழைப்புதான் உற்பத்திச் செல்வமாக இருந்துவந்தது. ஆனால், இன்றோ மக்களின் தலா உற்பத்தி இவ்வளவு விரைவாக அதிகரித்து வருவதற்கு உழைப்பு தான் முக்கியக் காரணமென்று சொல்வதற்கில்லை. மக்கள்தொகை வளர்ந்தால் நாட்டின் மொத்த உற்பத்தியும் அதிகரித்துவிடுகின்றது என்பது உண்மைதான்; ஆனால், அதேசமயம் உற்பத்தியான வற்றை முன்பைவிடப் பெருக்கமடைந்துள்ள மக்களிடையே பகிர வேண்டியுமுள்ளது என்பதை மறந்துவிடவேண்டாம். மக்கள்தொகை உயர்வால் மக்களின் எண்ணிக்கை மட்டுமன்றி, உற்பத்தியைப் பங்கு

போட வேண்டிய தலைகளும் அதிகரித்துவிடுகின்றன ; வேறு விதமாகக் கூறின், உற்பத்தி செய்யக்கூடிய கைகள் மட்டுமன்றி, உணவளிக்க வேண்டிய வாய்களும்கூட அதிகரித்துவிடுகின்றன.

பட்டியல் 1-1.

மிக வேகமாக வளரும் உலக மக்கள்தொகை

| காலம் | ஒவ்வொரு 50 ஆண்டுகளிலும் உலக மக்கள்தொகை அதிகரிக்கும் விகிதம் |
|---|---|
| 1650 — 1700 }<br>1700 — 1750 } ... ... ... | 16·8 |
| 1750 — 1800 ... ... ... | 24·4 |
| 1800 — 1850 ... ... ... | 29·2 |
| 1850 — 1900 ... ... ... | 37·3 |
| 1900 — 1950 ... ... ... | 53·9 |
| 1950 — 2000 ... ... ... | 100·0 + ? |

இன்று மக்கள்தொகை வளரும் விகிதத்தில் பார்த்தால் 40 ஆண்டுகளுக்குள்ளாகவே உலக மக்கள்தொகை இரண்டு மடங்கு (அதாவது 100 சதவிகிதம்) அதிகரித்துவிடும். கடந்த 300 ஆண்டுகளாக மக்கள்தொகை எவ்வளவு வேகமாக வளர்ந்துவந்துள்ளதோ, அதே வேகத்தில்தான் இன்றும் வளர்ந்துவருகிறது.

[ஆதாரம் : L. Dudley Stamp அவர்களின் 'Our Developing World' (London: Faber and Faber, 1960) என்ற நூல் 19ஆம் பக்கம்.]

எனவே, மக்கள் தொகை அதிகரிப்பதன் விளைவாக ஒரு நாட்டின் நிகரத் தலா உற்பத்தி அதிகரிக்குமா குறைந்துவிடுமா அல்லது அப்படியே இருக்குமா என்பது அந்நாட்டின் மக்கள்தொகை வளரும் விதத்தை மட்டுமன்றி, எந்தச் சூழ்நிலையில் மக்கள்தொகை வளர்கின்றது என்பதையும் பொறுத்தது. சான்றாக, இனப் பெருக்கச் சக்தி அதிகமாயுள்ள நிலையில் ஒரு நாட்டின் மக்கள்தொகை வளர்ந்தால் அந் நாட்டில் வயதுவந்தவர்களைக் காட்டிலும் குழந்தைகள் அதிகமாகிவிடுவர்; அவ்வாறாயின், வேலை செய்வோரைக் காட்டிலும் நுகர்வோரின் எண்ணிக்கை அதிகமாகி, வேலை செய்து சம்பாதிப்போரை நம்பி வாழ்வோரின் எண்ணிக்கை வளர்ந்துவிடும். இதன் விளைவாக, அந் நாட்டின் தலா உற்பத்தியும் குறைந்துவிடும். ஒருவேளை, அந் நாட்டில் மக்களின் வாழ்க்கை நாள்கள் அதிகரித்து, அதனால், தம் வாழ்நாளில் அவர்கள் வேலை செய்யும் காலமும் அதிகரித்துவிட்டால், மற்றவர்களை நம்பி வாழும் பிரச்சினை ஓரளவு தணிந்துவிடலாம்.

இப்போது, மக்கள்தொகை எந்தவிதமாக வளர்கின்றது என்ற பிரச்சினையை விட்டுவிட்டு, எந்தச் சூழ்நிலையில் மக்கள்தொகை

வளர்கிறது என்ற முக்கியமான பிரச்சினையை எடுத்துக்கொள்வோம். ஒவ்வொரு நாட்டிற்குமுள்ள நிலப்பகுதி வரையறுக்கப்பட்டிருக்கும்போது, ஒரு நாட்டில் மக்கள்தொகை விரைவாக அதிகரித்தால் அந் நாட்டிலுள்ள இயற்கை வளங்களுக்கு நெருக்கடி ஏற்பட்டுவிடுகிறது. அத்துடன் அந் நாட்டிலுள்ள முதற் கருவிப் பொருள்கள் மிகக் குறைவாக இருந்தால், ஆக்கமிக்க இயந்திரங்களைப் பயன்படுத்தி உற்பத்தி செய்வதற்குப் பதிலாக, அதிகரித்து வரும் தொழிலாளர்கள் அதிகமாக வேலை செய்யக்கூடிய முறையைத்தான் கடைப்பிடிக்கவேண்டியிருக்கும். இவ்விதமான விளைவுகளைத்தாம் 'குறைந்துசெல் விளைவு விதி' (the law of diminishing returns) என்னும் தலைப்பில் பொருளாதார அறிஞர்கள் ஆய்கின்றனர். பொதுவான முறையில் இவ் விதியைப் பின்வருமாறு கூறலாம்:

> 'ஒரு பண்டத்தை உற்பத்தி செய்யும்போது, ஏனைய உற்பத்திக் காரணியின் (அல்லது காரணிகளின்) அளவை மாற்றாமல் அப்படியே வைத்துக்கொண்டு ஒரு காரணியின் அலகுகளைமட்டும் அதிகரித்துக்கொண்டே போனால், அதிகரிக்கப்படும் காரணியின் ஒவ்வோர் அலகிலிருந்தும் கூடுதலாகக் கிடைக்கும் மொத்த உற்பத்தி ஏதாவதொரு நிலைக்குப் பின்னர்க் குறையத் தொடங்கிவிடுகிறது.'

ஏனைய உற்பத்திக் காரணிகளெல்லாம் (அதாவது *B*,*C* மற்றும் பிற) மாறாமல் அப்படியே இருக்க, ஓர் உற்பத்திக் காரணியான *A*-ன் அலகுகளைமட்டும் அதிகரித்துக்கொண்டே போகும்போது மொத்த உற்பத்தி எவ்வாறு அதிகரித்துக் கொண்டு செல்கிறது என்பதை வரைபடம் 1–2 காட்டுகிறது.[2] இப் படத்தின்படி

[2] 1-2 வரைபடத்திலுள்ள மொத்த உற்பத்திக் கோட்டையும் 1-1 வரைபடத்திலுள்ள உற்பத்திச் சார்பையும் ஒப்பிடுவதற்கு 1-1 வரைபடத்திலுள்ள உற்பத்தித் தளம் தோற்றுவாயிலிருந்து வடகிழக்குத் திசையில் மென்மேலும் உயர்ந்துகொண்டே செல்வதுபோல் கற்பனை செய்துகொள்ள வேண்டும். இப்படி உயர்ந்துகொண்டு செல்லும் உற்பத்தித் தளத்தைக் கொண்டு குறைந்துசெல் விளைவு விதியை விளக்க வேண்டுமானால், ஏதாவதோர் உற்பத்திக் காரணி மாறாமல் அப்படியே இருப்பதாகவும் (சான்றாக, $OT_3$ கருவிகள் மட்டும் பயன்படுத்தப்படுவதாகவும்), ஏனைய காரணிமட்டும் (நமது சான்றின்படி உழைப்பு மணிநேரம் மட்டும்) அதிகரிக்கப்படுவதாகவும் யூகித்துக்கொள்ளுங்கள். இப்படிக் கருவிகள் அதிகரிக்காமல் அப்படியே இருக்க, உழைக்கும் மணி நேரத்தை மட்டும் அதிகரித்துக் கொண்டே செல்லும்போது என்ன நேரிடுகிறது என்பதைக் கண்டுபிடிக்க, உற்பத்தித்தளம் $T_3$-லிருந்து X அச்சில் மேலே செங்குத்தாக உயர்ந்து C-ன் வழியாகச் செல்வதாகவும் கற்பனை செய்துகொள்ளுங்கள். அப்படிக் கற்பனை செய்தால் செங்குத்தான தளத்தில் ஒரு வளைகோட்டை நாம் காணலாம். இவ் வளைகோடு, 1-2 வரைபடத்திலுள்ள மொத்த உற்பத்திக் கோட்டின் அமைப்பைப்போலவேதான் இருக்கும்.

தொடக்கத்தில் (அதாவது, காரணி *A*-ன் *OM* அலகுகள்வரை) விளைவு உயர்ந்த விகிதத்தில் அதிகரித்துக்கொண்டு செல்கிறது; அதாவது, ஒவ்வோர் அலகும் முந்திய அலகைக் காட்டிலும் அதிகமாக மொத்த உற்பத்தியைக் கூட்டுகிறது. ஆனால், *OM* அலகுகளுக்குப் பின்னர், குறைந்துசெல் விளைவு விதி செயல்படத் தொடங்கிவிடுகிறது; அதாவது *A*-ன் ஒவ்வோர் அலகும் முந்திய அலகைவிடக் குறைவாகத்தான் மொத்த உற்பத்தியை அதிகரிக்கின்றது. பொருளாதார அறிஞர்கள் கூறுவது போல் *A*-ன் இறுதிநிலை உற்பத்திதான் (marginal product) உண்மையில் குறைந்துகொண்டு செல்கிறது.




படம் 1-2. மாறும் ஒரு காரணியும் மொத்த உற்பத்தியும்

1-2 வரைபடத்திலிருந்தே காரணி *A*-ன் இறுதிநிலை உற்பத்திக் கோட்டையும் நாம் பெறக்கூடும். இந்த இறுதிநிலை உற்பத்திக் கோடு *OM* அலகுகள் வரை உயர்ந்துகொண்டும், அதன் பின்னர்க் கீழே சரிந்துகொண்டும் செல்வதாக அமையும். காரணி *A*-ன் அலகுகளை மென்மேலும் அதிகரித்துக்கொண்டே செல்லும்போது, மொத்த உற்பத்தி சிறிதுகூட அதிகரிக்காமல் அப்படியே இருந்துவிட்டால், *A*-ன் இறுதிநிலை உற்பத்தி சூன்யமாக (ஒன்றுமில்லாமல்) ஆகிவிடுகிறது என்று அர்த்தம். ‘இறுதிநிலை’ என்னும் இக் கருத்து இன்னும் எத்தனையோ வகையான பொருளாதார ஆய்வுகளிலும் முக்கிய இடம் பெறுகிறது. சான்றாக, உழைப்பிற்கு அளிக்கப்படும் கூலி, ஏனைய உற்பத்திக் காரணிகளுக்கு அளிக்கப்படும் விலை 'ஆகியவற்றை நிர்ணயம் செய்யும்போதும் இக் கருத்துப் பயன்படுகிறது. இதைப்பற்றிப் பின்னர் நாம் சுட்டிக் காட்டுவோம்.

மக்கள்தொகை வளர்ச்சியைப்பற்றி ஆராயும்போது, உற்பத்திக் காரணிகளில் ஒன்றாகிய உழைப்பு அதிகரித்துவிடுகின்றது என்ற உண்மைதான் முக்கியமானது. எனவே, மக்கள்தொகை மிக விரைவாக வளரும்போது, இயற்கைச் சாதனமும் (நிலமும்) மனிதனால் உருவாக்கப்பட்ட இதரச் சாதனங்களும் (முதற் கருவிப் பொருள்கள்) சிறிதுகூட அதிகரிக்காமல் இருந்துவிட்டால் குறைந்துசெல் விளைவினால் பிரச்சினை எவ்வளவு இக்கட்டானதாகிவிடு

கிறது என்பதை யூகித்துப் பாருங்கள். ஆனால் ஒன்று. மக்கள் தொகைப் பெருக்கத்தினால் இவ்விதமான பிரச்சினைமட்டும்தான் ஏற்படும் என்று நினைத்துவிடக் கூடாது. ஏனெனில், மக்கள் தொகை பெருகும்போது, சில சமயங்களில் பொருளாதார முன்னேற்றம் அடைவதற்கும் வழி பிறக்கலாம். சான்றாக, ஒரு நாட்டில் மக்கள்தொகை பெருகினால் அந் நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களை ஏராளமாக விற்பனைசெய்யமுடியலாம்; இப்படி அங்காடி விரிவடைந்தால், முதற்கருவிப் பொருள்களை அதிகமாக உற்பத்தி செய்வதற்கென்று முதலீடும் பெருகலாம்; இவ் வகை முதலீடு அதிகரிக்கும்போது, தொழில் நடவடிக்கைகள் விரிவடைந்து வேலை வாய்ப்பும் அதிகரிக்கக்கூடும். அத்துடன் மட்டுமன்றி, பேரளவில் திறமையுடன் உற்பத்தி செய்யும் தொழில்கள் தம் உற்பத்திப் பொருள்களை மலிவாக விற்பனைசெய்யவும் கூடும். இவ்வாறாக, முதற்கருவிப் பொருள்களின் இருப்பும் இயற்கைச் சாதனங்களும் குறைவாக இருந்தபோதிலும், சில சமயங்களில் ஏற்படும் இவ்வித விளைவுகளால் பிரச்சினையே இல்லாமல்போய்விடக்கூடும்.

இவற்றையெல்லாம் பற்றி விரிவாக நாம் பிற்பாடு விளக்க வேண்டியதிருக்கும். எனவே, இங்கு நாம் பொதுவாகக் குறிப்பிட வேண்டியதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். அதாவது, மக்கள் தொகைப் பெருக்கம் பொருளாதார முன்னேற்றத்திற்குச் சாதகமாக இருக்குமா அல்லது பாதகமாக இருக்குமா என்பது, மக்கள்தொகை எப்படி, எங்கு, எப்போது பெருகுகிறது என்பதைப் பொறுத்ததாகும். சான்றாக, 18, 19 ஆம் நூற்றாண்டுகளில் மக்கள் குடியமராத பகுதிகள் இவ்வுலகில் ஏராளமாக இருந்தன; எனவே, அப்போதெல்லாம் மக்கள் இனம் பெருகியது பொருளாதார முன்னேற்றத்திற்குப் பெரும்பாலும் சாதகமாகத்தான் இருந்தது. அதேபோல் 1930 முதல் 1939 வரை அமெரிக்காவில் மக்கள்தொகை வளர்ச்சி விகிதம் குறைவாக இருந்ததால்தான் ஒருவேளை பொருளாதார மந்தநிலை நீண்ட நாள்களாக இருந்திருக்குமோ என்றுகூடப் பொருளாதார அறிஞர்கள் சிலர் எண்ணுவதுண்டு. இதற்கு நேர்மாறாக, இந்தியாவில் மக்கள்தொகை வளர்ச்சியைக் குறைப்பதற்காகத் தீவிரமான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன; மக்கள்தொகையைக் கட்டுப்படுத்தினால்தான் முன்னேற்றத்திற்கான திட்டங்களில் வெற்றிபெற முடியுமென்று அந் நாட்டினர் அனைவருமே உறுதியாக நம்புகின்றனர். இவ்வாறாக, மிகக் குறைந்த மக்கள் வாழும் சில ஆப்பிரிக்க நாடுகளுக்கு ஊக்கமளிக்கக்கூடிய ஒரு மருந்தாக இருக்கும் மக்களினப் பெருக்கம், ஜப்பான், சீனா, ஆசிய நாடுகளுக்கு அழிவைத் தரும் கொடிய விஷம்போல் இருக்கலாம். எனவே, மக்கள்

தொகை பெருகுவது ஒரு நாட்டிற்குப் பயனுள்ளதா அல்லது தீமையானதா என்பதைக் காண, அந்நாட்டில் அதிகரித்துள்ள உழைப்பாளிகளையும் விரிவடைந்துள்ள அங்காடியையும் ஒரு புறமும், இயற்கை வளங்களுக்கும் மூலதனத்திற்கும் ஏற்பட்டுள்ள நெருக்கடியை மறுபுறமும் பரிசீலனை செய்யவேண்டும்; அத்துடன், நாட்டின் உற்பத்தியை முன்பைவிட அதிக மக்களுக்கிடையே பகிர்ந்துகொள்ள வேண்டியுள்ளது என்பதையும் மறந்துவிடக் கூடாது.

மக்கள்தொகை வளர்ச்சியினால் பொருளாதார முன்னேற்றத்தில் ஏற்படக்கூடிய விளைவுகளைப்பற்றிய கருத்தைத்தான் இது வரை கூறினோம். ஆனால், உண்மையில் இதற்கு நேர் மாறான மற்றொரு கருத்தும் உள்ளது. அதாவது, பொருளாதார முன்னேற்றத்தினாலும் மக்கள்தொகை வளர்ச்சியில் முக்கியமான மாறுதல்கள் ஏற்படலாம். இதைப்பற்றிப் பொதுவாக நாம் ஏதாவது கூற முடியுமா?




படம் 1-3. குறைந்துசெல் இறுதிநிலை உற்பத்தி. இந்த இறுதி நிலை உற்பத்தி வளைகோடு, 1-2 வரைபடத்திலுள்ள மொத்த உற்பத்தி வளைகோட்டிலிருந்து (அதன் சரிவையேதான்) பெறப்பட்டது. இந்த இறுதிநிலை உற்பத்திக்கோடு பெரியதாகத் தெரிய வேண்டுமென்பதற்காகச் செங்குத்து அச்சின் அளவீட்டை மட்டும் மாற்றியுள்ளோம்.

இக் கேள்வி சிக்கல் நிறைந்த தொன்று; பொருளாதார அறிஞர்களிடையே மட்டுமன்றி, மக்கள்தொகை ஆய்வாளர்களிடையேயும் இப் பிரச்சினை இன்றும் தீர்ந்தபாடில்லை. எனினும், இக் கேள்வி புலப்படுத்தும் முக்கியமான இரண்டு கருத்துகளை மட்டும் நாம் மனத்தில் கொள்வது நன்று. ஒன்று, மக்கள்தொகை வளர்ச்சி பொருளாதார முன்னேற்றத்தைச் சார்ந்தது என்பது; மற்றொன்றோ சார்ந்ததன்று என்பது.

இவ் விரண்டில் முதல் கருத்து, இந்த நவீன உலகில் மக்கள்தொகை மிக வேகமாக வளர்ந்தும்கூட, பொருளாதார முன்னேற்றமடைந்துள்ள நாடுகளைப் பொறுத்த கருத்தாகும். கடந்த ஓரிரு நூற்றாண்டுகளில் இந்நாடுகளில் ஏற்பட்டுள்ள பொருளாதார முன்னேற்றத்தின் பயனாக, இறப்பு விகிதம் பெருமளவிற்குக் குறைக்கப்பட்டிருப்பதனால்தான் மக்கள்தொகை பெரும்பாலும் அதிகரித்துள்ளது. அதாவது, பொருளாதார முன்னேற்றத்தினால்

மக்களுக்கு வேண்டிய தரமான உணவு, உடை, உறைவிடம் ஆகியவை கிடைத்திருப்பதோடு, அவர்களின் வாழ்க்கைத்தரமும் முன்னேறியுள்ளது; பஞ்சம், பட்டினி என்னும் இயற்கைக் கொடுமைகள் ஒழிக்கப்பட்டுள்ளன. பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டுக் கொண்டிருந்தபோதே பொதுச் சுகாதாரம், பொது உடல்நல வசதி, மருத்துவ அறிவியல் ஆகியவையும் முன்னேற்றமடைந்துள்ளன. இவ்வாறாக, ஒரு புறம் பொருளாதார முன்னேற்றமும், மறுபுறம் மருத்துவ வளர்ச்சியும் சேர்ந்து மக்களுக்கு நல்ல உடல் நலத்தையும் நீண்ட ஆயுளையும் தந்துள்ளன; அதேசமயம் குழந்தைப் பருவ மரணமும் பெருமளவில் குறைக்கப்பட்டுள்ளது.

இப்படிப் பொதுவாகப் பார்த்தால், அண்மைக் காலத்தில் ஐரோப்பா, வட அமெரிக்கா போன்ற முன்னேற்ற நாடுகளில் மக்கள்தொகை அதிகரித்திருப்பது உண்மை; ஆனால், அதேசமயம் மக்களின் வாழ்க்கைத்தரம், தொழில் வளம், தொழில்நுட்ப முறை ஆகியவையும் முன்னேற்றமடைந்துள்ளன; இவ்விரு வகை முன்னேற்றமும் ஒன்றையொன்று சார்ந்து, ஒன்றோடொன்று கலந்து விட்டன.[3]

இரண்டாவது கருத்து, மக்கள்தொகை மிதமிஞ்சிப் பெருகியுள்ள முன்னேற்றமடையாத நாடுகளைப்பற்றிய கருத்தாகும். இந் நாடுகளிலெல்லாம் பொருளாதார முன்னேற்றமே ஏற்படவில்லையென்று சொல்லலாம் ; அப்படியிருந்தும், மக்கள்தொகை மிக வேகமாகப் பெருகியுள்ளது. இது எப்படிச் சாத்தியமாகும் என்று நீங்கள் கேட்கலாம்.

இக் கேள்விக்குரிய விளக்கமான பதில் இதுதான்: இந் நாடுகள் அனைத்தும் முன்னேற்றமடைந்துள்ள நாடுகளிலிருந்து முன்னேற்றத்திற்கான வழிமுறைகளை 'இறக்குமதி' செய்யாமல், முன்னேற்றத்தின் பக்க விளைவுகளை (by-products) மட்டுமே 'இறக்குமதி' செய்துள்ளன. குறிப்பாகக் கூறவேண்டுமாயின், மேற்கத்திய நாடுகளின் மருத்துவ, சுகாதார உடல்நல வசதிகளெல்லாம் இந் நாடுகளுக்குப் பரவி, இறப்பு விகிதத்தைக் கணிசமான அளவுக்குக்

[3] இந் நாடுகளில் மக்கள்தொகைப் பெருக்கம்தான் பொருளாதார முன்னேற்றத்தின் விளைவுகள் என்று நினைக்கவேண்டாம். இப் பிரச்சினையை நன்கு சிந்தித்துப் பார்க்க வேண்டும். முன்னேற்றத்தினால் இறப்பு விகிதம் குறைந்துவிட்டது என்பது உண்மை; ஆனால், பிறப்புவிகிதம் என்ன ஆயிற்று என்பதைச் சிந்திக்கவேண்டும். உண்மையில் பொருளாதார முன்னேற்றத்தின் விளைவாக, தொழில்களும் நகரங்களும் அதிகரித்ததோடு மட்டுமன்றி, பிறப்புவிகிதமும் குறைந்துள்ளது என்பதற்கு ஏராளமான சான்றுகள் உள்ளன. 19, 20ஆம் நூற்றாண்டுகளில் பெரும்பாலும் அமெரிக்காவிலும் தொழில்வளமிக்க ஏனைய நாடுகளிலும் இதே நிலைதான் ஏற்பட்டது.

குறைத்து, மக்கள்தொகையை மிக வேகமாகப் பெருக்கிவிட்டன. ஆனால், அதே சமயம் மக்களின் வாழ்க்கைத்தரமும் உயரவில்லை, பொருளாதார முன்னேற்றமும் ஏற்படவில்லை. ஒருசிலர் குறிப்பிடுவதுபோல் சுருக்கமாகச் சொன்னால் இந் நாடுகளில் 'தொழில் புரட்சி' (industrial revolution) ஏதுமின்றி, அப் புரட்சி தோன்றுவதற்கு முன்பே 'பொது உடல்நலப் புரட்சி' (public health revolution) ஏற்பட்டுவிட்டது.

இதற்கு இதோ சில சான்றுகள் : இலங்கையில் 1920ஆம் ஆண்டில் 1000-க்கு 30 என்றிருந்த இறப்பு விகிதம் 1960-ல் 1000-க்கு 10 என்று குறைக்கப்பட்டுவிட்டது; அந் நாட்டில் மலேரியா நோய் பரவியிருந்த பகுதிகளில் மலேரியா ஒழிப்புத் திட்டத்தின்படி சாதாரண DDT ஐப் பயன்படுத்தியே சுமார் 5, 6 ஆண்டுகளுக்குள் மலேரியாவினால் ஏற்பட்டுவந்த மரண விகிதத்தை 11 சதவிகிதம் குறைத்துவிட்டனர். அதேபோல், தாய்வான் நாட்டில்கூட 1906—1910-ல் 1000-க்கு 33·4 என்றிருந்த மரண விகிதத்தை 1941—1943-க்குள் 18·5 என்ற விகிதத்திற்குக் குறைத்துவிட்டனர். மெக்ஸிகோவிலோ 1940 முதல் 1960-க்குள், அதாவது 20 ஆண்டுகளுக்குள் 1000-க்கு 23·2 என்றிருந்த இறப்பு விகிதம் 11·4 ஆகக் குறைந்துவிட்டது; கோஸ்ட்டா ரிகாவில் 17·3-லிருந்து 8·6-க்கும் மலேயாவில் 20·1-லிருந்து 9·5-க்கும், சிங்கப்பூரில் 20·9-லிருந்து 6·3-க்கும் குறைக்கப்பட்டுவிட்டது. இவ்வாறு, இறப்பு விகிதத்தைப் பெருமளவு இந் நாடுகள் குறைத்திருப்பது பாராட்டிற்குரியதுதான்; ஆனால், இதற்கும் இந் நாடுகளின் பொருளாதார முன்னேற்ற விகிதத்திற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை.

இக் கருத்து மிக முக்கியமானதாகும். மேற்கத்திய நாடுகளில் ஏற்பட்ட பொருளாதார முன்னேற்றத்தினாலும் தொழில்நுட்ப வளர்ச்சியினாலும்தான் அந் நாட்டு மக்கள்தொகை மிக வேகமாக வளர்ந்தது; எனினும், பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டால் தான் மக்கள்தொகை வளர்ச்சி அடையும் என்று சொல்ல முடியாது. ஏனெனில், பெரும்பாலான மக்கள் வறுமையில் வாடும் நாடுகளில் கூட விஞ்ஞான முன்னேற்றத்தின் விளைவாக மக்கள்தொகை பெருகிவருவது சகஜமாகிவிட்டது.

## இயற்கை வளங்கள்

மக்கள்தொகை மிகப் பயங்கரமாகப் பெருகிவரும் இவ் வுலகின் பரப்பளவு சுமார் 196,838,000 சதுர மைல்கள்தான்; இதிலும் 30 சதவிகிதம்தான் (57,168,000 சதுர மைல்கள்தான்) நிலப்பகுதியாகும். இந்த நிலப்பகுதியில்கூடச் சுமார் மூன்றில் ஒரு பகுதி நிலம்தான்

சாகுபடி செய்வதற்கு ஏற்றதாகும்; எஞ்சிய பகுதிகளெல்லாம் பனியும் குளிருமிக்கவையாகவோ, மலைப் பிரதேசங்களாகவோ, பாலைவன மண்டலங்களாகவோ, அல்லது நிரந்தரச் சாகுபடிக்கு உதவாத மண் வளத்தினைப்பெற்ற பகுதிகளாகவோதான் உள்ளன. எனினும், சாகுபடிக்கு உதவாத பகுதிகள்கூட பெரும்பாலும் வனப் பிரதேசங்களாகவோ, மேய்ச்சல் நிலங்களாகவோ அல்லது முக்கிய கனிவளங்கள் கிடைக்கும் பகுதிகளாகவோ பயன்படுத்தப்பட்டு உற்பத்திக்கு உதவக்கூடும்.

ஒரு நாட்டிலுள்ள மக்கள்தொகையும் மானிட உழைப்பும் போன்று, அந் நாட்டின் இயற்கை வளங்களும் பொருளாதார முன்னேற்றத்திற்கு முக்கியமானவை. ஒரு நாட்டின் உற்பத்தி அளவு, அங்குள்ள மண், காடு, மீன் இனங்கள், நிலக்கரி, இரும்பு, எண்ணெய், நீர், இன்னும் ஏனைய வளங்களின் தரத்தையும் அளவையும் மட்டுமன்றி, அவை கிடைக்கின்ற இடம், அந் நாட்டின் தொழில்நுட்ப அறிவு ஆகியவற்றையும் பொருத்தே நிர்ணயிக்கப் படுகிறது. அப்படியென்றால், ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தைப்பற்றி ஆராயும்போது அந் நாட்டிலுள்ள நிலத்தையும் ஏனைய இயற்கை வளங்களையும்பற்றி நாம் பொதுவாகக் கூறக் கூடியது என்ன ?

இக் கேள்விக்குப் பதில் இதுதான்: இவற்றில் எதையுமே நாம் அதிகரிக்க முடியாது; அல்லது குறைந்த பட்சம் நிலத்தின் பரப்பளவை நாம் அதிகரிக்க இயலாது. ஏனெனில் அதன் அளிப்பு (supply) மாறாமல் அப்படியேதான் இருக்கும். சொல்லப் போனால், கடந்த காலப் பொருளாதார அறிஞர்கள், 'இயல்பான, அழிக்க முடியாத சக்திகள்' என்ற பொருளில்தான் நிலத்திற்கு இலக்கணம் வகுத்தனர். அதனால்தான் மனித உழைப்பிலிருந்தும், மனிதனால் படைக்கப்பட்ட ஏனைய உற்பத்திக் காரணிகளிலிருந்தும் நிலத்தை பாகுபடுத்திக்காட்டினர். அப் பாகுபாட்டின்படி, மக்கள்தொகை அதிகரிக்கலாம்; கருவிகள், ஆலைகள், இயந்திரங்கள் ஆகியவற்றையும் அதிகமாக உருவாக்கலாம்; ஆனால் அடிப்படையான இயற்கை வளங்களை மனிதன் படைக்கவோ அதிகரிக்கவோ முடியாது; அவற்றின் அளிப்பு நிரந்தரமாக நிர்ணயிக்கப்பட்டு விட்டது என்று விளக்கம் தந்தனர்.

எது எவ்வாறிருப்பினும் இக் கருத்து இன்று ஏற்றுக் கொள்ளத் தகுந்ததல்ல. இதற்குப் பல காரணங்கள் உள்ளன. முதலாவதாக, இயற்கை வளங்களில் 'அழிக்கப்பட முடியாதது' என்று ஒன்றும் கிடையாது. கனி வளங்களைப் பொறுத்தவரை இது முற்றிலும் உண்மை; ஏனெனில் அவற்றை நாம் பயன்படுத்தியே குறைத்து

விடலாம், அல்லது தீர்ந்துபோகும்படி செய்து விடலாம். காடுகளும் அப்படியேதான்; ஈடுசெய்யப் போதுமான அளவிற்குப் புதிய மரங்களை நடாமல், இருக்கின்ற மரங்களை வெட்டி வனத்தையே அழித்து விடலாம். நிலத்தின் மண்வளம் கூட அழிக்கப்படக் கூடியதுதான்; முறைகேடான வழியில் சாகுபடி செய்து மண்வளம் குறைந்து விடும்படி செய்யலாம். சான்றாக, ஆப்பிரிக்காவின் பல பகுதிகளில் கால்நடைகளை அளவுக்கு மிஞ்சி மேயவிட்டும், புதர்களைத் தீ வைத்து எரித்தும், சீர்கேடான பயிற்சுழற்சி முறையைப் பயன்படுத்தியும் மண்வளமே குறைந்து விட்டன. இலத்தீன் அமெரிக்காவிலும் நான்கில் ஒரு பகுதி நிலம் மண் அரிப்பால் பாழடைந்து விட்டது. அமெரிக்காவிலும் பொருளாதார முன்னேற்ற மடைந்துள்ள வேறு சில நாடுகளிலும்கூட பெட்ரோல் போன்ற எத்தனையோ வகையான இயற்கை வளங்கள் பெருமளவில் பயன்படுத்தப்பட்டு விட்டன; இதனால், தொழில் வளமிக்க இந்நாடுகளின் கதி வருங்காலத்தில் எப்படியிருக்குமோ என்று கூடச் சிலர் பயப்படுகின்றனர்.[4]

இயற்கை வளங்கள் அனைத்தும் மாறாமல் அப்படியே இருக்கின்றன என்ற கருத்தை ஆராயும்போது, மற்றொரு உண்மையையும் நாம் மறந்துவிடக்கூடாது; அதாவது, பொருளாதார முன்னேற்றத்தை அடைந்துள்ள நாடுகள் எத்தனையோ வகையான புதிய வளங்களைக் கண்டுபிடித்து அவற்றைப் பயன்படுத்தியிருக்கின்றன. ஒரு நாட்டில் இயற்கை வளங்கள் இருந்தும், அவை கண்டுபிடிக்கப் படாமலிருந்தால், அவற்றால் பொருளாதாரப் பயன் ஏதும் கிடையாது; அதேபோல் பயன்படுத்தவே முடியாத இடங்களில் புதிய வளங்கள் கண்டுபிடிக்கப்பட்டாலும் அவற்றால் பயன் கிடையாது. சான்றாக, வானிலுள்ள நிலாவின் தளத்தில் மதிப்புயர்ந்த கனிப் பொருள்கள் ஏராளமாக இருப்பது கண்டுபிடிக்கப்படலாம்; ஆனால், அவற்றைப் பூமிக்குக் கொண்டுவர இயலவில்லையென்றால் என்ன பயன்? எனவே, ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றம் என்பது அந் நாட்டிலுள்ள இயற்கை வளங்கள் எங்கெங்கே இருக்கின்றன என்பதைக் கண்டுபிடித்து அவற்றைப் பயன்படுத்துவதைப் பொருத்தது. இந்த அடிப்படையில் பார்க்கும்போது பயன்படுத்தக் கூடிய இயற்கை வளங்களின் அளிப்பு அதிகரிக்கப்பட்டுள்ளது என்றுதான் கூற வேண்டும்.

இயற்கை வளங்களின் முக்கியத்துவம்தான் என்ன? கடந்த காலத்தில் அவை எவ்வளவு முக்கியத்துவம் பெற்றிருந்தன என்பது வெளிப்படை. புதிய வளங்களைக் கண்டுபிடித்ததும், புதிய உலகினைக் கண்டுபிடித்து அதில் குடியேறியதும்தான் மேற்கத்திய

[4] சான்று வேண்டுமானால் 'A Blueprint for Survival', The Ecologist, Vol. II, No. 1. ஜனவரி 1972 வெளியீட்டில் 2-7 பக்கங்களைப் பார்க்கவும்.

நாகரீக வரலாற்றையே உருவாக்கின என்று சொல்லலாம். அதோடு, இன்றைய உலகிற்கும் அவை முக்கியமானவைதான். இன்றைய உலகில் வாழ்க்கைத்தரம் உயர்ந்துள்ள நாடுகளில் அமெரிக்காவும் கனடாவும் குறிப்பிடத்தக்கவை. இவ் விரு நாடுகளிலுமே புதியன கண்டுபிடிப்பதும், புதிய வளங்களைக் கண்டுபிடித்து, அவற்றைப் பயன்படுத்துவதும், பொருளாதார முன்னேற்றம் அடைவதுமாக எல்லாம் ஒரேகாலத்தில் நடைபெற்றுள்ளன. இவ்வாறாக, கடந்த காலப் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவிய காரணிகளில் இயற்கை வளங்களைக் கண்டுபிடித்தது மட்டுமன்றி குடியேற்ற நாடுகளின் வளங்களைப் பயன்படுத்தியதும் குறிப்பிடத்தக்கவை.

இனி வருங்காலத்திலும் புதிய இயற்கை வளங்களைக் கண்டுபிடிக்கும் வாய்ப்பு இருக்கின்றதா என்பதை நிச்சயமாகக் கூற முடியாது. ஏனெனில், இவ் வுலகில் சாகுபடி செய்யக்கூடிய புதிய நிலங்களையோ கனிவளமிக்க புதிய பகுதிகளையோ ஏராளமாகக் கண்டுபிடிக்க முடியும் என்று சொல்வதற்கில்லை. இருந்த போதிலும், வளமிக்க புதிய இடங்களைக் கண்டுபிடிக்கும் முயற்சி இன்றும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. சான்றாக, லிபியா, நைஜீரியா, லிபெரியா ஆகிய இடங்களில் எண்ணெயும் இதரக் கனிப் பொருள்களும் உள்ளன என்பதை மிக அண்மையில்தான் கண்டுபிடித்துள்ளார்கள். சொல்லப்போனால், வளர்ச்சி குன்றிய நாடுகளில் என்னென்ன இயற்கை வளங்கள் உள்ளன என்பதைக் கண்டுபிடிக்கும் முயற்சி இப்போதுதான் மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஏனைய நாடுகளைப்போல் தாமும் முன்னேறவேண்டுமென்பதற்காக, இந் நாடுகள் தம்மிடமுள்ள புதிய வளங்களைக் கண்டுபிடித்து அவற்றைப் பயன்படுத்தவும் தொடங்கியுள்ளன.

இருந்தபோதிலும், கடந்த காலத்தில் இயற்கை வளங்கள் எவ்வளவு தாராளமாகக் கிடைத்துப் பொருளாதார முன்னேற்றமடைய உதவியதோ அந்த அளவுக்கு இனிமேல் கிடைக்காது என்பது மட்டும் உறுதி. புதியனவற்றையெல்லாம் கண்டுபிடித்த காலத்தில் இருந்ததைப்போல் இன்று கிடையாது; இவ் வுலகில் என்னென்ன வளங்களெல்லாம் உள்ளன என்பதை நாம் பெரும்பாலும் கண்டுபிடித்து, அவற்றைப் பெருமளவிற்குப் பயன்படுத்தி வந்துள்ளோம். எனவேதான் பொருளாதாரப் பேரறிஞர்களான கென்னெத் போல்டிங் (Kenneth Boulding), பார்பரா வார்டு (Barbara Ward) ஆகிய இருவரும், இனிமேல் இவ் வுலகை ஒரு வானவெளிக் கப்பல் ('spaceship earth') போலத்தான் கருத வேண்டும் எனக் கூறுகின்றனர். இப் பூமியில் இன்னும் என்னென்ன

கனிப்பொருள்கள் இருக்கக்கூடும் என்ற ஆராய்ச்சியை விட்டுவிட்டு வானவெளிக் கப்பலில் பயணம் செய்வோரைப்போல் இருக்கின்ற தைச் சிக்கனமாகப் பயன்படுத்தி முன்னேறவேண்டும் என்பதுதான் இதன் பொருள்.

இவற்றையெல்லாம் பார்க்கும்போது, இயற்கை வளங்கள் மிகக் குறைந்து விட்டன என்ற காரணத்தால் முன்னேற்றமடைந் துள்ள நாடுகள் மட்டுமன்றி, முன்னேற்றமடையாத நாடுகளும் கூட இனிமேல் பொருளாதார வளர்ச்சி பெறுவது கடினம் என்றே தோன்றலாம். ஆனால் ஒன்றை நாம் மறந்துவிடக்கூடாது. தொழில்நுட்ப முன்னேற்றம் நிறைந்த இவ்வுலகில் சில முக்கியமான இயற்கை வளங்களின் இயல்பே மாறிக்கொண்டு வருவதை நாம் காண்கிறோம். கடந்தசில காலமாக ஏற்பட்டுவரும் பெட்ரோல் தொழில் முன்னேற்றம், செயற்கைச் சேர்மானமுள்ள மூலப் பொருள்களில் தோன்றியுள்ள புரட்சி, அணுசக்தி கண்டு பிடிப்பு ஆகியவை அனைத்தும் இயற்கையில் கிடைக்கின்ற மூலப் பொருள்கள் அவ்வளவு முக்கியமானவையல்ல என்று எண்ணும்படி செய்துவிட்டன. மனிதன் சூழ்நிலைக்கேற்ப செயல்படும் ஆற்றல் கொண்டவன் ; எனவே, கிடைக்காததைப்பற்றி கவலைப்படாமல், இருக்கின்ற மூலப்பொருள்களை எப்படிச் சிக்கனமாகப் பயன்படுத்த முடியும் என்ற ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. எனவே, பொருள் உற்பத்திக்கு இன்றியமையாததாக இன்று கருதப்படும் மூலப்பொருள்களின் தன்மையையே மாற்றிவிட்டு, முன்னேற்ற மடையமுடியும் என்ற வாய்ப்பு இருந்து கொண்டேதான் இருக்கும்.

இக் கருத்து மிகமிக முக்கியமான கருத்தாகும். ஏனெனில் அமெரிக்காவில் மட்டுமன்றி, வேறுபல நாடுகளிலும்கூட மூலப் பொருள்கள் மிகக் குறைவாயிருந்தும் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டு வந்துள்ளது என்பதற்கு எத்தனையோ ஆதாரங்கள் உள்ளன. வேண்டிய அளவில் மூலப் பொருள்கள் கிடைக்கவில்லை யென்றால், பொருளாதாரத் துறையில் முன்னேற்றமே அடைய முடியாது என்ற நம்பிக்கை 50 ஆண்டுகளுக்கு முன்னால் வேண்டு மானால் உண்மையாய் இருந்திருக்கலாம்; ஆனால் இன்று அந்த நம்பிக்கை குறைந்து வருகிறது. வருங்காலத்தைப்பற்றித் திட்ட வட்டமாக ஒன்றும் கூறமுடியாதுதான் ; இருந்தாலும், மிகச் சொற்ப மாகக் கிடைக்கும் உற்பத்திக் காரணிக்குப் பதிலாகப் பிற காரணி களைப் பதிலீடு செய்யக்கூடிய ஆற்றல் அதிகரித்து வருவதை நாம் காண்கிறோம், அதோடு மட்டுமன்றி, மூலப் பொருள்களை மிகச்

சிக்கனமாகப் பயன்படுத்தக்கூடிய தொழில்நுட்ப அறிவும் விரிவடைந்து வருகிறது.[5]

## மூலதனத் திரட்சி
## (Capital Accumulation)

உழைப்பையும் நிலத்தையும் அடுத்து, முக்கியமான உற்பத்திக் காரணியாக இடம் பெறுவது மூலதனம். மூலதனம் என்றாலென்ன என்பதைப் பின்வருமாறு வரையறை செய்யலாம் :

> மனிதனால் படைக்கப்பட்ட அல்லது உற்பத்தி செய்யப்பட்ட கட்டிடங்கள், ஆலைகள், இயந்திரங்கள், கருவிகள், தளவாடங்கள், இருப்புப் பொருள்கள் போன்ற உற்பத்திச் சாதனங்களின் இருப்புத்தான் ஒரு நாட்டின் மூலதனமாகும்.

'மூலதனம்' என்ற சொல் பல்வேறு பொருள்களில் பயன்படுத்தப் படுகிறது. எனவே, இச்சொல்லின் வரையறைபற்றிச் சில கருத்துக் களைக் கூற வேண்டியுள்ளது.

முதலாவதாக, கண்ணுக்குப் புலனாகக் கூடிய உருப்படியான பொருள்களை மட்டுமே சுட்டிக்காட்டுவதாக 'மூலதனம்' என்ற சொல்லை வரையறுத்துள்ளோம். ஏனெனில், பணம், பத்திரம், பங்குப் பத்திரம், இன்னும் பிற ஆவணங்களைக் (Securities) குறிப் பிடும் வகையிலும் சில சமயங்களில் இச் சொல் பயன்படுத்தப் படு கிறது. இதுபோன்ற நிதியோ நீர்மைச் சொத்துக்களோ (liquid assets) பொருளாதார வாழ்விற்கு மிக முக்கியமானவைதான்; எனினும், இவற்றிற்கும் உற்பத்தியில் நேரடியாகப் பயன்படும் உருப் படியான பொருள் சார்ந்த காரணிகளுக்கும் நிறைய வேறுபாடு உண்டு.

இரண்டாவது, நிலமோ உழைப்போ மூலதனமாகாது என்ப தைப் புலப்படுத்துவதற்காக, அதை மனிதனால் படைக்கப்பட்ட அல்லது உருவாக்கப்பட்ட சாதனங்கள் என்று வரையறுத்துள் ளோம். ஆனால், மிக முக்கியமான சில சான்றுகளை எடுத்துப் பார்த்தால் இந்த வேறுபாடு உண்மையானதல்ல என்றுதான் தெரி யும். சான்றாக, ஒரு தொழிலாளி தன் தொழிலுக்குத் தேவைப்படும் கருவிகளில் மேலும் ஒரு கருவியை உற்பத்தி செய்வதற்குப் பதிலாக,

[5] பார்க்க வேண்டியது : William Nordhaus and James Tobin, 'Is Growth Obsolete?' in Economic Growth: Fiftieth Anniversary Colloquium V, National Bureau of Economic Research (New York: Columbia University Press, 1972.) Appendix B, பக்கங்கள் 60-70.

தன் தொழில் திறனை அதிகரிக்கக்கூடிய ஒரு நூலைப் படிக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். அவன் பெறும் புதிய தொழில் திறன் அவன் செய்திருக்கக்கூடிய கருவியைப்போல் முக்கியமானதுதான். அப்படியென்றால் இந்தப் புதிய திறன் அவனால் உற்பத்தி செய்யப்பட்டதுதானே ? அப்படியிருக்க, இந்தத் திறமைக்கும் அவன் உற்பத்தி செய்திருக்கக்கூடிய கருவிக்கும் வேறுபாடு இருப்பதற்கு வழியில்லை. எனவே, நாம் வேறுபாடு செய்திருப்பது வெறும் சௌகரியத்திற்காகத்தானேயன்றி வேறல்ல. நமது இச்சான்றின்படி, தொழில்திறனை அதிகரிப்பது என்பதும் ஒரு நாட்டிற்கு முக்கிய மான, கண்ணுக்குப் புலனாகாத மூலதனம்தான். எனவே, அறிவு, திறமை, தொழில்நுட்ப வழிவகையறிவு ஆகியவையும் ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அவசியம் என்பதை அடிக்கடி நமது ஆய்வில் வலியுறுத்துவோம்.

இறுதியாக, குறிப்பிட்டதொரு காலத்தில் இருப்பாக உள்ள உற்பத்திப் பொருள்களைத்தான் மூலதனம் என்று வரையறை செய்துள்ளோமேயன்றி, உற்பத்தி ஓட்டத்தை (flow) அல்ல. ஏதாவதொன்றின் ஓட்டத்தை நாம் அளவிடும்போது, எந்த நேரத் தில் அல்லது காலத்தில் ஏற்பட்ட ஓட்டம் என்றுதான் கணிக் கின்றோம்; ஆனால் ஒன்றின் இருப்பை நாம் அளவிடும்போது இந்த நேரத்தில் இவ்வளவு என்று குறிப்பிட்டுக் கூறுகின்றோம். சான்றாக, இன்று நடுப்பகல் உணவிற்காக ஒரு வீட்டுப் பெண்மணி வைத்திருக்கும் உணவின் அளவு 'இருப்பு' ஆகும்; மாறாக, அவ் வீட்டினர் கடந்த வாரம் உண்ட உணவின் அளவு 'ஓட்டத்தை'க் குறிப்பிடுகிறது. இதேபோல் ஆண்டொன்றுக்குச் செய்யப்பட்ட உற்பத்தியோ தலா உற்பத்தியோ பொருளாதார ஓட்டத்திற்குச் சான்றுகளாகும் ; மாறாக, மூலதனம் என்பது, குறிப்பிட்டதொரு நேரத்தில் (சான்றாக இன்று பகல் 12 மணிக்கு) உள்ள கட்டிடங்கள், கருவிகள், இயந்திரத் தளவாடங்கள் போன்றனவற்றின் இருப்பைக் குறிக்கும்.

ஆனால், மூலதனத்தின் இருப்புக் காலப்போக்கில் மாறக்கூடும் என்பது வெளிப்படை. போன ஆண்டு இதேநாள் நடுப்பகலில் இருந்ததைக் காட்டிலும் இன்று நடுப்பகலில் நம்மிடமுள்ள மூல தனம் அதிகமாயிருக்கலாம். எனவே, காலப்போக்கில் மூலதனத்தின் இருப்பு எவ்வளவு அதிகரித்துள்ளதோ அதைத்தான் மூலதனத் திரட்சி என்று கூறுகின்றோம்.

> 'நம்மிடமுள்ள இயந்திரங்கள், கருவிகள், கட்டிடங்கள் போன்றவை குறிப்பிட்டதொரு காலத்தில் எவ்வளவு அதிகரித்துள்ளதோ அதுதான் மூலதனத் திரட்சியாகும்.

வருடத் தொடக்கத்தில் இருந்ததைவிட வருடக் கடைசியில் நம்மிடமுள்ள மூலதன இருப்பு அதிகமாயிருந்தால், எவ்வளவு அதிகமோ அதுதான் அவ் வருடத்தில் நாம் திரட்டிய மூலதனம். இதற்கு முதலீடு (investment) என்ற பெயரும் உண்டு. எனவே, ஒரு வருடத்தில் மூலதன இருப்பு எவ்வளவு அதிகரித்துள்ளதோ அதுதான் அவ் வருடத்தின் உண்மையான முதலீடாகும்.'

எனவே, மூலதனத் திரட்சி என்பதும் முதலீடு என்பதும் ஒன்றுதான். குறிப்பிட்டதொரு காலத்தில் உற்பத்தி செய்யப்பட்ட உற்பத்திச் சாதனங்கள் எவ்வளவு அதிகரித்துள்ளது என்பதைத் தான் இவ் விரண்டு சொற்றொடர்களுமே சுட்டிக் காட்டுகின்றன.

உற்பத்தியை அதிகரிப்பதற்கு மூலதனத் திரட்சி எவ்வளவு முக்கியமானது என்பதை பொருளாதார அறிஞர்கள் வலியுறுத்தி வந்துள்ளனர். முன்னேற்றமடையாத நாட்டிலும் முன்னேற்ற மடைந்துள்ள நாட்டிலும் நடைபெறுகின்ற உற்பத்தி முறைகளை ஒப்பிடும்போது, மூலதனம்தான் நம்மனதில் தோன்றுகிறது. சான்றாக, வட இந்தியாவிலுள்ள கிராமம் ஒன்றில் மிகக்குறைந்த அளவு மூலதனத்தைக்கொண்டு நடைபெறும் விவசாய முறை வருமாறு :

> மிகக் கடினமாகப் பாடுபட்டு மரக்கலப்பை கொண்டுதான் நிலத்தை உழுகின்றனர்; ஒரு வாளி நீரைமட்டுமே இறைக்கக்கூடிய வலையைக்கொண்டுதான் நீர்பாய்ச்சுகின்றனர்; எனவே, இரண்டு காளை மாடுகளும் மூன்று ஆட்களும் சேர்ந்து ஒரு வாரம் பாடுபட்டால்தான் ஒரு ஏக்கர் கோதுமைக்கு நீர்பாய்ச்ச முடிகிறது. கைக்கு அடக்கமான அறிவாள்களைக் கொண்டுதான் பயிர்முழுவதையும் அறுவடை செய்கின்றனர். அறுவடையான பயிர்களை, எருதுகளைக் கொண்டு தாம்பு பூட்டிச் சூட்டடித்துத்தான் தானியங்களைச் சேகரிக்கின்றனர்.[6]

முன்னேற்ற மடைந்துள்ள நாடுகளிலோ இதற்கு நேர்மாறாக விவசாயம் நடைபெறுகிறது. சான்றாக, நியூஸிலாந்தில் மூலதனம் செறிந்த விவசாயம் நடைபெறும் விதம் வருமாறு :

> பால் பண்ணைச் சொந்தக்காரர்களில் பெரும்பாலானோர் தம் பண்ணைப் பாலைக் கண்ணால்கூட பார்ப்பதில்லை. பால்கறக்கும் கருவிகளைக் கொண்டுதான் பாலைக் கறக்

[6] Mckim Marriott, அவர்களின் 'Technological Change in Over developed Rural Areas' என்ற கட்டுரையில். இக் கட்டுரை Lyle W. Shannon பதிப்பாசிரியரின் Underdeveloped Areas (New York: Harper, 1957) நூலில் வெளிவந்துள்ளது. பக்கம் 425.

> கின்றனர்; கறக்கும்போதே பால் குழாய் வழியாகச் சென்று கொப்பரையில் விழுகிறது. அக்கொப்பரை பொருத்தப் பட்ட மோட்டார் வாகனம் அதை ஆலைக்கு எடுத்துச் செல்ல, அந்த ஆலையில் பால் சூடாக்கி, சுத்தம் செய்யப் பட்டு, வெண்ணெய் பரிசோதனையும் செய்யப்பட்ட பின்னர் விநியோகம் செய்யும் பெரியதொரு பொது ஆலைக்கு அனுப்பப்படுகிறது. இப் பொது ஆலை நாள் ஒன்றுக்கு 35 டன் வெண்ணெய் உற்பத்தி செய்கிறது. அதேபோல் பயிர் சாகுபடி செய்யும் விவசாயிகள் டிராக்டர், டிரக், மின்வேலி, கால்வாய் வெட்டும் சாதனம், போர் அடிக் கும் கருவி என்று எல்லா வேலைகளையும் இயந்திர சாதனங்களைக் கொண்டுதான் செய்கின்றனர். பெரிய வாகனங்கள் செல்ல முடியாத நிலங்களில் விமானத்தி லிருந்தே விதை விதைத்து, உரமும் இடுகின்றனர்; வேலி போடுவதற்கு வேண்டிய பொருள்களைக்கூட விமானமே போட்டு விட்டுச் செல்கின்றது.[7]

இவ்வாறாக, இன்றைய உலகில் செல்வமிக்க நாடுகள் யாவை, ஏழை நாடுகள் எவை என்று பாகுபடுத்தும் காரணிகளில் மூலதனத் திரட்சியும் முக்கியமானதொரு காரணியாகும்; அதோடு மட்டுமன்றி, தொழில்வளமிக்க இந்த நவீன காலத்திற்கும் கடந்தகால உலக வரலாற்றிற்குமுள்ள வேறுபாட்டைப் புலப்படுத்தும் காரணிகளில் மூலதனத் திரட்சியும் ஒன்றாகும்.

ஒரு நாட்டின் உற்பத்தியை அதிகரிக்க மூலதனம் எத்தனையோ வழிகளில் உதவுகிறது. முதலாவது, உற்பத்தி அளவை மட்டுமன்றி, தொழில்நுட்ப முறையையும் மாற்றி அமைக்கச் செய்கிறது. அதாவது, ஒரு நாட்டின் மூலதனம் பெருகப் பெருக, அந்நாட்டிலுள்ள தொழில் கள் விரிவடைந்து, பேரளவுச் சிக்கனங்களையும் (economics of scale) சிறப்புத் தேர்ச்சியின் (Specialization) பலன்களையும் அடையக் கூடும். தொழில்நுட்ப முன்னேற்றத்தின் பணிப்பெண் என்றுகூட மூலதனத்தைக் குறிப்பிடலாம். நியூஸிலாந்தின் பால் பண்ணைக் காரர் பால் கறப்பதற்கென்று பயன்படுத்தும் இயந்திரச் சாதனம் புதுமை (innovation) படைப்பிற்கு ஒரு சான்றாகும்; ஆனால் அப் பால் பண்ணையாரிடம் அந்த இயந்திரச் சாதனத்தின் வடிவில் போதிய மூலதனம் இல்லாமல் இருந்திருந்தால் அச் சாதனத்தைக் கண்டுபிடித்தும் பொருளாதாரப் பலன் இல்லாமல் போயிருக்கும்.

[7] John B. Condliffe, 'New Zealand,' in Adamantias, Leon Mears, and Irma Adelman, eds., Economic Development (New york: Harper 1961), P. 580.

இரண்டாவது, மக்கள்தொகை வளரும் போது, அவர்களுக்கு வேண்டிய உற்பத்திச் சாதனங்களையும் தளவாடங்களையும் அளிப்பதற்கு மூலதனம் அவசியம். முந்திய நூற்றாண்டில் வளர்ந்து வந்ததைப்போல் இந்த நூற்றாண்டிலும் மக்கள்தொகை வளர்ந்து வருகிறது என்பது நமக்கும் தெரியும்; ஒருவேளை அடுத்த நூற்றாண்டில் இன்னும் வேகமாக மக்கள்தொகை வளரக்கூடும். அவ்வாறாயின், உற்பத்தியைப் பெருக்குவதற்கும், அதிகரித்து வரும் தொழிலாளிகளுக்கு வேலை கொடுப்பதற்கும் மூலதனம் தேவை. அவ்வாறின்றி, மக்கள்தொகை வளர்ந்துவரும் இந் நாளில் மூலதனத்தை உருவாக்கக்கூடிய நிகர முதலீடு இல்லாமல் போய் விட்டால், எந்த நாடும் தன் தொழிலாளிகள் அனைவருக்கும் வேலை கொடுக்க முடியாமல் போய்விடும். தொழிற்சாலைகளில் 2 அல்லது 3 முறை மாற்று வேலை (shift) செய்யலாம்; ஆனால் 4 அல்லது 5 முறை வேலை செய்யமுடியாது. ஓர் ஆள் செய்யவேண்டிய வேலைக்கு 10, 20 அல்லது 30 பேர் கூட போட்டி போட்டுக்கொண்டு வரலாம். அப்படிப்பட்ட சூழ்நிலை ஏற்பட்டு விட்டால், போதிய இயந்திர சாதனங்களினின்று, உற்பத்தி செய்யும்முறைகூடக் கெட்டுவிடும். வேலையில்லா மக்களின் எண்ணிக்கை அதிகரித்து விடுவதோடு, வேலை செய்து சம்பாதிப்போரை நம்பிவாழும் கூட்டமும் பெருகிவிடும்.

மூன்றாவது, முந்திய தத்துவத்தின்படியே, போதிய அளவுக்கு மூலதனம் விரைவாகத் திரட்டப்பட்டு விட்டால், ஒவ்வொரு தொழிலாளிக்கும் வேண்டிய கருவிகளையும் இயந்திர தளவாடங்களையும் அதிகரிக்க முடியும். இதற்குமுன் கையினால் செய்து வந்த வேலைகளையெல்லாம் பல வகையான இயந்திரக் கருவிகளைக் கொண்டு செய்யக்கூடும். வேறு விதமாகக் கூறின், மென்மேலும் மறைமுகமான, சுற்றுவழி முறைகளில் (roundabout methods) உற்பத்தி செய்யக்கூடும்.[8] அதோடு மட்டுமன்றி, மேலும்மேலும் முதற்

[8] 19 ஆம் நூற்றாண்டின் ஆஸ்திரியப் பொருளாதார அறிஞராகப் புகழ் பெற்ற பாம் பாவர்க் (Bohm Bawerk) அவர்கள்தான் இந்தச் சுற்றுவழி (அல்லது வேறு விதத்திற் கூறின்) அதிக நேரம் பிடிக்கும் உற்பத்தி முறையின் ஆக்கத்திறனை வலியுறுத்தினார். இதற்கு யூகமானதொரு சான்று: மூலதனமே இல்லாத ஒரு சமுதாயத்தில் மீனவன் ஒருவன் நீரில் சென்று தன்கையினால்தான் மீன் பிடிக்க வேண்டியிருக்கும். சிறிதளவு மூலதனம் சேர்ந்துவிட்டால் ஈட்டியையோ கைவீச்சு வலையையோ அவன் பயன்படுத்தலாம். மென்மேலும் முதலீடு பெருகிவிட்டால், மீன்படகோடு, பெரிய வலையையும் இன்னும் வேண்டிய இதர சாதனங்களையும் அவன் பயன்படுத்தலாம். இவ்வாறாக நேரடியாக (தன் கையினால்) மீன் பிடிப்பதற்குப் பதிலாக, அவன் சுற்றுவழி முறையைக் கடைபிடிக்கிறான் (மீன் படகையும் வலையையும் பயன்படுத்துவதற்குமுன், அவற்றைச் செய்வதற்கென்று தன் நேரத்தையும் உழைப்பையும் அவன் செலவிட வேண்டியுள்ளது). இதன் விளைவாக படகையும் வலையையும் செய்வதற்கு செலவிட்ட நேரத்தை ஈடுகட்டும் வகையில் அவன் ஏராளமான மீன்களைப் பிடிக்க முடிகிறது. சுருங்கக் கூறின், (சுற்றுவழி முறையில்) நேரம் செலவழித்துச் செய்யும் உற்பத்தி முறையினால் நிகர இலாபம் நிறைய உண்டு என்பதை பாம் பாவர்க் வலியுறுத்தினார். உண்மையும் அதுதான். நீரில் சென்று வெறும் கையினால் மீன் பிடிப்பதைக் காட்டிலும் எவ்வளவுதான் காலமானாலும் அதற்கு வேண்டிய சாதனங்களைச் செய்து அவற்றைப் பயன்படுத்தி மீன்பிடித்தால் ஏராளமான மீன்களைப் பிடிக்க முடியுமல்லவா.

கருவிப் பொருள்களை உற்பத்தி செய்வதற்கென்று நேரத்தையும் உழைப்பையும் செலவிட்டு, உழைப்பாளிகளின் சராசரி உற்பத்தியை அதிகரிக்கவும் கூடும். தொழில்நுட்ப முன்னேற்றமே ஏற்படாத நாட்டில்கூட, தலா ஒவ்வொரு தொழிலாளிக்கும் வேண்டிய முதற் கருவிப் பொருள்களை அதிகரிப்பதன் வாயிலாக நாளடைவில் அந் நாட்டின் தலா உற்பத்தி அதிகரிக்கும் என்பது நிச்சயம்.

பொருளாதார முன்னேற்றத்திற்கு மூலதனம் எவ்வாறு ஊக்க மளிக்கின்றது என்பதற்கு இவ் விளக்கமே போதுமானது. அடுத்து வரும் பிரச்சினை, ஒரு நாட்டின் மூலதனத் திரட்சி வீதத்தை அதிகரிக்கக் கூடிய முக்கியமான சக்திகள் யாவை? தம் மொத்த உற்பத்தியில் ஒருசில நாடுகள் மட்டும் ஏனைய நாடுகளைவிட அதிக வீதத்தில் முதலீடு செய்வதேன்? ஒரு நாடு தன் மூலதனத் திரட்சி வீதத்தை அதிகரிப்பது எதற்காக?

பொருளாதார முன்னேற்றத்துறையில் இக் கேள்விகள் அனைத்தும் மிக முக்கியமானவை; சிக்கல் நிறைந்தவையும் கூட. பின் வரும் அதிகாரங்களில் இவற்றைப்பற்றி அடிக்கடி குறிப்பிட வேண்டி யிருக்கும். இங்கு இதைப்பற்றி பொதுவான கருத்தைக்கூட கூறு வது கடினம்தான். ஏனெனில், மூலதனத்தைத் திரட்டும் முறையில் கூட நாட்டிற்கு நாடு வேறுபாடு இருப்பதை நாம் காண்கின்றோம். சான்றாக, சோவியத் நாட்டைப் பொருத்தவரை எந்த வீதத்தில் முதலீடு செய்யவேண்டும் என்பதை அரசே நிர்ணயம் செய்து விடுகிறது. மேற்கத்திய முதலாளித்துவ நாடுகளிலோ தனி நபர்கள் தான்—அல்லது நடைமுறையில் தனி நபர்களும் பொதுத் துறை யினரும் தனித்தனியாக—நிர்ணயம் செய்கின்றனர். இவ்வாறாக, பொருளாதார முன்னேற்றத்தில் சமநிலையில் இருக்கும் நாடுகள் கூட வெவ்வேறு வீதத்தில் முதலீடு செய்யக் கூடும். காரணம், அந் நாடுகள் வெவ்வேறு வகையான பொருளாதார அமைப்பு முறைகளில் செயல்படுவதுதான்.[9]

இவ்வாறு பொருளாதார அமைப்புமுறை வெவ்வேறாக இருந் தாலும் கூட, எல்லா நாடுகளுக்கும் பொதுவானதோர் அம்சம் உண்டு. அதாவது, மூலதனத்தைத் திரட்டுவதால் பொருளாதாரச்

[9] மேற்கத்திய நாட்டுப் பொருளாதார அமைப்பை முதலாளித்துவ அமைப்பு என்று அழைப்பது வழக்கமாகி விட்டது; ஆனால் உண்மையில் இது பொருத்தமற்றதுதான். மூலதனத்தைத் திரட்டுவதும், அதைப் பயன் படுத்துவதும் மேற்கத்திய நாடுகளுக்கும் மட்டுமன்றி, கம்யூனிச நாடுகளுக் கும் பொதுவானவைதான். எப்படி திரட்டுவது, அந்த மூலதனத்திற்குச் சொந்தக்காரர் யார் தனிமனிதர்களா அல்லது அரசா—என்பதில் மட்டும் தான் வேறுபாடு உள்ளது. ஆனால் இருவகை அமைப்பிற்குமே மூலதனம் இன்றியமையாதது.

செலவுகளும் உண்டு, பலன்களும் உண்டு. சான்றாக, ஒரு நாடு தன்னிடமுள்ள உற்பத்திச் சாதனங்களையெல்லாம் பயன்படுத்தி ஆண்டொன்றுக்கு குறிப்பிட்டதோர் அளவில் உற்பத்தி செய்வதாக வைத்துக்கொள்வோம். குறிப்பிட்ட இந்த அளவு உற்பத்தியைக் கொண்டு என்ன செய்வது என்பதை அந் நாட்டினர் தீர்மானிக்க வேண்டியுள்ளது. உற்பத்தி செய்யப்பட்டதனைத்தையும் அவ்வாண்டிலேயே நுகர்ந்து விடலாம் (உண்டு, உடுத்தி களிப்படையலாம்!) அல்லது அதில் ஒரு பகுதியை சேமித்து முதலீடு செய்யலாம் (சேமித்த ஒவ்வொரு காசும் சம்பாதித்த ஒரு காசாகும்). முதலீடு செய்வதனால், அல்லது மூலதன இருப்பைக் கூட்டுவதனால் அந் நாடு வருங்காலத்தில் இன்னும் அதிகமாக உற்பத்தி செய்யக்கூடும் அப்படியென்றால், மொத்த உற்பத்தியில் நுகர்ந்து அனுபவித்திருக்கக் கூடிய உற்பத்திப் பகுதியை நுகராமல் சேமித்து வைத்தது தான் சேமிப்பிற்கேற்படும் செலவாகும்; அதாவது வருங்கால உற்பத்தியை அதிகரிக்க வேண்டுமென்பதற்காக இன்றைய நுகர்வைத் தியாகம் செய்ய வேண்டியுள்ளது. இவ்வாறாக, இன்றைய நுகர்வு முக்கியமா நாளைய உற்பத்தி முக்கியமா, அல்லது இன்றைய இன்பமா நாளைய பொருளாதார வளர்ச்சியா என்ற தேர்வினை அடிப்படையாகக் கொண்டதுதான் முதலீடு. இதில் எதை எப்படி ஒரு சமுதாயம் தேர்ந்தெடுக்கின்றதோ அதைப் பொருத்துத்தான் அச்சமுதாயத்தின் பொருளாதார முன்னேற்றம் அமைகிறது.[10]

## சிறப்புத் தேர்ச்சி, வேலைப் பகுப்பு, பேரளவு உற்பத்தி

## (Specialization, Division of Labour Large-Scale Production)

மக்கள்தொகை வளர்ச்சி, புதிய வளங்களைக் கண்டுபிடித்தல், மூலதனத் திரட்சி ஆகிய அனைத்துமே ஒரு நாட்டின் உற்பத்தியை அதிகரிக்கப் பெரிதும் உதவக்கூடும். எனினும், உற்பத்தி அமைப்பு முறையிலும் உற்பத்தி செய்யும் தொழில்நுட்ப முறையிலும் முன்

[10] இந்தப் பொதுவான விளக்கத்தில் கூட ஒரு திருத்தம் செய்ய வேண்டியுள்ளது. ஒரு நாட்டில் பயன்படுத்தப்படாத உற்பத்தி சாதனங்கள் இருந்தால் அவற்றைப் பயன்படுத்துவதன் வழியாக அந்நாடு தன் முதலீட்டையும் அதிகரிக்க முடியும். அதேசமயம் தன் நுகர்ச்சியையும் அதிகரிக்கக் கூடும். சான்றாக பெரும் பொருளாதார மந்தத்தினால் அமெரிக்காவில் வேலையற்றிருந்த தொழிலாளர் பலர் இருந்தனர்; அதனால் இரண்டாம் உலக யுத்தத் தொடக்கத்தில் நுகர்வுப் பொருள்களின் உற்பத்தியைக் குறைக்காமலே யுத்தத் தளவாடங்களின் உற்பத்தியைப் பெருக்க முடிந்தது. வளர்ச்சி குன்றிய நாடுகளில் கூட பல இதேபோல் செய்ய முடியுமென்று பலர் கருதுகின்றனர்; ஏனெனில் இந்நாடுகளில் பயன்படுத்தப்படாத உற்பத்தி சாதனங்கள் உள்ளன; அவற்றையெல்லாம் ஒன்று திரட்டி முறையாகப் பயன்படுத்தினால் இது சாத்தியமாகலாம்.

னேற்றம் ஏற்படாமல், வெறும் உற்பத்திக் காரணிகளை மட்டும் அதிகரிப்பதில் பயனில்லை. அப்படிச் செய்து வந்திருந்தால் கடந்த 200 ஆண்டுகளாக நாம் அடைந்துள்ள பெரும் முன்னேற்றத்தை நம்மால் அடைந்திருக்க முடியாது. எங்கெல்லாம் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதோ அங்கெல்லாம் மொத்த உற்பத்தி எவ்வளவோ அதிகரித்துள்ளது ; அவ்வாறு மொத்த உற்பத்தி அதிகரித்ததற்கு உற்பத்திக் காரணிகளை அதிகமாக பயன்படுத்தியது மட்டும் காரணமல்ல என்பது தெளிவு. எனவே, பொருளாதார முன்னேற்றத்தை ஊக்குவிக்கக்கூடிய சக்திகளைப்பற்றிக் கூறும் போது, உற்பத்திக் காரணிகளைப் பயன்படுத்துவதில் ஏற்படும் மாறுதல்களுக்கும் முக்கியப் பங்கு உண்டு என்பதை மறந்துவிடக் கூடாது.

இவ் வகையான மாறுதல்களில் ஒருவகை உற்பத்திசெய்யும் அளவையும் சிறப்புத் தேர்ச்சியுடன் உற்பத்திசெய்யும் முறையையும் சார்ந்ததாகும்.[11] பழங்காலத்தில் இவ்வகைச் சிறப்புத் தேர்ச்சியோ பேரளவு உற்பத்தியோ நடைபெறவில்லை. சான்றாக, இடைகால ஐரோப்பாவை எண்ணிப் பார்ப்போம். முதலில் நம் மனதில் தோன்றுவதென்ன ? உற்பத்தி செய்துவந்த தொழிலகங்கள் மிகச் சிறியவையாய் இருந்ததோடு, உற்பத்தி செய்யும் வேலையும் பல பகுதிகளாக இல்லாமல் எல்லாம் ஒன்றாகவே நடைபெற்றன என்பதுதான். அக்காலத்திய தொழில்கள் பெரும்பாலும் நகர்ப் புறங்களில் இருந்த சின்னஞ்சிறு இடங்களிலோ, பட்டறைகளிலோ இடைக்காலப் பண்ணைகளின் ஏதாவதொரு பகுதியிலோதான் நடைபெற்றன. பண்ணையில் வேலை செய்த பண்ணையாள் நிலத்தில் பாடுபட்டதோடு, கலப்பையை சரிசெய்தும், தனக்கு வேண்டிய குடிசையைக் கட்டியும், தட்டுமுட்டுச் சாமான்களைத்

[11] உற்பத்தி அளவில் ஏற்படும் மாறுதல்களும் சிறப்புத் தேர்ச்சியில் தோன்றும் மாறுதல்களும் பெரும்பாலும் சேர்ந்தேதான் ஏற்படுகின்றன; எனினும் இவ் விருவகை மாறுதல்களும் வெவ்வேறானவை என்பதைப் புரிந்துக்கொள்ள வேண்டும். உற்பத்தி அளவில் ஏற்படும் மாறுதல்கள் என்று சொல்லும்போது உற்பத்தி செய்கின்ற நிறுவனத்தின் அளவில் ஏற்படும் மாறுதல்களைத்தான் குறிப்பிடுகின்றோம். மாறாக, சிறப்புத் தேர்ச்சியில் ஏற்படும் மாறுதல்களோ ஒரு பண்டத்தை உற்பத்தி செய்யும் வேலையை நுணுக்கமான பல வேலைகளாக அதிகரித்து, ஒவ்வொரு வேலைக்கும் அதற்கென்று செய்யப்பட்ட இயந்திரங்களையோ பயிற்சி பெற்ற உழைப்பாளிகளையோ பயன்படுத்துவதைக் குறிக்கின்றன. பொதுவாகக் கூறின், சிறிய நிறுவனத்தைக் காட்டிலும் பெரிய நிறுவனம்தான் சிறப்பு வாய்ந்த இயந்திரங்களையோ தொழிலாளர்களையோ எளிதாகப் பயன்படுத்த முடியும் மேலும், ஒரு வேலையை நுணுக்கமான பல பகுதிகளாகப் பிரிக்கும்போது, ஒவ்வொரு பகுதி வேலையைச் செய்வதற்கென்றும் தனித்தனி நிறுவனங்கள் தோன்றி அப்பகுதியை மட்டும் அவை செய்து கொண்டிருக்கலாம். இவ்விதமான சூழ்நிலையில் மிகஉயர்ந்த சிறப்புத் தேர்ச்சி நடைபெறும். அதேசமயத்தில் பல சிறிய நிறுவனங்கள் இயங்குவதும் சாத்தியமாகிறது.

தானே செய்துகொள்ளவும் வேண்டியிருந்தது; அவனுடைய மனைவி யும் மகள்களும் சமையல் வேலை செய்ததோடு, நூல் நூற்றும் துணி நெய்தும் வாழ்க்கை நடத்தினர். ஒருசில தொழில்கள் பெரிய அளவில் தொடங்கப்பட்டன என்பது உண்மைதான். ஆனால் இப்படிப் பெரிய அளவில் தொழில் நடந்தது விதி விலக்குத்தான். பெரும் பாலும் எல்லாத் தொழில்களுமே சிறிய அளவில்தான் நடைபெற்று வந்தன. கைவினைத்தொழில் பிரபலியமடைந்திருந்த நகரங்களில் கூட சிறிய பட்டறைகளில்தான் தொழில் நடைபெற்றது. ஒவ்வொரு பட்டறையிலும் ஒரு கைவினைஞரும், அவருக்கு உதவியாக அத் தொழிலைக் கற்பதற்கென்று வந்த மூன்று நான்கு பயிற்சியாளர் களும்தான் பெரும்பாலும் வேலை செய்தனர். எந்தத் தொழிலிலும் 10 பேர்கூட வேலைக் கமர்ந்ததில்லை. இப்படிப்பட்ட நிலையில் சிறப்புத்தேர்ச்சியோ சிலர் கூறுவதுபோல் வேலைப் பகுப்போ இருந்திருக்க முடியாது.

ஆனால் தொழில்மயமான இன்றைய உலகில் உற்பத்தி பெரும் பாலும் பெரிய அளவில்தான் செய்யப்படுகிறது; சில சமயங்களில் ஏராளமான உற்பத்தியும் நடைபெறுகிறது. சான்றாக, அமெரிக்காவில் ஆண்டொன்றுக்கு 1 பில்லியன் டாலர் பொருள் களுக்குமேல் உற்பத்தி செய்துவரும் கார்ப்பரேஷன்கள் மட்டும் நூற்றுக்குமேல் உள்ளன. முக்கியமான பல தொழில்களில் மூன்று அல்லது நான்கு மாபெரும் நிறுவனங்கள் மட்டுமே இருந்து வரு கின்றன; அப்படியிருந்தும் இந் நிறுவனங்கள் அமெரிக்க நாட்டு அங்காடியில் மட்டுமன்றி, உலக அங்காடியிலும் கூட செல்வாக்குப் பெற்றுத் திகழ்கின்றன. இம் மாபெரும் நிறுவனங்களின் உற்பத்தி முறையில் வரிசையாகப் பல்வேறு பாகங்களைப் பொருத்தும் நுணுக் கமும் (assembly line) கன்வெயர் பெல்ட் (conveyor-belt) நுணுக்கமும் சேர்ந்து எந்த அளவுக்கு வேலைப் பகுப்பை நுணுக்க மானதாகச் செய்துவிட்ட தென்றால், இயந்திர உற்பத்தியில் போல்ட்டை முடுக்குவது மட்டுமே ஒரு தொழிலாளியின் முழு வேலையாகி விட்டது. சிறப்புத்தேர்ச்சி எந்த அளவுக்கு முன்னேறி விட்டதென்றால், ஒவ்வொரு வேலைக்கும் தனித்தனி விஞ்ஞானிகள், பொறியியல் வல்லுநர்கள், நுட்பத்தொழில் வல்லார்கள் (technicians) என்று அமர்த்தப்பட்டுள்ளனர். இந்த அளவுக்குச் சிறப்புத் தேர்ச்சி நடைப்பெறுவதால் மனிதன் ஒரு வேலையை முழுமையாகத் தெரிந்து கொள்வதற்குப் பதிலாக அவ் வேலையில் ஏதாவதொரு சிறு பகுதியை மட்டுமே நன்றாக தெரிந்துக்கொள்ள வேண்டியுள்ளது என்று பலர் குறை கூறுகின்றனர். இந்த அளவுக்குச் சிறப்புத் தேர்ச்சியுடன் நடைபெறும் உற்பத்திமுறை, இன்று நம் வாழ்வில் எந்த அளவுக்குச் செல்வாக்குப் பெற்றுவிட்டது என்பதைப் புலப்

படுத்துவதற்குத்தான் இக்குறையை நாம் சுட்டிக்காட்டுகின்றோமே தவிர, வேறு காரணத்திற்காக அல்ல.

சிறப்புத் தேர்ச்சி அதிகரிக்கஅதிகரிக்க உற்பத்தித்திறன் அதிகரிப்பதேன்? இக் கேள்விக்கு ஸ்காட்லாந்து நாட்டின் தத்துவ மேதையாகவும் அரசியல் பொருளாதார ஞானியாகவும் புகழ்பெற்ற ஆடம்ஸ்மித் அவர்களே விடையளித்துள்ளார். நவீனப் பொருளாதாரத்திற்கு அடிப்படையாகக் கருதப்படும் 'நாடுகளின் செல்வம்' (Wealth of Nations, 1776) என்ற நூலின் முதல் அத்தியாயத்திலேயே 'உழைப்பாளியின் உற்பத்தித் திறன் மிக உன்னதமான நிலைக்கு முன்னேற்றமடைந்திருப்பதும், அவனுடைய திறமை, நுட்பம், ஆய்ந்து முடிவெடுக்கும் ஆற்றல் ஆகியவை வளர்ச்சி அடைந்திருப்பதும் வேலைப் பகுப்பின் விளைவுகள் என்றுதான் தோன்றுகிறது' என்று ஸ்மித் குறிப்பிட்டுள்ளார்.

அவரது இக் கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் குண்டூசித் தொழிலை சான்றாகக் காட்டியுள்ளார். ஒருவன் மட்டும் தனியாகக் குண்டூசி செய்வதாயிருந்தால், அவன் எவ்வளவுதான் சுறுசுறுப்பாக வேலை செய்தாலும் ஒரு நாளைக்கு ஒருசில பருவட்டான குண்டூசிகளைக்கூடச் செய்துமுடிக்க முடியாது. ஆனால் குண்டூசி செய்யும் வேலையாட்கள் அதிகமாகி விட்டால் அவ்வேலையை அவர்கள் தங்களுக்குள் பகிர்ந்து கொள்ளமுடியும். 'ஒருவன் கம்பியை இழுக்கிறான், மற்றொருவன் அதை நேராக நிமிர்த்துகிறான், மூன்றாவது ஆள் வெட்டுகிறான், நான்காவது ஆள் கூறாக்குகிறான், ஐந்தாவது ஆள் தலையைப் பொருத்த இடம் அமைக்கிறான்' என்று இப்படியே விளக்கிச் செல்கின்றார் ஆடம்ஸ்மித். அவருடைய கருத்துப்படி வேலைப் பகுப்பு அதிகரிப்பதால் ஏற்படும் பலன்கள் வருமாறு :

(1) ஒவ்வொரு தொழிலாளியும் தனது வேலை ஒன்றில் மட்டுமே கவனம் செலுத்துவதால், அவ்வேலையில் திறன் மிக்கவனாகின்றான்; (2) ஒரு வேலைப் பகுதியிலிருந்து பிறிதொரு பகுதிக்கு மாறவேண்டிய அவசியம் இல்லாததால் நேரம் மிச்சமாகிறது; (3) ஒவ்வொரு தொழிலாளியும் தன் வேலையின் தன்மையை நன்கு தெரிந்துகொள்ள முடிவதால், அதைச் செய்வதற்கு (இயந்திர சாதன முறையைக் கண்டுபிடித்தல் போன்று) வேறு சிறந்த உபாயத்தைக் கண்டுபிடிக்கக் கூடும். இவ் வேலைப் பகுப்பின் விளைவாக ஆயிரமாயிரம் குண்டூசிகளைச் சுத்தமாயும் ஒரேமாதிரியாயும் செய்துவிட முடிகிறது; அதோடு மட்டுமன்றி, தொழிலாளரின் எண்ணிக்கை அதிகரிப்பதைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாக உற்பத்தி செய்யவும் முடிகிறது. நவீனச் சொற்களில் கூறுவதாயின், முக்கியமான

அளவுச் சிக்கனங்கள் (economics of scale) ஏற்படுகின்றன ; அதாவது உள்ளிடுகையைக் காட்டிலும் வெளிப்படும் உற்பத்தி பல மடங்கு அதிகமாகிறது (படம் 1-4).




படம் 1-4. அளவுச் சிக்கனங்கள் இந்த உற்பத்திச் சார்பு அளவுச் சிக்கனங்களைக் காட்டுகிறது. (உழைப்பு, மூலதனம் ஆகிய) இரண்டு காரணிகளையும் இரண்டு மடங்கு அதிகரிக்கும்போது, உற்பத்தி இரண்டு மடங்கிற்கு மேல் அதிகரிக்கின்றது. *A* இலிருந்து *A*1-க்கு அல்லது *B* இலிருந்து *B*1-க்கு நகரும்போது இது உண்மைதான் என்பதை நீங்களே கண்டு கொள்வீர்கள்.

வேலைப் பகுப்பினால் ஏற்படும் பலன்களை விவரித்த ஆடம் ஸ்மித் அவர்கள், அதற்குரிய முக்கியமான நிபந்தனைகளையும் சுட்டிக் காட்டுகின்றார். வேலைப் பகுப்பு 'அங்காடியின் விரிவினால்' ('extent of the market') வரையறுக்கப்படுகிறது என்பது அவரது சிறந்த கூற்றாகும். சான்றாக, ஏனைய எந்த நாட்டுடனும் பொருளாதார உறவு கொள்ளாது தனித்திருக்கும் ஒரு தீவை எடுத்துக்கொள்வோம். ஒரு சிறிய குண்டூசித் தொழிற்சாலைகூட ஆயிரமாயிரம் குண்டூசிகளை உற்பத்தி செய்யக்கூடிய இந்த நாளில் அவ்வளவு குண்டூசிகள் அத்தீவிற்குத் தேவைப்படாது ; எனவே, குண்டூசி செய்யும் நவீனக் கார்ப்பரேஷனை அங்கு அமைக்க முடியாது. எனினும், அத்தீவிற்குக் குண்டூசிகள் தேவைப்பட்டால், சிறிதளவு உற்பத்தி செய்தாலே போதும் ; அவ்வாறாயின் குண்டூசித் தொழிலில் சிறப்புத் தேர்ச்சி பெற்ற தொழிலாளிகளுக்கோ இயந்திரங்களுக்கோ அங்கு வாய்ப்பு இருக்க முடியாது. இந் நிலையில் அங்கு செய்யப்படும் ஒரு குண்டூசியின் அடக்கச் செலவு,

அதாவது ஒரு குண்டூசி செய்வதற்காகும் உழைப்பு, மூலதனம், நிலம் ஆகியவற்றின் செலவு அதிகமாகத்தான் இருக்கும். எனவே, ஒரு பொருளுக்குள்ள அங்காடி விரிவாக இருந்தால்தான் ஒரு நாடு அதை மிகக் குறைந்த செலவில் உற்பத்தி செய்து, பலனடைய முடியும்.

அங்காடியின் விரிவோ பல காரணிகளைச் சார்ந்ததாகும். முதலாவது, ஒரு நாடு, தன் உள்நாட்டுத் தேவையை மட்டும் பூர்த்தி செய்வதற்கென்று இல்லாமல், பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் வகையிலும் உற்பத்தி செய்து கொண்டிருக்க வேண்டும். அப்படி யின்றி, இடைக்கால ஐரோப்பாவிலோ பெரும்பாலான மக்கள் இங்கும் அங்குமாகக் கிராமப்புறங்களில் தனித்து வாழ்ந்து வந்தனர்; எனவே, பெரும்பாலும், விற்பனை செய்வதற்கென்று பொருள்களை உற்பத்தி செய்யாமல், தம் சொந்தத் தேவைக்கென்றுதான் உற் பத்தி செய்து வந்தனர்.

இரண்டாவதாக, ஒரு நாட்டிலுள்ள பொருளாதாரத் துறைகள் அனைத்தும் ஒன்றோடொன்று தொடர்புகொண்டிருக்கும் வகையில் அந்நாட்டில் போதுமான அளவுக்குப் போக்குவரத்து வசதிகள் இருக்க வேண்டும். அப்படியின்றி, 1812 ஆம் ஆண்டில்கூட அமெரிக்காவிலுள்ள மேய்ன் (Maine) என்ற இடத்திலிருந்து ஜார்ஜியா (Georgia) விற்கு ஒரு லாரிச் சுமையை அனுப்புவதற்கு 115 நாட்கள் ஆனதோடு, கட்டணமும் 1,000 டாலர் என்றிருந்தது. எனவே, பெரிய அங்காடி தோன்றுவதற்கு, இடம் மட்டும் பெரியதா யிருந்தால் போதாது; போக்குவரத்து வசதிகளும் இருக்க வேண்டும்.

மேலும், ஒரு பொருளுக்குரிய அங்காடி விரிவானதாக இருக்க வேண்டுமென்றால், அது விற்பனை செய்யப்படும் பகுதியில் மக்களுக்குப் போதிய வருமானம் இருக்க வேண்டும். குறிப்பாக, தொழிலாளரின் சராசரி வருமானம் மிகக்குறைந்த அளவில் இருக் கும் பின்தங்கிய நாடுகளுக்குத்தான் இது மிகப் பொருத்தமான நிபந்தனையாகும். சான்றாக, மக்களின் தலா உற்பத்தி (எனவே தலா வருமானம்) சுமார் 75 அல்லது 100 டாலர் மட்டுமே இருக்கும் ஒரு நாட்டை யூகித்துக்கொள்வோம்; இவ்வளவு வறுமையுள்ள நாட்டில் கார்கள், குளிர் சாதனங்கள், ஆலைப் பொருள்கள் போன்றனவற்றிற்குத் தேவை மிகக் குறைவாகத்தான் இருக்கும். அதிகப்பட்சம் இவ்வகையான பொருள்களை ஒருசில பெரும் செல் வந்தர்கள்தான் வாங்குவர். அதோடு, அந் நாட்டில் பெரும்பாலான மக்கள் வறுமையில் வாடும்போது, அவர்கள் வாழ்க்கைக்கு இன்றி யமையாத உணவு, உடை, உறைவிடம் போன்ற தேவைகளைப்

பூர்த்தி செய்வதற்குத்தான் அந்நாட்டிலுள்ள சாதனங்கள் பெரும் பாலும் பயன்படுத்தப்படும். இவ்விதமான சூழ்நிலையில் அந் நாட்டின் மக்கள்தொகை எவ்வளவுதான் அதிகமாயிருந்தாலும் பெரிய அளவில் தொழில்கள் நடைபெறுவது கடினம்தான்.

சுருங்கக் கூறின், சிறப்புத் தேர்ச்சி பெற்று பெரிய அளவில் உற் பத்தி நடைபெறக் கூடிய வாய்ப்பு உள்ளதா என்பதை ஆராயும் போது, அங்காடியை மட்டுமன்றி, பொதுவாக பொருளாதார முன் னேற்றத்தை ஊக்குவிக்கக்கூடிய எல்லாக் காரணிகளையுமே எண்ணிப்பார்க்க வேண்டியுள்ளது. ஆடம்ஸ்மித்தின் கருத்துப்படி, ஒருநாடு பொருளாதார முன்னேற்றம் அடைய வேண்டுமாயின் அந்நாட்டிலுள்ள உழைப்பாளிகளின் உற்பத்தித் திறன் உயர வேண்டும்; அப்படி உழைப்பாளியின் ஆக்கத் திறன் அதிகரிக்க வேண்டுமானால், விரிவான அங்காடி, போக்குவரத்து வசதிகள், மக்கள்தொகை வளர்ச்சி, தலா உற்பத்தி உயர்வு போன்ற சாதக மான சூழ்நிலைகள் இருக்க வேண்டும்.

## சாதனங்களைப் பயன்படுத்தும் திறன்

உற்பத்திச் சாதனங்களைத் திறமையாகப் பயன்படுத்துவதன் வழியாகவும் ஒருநாடு முன்னேற்றம் பெற முடியும்; அதாவது, அந் நாடு செலவிடும் ஒவ்வோர் அலகுச் சாதனமும் உயர்ந்தபட்ச உற் பத்தியை அளிக்கும் வகையில் அச் சாதனங்களைப் பயன்படுத்த வேண்டும். நவீனப் பொருளாதாரத்தில் 'திறமை' என்ற சொல் நுட்பமான சொல்லாகும். பொதுவாகக் கூறின், எவருடைய பொருளாதார நலமும் பாதிக்கப்படாமல், ஒருவருடைய நலத்தை அதிகரிக்கக்கூடிய முறையில் சாதனங்களைப் பங்கிடும் வழிமுறை களைத்தான் 'திறமை' என்ற சொல் புலப்படுத்துகின்றது. சான்றாக, ஒருநாட்டில் ஏனைய பொருள்களின் உற்பத்தி குறைந்து விடாமல் நுகர்வோர் விரும்பும் பொருள்களின் உற்பத்தியை அதி கரிக்கக் கூடிய சாத்தியம் இருந்தும், அவை அதிகமாக உற்பத்தி செய்யப்படாமலிருந்தால் அந் நாடு திறமை குறைந்ததென்றுதான் சொல்ல வேண்டும். எனவே, உற்பத்திக் காரணிகளின் உள்ளிடு கையை வேறுவிதமாகப் பயன்படுத்துவதன் வழியாக உற்பத்தியைப் பெருக்குவதுதான் திறமையாகும். பொருளாதார மொழியில் கூறுவ தாயின், மேலும் சிறந்த முறையில் சாதனங்களைப் பங்கீடு செய் வதன் மூலம் உற்பத்தியை அதிகரிப்பதுதான் திறமை எனப்படும்.

இந்தப் பொருளின்படி பொருளாதார அறிஞர்கள் உற்பத்தித் திறமைக்கு அதிக முக்கியத்துவம் தந்துள்ளனர். இதற்குப் பல

காரணங்கள் இருக்கின்றன. ஒரு நாட்டில் எந்தவிதமான பொருளாதார அமைப்புமுறை உள்ளதோ அதைப் பொருத்துத் தான் இத்திறமை ஏற்படுகிறது என்பது ஒரு காரணமாக இருக்கலாம். ஆனால், இதைவிட முக்கியமான காரணம், மையக் கட்டுப்பாடும் கெடுபிடியான திட்டங்களையும் கொண்ட பொருளாதார அமைப்பைக் காட்டிலும், அங்காடியை மையமாகக் கொண்டு சுதந்திரமாய் இயங்கும் பொருளாதார அமைப்பில்தான் சாதனப் பங்கீடு திறமையாகச் செய்யப்பட முடியும் என்று பலர் வாதித்து வருகின்றனர். ஆனால் இந்த வாதம் பல நிபந்தனைகளுக்கு உட்பட்டதாகும். எவ்வாறெனில், (1) தனியார் சுதந்திரம் கொண்ட அங்காடிப் பொருளாதார அமைப்பிலும் எத்தனையோ விதமான திறமைக் குறைவைப் பார்க்கின்றோம்; [12] (2) மையக் கட்டுப் பாடுள்ள பொருளாதார அமைப்பிலும்கூட கொள்கையளவில் (ஓரளவிற்கு நடைமுறையிலும்) உற்பத்தித் திறனை அதிகரிப்பதற் காக ஒருசில அங்காடியின் அம்சங்களைப் புகுத்த முடியும். இருந்த போதிலும், அங்காடியை மையமாகக்கொண்டு சுதந்திரமாக இயங்கும் பொருளாதார அமைப்பில்தான் சாதனப் பங்கீட்டைத் திறமையுடையதாக்கும் சக்தி, அதிகம் உண்டென்பதை வரலாறு உறுதிப்படுத்தியுள்ளது. சான்றாக, பிரிட்டன் நாட்டில் ஏற்பட்ட தொழில் புரட்சியும், அங்காடிப் பொருளாதார அமைப்புமுறை பரவி யதும் ஏறக்குறைய ஒரேகாலத்தில்தான் நிகழ்ந்தன; இவ் விரண்டும் ஒன்றையொன்று ஊக்குவிக்கக் கூடியன என்பதில் சந்தேகமே கிடையாது. மாறாக, மையத்திட்டமுறை 50 ஆண்டுகளுக்கு மேலாக அமுலில் இருந்துவரும் சோவியத் நாட்டில் சாதனப் பங்கீடு திறமையுடன் செய்யப்பட்டு வந்துள்ளதா என்றால், இல்லையென்று தான் சொல்லலாம்.

திறமையான சாதனப் பங்கீட்டின் வழியாக ஒரு நாடு எந்த அளவுக்கு முன்னேற்றம் அடைய முடியும் என்பதைத் திட்டவட்ட மாகச் சொல்ல முடியாது. ஏனெனில் சோவியத் நாட்டில் சாதனங் கள் திறமையுடன் பங்கிடப்படாமலிருந்தும் கூட, அந் நாடு எவ்வளவோ விரைவாக முன்னேற்றமடைந்து வந்துள்ளது. இதனால்தான் ஒருசில பொருளாதார அறிஞர்கள், சாதனப் பங்கீட்டுத் திறமையைக் காட்டிலும் முக்கியமான வேறுசில திறமைகளும் இருக்கலாம் என்று வாதாடுகின்றனர். சான்றாக,

[12] துரிதமான தொழில்வளம் கொண்ட பகுதிகளில் சுத்தமான நீரும் காற்றும் கெட்டுப்போவது சாதாரண காரியமாக இருந்தாலும் கூட, இவை யும் திறமைக் குறைவுக்குச் சான்றுகள்தான் மேலும், இன்றைய பொருளா தார அமைப்பில் முக்கியமான எத்தனையோ காரியங்களில் தனியார் நலன் பொது நலத்தைப் பாதித்து வருகின்றதையும் மறந்துவிடக் கூடாது.

பேராசிரியர் ஹார்வி லிய்பென்ஸ்டீன் (Prof. Harvey Leibenstein) அவர்கள் "$X$–திறன்" ("$X$–efficiency") என்னும் திறனைப்பற்றிக் குறிப்பிடுகிறார்; முறையான சாதனப் பங்கீட்டைக் காட்டிலும் "$X$–திறன்" தான் பொருளாதார முன்னேற்றத்திற்கு முக்கியமான தென்று பல கட்டுரைகளில் [13] அவர் வாதாடியுள்ளார்.

"$X$-திறன்" என்பதைச் சுருக்கமாகப் பின்வருமாறு விளக்கலாம்; பொருளாதார உற்பத்திக்கென்று தொழிலாளிகளையும் நிர்வாகிகளையும் இத்தனை மணி நேரத்திற்கென்றுதான் நிறுவனங்கள் வேலைக்கமர்த்துகின்றன; ஆனால் குறிப்பிட்ட அந்த வேலை நேரத்தில் அவர்கள் வேலை செய்யும் போது அவர்களின் ஊக்கமும் உற்சாகமும் ஒரே மாதிரியாக இருக்க முடியாது. இதில் எத்தனையோ வேறுபாடுகள் இருக்கக் கூடும். சான்றாக, கிணறுகட்டும் வேலையையே (1–1 வரைபடம்) எடுத்துக் கொள்வோம். $OT_3$ கருவிகளும் $OL_2$ மணிநேர உழைப்பும் பயன்படுத்தினால் போதும், 100 கிணறுகள் கட்டி முடிக்கப்பட்டு விடும் என்று சொல்லிவிட முடியாது. வேலை செய்யும் அந்த நேரத்தில் தொழிலாளர் வேலை செய்யும் தன்மை, காட்டும உற்சாகம், முயற்சி ஆகியவற்றைப் பொறுத்துக் கட்டப்படும் கிணறுகள் 100-க்கும் அதிகமாகவோ குறைவாகவோ இருக்கக்கூடும். அதோடு, மேற்பார்வையாளர், நிர்வாகிகள் ஆகியோரின் வேலையையும் சேர்த்துப் பார்த்தால் இஃது உண்மை தான் என்று புலப்படும். ஏனெனில் அவர்களது வேலையின் தன்மையிலும் கூட வேறுபாடு இருக்கக்கூடுமென்று லிய்பென்ஸ்டீன் வாதாடுகிறார். இதன்படி பார்த்தால், பொருளாதார முன்னேற்ற மடைவதற்கு மற்றொரு காரணியும் உண்டு என்பது தெளிவாகிறது; அதாவது, குறிப்பிட்ட மணிநேர உழைப்பில் முன்பைவிட அதிகமாக உற்பத்தி செய்யக்கூடிய விதத்தில் $X$- திறனின்மையைக் குறைப்பதும் ஒரு காரணியாகும்.

திறன்பற்றிய இக் கருத்து இன்னும் எத்தனையோ விவரங்களை நமக்குப் புலப்படுத்துகின்றது; தொழிலாளர் தம் வேலையைப் பற்றியும் ஓய்வைப் பற்றியும் கொண்டுள்ள மனப்பான்மை, நிர்வாகம்

[13] பார்க்க வேண்டியவை: American Economic Review (June 1966) இல் Harvey Leibenstein எழுதியுள்ள "Allocative Efficiency virsus $X$-efficiency" என்ற கட்டுரை; Quarterly Journal of Economics, LXXXIII (November 1969) வெளியீட்டில் Harvey Leibenstein அவர்கள் எழுதியுள்ள "Organizational or Frictional Equilibria, $X$- efficiency and the Rate of Innovation" என்ற கட்டுரை; Quarterly Journal of Economics LXXXVI (May, 1972) வெளியீட்டில் Harvey Leibenstein எழுதியுள்ள "Comment on the Nature of $X$- efficiency" என்ற கட்டுரை

செய்வோரின் தராதரம், பலர் சேர்ந்து வேலை செய்யும்போது காட்டும் ஒழுங்குமுறை, உற்சாகம், இன்னும் பொதுவாகக் கூறின், சமுதாயத்தினர் எந்தக் குறிக்கோள்களுக்கு அதிக முக்கியத்துவம் தருகின்றனர் என்பது போன்ற அனைத்துமே நம் எண்ணத்தில் தோன்றுகின்றன. பொருளாதார முன்னேற்றத்திற்கு இவை அனைத்துமே முக்கியமானவைதான் என்பது தெளிவு. இதற்குச் சான்றாக, உலகப்போருக்குப் பின்னர் ஜப்பான் நாடு எவ்வளவு ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் முன்னேற்றமடைந்துள்ளது என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். எனவே, திறமை என்பது சாதனப் பங்கீட்டில் ஏற்படும் மேம்பாட்டை மட்டுமன்றி, நிர்வாக ஊக்கத்தையும், உழைப்பின் ஆர்வத்தையும் குறிப்பிடுவதாகக் கொண்டு பார்த்தால், பொருளாதார முன்னேற்றத்திற்கு இதுவும் முக்கியமானதுதான் என்றே தெரிகிறது.

## தொழில்நுட்ப முன்னேற்றம்
## (Technological progress)

நமது பட்டியலில் கடைசியாக இடம் பெற்றுள்ள காரணி தொழில்நுட்ப முன்னேற்றம். நவீன உலகின் மிகச் சிறப்பான அம்சமாக விளங்குவதும் இதுதான். தொழில்நுட்ப முன்னேற்றத்தினால் நமது வாழ்க்கையே புரட்சிகரமாக மாறியுள்ளதை நாம் அனைவருமே அறிவோம், பொருள் உற்பத்திக்குத் தேவையான உழைப்பு, நிலம், மூலதனம் ஆகியவற்றின் செலவு, புதிய தொழில்நுட்பத்தாலும் உற்பத்தி முறையாலும் எவ்வளவோ குறைக்கப்பட்டுள்ளது. 1-1 வரைப்படத்தின் வாயிலாக இதை விளக்குவதாயின், உற்பத்திச்சார்பே இடம் பெயர்ந்து, $OL_1$ உழைப்பையும் $OT_1$ கருவிகளையும் கொண்டு 100 கிணறுகளுக்குப் பதிலாக 170 கிணறுகளைக் கட்டிமுடிக்க முடிகிறது. அதேபோல், உழைப்பையும் கருவிகளையும் கொண்ட ஒவ்வொரு தொகுப்பைக் கொண்டும் முன்பைவிட அதிகமான கிணறுகளைக் கட்ட முடியும்.

அடுத்து, எவ்வளவு அதிகமான சாதனங்களையும் உழைப்பையும் பயன்படுத்தினால்கூட உற்பத்தி செய்திருக்க முடியாத எத்தனையோ வகையான புதிய பண்டங்களை தொழில்நுட்ப முன்னேற்றத்தின் வாயிலாக உற்பத்தி செய்யமுடிகிறது. நவீனத் தொழில் வளமிக்க நாடுகள் மேற்கொள்ளும் சிறப்புத் தேர்ச்சி முறையினால் மனிதனின் முக்கியத்துவமே அழிந்துவிட்டதாகக் குறை கூறும் பலர், அந்நாடுகளிலுள்ள நுணுக்கமான தொழில்நுட்பத்திற்கும் இயந்திர சாதனங்களுக்கும் மனிதன் அடிமையாகி விட்டான்

என்று அந் நாடுகளைக் கண்டனம் செய்வதும் உண்டு. ஆனால் இப்படிக் கூறுவது, நமது வாழ்க்கையில் எதுஎது மிக முக்கியமானது என்ற அவரவர் மதிப்பீட்டைச் சார்ந்த பிரச்சினையாகும். நல்லதோ கெட்டதோ எதுவானாலும் சரி, புதுப்புது உற்பத்தி முறைகளும், புத்தாக்கங்களும் (inventions), கருத்துகளும், தொழில்நுட்பமும் தோன்றிக்கொண்டே இருந்தால்தான் பொருளாதார முன்னேற்றம் ஊக்குவிக்கப்பட முடியும்; முன்னேற்றத்திற்கான ஏனைய காரணிகள் எவ்வளவுதான் சாதகமாயிருந்தாலும், இவை ஏற்படவில்லை யென்றால் முன்னேற்றத்தைப் பற்றிச் சிந்திக்கக்கூட முடியாது.

மனித வரலாற்றில் தொழில்நுட்ப முன்னேற்றம் என்பது ஒன்றும் புதிதல்ல. மிகப் பழங்காலத்திலிருந்தே தொழில்நுட்ப முன்னேற்றம் ஏற்பட்டுக் கொண்டேதான் வந்துள்ளது; அதன் விளைவுதான் நாம் வாழும் இந்த நவீன வாழ்க்கை. ஒருசில பொருள்களைக் கருவிகளாகப் பயன்படுத்தல், நெருப்பைக் கட்டுப் படுத்தல், சக்கரத்தைக் கண்டுபிடித்தல், கால் நடைகளையும் தாவரங்களையும் வளர்க்கத் தொடங்கியது, மண் பாண்டங்கள் செய்யக் கற்றுக் கொண்டது, செப்பு உலோகத்தையும் இரும்பையும் பயன்படுத்தத் தொடங்கியது ஆகிய அனைத்துமே முக்கியமான தொழில்நுட்ப முன்னேற்றத்தைத்தான் பிரதிபலிக்கின்றன. எனினும், நவீன காலத்தின் தனிச் சிறப்பாக உள்ளது, மிக நுணுக்க மான புதிய தொழில்நுட்பம் வேகமாகத் தோன்றிக் கொண்டே இருப்பதுதான். கடந்தகாலத் தொழில்நுட்ப முன்னேற்றமோ, பொருளாதார முன்னேற்றத்தைப்போல் ஏதோ இங்கும் அங்கு மாக மெதுவாகத்தான் ஏற்பட்டன. ஆனால் இன்றோ அப்படியல்ல; இன்றைய தொழில்நுட்ப முன்னேற்றம் எதிர்பார்க்கும் வகையில் மிக விரைவாகவும் ஒழுங்காகவும் நடைபெற்று வருகிறது; ஏதோ இங்கும் அங்குமாகச் சிறிதளவில் ஏற்படாமல் பெரும் வெள்ளம் போல் ஓடிக்கொண்டே இருக்கிறது.

இன்றைய நிலையில், தொழில்நுட்ப முன்னேற்றம் என்பது, நடைமுறை விஞ்ஞானத்தையும் முடிவாக, செயன்முறை கருதா விஞ்ஞானத்தையும் (pure science) சார்ந்தது என்பது வெளிப்படை. இந்தப் பிரபஞ்சத்தைப்பற்றி நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டு மென்ற ஆர்வத்தால் அதன் இயல்பை மனிதன் எண்ணிப் பார்த் தான்; பிறகு அவ்வெண்ணம் ஆழ்ந்த சிந்தனையைத் தூண்டியது; அச் சிந்தனையின் விளைவாக அவன் சில சாதனங்களைக் கண்டு பிடிக்கவும் அவற்றைப் பயன்படுத்தி தன் வேலையை மிச்சம் பண்ணவும் முடிந்தது. ஒரு விதத்தில் பார்த்தால், விஞ்ஞான

அடிப்படையில் எண்ணிப் பார்க்கும் மனப்பான்மைதான் எல்லா முன்னேற்றங்களுக்கும் அடிப்டையாக உள்ளது என்பது தெரியும். இப் பிரபஞ்சத்தின் தன்மையையும் இயற்கை விதிகளையும் பற்றி மற்றவர்கள் என்ன சொல்லியுள்ளனர் என்பதை நம்புவதற்குப் பதிலாக, தம்சொந்த அறிவால் உண்மையைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம்தான் இயற்கையின் இரகசியங்களை வெளி படுத்தியது. இவ்விதமான ஆய்வுமுறை பொதுவானதென்றோ எல்லோருக்கும் அவசியமானதென்றோ கூறுவதற்கில்லை. எனினும், மேற்கித்திய நாடுகளில் தோன்றிய விஞ்ஞான விழிப் புணர்ச்சியின் நீண்டகால வளர்ச்சியின் விளைவுதான் இது.

விஞ்ஞான முன்னேற்றம் கூட அதற்கெனப் பயன்படுத்தப்படும் சாதனங்களைப் பொருத்ததுதான்; குறிப்பாக, தொழில்நுட்பத் துறைக்கும் நடைமுறை விஞ்ஞானத்துறைக்கும் சாதனங்கள்தான் முக்கியமானது. எனவே, பொருளாதார முன்னேற்றத்திற்குக் கல்வியும் மிக முக்கியமான காரணியாகும். தொழில்நுட்பத் துறையில் புதியன கண்டுபிடிக்கும் வாய்ப்பு கல்வியே இல்லாத சமுதாயத்தில் ஏற்படுவது அரிது; சொல்லப் போனால், புதிய தொழில்நுட்ப முறைகள் அச்சமுதாயத்திற்குக் கிடைத்தாலும் அவற்றை அவர்கள் பயன்படுத்தக் கூடத் தெரியாமல் இருக்கலாம். சான்றாக, எழுதப் படிக்கக் கூடத் தெரியாத மக்கள் 90 சதவீதத்திற்கு மேல் இருக்கின்ற இந்தோநேசியா போன்ற நாடுகள் தொழில்நுட்பப் புரட்சியின் பலன்களை அடைவதெப்படி? அதோடு மட்டுமன்றி, முன்னேற்றம் அதிகரிக்க அதிகரிக்க, சிறப்புப் பயிற்சி பெற்ற தொழில்நுட்ப வல்லுநர்களுக்கும் தனித்துறை வல்லுநர்களுக்கும் (Specialists) ஏற்படும் தேவையும் அதிகரித்துக் கொண்டுதான் இருக்கும்.

பொருளாதார முன்னேற்றமடைவதற்குக் கல்வி எந்த அளவுக்கு உதவக்கூடும் என்பதை எண்ணிப்பார்க்கும் போது, எத்தனையோ பிரச்சினைகள் எழுகின்றன. அவற்றைப்பற்றிய நூல்களும் ஏராள மாக வெளிவந்து கொண்டிருக்கின்றன. அப்பிரச்சனைகளில் சில வருமாறு: முதற் கருவிப் பொருள்களில் முதலீடு செய்வதால் ஏற் படும் பலன்களை எளிதாக அளவிட முடிகிறது; ஆனால், கல்வியில் செய்யப்படும் முதலீட்டிலிருந்து எந்த அளவுக்குப் பொருளாதாரப் பலன்கள் கிடைக்கின்றன என்பதை அளவிடுவதெப்படி? கல்விக்குச் செய்யப்படும் செலவிற்கும் நாட்டின் மொத்த உற்பத்தி அளவிற்கு முள்ள தொடர்பு என்ன? ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியில்

கல்வியின் பங்கு என்ன என்பதை அளவிடுவதெப்படி? இப்பிரச்சினைகளெல்லாம் மிக முக்கியமானவைதான்; ஆனால் சிக்கல் நிறைந்தவை.[14]

தொழில்நுட்ப முன்னேற்றத்திற்குக் கல்வி அறிவு மட்டும் போதாது; புதிய தொழில்நுட்பத்தைப் புகுத்தக்கூடிய தொழில் வழிகாட்டுவோரும் தேவை. அவர்களைத்தான் தொழில் துணிவோர் (entrepreneurs) என்று அழைக்கின்றோம். இதையே நுட்பமான சொற்களில் கூறுவதாயின், புதியன கண்டுபிடித்தல் (innovation) மட்டும் போதாது, புத்தாக்கமும் (invention) அவசியம். அதாவது, புதிய முறைகளைப் பயனுள்ள வகையில் நடைமுறையில் புகுத்த வேண்டும். சான்றாக, 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்கிலாந்து நாட்டின் மாபெரும் 'பஞ்சாலைத் தொழில் மேதை' யாகப் புகழ் பெற்ற ரிச்சர்ட் ஆர்க்ரைட் (Richard Arkwright) அவர்களை நினைத்துப் பாருங்கள். பஞ்சாலைத் தொழிலில் மிக முக்கியமான கண்டுபிடிப்பான நீர்ச்சட்டத்தை (Water frame) அவர் கண்டுபிடிக்கவில்லை, மற்றவர்களிடமிருந்து அதைத் திருட்டுத்தனமாகப் பெற்று விட்டார் என்றுகூடச் சிலர் சொல்லலாம்; எனினும், முதன்முதலில் அவர்தான் அதைத் தொழிலில் புகுத்தி வெற்றியடைந்து ஏராளமாகச் சம்பாதித்தார்; இங்கிலாந்தின் தொழில்புரட்சிக்கு முக்கியமானதொரு காரணகர்த்தாவாக விளங்கினார்.

இவ் வகையான புத்தாக்கங்களையெல்லாம் கொண்டதாகத் தொழில்நுட்ப முன்னேற்றத்தை விரிவு படுத்தினால், அஃது எவ்வளவு சிக்கல் நிறைந்ததாகி விடுகிறது. என்பதை நாம் புரிந்து கொள்ள முடிகிறது. புதிய தொழில்நுட்ப முறைகளைப் பலனுள்ள வகையில் புகுத்த வேண்டுமாயின், இன்னும் அதிக மூலதனம் தேவை; அதோடு, தொழில் நிறுவனங்களை விரிவாக்கவும் வேண்டும். மேலும், ஒழுங்கு முறையுடன் வேலை செய்யக்கூடிய பயிற்சி பெற்ற தொழிலாளர் தேவை. இன்னும் சற்று ஆழமாகச் சிந்தித்துப் பார்த்தால், பொருளாதார மாறுதல்களுக்கேற்ப சமுதாயத்தினர் தம்மை மாற்றிக் கொள்ளக்கூடியவர்களாக இருக்க வேண்டும் என்பது புலனாகும். அண்மைக் காலம் வரை ஏற்பட்ட பொருளாதார மாறுதல்கள் மிக மெதுவாகவும் படிப்படியாகவும்தான் ஏற்பட்டன. எனவே, இவ் விதமான பிரச்சினைகள் அப்போது அவ்வளவாக இல்லை. ஆனால், இன்றும்கூட பல நாடுகளில்

[14] இப்பிரச்சினைகள் பற்றிய விரிவான ஆய்விற்கு F. Harbison and C. Myers அவர்களின் 'Education, Manpower and Economic Growth' (New York : McGrow - Hill, 1964) என்ற நூலைப் படிக்கவும்.

புதிய மாறுதல்களுக்கேற்ப தம் மனப்போக்கையும் சமூக அமைப்பையும் மாற்றிக் கொள்ளாமல், தம் பரம்பரைப் பழக்க வழக்கங்களிலேயே பற்றுள்ள மக்கள்தான் அதிகமாக உள்ளனர்.

இவ்வாறாக, பொருளாதார முன்னேற்றப் பாடம், பொருளாதார அறிவியலை மட்டுமன்றி, வரலாறு, சமூக இயல் ஆகியவற்றையும், சார்ந்தது என்பது இதிலிருந்தே புலனாகிறது. சொல்லப்போனால், தத்துவப் பாடத்தையும்கூட ஓரளவிற்குச் சார்ந்தது எனலாம். ஏனெனில், பொருளாதார முன்னேற்றம் (நல்லதாகிலும் சரி, கெடுதலானும் சரி) மக்கள் செய்யும் தொழிலைச் சார்ந்ததோடு மட்டுமன்றி, சமுதாய அமைப்பின் அடிப்படையையும் ஆதாரமாகக் கொண்டது.

## பொருளாதார வளர்ச்சியில் காரணிகளின் தராதர முக்கியத்துவத்தை அளவிடல்

பொருளாதார முன்னேற்றத்தில் ஒவ்வொரு காரணியும் எந்த அளவுக்குப் பங்கு கொள்கின்றன என்பதை அளவிடுவது மிகக் கடினம் என்பது மேற்கண்ட ஆய்விலிருந்து தெளிவாகத் தெரிகிறது. எனினும், அக்காரணிகளின் தராதர முக்கியத்துவத்தைத் தெரிந்து கொண்டாலன்றி, முன்னேற்றத்திற்கான வழிவகைகளை நன்றாகப் புரிந்துகொள்ள முடியாது. எனவேதான் பொருளாதார முன்னேற்றத்திற்கு ஒவ்வொரு காரணியும் எந்த அளவுக்கு உதவக்கூடும் என்பதை ஒப்பிட்டு, நுணுக்கமாக ஆராயும் முயற்சியில் பொருளாதார அறிஞர்கள் பல்லாண்டு காலமாகவே ஈடுபட்டு வந்திருக்கின்றனர்.

நான்காம் அதிகாரத்தில் அமெரிக்கப் பொருளாதார முன்னேற்றத்தைப்பற்றி ஆராயும்போது இவற்றைப்பற்றி விரிவாகப் பார்ப்போம். எனினும், உடனடியாகத் தெரிந்துகொள்ள விரும்புவோர் (42-ம் பக்கத்திலுள்ள) 1–2 பட்டியலைப் பார்க்கவும். பொருளாதார முன்னேற்றத்திற்கான காரணிகளின் தராதர முக்கியத்துவத்தை அளவிடும் ஆராய்ச்சியில் ஈடுபட்டு நமக்கு வழிகாட்டியாக உள்ள ஒருவரின் (ஜீன்–பியெர் பூலியர் என்பவரின் துணையோடு ஆராய்ந்த எட்வர்ட் F.டெனிசன்) கண்ட முடிவுகளைத்தான் இப் பட்டியல் காட்டுகின்றது. இதில் ஏதாவதொரு நாட்டின்—(டென்மார்க்கின் என்று வைத்துக் கொள்வோம்)- புள்ளி விவரங்கள் வருமாறு: 1950 முதல் 1962 வரை டென்மார்க்கின் தேசிய வருமான வளர்ச்சி ஆண்டொன்றுக்கு 3·51 சதவீதமாகும். இவ் வளர்ச்சி வீதத்தில் 1.55 சதவீதம் (அதாவது மொத்த வருமான வளர்ச்சியில் 44

சதவீதம்) உற்பத்திக் காரணி உள்ளிடுகையை அதிகரித்ததால் ஏற்பட்டதாகும். எஞ்சிய 1·96 சதவீதம் (அதாவது, மொத்த வருமான உயர்வில் 56 சதவீதம்) தலா ஓர் உள்ளிடுகை அலகின் திறனை அதிகரித்ததால் ஏற்பட்டது. உற்பத்திக் காரணிகளின் உள்ளிடுகையை அதிகரித்ததால் உயர்ந்துள்ள 1·55 சதவீதத்தில் ·96 சதவீதம் மூலதன இருப்பை அதிகரித்ததாலும் ·56 சதவீதம் தொழிலாளரின் எண்ணிக்கையை அதிகரித்ததாலும் ஏற்பட்டதாகும்; நிலத்தை அதிகரித்ததால் ஏற்பட்டது ·00 சதவீதம்; அதாவது, நிலத்தை அதிகரித்ததால் வருமானம் சிறிதுகூட உயரவில்லை.

இந்த ஆய்வின் முடிவு, இதுபோன்ற எத்தனையோ ஆராய்ச்சிகளின் முடிவுகளை உறுதி செய்வதாக இருப்பது குறிப்பிடத்தக்கது. அதாவது, பொருளாதார முன்னேற்றத்திற்கு உற்பத்திக் காரணிகளின் அளவை அதிகரிப்பதைக் காட்டிலும் அக்காரணிகளின் ஆக்கத் திறனை அதிகரிப்பதுதான் முக்கியமானது என்பதைத்தான் இந்த ஆராய்ச்சி புலப்படுத்துகிறது. பட்டியலிலுள்ள எல்லா நாடுகளிலுமே ஏற்பட்டுள்ள வருமான அதிகரிப்பில் உற்பத்திக் காரணிகளின் உள்ளிடுகையை அதிகரித்ததால் உயர்ந்துள்ள வருமானம் 50 சதவீதம்கூடக் கிடையாது. அமெரிக்கா மட்டும்தான் இதற்கு விதிவிலக்கு. அமெரிக்காவில்கூட வருமான உயர்வில் 41 சதவீதம் காரணிகளின் உற்பத்தித் திறனை அதிகரித்ததால் ஏற்பட்டதென்பது குறிப்பிடத்தக்கது.

இந்த முடிவுகள் சர்ச்சைக்குரியன என்பதைப் பிற்பாடு பார்ப்போம். இங்கு இப் புள்ளி விவரங்கள் காட்டும் முடிவை மட்டும் கூறுவோம். நவீனப் பொருளாதார வளர்ச்சிக்கு உற்பத்திக் காரணிகளை அதிகரித்தது மட்டும் காரணமல்ல; அதைக் காட்டிலும் முக்கியமானது அக்காரணிகளின் உற்பத்தித் திறனை அதிகரித்ததுதான். இம் முடிவை, பொருளாதார அறிஞர்களில் பெரும்பாலானோர் ஏற்றுக்கொள்ள முற்படுவர். இன்றைய பொருளாதார முன்னேற்றம் மூலதனத்தையும் உழைப்பையும் மட்டும் சார்ந்ததல்ல; மக்களின் அறிவு, தராதரம், திறமை, மனப்பான்மை ஆகியவையும் ஒருநாட்டின் பொருளாதார முன்னேற்றத்தின் தன்மையையும் போக்கினையும் நிர்ணயம் செய்யக்கூடியவை.

**பட்டியல் 1-2. 1950–62, நாட்டு வருமான வளர்ச்சியில் தலா ஓர் உள்ளிடுகையின் பங்கும், காரணிகளின் உள்ளிடுகையும் உற்பத்தியும் கொண்ட பங்கும்**

(Contributions of Factor Inputs and Output Per unit of Input to Growth of National Income 1950-62)

வளர்ச்சியின் மூலங்கள் (வருடச்சராசரி)

| நாடு | நாட்டின் வருமானம் | மொத்தக் காரணி உள்ளிடுகை | உழைப்பு | மூலதனம் | நிலம் | தலா ஓர் உள்ளிடுகையின் உற்பத்தி |
|---|---|---|---|---|---|---|
| அமெரிக்கா | 3·32 | 1·95 | 1·12 | ·83 | ·00 | 1·37 |
| பெல்ஜியம் | 3·20 | 1·17 | ·76 | ·41 | ·00 | 2·03 |
| டென்மார்க் | 3·51 | 1·55 | ·59 | ·96 | ·00 | 1·96 |
| பிரான்ஸ் | 4·92 | 1·24 | ·45 | ·79 | ·00 | 3·68 |
| ஜெர்மனி | 7·26 | 2·78 | 1·37 | 1·41 | ·00 | 4·48 |
| நெதர்லாந்து | 4·73 | 1·91 | ·87 | 1·04 | ·00 | 2·82 |
| நார்வே | 3·45 | 1·04 | ·15 | ·89 | ·00 | 2·41 |
| இங்கிலாந்து | 2·29 | 1·11 | ·60 | ·51 | ·00 | 1·18 |
| இத்தாலி | 5·96 | 1·66 | ·96 | ·70 | ·00 | 4·30 |

ஆதாரம்: Edward F. Denison, assisted by Jean-Pierre Poullier, Why Growth Rates Differ: Postwar Experience in Nine Western Countries, Washington: The Brookings Institution, 1967 P. 298.

## சுருக்கம்

பொருளாதார முன்னேற்றத்தை ஊக்குவிக்கும் சில பொதுவான காரணிகளைப் பற்றிச் சுருக்கமாக இவ் வதிகாரத்தில் பார்த்தோம். அக்காரணிகளை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம்; உழைப்பு, நிலம், மூலதனம் ஆகிய அடிப்படைக் காரணிகளை ஒருநாடு அதிகரிப்பது; இரண்டாவது, அக்காரணிகளைப் பயன்படுத்துகின்ற தொழில்அமைப்பு, தொழில்நுட்பம் ஆகியவற்றை முன்னேற்றுவது. இவ்வதிகாரத்தில் நாம் ஆராய்ந்துள்ள தலைப்புகள் வருமாறு :

### மக்கள்தொகை வளர்ச்சி

மக்கள்தொகை வளர்ந்தால் தொழிலாளரின் எண்ணிக்கை மட்டும் அதிகரிப்பதில்லை; உணவளிக்க வேண்டிய வாய்களும் அதிகரித்து விடுகின்றன. மக்கள்தொகை வளர்ச்சியினால் பொருளாதார முன்னேற்றம் எப்படிப் பாதிக்கப்படக்கூடும் என்பது, மக்கள்தொகை வளரும் தன்மை, அதனால் ஏற்படக்கூடிய அங்காடியின் விரிவு, வரையறுக்கப்பட்டுள்ள இயற்கை வளங்களிலும் மூலதன இருப்பிலும் ஏற்படும் நெருக்கடி ஆகியவற்றைப் பொருத்தது. சாதனங்களும் மூலதனமும் வரையறுக்கப்பட்டிருக்கும்போது, மக்கள்தொகை பெருகினால் குறைந்து செல் விளைவினால் ஏற்படும் பிரச்சினை தீவிரமானதாகி விடலாம்.

### இயற்கை வளங்கள்

பொருளாதார வளர்ச்சிக்கு வேண்டிய இயற்கை வளங்கள் நிரந்தரமான அளவில்தான் உள்ளன என்று கூற முடியாது. இயற்கை வளங்கள் பயன்படுத்தப்பட்டு விடலாம்; புதிய வளங்களையும் பெறலாம் அல்லது கண்டுபிடிக்கலாம். அதோடு, தொழில்நுட்பம் வளரும்போது, புதுவகையான மூலப் பொருள்கள் பயன்படுத்தப் படலாம்.

### மூலதனத் திரட்சி

புதிய தொழில்நுட்ப முறையைப் புகுத்தவும், வளர்ந்துவரும் மக்கள்தொகைக்கு வேண்டிய உற்பத்தி கருவிகளை அளிக்கவும் மூலதனம் உதவுகிறது; அதோடு, சுற்றுவழி முறையில் உற்பத்தியைப் பெருக்கவும் துணை செய்கிறது. நாளைய உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்றால் இன்றைய நுகர்வைத் தியாகம் செய்ய வேண்டும். அத் தியாகம்தான் மூலதனத்தைத் திரட்டுவதற்கேற்படும் செலவாகும்.

**பேரளவு உற்பத்தி, சிறப்புத் தேர்ச்சி, வேலைப் பகுப்பு**

உற்பத்தி செய்வதில் சிறப்புத் தேர்ச்சியும் வேலைப் பகுப்பும் மிக்க பேரளவு நிறுவனங்களைத் தொடங்குவதன் மூலம் ஒருநாடு குறிப்பிட்ட அளவு உற்பத்திக் காரணிகளிலிருந்து முன்பைவிட அதிக உற்பத்தியைப் பெறக்கூடும். இவ் வித உற்பத்தி முறைகளைப் பயன்படுத்துவது 'அங்காடியின் விரிவை'ச் சார்ந்ததாகும்.

**சாதனங்களைப் பயன்படுத்தும் திறமை**

சாதனங்களை மேலும் திறமையாகப் பயன்படுத்துவதன் வழியாகவும் காரணிகளின் உள்ளிடுகையிலிருந்து அதிக உற்பத்தியைப் பெறக்கூடும். சாதனப் பங்கீட்டை முன்பைவிடத் திறமையாகச் செய்வதாலும் "*X*-திறனை" அதிகரிப்பதாலும் இது சாத்தியமாகிறது. "*X*-திறன்" என்பது நிர்வாக, தொழிலாளரின் பணிகளின் தரத்தையும் ஊக்கத்தையும் குறிப்பிடும்.

**தொழில்நுட்ப முன்னேற்றம்**

தொழில்நுட்ப முன்னேற்றத்தினால் புதுவகையான பண்டங்களை உற்பத்தி செய்ய முடியும்; அதோடு, உற்பத்தி முறையில் அடிப்படையான மாறுதல்களைச் செய்யவும் கூடும். இஃது எந்த அளவுக்குச் சாத்தியமானது என்பது, விஞ்ஞான வளர்ச்சி, கல்வியின் தராதரம், சமுதாயத்திலுள்ள தொழில் முயற்சி, ஆர்வம் ஆகியவற்றைப் பொருத்தது.

அண்மையில் பொருளாதார முன்னேற்றக் காரணிகளின் தராதர முக்கியத்துவத்தை அளவிடும் ஆராய்ச்சியில் பொருளாதார அறிஞர்கள் பலர் ஈடுபட்டுள்ளனர். இந்த வகையான ஆராய்ச்சி இன்றும் தொடக்க நிலையில்தான் உள்ளது; எனினும், நவீனப் பொருளாதார வளர்ச்சிக்கு உற்பத்திக் காரணிகளை அதிகரித்தால் மட்டும் போதாது, அவை பயன்படுத்தப்படும் வழிமுறைகளில் முக்கியமான மாறுதல்களை ஏற்படுத்தவும் வேண்டும் என்று இவ்வாராய்ச்சிகள் புலப்படுத்துகின்றன.

# 2. பொருளாதார முன்னேற்றக் கோட்பாட்டினை அணுகும் முறைகள்

## (Approaches to the Theory of Development)

முதல் அதிகாரத்தில் பொருளாதார முன்னேத்திற்கு வேண்டிய சில முக்கியமான காரணிகளைப்பற்றி ஆராய்ந்ததோடு, அக் காரணிகளின் தராதர முக்கியத்துவத்தை அளவிடுவதற்கென்று அண்மையில் மேற்கொள்ளப்பட்டு வரும் முயற்சிகளைப் பற்றியும் குறிப்பிட்டோம். நமது ஆய்விற்கு இவை முக்கியமானவைதான்; அதோடு, இவை தொடக்க நிலைதான் என்பதையும் மறந்துவிடக் கூடாது. நாம் இன்னும் தெரிந்துகொள்ள வேண்டியது எவ்வளவோ உள்ளது. சான்றாக, இக்காரணிகள் எப்படி ஒன்றையொன்று சார்ந்துள்ளன? சில சமயங்களில் இவை சக்திவாய்ந்தவையாயும், வேறுசில சமயங்களில் வலுவிழந்தும் இருப்பதேன்? இக் காரணிகள் பல்வேறு விதங்களில் செயல்படும்போது பொருளாதார முன்னேற்றம் எப்படி ஏற்படுகிறது (அல்லது எப்படி ஏற்படாமல் போய்விடுகிறது)? இக் கேள்விகளுக்கெல்லாம் விடையளிக்க முயற்சிப்பதுதான் பொருளாதார முன்னேற்றக் கோட்பாட்டின் முக்கியப் பணியாகும். இதையே பொதுப்படையாகக்கூறின், எந்தெந்த நிபந்தனைகள் இருந்தால் பொருளாதார முன்னேற்றத்தை அடைய முடியும், எப்போது அடைய முடியாது என்ற விளக்கத்தைத் தருவதுதான் முன்னேற்றக் கோட்பாட்டின் முக்கிய பணி.

### பொருளாதார வளர்ச்சியின் 'பருவ நிலைகள்'

### (The 'Stages' of Economic Growth)

பதினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் ஏற்பட்ட தொழில் புரட்சியின் விளைவாக, பொருளாதார முன்னேற்றம் வேகமாகவும் தொடர்ச்சியாகவும் ஏற்படத் தொடங்கியது; எனவே

அன்றையிலிருந்து இன்றுவரை பொருளாதார (வளர்ச்சிக்குரிய கோட்பாட்டை ஆராயும் பணியில் பல பொருளாதார) அறிஞர்கள் ஈடுபட்டு வந்துள்ளனர்.

பொருளாதார வளர்ச்சியின் அணுகு முறைகளில் ஒன்று, பொருளாதார முன்னேற்றமடைவதில் பல பருவ நிலைகள் உள்ள தென்றும், ஒவ்வொரு நாடும் தத்தம் இயல்பிற்கேற்ப இப் பருவ நிலைகளை ஒவ்வொன்றாகத் தாண்டி வளர்ச்சியடைய வேண்டிய துள்ளது என்றும் கூறுகின்றது. ஆனால் இந்தமுறை, கருத்தள வில் கோட்பாட்டைப் புனைவதற்குப் பதிலாக, பெரும்பாலும் வளர்ச்சியை விவரிக்கும் தன்மையுடையதாகத் தோன்றுகிறது என்பதை மறந்துவிடக் கூடாது. கடந்தகாலப் பொருளாதார வரலாற்றறிஞர்களில் சிலர், அங்காடியும் பரிவர்த்தனையும் ஒரு நாட்டில் எப்படிச் செயல்படுகின்றன என்பதைக் கொண்டு வளர்ச்சி யின் 'பருவ நிலைகளை' வரையறுத்துக் கூற முற்பட்டனர். ஒவ் வொரு நாடும், முறையே 'பண்டமாற்றுப் பொருளாதாரம்' (barter-economy), 'பணப் பொருளாதாரம்' (money economy), 'நாணயப் பொருளாதாரம்' (credit economy) என்று ஒவ்வொரு பருவ நிலை யாகக் கடந்து வளர்ச்சியடைய வேண்டியுள்ளதென்று கூறினர்.

மிக அண்மையில், பொருளாதார அறிஞர்கள் பலர், ஒரு நாட்டில் நடைபெறும் பொருளாதார உற்பத்தி எத்தன்மையுடையது என்ற ஆய்வில் ஈடுபட்டனர்; அவர்களது கருத்தின்படி, ஒருநாடு பொருளாதார வளர்ச்சியில் முன்னேற முன்னேற அந்நாட்டின் தொழில்துறைதான் விவசாயத் துறையைக் காட்டிலும் வேகமாக வளர்ச்சியடைந்து அதிக முக்கியத்துவம் பெறுவதாகத் தெரிகிறது. இன்றைய பிரிட்டிஷ் பொருளாதார அறிஞர்களில் ஒருவரான காலின் கிளார்க் (Colin Clark) அவர்களோ இதைக் காட்டிலும் ஒருபடி மேலே சென்று, பொருளாதார வளர்ச்சியில் மூன்று 'பருவ நிலைகள்' உள்ளதென்று வலியுறுத்திக் கூறுகின்றார். அதாவது : (1) முன்னேறாத நாடுகளில் விவசாயம்தான் முக்கிய தொழிலாக இருக்கும்; எனவே, பெரும்பாலான மக்கள் விவசாயத்தையே நம்பி வாழ்வர்; (2) அந் நாடுகள் வளரவளர, விவசாயத்தின் முக்கியத் துவம் மங்கி, தொழில்துறைதான் அதிக முக்கியமாகிறது; (3) அவை மேலும் வளர வளர, தொழில் துறையைக் காட்டிலும் பணி செய் தொழில்கள்தான் முக்கியத்துவம் பெறுகின்றன.[1]

[[1] இக்கோட்பாட்டிற்கு கோலின் கிளார்க் (Colin Clark) அவர்களின் 'பொருளாதார முன்னேற்றத்தின் நிபந்தனைகள்' (Conditions of Economic Progress) மூன்றாம் பதிப்பை (London: Macmillan, 1957) பார்க்கவும்.]

'பருவ நிலைகளின் வழியாக பொருளாதார முன்னேற்றத்தை ஆராய முற்படும் இவ் வகை வழிமுறைகள் அனைத்தும், நாட்டிற்கு நாடு இருக்கின்ற வெவ்வேறான சூழ்நிலைகளையெல்லாம் புறக் கணித்து விட்டு, எல்லாவற்றையுமே ஒரே மாதிரியாகக் கருதிவிடு கின்றன. அதோடு, இம்முறையின்படி எத்தனையோ விதிவிலக்கு களும் சுட்டிக்காட்டப்படுகின்றன. பொதுவாகக்கூறின், இக்கோட் பாடுகள் அனைத்தும் என்ன நிகழ்ந்தன என்பதைத்தான் கூற முற்படுகின்றனவேயன்றி, அவை ஏன், எப்படி நிகழ்ந்தன என்று கூறுவதில்லை.

இருப்பினும், இவ்வகைக் கோட்பாடுகளில் ஒன்றுமட்டும், ஒரு நாடு எவ்வாறு ஒவ்வொரு பருவ நிலையாகக் கடந்து முன்னேற வேண்டியுள்ளது என்பதை மட்டுமன்றி, அம்முன்னேற்றம் இயல் பாகவே ஏற்படக்கூடியது என்பதை முழுமையாகத் தருக்கரீதியில் ஆய முற்பட்டது. அக் கோட்பாடுதான் கார்ல்மார்க்ஸின் கோட் பாடு.

ஒரு நாட்டிலுள்ள மிக முக்கியமான உற்பத்தி சாதனங்களை யும், அந் நாடு மாற்றமடைவதற்குரிய இயல்பையும் கட்டுப்படுத்தும் வலுவான சக்தி 'வர்க்கப் போர்' தான் (Class War) என்று மார்க்ஸ் கண்டார். கம்யூனிசப் பிரகடனத்தில் (1848) அவர் எழுதியிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது :

> சமூக வரலாறு என்பது வர்க்கப்போரின் வரலாறுதானே யன்றி வேறல்ல. சுதந்திர மனிதனும் அடிமையும், (அதாவது), ரோமாபுரிப் பிரபுவும் பாமரனும், ஜமீன்தாரும் குத்தகைக் குடிமகனும், தொழில் வினைஞனும். தொழில் பயில்வோனும், கொடுமைப்படுத்துவோனும், கொடுமைக்கு ஆளானவனும் ஒருவருக்கொருவர் எதிராக சில சமயங்களில் வெளிப்படை யாகவும், சில சமயங்களில் மறைமுகமாகவும் இடைவிடாது போரிட்டுக் கொண்டேதான் வந்துள்ளனர். இத்தகைய போரின் விளைவாக ஒன்று சமுதாயமே புரட்சிகரமாக மாற்றி அமைக்கப்பட்டுள்ளது, அல்லது அவ் விரு வகுப்பினருமே நாசமடைந்துள்ளனர்.

கடந்த காலச் சமுதாயங்கள் அனைத்திற்குமே பொருத்தமான வகையில் இக் கோட்பாடு புனையப்பட்டிருப்பது பாராட்டுக்குரியது தான்; ஆனால் ஒருநாடு முதலாளித்துவப் 'பருவ நிலை' யிலிருந்து (கடைசியான) கம்யூனிசப் 'பருவ நிலை'க்குக் கட்டாயம் மாறித்

தான் ஆக வேண்டுமென்பதைத்தான் மார்க்ஸ் வலியுறுத்தினார். சிக்கல்கள் நிறைந்த அவரது ஆராய்ச்சி, பாட்டாளிகளைச் சுரண்டித்தான் முதலாளி வர்க்கத்தினர் வாழ்கின்றனர் என்பதை வலியுறுத்துத்துவதாகவே உள்ளது. உழைப்பிற்கேற்ற ஊதியம் தராமல், ஊதியம் உயரக்கூடுமென்ற பயம் ஏற்படும்போதெல்லாம் தொழிலாளிகளுக்குப் பதிலாக இயந்திரங்களைப் புகுத்திவிடுகின்றனர்; இதன் விளைவாக வேலையில்லாதோரின் படை திரண்டு ஊதியத்தைக் குறைத்துவிடுகிறது. ஆனால், அதே சமயம் முதலாளிகளுக்கும் கஷ்டம் தோன்றுகிறது; முதலாளிகள் பெறும் இலாபம் அனைத்தும் தொழிலாளரின் சுரண்டலில் இருந்து வருவதுதான் என்பது மார்க்ஸின் நம்பிக்கை. எனவே, தொழிலாளிகளுக்குப் பதிலாக மேலும் மேலும் இயந்திரங்களைப் பயன்படுத்துவதால் முதலாளிகளின் இலாப வீதம் குறைந்து விடுகிறது. இக்கட்டான இச்சூழ்நிலையில், முதலாளிகள் முன்பைவிட அதிகமாகத் தொழிலாளிகளைச் சுரண்ட, வேலையின்மை பெருகி, பெரும்பாலானோர் வறுமையில் வாட, கடைசியில் கம்யூனிசப் புரட்சியே தோன்றிவிடுகிறது. இவ்வாறாக, கம்யூனிசம் என்பது முதலாளித்துவ அமைப்பின் கடைசிப் பருவ நிலையில் அதாவது, பாட்டாளிகளின் வறுமையும் துயரும் அதிகரிக்க அதிகரிக்க, முதலாளிகளின் சங்கிலிப் பிடியிலிருந்து மக்கள் தங்களை விடுவித்துக் கொள்கின்ற நிலையில் உருவானதுதான்.

எஃது எவ்வாறிருப்பினும், இன்றைய உலகில் கார்ல்மார்க்ஸின் நூல்கள் எவ்வளவு செல்வாக்குப் பெற்றுள்ளன என்பதை நாம் அனைவருமே அறிவோம். அதோடு மட்டுமன்றி, உலகில் எந்தெந்த இடங்களிலெல்லாம் பொருளாதார முன்னேற்றம் தீவிரமாக நடைபெற வேண்டியிருந்ததோ அங்கெல்லாம் அவரது செல்வாக்கு விரைவாகப் பரவியுள்ளது. எனவேதான், மிகப்பின் தங்கிய நிலையிலிருந்த ரஷ்யாவில் 1917 ஆம் ஆண்டிலும், வறுமைக் கோலம் கொண்டிருந்த சைனாவில் இரண்டாம் உலகப் போருக்குப் பின்னரும் வறுமையிலேயே உழன்று வந்த இன்னும் எத்தனையோ நாடுகளிலும் மார்க்ஸியக் கொடி வெற்றிமுரசுடன் பட்டொளி வீசிப் பறந்தது. தொழில்வளமிக்க மேற்கித்திய நாடுகளோடு போட்டியிடும் அளவிற்கு மட்டுமன்றி, நாளடைவில் அந்நாடுகளையே எஞ்சிவிடக்கூடிய அளவுக்கு முன்னேறி விடலாம் என்று நம்பும் கோடிக்கணக்கான மக்கள் மார்க்ஸின் தத்துவத்தை ஏற்றுக் கொண்டுள்ளனர்.

ஆனால், ஒன்றைமட்டும் நாம் மறந்துவிடக்கூடாது. அதாவது நாம் மேற்கொண்டுள்ள பொருளாதார முன்னேற்றப் பிரச்சினைகளைப் பொருத்தவரை மார்க்ஸியக் கோட்பாடு தரும் விளக்கம் சாரமற்றதாகும். மார்க்ஸிய ஆய்வின்படி பார்த்தால், முதலாளித்துவ அமைப்பில் மக்கள் வறுமையினால் துயரப்பட்டு, அந்த அமைப்பையே குழிதோண்டிப் புதைத்து விட்டுத்தான் கம்யூனிச அமைப்பிற்கு அடிக்கல் நாட்டுவர் என்பதைச் சற்று முன்னர்தான் குறிப்பிட்டோம். ஆனால் அவரது சூளுரைக்கு நேர்மாறாக, மேற்கத்திய நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்தின் சிறப்புமிக்க அம்சங்களில் ஒன்றாக, தொழிலாளரின் நிலை எவ்வளவோ முன்னேறிக் கொண்டு வருகிறது. அதோடு மட்டுமன்றி, மார்க்ஸ் கூறியபடி வளர்ச்சி பெற்ற நாடுகளில் கம்யூனிசப் புரட்சி ஏற்படாமல், பெரும்பாலும் முதலாளித்துவப் பருவநிலையையே அடையாத வறுமை நிறைந்த நாடுகளில்தான் அப் புரட்சி ஏற்பட்டது. இவ்வாறாக, மார்க்ஸிய எழுத்துக்கள் எவ்வளவோ செல்வாக்குப் பெற்றுள்ளதையும், அவர் அளித்துள்ள எத்தனையோ வகையான பொருளாதார ஆய்வுக் கருவிகளையும் நம்மால் மறக்க முடியாது; எனினும், நாம் ஏற்கனவே சுட்டிக்காட்டியதுபோல், பொருளாதார வளர்ச்சிக் கோட்பாட்டைப் பொருத்தவரை மார்க்ஸை நமது வழிகாட்டியாக ஏற்றுக்கொள்வதற்கில்லை.[2]

## 'தொன்மை'க் கோட்பாடு

### (The 'Classical' Theory)

பொருளாதார வளர்ச்சிபற்றிய பழைய கோட்பாடுகளில் 'தொன்மை'க் கோட்பாடு என்று அழைக்கப்படும் கோட்பாடும் குறிப்பிடத்தக்கது. 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 19 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் ஆடம்ஸ்மித்தின் சீடர்களாக விளங்கிய தாமஸ் ராபர்ட் மால்தஸ், டேவிட் ரிக்கார்டோ போன்ற பிரிட்டிஷ் பொருளாதார அறிஞர்கள் உருவாக்கிய கோட்பாடுதான்

2. W.W. Rostow அவர்கள் 'The Stages of Economic Growth' (London: Cambridge University Press, 1960) என்ற நூலில் மார்க்ஸின் வளர்ச்சிக் கோட்பாட்டின் 'பருவநிலை'களுக்கு எதிரான விளக்கத்தின் மூலம் மார்க்ஸின் வாதத்தை தகர்த்தெறிய முயன்றுள்ளார். இந்த அதிகாரத்தில் அவரது நூலைப்பற்றி பின்னர் குறிப்பிடுவோம்; எனினும், பொருளாதார வளர்ச்சியை விளக்குவதற்கென்று அவர் கண்ட 5 'பருவநிலை'களை நாம் ஆராயப் போவதில்லை. ஏனெனில் அந்தப் 'பருவநிலைகள்' ஏற்றுக் கொள்ளத்தகுந்தவை அல்ல விவாதத்திற்குறியன என்பதை வரலாறு நிரூபித்துவிட்டது. மேலும், இவ் வதிகாரத்தில் நாம் ஆராயும் சில கோட்பாடுகளைப்பற்றி குறிப்பாக மார்க்ஸியக் கோட்பாட்டையும் அதையடுத்து வரும் தொன்மைக் கோட்பாட்டையும் பற்றி விபரமாகத் தெரிந்துகொள்ள விரும்புவோர் இந்த நூல்வரிசையிலேயே வெளிவந்துள்ள 'Evolution of Modern Economics' என்ற எனது நூலைப் படிக்கவும்.

தொன்மைக் கோட்பாடு எனப்பெயர் பெற்றுள்ளது. மார்க்ஸைப் போலவே, அவருக்கு முந்திய தொன்மைப் பொருளாதார அறிஞர் களும் வருங்காலம் பற்றிய சூளுரைகளைக் கூறியுள்ளனர்; ஒரு விதத்தில் பார்த்தால் அவர்களது சூளுரைகள் மார்க்ஸின் சூளுரை களைப் போல், அல்லது அவற்றைக் காட்டிலும் கூடத் தவறானவை தான். எனினும், அவர்கள் சுட்டிக்காட்டிய பிரச்சினைகளில் ஒன்று மட்டும் பல நாடுகளுக்கு இன்றும் பொருத்தமானதாகவே உள்ளது.

முந்திய அதிகாரத்தில் நாம் ஆராய்ந்த உற்பத்தி காரணிகளின் வாயிலாகக் கூறுவதாயின், தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் மக்கள்தொகை வளர்ச்சிக்கும் இயற்கை வளங்களுக்கும் தான் முக்கியத்துவம் தந்தனர். மிகச் சுருக்கமாகப் பார்த்தால், அவர் களின் வளர்ச்சிக் கோட்பாடு இரண்டு கருத்துரைகளை ஆதாரமாகக் கொண்டது என்பது தெரியும். அவை: 1. குறைந்தபட்ச பிழைப்பு மட்டத்திற்குமேல் மக்களின் வாழ்க்கைத் தரம் உயரும்போதெல்லாம் மக்கள்தொகையும் பெருகி விடுகிறது; 2. சாகுபடி நிலம் இவ்வளவு தான் என்று வரையறுக்கப் பட்டிருப்பதால், மக்கள்தொகை வளர்ச்சி யின் விளைவாக உழைப்பின் பலன் குறைந்து கொண்டே செல் கிறது.

இவ்விரண்டில் முதல் கருத்துரையை எடுத்துக் கொள்வோம். மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்தால் (முன்பிருந்த வறுமை குறைந்து, மக்கள் அதிக உடல் நலம் பெறுவதால்) இறப்பு வீதம் குறைந்து, (முன்பை விடக் குறைந்த வயதில் திருமணமும் அதிகக் குழந்தைப் பேறும் பெறுவதால்) பிறப்பு வீதம் அதிகரிக்கும் என்று மால்தசும், ரிக்கார்டோவும் நம்பினர். இக் கருத்துரையின்படி, பிழைப்பு மட்டம் என்றாலென்ன என்பதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். எல்லா உயிரினங்களுக்கும் உள்ளதைப் போல் மனித இனத்திற்கும் உயிர்வாழவேண்டிய இன்றியமையாத வருமானம் தான் பிழைப்பு மட்டம்; அல்லது பழக்க வழக்கங்களை யொட்டி வாழ்வதற்கு வேண்டிய, அல்லது திருமணம் செய்து குழந்தைகளைப் பெறுவதற்குக் குறைந்த பட்சம் எவ்வளவு வருமானம் தேவை என்று சமுதாயம் கருதுகின்றதோ அந்த அளவு வருமானம் தான் பிழைப்பு மட்ட வருமானமாகும்.

இரண்டாவது கருத்துரை, குறைந்து செல்விளைவு விதி செயல்படுவதைப் புலப்படுத்துகிறது. நிலத்தின் அளிப்பு நிரந்தர மாக நிர்ணயம் செய்யப்பட்டு விட்டதாகவும், உழைப்பாளிகளோ (பிறப்பை கட்டுபடுத்தினாலன்றி) வரையறையின்றி பெருகக்கூடு

மென்றும் அவர்கள் நம்பினர். மக்கள்தொகை பெருக்கத்தால் ஏற்படக் கூடிய விளைவுகளை அவர்கள் விவரித்தப்படியே சுருக்க மாகப் பார்ப்போம். மக்கள்தொகை பெருகும்போது உணவிற் குள்ள தேவையும் விரிவடைகிறது. அத்தேவையைச் சரிக்கட்ட வேண்டுமானுல், ஒன்று தரிசாக உள்ள நிலங்களையும் சாகுபடிக்குக் கொண்டுவர வேண்டும். அல்லது, ஏற்கனவே சாகுபடி செய்து வரும் நிலத்தில் மேலும் அதிக உழைப்பாளிகளை அமர்த்தி, தீவிர மாகப் பாடுபட வேண்டும். இவற்றில் முதல் வழியைப் பின் பற்றினால் என்ன விளைவு ஏற்படுமென்பதைப் பார்ப்போம். நிலத்தின் மொத்த அளிப்பு வரையறுக்கப்பட்டுள்ளதால், புதிதாகச் சாகுபடி செய்யும் நிலம் வளம் குறைந்ததாகத் தானிருக்கும் (வள மான நிலம் எவ்வளவுதான் குறைவாக இருந்தாலும், அவற்றை யெல்லாம் ஏற்கனவே சாகுபடிக்குப் பயன்படுத்தியிருப்போம் மல்லவா?) இரண்டாவது வழிப்படி ஏற்கனவே சாகுபடி செய்து வரும் நிலத்தில் மேலும் அதிக உழைப்பைப் பயன்படுத்தி செறிவான முறையில் சாகுபடி செய்யும்போது, ஒவ்வொரு தொழிலாளியும் முன்பைவிடக் குறைந்த அளவு நிலத்தில்தான் பாடுபட வேண்டி யுள்ளது. எனவே, இவ்விரு வழிகளில் எதை மேற்கொண்டாலும், உழைப்பின் இறுதிநிலை உற்பத்தி (marginal product) குறைந்து கொண்டேதான் செல்லும்.

தொன்மைக் கோட்பாட்டின் விளக்கத்தை மிக எளிமையான 2-1 வரைபடத்தின் வாயிலாகக் காண்போம். இப்படத்தின் செங்குத்து அச்சிலுள்ள *OS* தொழிலாளரின் பிழைப்பு மட்டக் கூலியின் அளவாகும். நடைமுறையில் இந்த மட்டத்தைக் காட்டி லும் கூலி உயர்ந்துவிட்டால் மக்கள்தொகை அதிகரித்து விடும் என்பதைச் சற்று முன்னர்தான் பார்த்தோம். மக்கள்தொகை அதிகரிக்க அதிகரிக்க உழைப்பின் இறுதிநிலை உற்பத்தி எப்படிக் குறைந்து கொண்டு செல்கிறது என்பதை $MP_L$ வளைகோடு காட்டு கிறது. தொன்மைக் கோட்பாட்டின்படி, இயற்கை வளங்கள் நிரந்தர மாகவே நிர்ணயிக்கப்பட்டிருப்பதால் விளைச்சல் குறைந்து கொண்டேதான் செல்லும். இப்போது, தொன்மைக் கோட்பாடு எப்படி இயங்குகிறது என்பதைக் காண, ஒன்றை மட்டும் புதிதாகச் சேர்த்துக் கொள்வோம்; அதாவது, தொன்மைக் கோட்பாட்டினர் கண்ட உலகில் உழைப்பிற்களிக்கப்படும் கூலி, உழைப்பின் இறுதி




வரைப்படம் 2-1. தொன்மைக் கோட்பாடு.

நிலை உற்பத்திக்குச் சமமாகும்.[3] உழைப்பாளிகளை வேலைக்கமர்த்தும் போது, தொழிலாளியின் இறுதிநிலை உற்பத்தி (மொத்த உற்பத்தி எவ்வளவு அதிகரிக்கின்றதோ அது- $MP_L$) கூலிக்குச் சமமாக ஆகும்வரை வேலைக்கமர்த்துவதுதான் இலாபகரமானது என்பது முதலாளிகளுக்குத் தெரியும். அதற்கு மேல் வேலைக் கமர்த்தினால், அதிகமாக அமர்த்தப்படும் ஒவ்வொரு தொழிலாளியும் மொத்த உற்பத்தியை அதிகரிக்கும் அளவைக் காட்டிலும் அதிகமான கூலி கொடுக்க வேண்டியிருக்கும். அதைக் காட்டிலும் குறைவாக அமர்த்தினாலோ, மேலும் அதிகமாகக் கிடைக்கக் கூடிய இலாப வாய்ப்புப் போய்விடுகிறது. (ஒவ்வொரு உற்பத்திக் காரணிக்கும் அதனதன் இறுதிநிலை உற்பத்தி மதிப்பிற்கேற்பத்தான் விலை கொடுக்கப்படுகிறதென்பது நிறைவுப் போட்டிக்குத்தான் (Perfect Competition) பொருந்துமெனினும், இத்தத்துவம் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டதுதான்.[4]) எனவே, மக்கள்தொகை எவ்வளவுதான் இருந்தாலும், உழைப்பின் இறுதிநிலை உற்பத்தியை நிர்ணயம் செய்வதன் வழியாக கூலியையும் நிர்ணயம் செய்து விடலாம்.

[3] உண்மையில், தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் உழைப்பையும் மூலதனத்தையும் வெவ்வேறு காரணிகளாகக் கருதாமல் இரண்டையும் சேர்த்து ஒரே காரணியாகக் கருதித்தான் விளக்கம் செய்தனர். மூலதனம் உழைப்பாளிகளோடு, அவர்களுக்கு உதவியாகப் பயன்படுவதாகத்தான் நினைத்தனர். எனவே, மூலதனம் கருவிகள் வடிவிலோ, அல்லது பொதுவாகக் கூறின், உற்பத்தி செய்யப்பட்டு பலன் கிடைக்கும் வரை (சான்றாக, விவசாயத்தில் நடவு நட்டு பயிர் அறுவடை செய்யும் வரை) தொழிலாளரையும் அவர்களது குடும்பத்தினரையும் பராமரிப்பதற்கு வேண்டிய உணவு, இன்னும் வேண்டிய பலசரக்குச் சாமான்கள் வடிவிலோ இருக்கலாம். எனவே, உழைப்பும் மூலதனமும் சேர்ந்து செய்யும் இறுதிநிலை உற்பத்திதான் கூலியையும் இலாபத்தையும் கூட நிர்ணயிக்கிறதென்று அவர்கள் விளக்கியிருக்கக் கூடும். உற்பத்தியாகும் காலத்தில் தொழிலாளர்களுக்கும் அவர்களது குடும்பங்களுக்கும் வேண்டிய உணவுப் பொருள்களையும் கருவிகளையும் முதலாளிகள் முன்கூட்டியே கொடுத்துவிடுவதால், அதற்கு ஈடாக அவர்களுக்கு இலாபம் கிடைக்கின்றது. தொன்மைக் கோட்பாட்டை மேற்கண்ட விதத்தில் மிக எளிமையாக விளக்குவதால் அக்கோட்பாடு எந்த விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை.

[4] ராபர்ட் டார்ப்மன் (Robert Dorfman) அவர்களின் 'விலைகளும் அங்காடிகளும்' (Prices and Markets) என்ற நூலில் 93-ஆம் பக்கத்தைப் பார்க்கவும்.

அடுத்து, ஒரு நாட்டில் மக்கள்தொகை மிகக் குறைவாக $OP_1$ என்ற அளவில் இருப்பதாக வைத்துக்கொள்வோம். அப்படியென்றால் உழைப்பின் இறுதிநிலை உற்பத்தி என்ன வென்பதை $MP_L$ வளைகோடு காட்டுகிறது; மேலும், தொழிலாளிகளுக்குக் கொடுக்கப்படும் கூலி $OW_1$ அளவுக்கு உயர்வாகத்தான் இருக்கும் என்பதையும் நாம் அறிவோம். ஆனால் இது சமநிலை (equilibrium) அல்ல என்பதும் நாம் அறிந்ததுதான். ஏனெனில், கூலி $OW_1$ ஆக இருக்கும்போது, பிழைப்பு மட்டக் கூலியான $OS$ஐக் காட்டிலும் எவ்வளவோ உயர்ந்ததாகி விடுகிறது. பிழைப்பு மட்டக் கூலியைக் காட்டிலும் நடைமுறையிலுள்ள கூலி இப்படி அதிகமாயிருந்தால், மக்கள்தொகை பெருகிவிடும். திட்டவட்டமாகக் கூறின் மக்கள் $OP_0$ அளவிற்கு வளர்ந்துவிடும் என்பது வெளிப்படை. ஏனெனில் இந்த அளவு மக்கள்தொகை இருக்கும்போது மட்டும்தான் நடைமுறைக் கூலியும் பிழைப்பு மட்டக் கூலியும் சமமாகி விடுகிறது; மக்கள்தொகை பெருகுவதற்கும் வாய்ப்பில்லை.

இவ்வாறாக, தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் கண்ட நாடு தேக்க நிலை (Stationary State) கொண்ட நாடாகும்; இந்தத் தேக்க நிலையைத்தான் வரைபடத்தில் சமநிலையைக் காட்டும் e என்ற புள்ளி சுட்டிக் காட்டுகிறது. இவ்வித நிலையில் பெரும்பாலான மக்கள் ஏழைகளாகவேதான் இருப்பர்.[5] தொழில்நுட்ப முன்னேற்றத்தினாலோ அல்லது வேறெந்தச் சாதகமான காரணியாலோ ஏற்படும் பொருளாதார முன்னேற்றம் தற்காலிகமானதாகத்தான் இருக்கும். உணவு உற்பத்தியில் சிறப்பான உற்பத்தி முறை கண்டுபிடிக்கப்பட்டு மேற்கொள்ளப்பட்டால் $MP_L$ வளைகோடு வலதுபுறமாக உயர்ந்துவிடுகிறது; அப்படியென்றால் கூலி தற்காலிகமாகவாகிலும் உயர்ந்து விடக்கூடும். அப்படி கூலி உயர்ந்து விட்டால், அதன் விளைவாக மக்கள்தொகையும் பெருகி விடுகிறது; கிடைத்த பலனும் மறைந்து மறுபடியும் அந்நாடு வறுமை நாடாகி விடுகிறது.

## உபரி உழைப்புக் கோட்பாடுகள்
## (Labour Surplus Theories)

19ஆம் நூற்றாண்டில் பிரிட்டனில் ஏற்பட்ட துரிதமான பொருளாதார முன்னேற்றத்தால் தொன்மைக் கோட்பாடு சாரமற்ற

[5] நிலக்கிழார்கள் மட்டும்தான் வசதியுடன் வாழ்வர்; மக்கள் தொகைப் பெருக்கத்தினால் நிலத்திற்கு நெருக்கடி ஏற்பட்டு கிராக்கி தோன்றிவிடுவதால் குத்தகை கணிசமாக உயர்ந்துவிடுகிறது.

தாகி விட்டது; எனினும், வளர்ச்சியடையாத நாடுகளிலுள்ள பெரும் பிரச்சினையால் அக்கோட்பாடு இந்த 20 ஆம் நூற்றாண்டில் புத்துயிர் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. இன்றைய உலகில் வளர்ச்சியடையாத நாடுகள் பலவற்றில் மக்கள் பெருக்கப் பிரச்சினை தீவிரமடைந்து வருகிறது எனவே, தொழிலாளர் மிகுதியாக உள்ள இந்நாடுகள் எப்படிப் பொருளாதார வளர்ச்சியை அடையக்கூடும் என்ற ஆராய்ச்சியில் பல அறிஞர்கள் முனைந்துள்ளனர்.[6]

இப்புதிய கோட்பாடுகள், வளர்ச்சியடையாத நாடுகளிலெல்லாம் இரண்டு வகையான உற்பத்தித் துறைகள்தான் முக்கியமானதாக உள்ளன என்று தெரிவிக்கின்றன: 1) பரம்பரையாக நடைபெற்று வரும் விவசாயத்துறை; 2) ஓரளவிற்கு நவீன முறையில் ஆனால் சிறிய அளவில் நடைபெறும் தொழில் துறை. விவசாய துறையில் மிதமிஞ்சிய அளவுக்கு மக்கள் நெருக்கடி அதிகமாயிருப்பதால் உழைப்பின் இறுதிநிலை உற்பத்தி சூன்யமாகியுள்ளது; இதைத்தான் 'உபரி உழைப்பு' என்ற சொற்றொடர் புலப்படுத்துகிறது. விவசாயத் துறையில் எவ்வளவோ பேர் வேலை செய்வது போல் தெரியும்; ஆனால் அவர்களில் பலர் விவசாய வேலையை விட்டுவிட்டால் விளைச்சல் கொஞ்சம் கூடக் குறைந்துவிடாது. இந்த விதமான நிலையைத்தான் வெளிப்படையாகத் தெரியாத வேலையின்மை (Disguised unemployment) என்று கூறுகின்றோம். இத்தகைய வேலையின்மை, வளர்ச்சி குறைந்த நாட்டின் நகரங்களில் வெளிப்படையாகத் தெரியும் வேலையின்மையிலிருந்து மாறுபட்டது.

இவ்விதமாக, உபரித் தொழிலாளர் கொண்ட நாடு பொருளாதார முன்னேற்றத்தை அடைவதற்கு முக்கியமானதொரு வழியுண்டு. அதாவது, விவசாயத் துறையில் உபரியாக உள்ள தொழிலாளரை தொழில் துறைக்கு மாற்றிவிட வேண்டும். ஏனெனில் விவசாய உற்பத்தியை அவர்களால் அதிகரிக்க முடியாது; அதேசமயம் தொழில் துறைக்கு மாறிவிட்டால் நாட்டின் மொத்த உற்பத்தியை அவர்கள் அதிகரிக்கக்கூடும். அதோடு, தொழில் துறையில் அதிகரிக்கும் உற்பத்தியைப் பயன்படுத்தி, மேலும்

[6] W. Arthur Lewis அவர்களின் புகழ் வாய்ந்த 'Economic Development with Unlimited Supplies o Labour' Manchester School May, 1954) என்ற கட்டுரையில்தான் இக்கோட்பாடுகள் முதன்முதலில் வெளிவந்தன. உபரியாக உள்ள தொழிலாளரைக் கொண்ட நாட்டின் வளர்ச்சிப் பிரச்சினைகளைப்பற்றி விரிவாகப் படிக்க விரும்புவோர் John Fei and G Ranis அவர்களின் 'Development of the Labo r Surplus Economy' (Home wood; Ill Irwin 1964) என்ற நூலைப் பார்க்கவும்.

பொருளாதார வளர்ச்சியை அடையக்கூடும். தனியார் முயற்சியுள்ள அங்காடிப் பொருளாதார அமைப்பைக்கொண்ட இவ்வகையான நாடு எப்படி முன்னேற்றமடையக் கூடும் என்பது வருமாறு: முதலாவது, விவசாயத் துறையிலுள்ள தொழிலாளர் தொழில் துறைக்கு மாறும் விதத்தில் அவர்களுக்கு ஊக்கமளிக்கவேண்டும்; அதாவது, விவசாயத்துறையிலேயே அவர்கள் இருந்திருந்தால் பெற்றிருக்கக் கூடிய வருமானத்தைக் காட்டிலும் தொழில் துறையில் அவர்களுக்குக் கிடைக்கும் வருமானம் அதிகமாயிருக்கும் வகையில் உயர்ந்த ஊதியம் அளிக்கவேண்டும். அதேசமயம், விவசாயத்தில் தொழிலாளரின் உற்பத்தித் திறன் குறைவாகவே இருக்குமாதலால் விவசாய ஊதியம் குறைவாகத்தான் இருக்கும். இப்போது அடுத்த நிலைக்கு வருவோம். தொழில் துறையிலுள்ள முதலாளிகள் இத்தொழிலாளர்களை வேலைக்கமர்த்தும்போது, தமக்கு இலாபகரமாயிருக்கும் வரையில்தான் அமர்த்திக்கொண்டிருப்பர்; இலாபம் கிடைக்காத நிலை வந்தவுடன் நிறுத்திக் கொள்வர். இருந்தபோதிலும் கூலி குறைவாகவே இருக்கின்ற காரணத்தால் உற்பத்தித் திறன் மிக்க தொழில் துறை முதலாளிகள் கணிசமான அளவுக்குப் இப்புதிய தொழிலாளர்களை வேலைக்கமர்த்தி நல்ல இலாபம் பெறமுடியும். மூன்றாவது, இந்த இலாபத்தை, அல்லது அதில் ஒரு பகுதியையாகிலும் மறுபடியும் இயந்திரங்கள், கட்டிடங்கள் போன்ற மூலதனப் பொருள்களில் முதலீடு செய்வர். முன்பைவிட அதிகமாகக் கிடைக்கும் இலாபம் அனைத்தையும் முதலீடு செய்யாமல் அப்படியே முதலாளிகளே வைத்துக்கொள்வது சாத்தியம்தான்; ஆனால் மேலும் இலாபம் சம்பாதிக்க வேண்டுமென்று விரும்பும் எந்த முதலாளியுமே அப்படிச் செய்ய மாட்டார் என்பதை கார்ல் மார்க்ஸ்கூட ஒப்புக்கொண்டுள்ளார். எனவே கிடைக்கும் இலாபத்தை அவர்கள் மறுபடியும் முதலீடு செய்வதாக வைத்துக் கொண்டால், இந்த மூன்றாம் பருவ நிலையின் விளைவாகத் தொழில் துறையில் மேலும் அதிக வேலை வாய்ப்பு ஏற்படும்; அதனால் விவசாயத் துறையிலுள்ள பலர் தொழில் துறைக்கு மாறவும், அதன் பின்னர், மறுபடியும் முதற் கருவிப் பொருள்களில் முதலீடு செய்யப்படவுமாக மாறிமாறி முன்னேற்றம் அடைந்து கொண்டிருக்க முடியும். இந்த வழியில் வெற்றி ஏற்பட்டு, விவசாயத்துறையிலுள்ள தொழிலாளர் மிக விரைவாகத் தொழில் துறைக்கு மாறிவிட்டால், மக்கள்தொகை வளர்ந்தாலும்கூட, தொழில் துறையில் வேலை செய்து வரும் தொழிலாளரின் சதவீதம் அதிகரித்துக் கொண்டேதான் இருக்கும்.

தொழிலாளர் மிகுதியாக உள்ள நாடு தொழில் துறையில் எப்படி முன்னேற முடியும் என்பதை 2-2 வரைபடம் காட்டுகிறது. விவசாயத் துறையில் தொழிலாளர் அளவுக்கு மிஞ்சி இருக்கின்ற காரணத்தால் தொழில்துறை முன்னேறத் தொடங்கிய நிலையிலும் கூலி வீதம் $(OW)$ தாழ்வாகத்தான் இருக்கும். மேலும், தொடக்கத்தில் தொழில் துறைக்கு வேண்டிய மூலதனம் அதிகம் இல்லாத காரணத்தால் தொழிலாளரின் இறுதி நிலை உற்பத்தியும் குறைவாகத்தான் $(MP_{L1})$ உள்ளது. முன்னேறத் தொடங்கிய முதல் பருவ நிலையில் தொழில் துறை முதலாளிகள் $OL_1$ அளவுக்குத்தான் உழைப்பாளிகளை வேலைக்கமர்த்துவர். எனினும், கூலி குறைவாக இருக்கின்ற காரணத்தால் இலாபம் கணிசமான அளவுக்கு, அதாவது $WDA$ காட்டும் முக்கோண வடிவப் பரப்பிற்குச் சமமாக இருக்கும். இதை நாம் புரிந்துகொள்ள வேண்டுமாயின், இந்த முதல் பருவ நிலையில் உற்பத்தி செய்யப்படும் தொழில் உற்பத்தி அனைத்தும் $ODAL_1$ பரப்பளவிற்குச் சமமாக இருக்கும் என்பதை முதலில் தெரிந்துகொள்ள வேண்டும். எவ்வாறெனில், இப்பரப்பளவு, தொழில் துறையில், மேலும் மேலும் தொழிலாளரை அமர்த்துவதால் ஏற்படும் மொத்த உற்பத்தி அளவைக் காட்டுகிறது. அதாவது ஒரு தொழிலாளிகூட அமர்த்தப்படாமலிருந்தால், மொத்த உற்பத்தி சூன்யமாக இருக்கும்; ஒரு தொழிலாளியை அமர்த்தி உற்பத்தி செய்யும்போது அவன் செய்யும் உற்பத்திதான் மொத்த உற்பத்தியுமாகிறது. அதேபோல் இருவரை வேலைக்கமர்த்தும்போது, அவர்கள் இருவரும் சேர்ந்து அதிகரிக்கும் உற்பத்திதான் (இருவரின் இறுதிநிலை உற்பத்திதான்) மொத்த உற்பத்தி என்றாகிறது. இப்படியே தொழிலாளர்களை $OL_1$ அளவுக்கு அதிகரித்துக் கொண்டே போனால் மொத்த உற்பத்தி இந்தப் பரப்பளவு காட்டும் பகுதிக்குச் சமமாகி விடுகிறது. இதில், தொழிலாளர் அனைவரும் பெறும் மொத்தக்கூலி $(OW \times OL_1)$ $OWAL_1$ காட்டும் நீண்ட சதுரப்பரப்பளவிற்குச் சமமாக இருப்பதால். எஞ்சிய பகுதியான $WDA$ இலாபமாகி விடுகிறது (மொத்தத் தொழில் உற்பத்தியிலிருந்து அத்துறையில் வேலை செய்யும் தொழிலாளருக்குக் கொடுத்த மொத்தக் கூலியைக் கழித்துப் பார்த்தால் இலாபம் எவ்வளவென்று தெரிந்து விடுகிறது.)




வரைப்படம் 2-2. உபரி உழைப்புள்ள நாட்டில் தொழில் முன்னேற்றத்தின் சான்று.

இப்போது என்ன நடக்கிறதென்று பார்ப்போம். முதலாளிகள் தமக்குக் கிடைத்த இலாபத்தை முதற் கருவிப் பொருள்களில் முதலீடு செய்கின்றனர்.[7] இந்தப் புது முதலீடு ஓரளவிற்குத் தொழில்நுட்ப முன்னேற்றத்தையும் பேரளவுச் சிக்கனங்களையும் கொண்டதாககூடக் இருக்கலாம். எனவே, அவற்றின் விளைவாகத் தொழிலாளரின் இறுதிநிலை உற்பத்தி வளைகோடு மேலே $MP_{L2}$ மட்டத்திற்கு நகர்ந்து விடுகிறது. அதனால், மேலும் பல விவசாயத் தொழிலாளரை தொழில்துறையில் அமர்த்தவும், இன்னும் அதிகமான இலாபத்தைப் பெற்று, மறுபடியும் அதை முதலீடு செய்வதற்கும் முதலாளிகளுக்குச் சாத்தியமாகி விடுகிறது. இப்படியே தொழில் துறை முன்னேறிக்கொண்டு செல்லமுடிகிறது.

வளர்ச்சி குன்றிய நாடுகள் இப்படிச் சுமூகமாக முன்னேறுவதில் எத்தனையோ சிக்கல்கள் உள்ளன என்பதையும் நாம் மறந்து விடக்கூடாது. வளர்ச்சி குன்றிய நாடுகளைப்பற்றி நாம் பிற்பாடு விரிவாக ஆராயும்போது அச்சிக்கல்களைப்பற்றி குறிப்பிடுவோம். எனினும், உடனடியாக நாம் தெரிந்துகொள்ள வேண்டிய உண்மை யாதெனில் விவசாயத்துறை முன்னேறாமல் தொழில் துறை மட்டும் முன்னேற முடியாது; அப்படி முன்னேற முயன்றால் தொழில் துறை தடுமாறி விடும் என்பதுதான். இதற்குச் சான்றாக உணவுப் பிரச்சினை ஒன்றை மட்டும் எடுத்துக்கொள்வோம். விவசாயத் துறையிலிருந்த தொழிலாளர் தொழில் துறைக்கு மாறுவதால் உணவுக்குள்ள தேவை அதிகரித்துவிடும். எப்படியெனில், 1) தொழிலாளரின் மொத்த வருமானம் அதிகரித்து விடுவதால், அதிகரித்துள்ள வருமானத்தில் ஒரு பகுதி உணவிற்காகச் செலவிடப் படும்; 2) மக்கள்தொகை வளர்ச்சியடைவதால் எல்லா மக்களுக்கும் வேண்டிய உணவுப் பொருள்களும் அதிகமாகி விடுகிறது. இச் சூழ்நிலையில் விவசாய முன்னேற்றமே ஏற்படவில்லையென்றால், விவசாயப் பொருள்களின் விலைகள் ஆலைப் பொருள்களின் விலை

[7] கோட்பாட்டளவில் பார்க்கும்போது தொன்மைப் பொருளாதாரக் கோட்பாட்டின் படியும் இது நடந்திருக்க முடியும். ஆனால் அவர்களது கோட்பாட்டின் படி (கூலிக்கு மேலேயுள்ள முக்கோணவடிவப் பகுதி காட்டும்) இலாபம் அனைத்தும் விவசாயத்துறையிலுள்ள நிலக்கிழார்களுக்கே சென்றுவிடுவதால் பிரச்சினை ஏற்பட்டு விடுகிறது. அதோடு மட்டுமன்றி அந்த நிலக்கிழார்கள் தங்களுக்குக் கிடைத்த இலாபத்தை மறுபடியும் முதலீடு செய்யாமல் (பங்களாக்கள், பணியாட்கள்) என்று நுகர்வுப் பொருள்களிலேயே செலவிட்டு வருவதாகத்தான் தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் நினைத்தனர். எனவே தொன்மைக் கோட்பாடு (குறிப்பாக ரிக்கார்டோவின் கோட்பாடு) அவர்களது காலத்தில் இங்கிலாந்தில் வாழ்ந்த நிலக்கிழார்களுக்கு எரிச்சலூட்டுவதாய் இருந்தது; ஏனெனில் அவர்களில் பெரும்பாலானோர் விவசாய முதலீடு செய்து விவசாயத்துறையை முன்னேற்ற வேண்டுமென்ற ஆர்வம் கொண்டிருந்தனர்.

யைக் காட்டிலும் அதிகமாக உயர்ந்து விடும். அதனால் கூலியும் உயர்ந்துவிடக் கூடும். அப்போது, அதிகக் கூலி கொடுத்து விவசாயத் தொழிலாளரைத் தொழில் துறையில் அமர்த்துவது கடினமாகும். இதனால் தொழில்துறை முன்னேற்றம் தளர்ச்சி அடையலாம், அல்லது நின்று போய்விடலாம். ஏனெனில் உயர்ந்த கூலி கொடுத்துத் தொழிலாளரை வேலைக்கமர்த்துவது கடினம்; அதோடு மட்டுமன்றி, முதலாளிகளுக்குக் கிடைக்கக் கூடிய இலாப மும் குறைந்து, அந்த இலாபத்தை மறுபடியும் முதலீடு செய்யக் கூடிய வாய்ப்பு இல்லாமல் போய்விடும். இவ்வாருக, வளர்ச்சி குன்றிய நாடு, விவசாய முன்னேற்றத்தைப் புறக்கணித்துவிட்டு, நவீன முறையில் தொழில் துறையை மட்டும் முன்னேற்ற முயற் சித்தால், அந் நாட்டின் பொருளாதார முன்னேற்றமே தடைபட்டு விடும் என்பதற்கு எத்தனையோ காரணங்கள் இருந்தபோதிலும், நாம் மேற்கூறிய காரணம் மட்டுமே போதுமானது.

## பொதுவானதோர் வரையறையின் அவசியம்

தொன்மைக் கோட்பாடும் உபரி உழைப்புக் கோட்பாடுகளும் நவீனப் பொருளாதார முன்னேற்றத்தை முழுமையாக விளக்காமல் மிகக் குறுகிய கண்ணோட்டத்தில்தான் விளக்குகின்றன. இன்று வளர்ச்சி பெற்றுள்ள பல நாடுகளில் மக்கள்தொகை வேறுவித மாகத்தான் வளர்ச்சி பெற்றுள்ளன; எனவே, அந்நாடுகளுக்கெல் லாம் இக் கோட்பாடுகள் பொருத்த முடையனவல்ல; மேலும் மக்கள்தொகை குறைவாயிருக்கும் முன்னேற்றமடையாத நாடு களுக்குக்கூட இக் கோட்பாடுகள் பொருத்தமற்றவைதான். முந்திய அதிகாரத்தில் பொருளாதார வளர்ச்சிக்கான காரணி களைப் பற்றி ஆராய்ந்தோம்; அக்காரணிகள் கூட எல்லா நாடு களுக்கும் பொருத்தமானது என்று சொல்ல முடியாது. பொருளாதார முன்னேற்றமடைவதற்கான வழி முறைகளைக் காரணிகளைக் கொண்டும் முழுமையாக விளக்க முடியாது. காரணிகளைக் கொண்டு தரப்படும் விளக்கம் கூட ஓரளவிற்குத்தான் பொருந்தும் என்பதை நாம் மேலே செல்லச் செல்லத் தெரிந்துகொள்வோம்.

இப்படியெல்லாம் கூறுவதன் அர்த்தம் என்னவென்று நீங்கள் கேட்கலாம். பொருளாதார முன்னேற்றம் பற்றிய கோட்பாடுகள் அனைத்தும் முழுமையானவையல்ல என்றுதான் பொருள். பொதுவான கோட்பாடு இதுதான் என்று கருதக்கூடிய அளவுக்கு எந்தக் கோட்பாடுமே இதுவரை தோன்றவில்லை. தோன்றியுள்ள கோட்பாடுகளோ பொருளாதார வளர்ச்சிபற்றிய உள்நோக்குகளும் வெறும் கருத்துரைகளும்தான்; அவை அனைத்தையும் பொரு

ளாதார அறிஞர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. அவற்றில் ஒருசில பெரும் சர்ச்சைக் குறியனவாய் உள்ளன அப்படியாயின், நவீன முறையில் பொருளாதார வளர்ச்சி அடைவதற்கான வழிதான் என்ன? கடந்த 15 அல்லது 20 ஆண்டுகால அனுபவத்தைக் கொண்டு பார்க்கும்போது, முன்னேற்றமடைய விரும்பும் நாடுகளுக்குள்ள ஒரேவழி முன்னேற்றத்தைத் 'தொடங்கிவைப்பது' தான். இன்றைய உலகில் ஒரு சில நாடுகள் மட்டும் தாமாகவே முன்னேறிக் கொண்டிருக்கும்போது, வேறு பல நாடுகளோ பின் தங்கிய நிலையிலேதான் தேங்கிக் கிடக்கின்றன. இதை எண்ணிப் பார்க்கும்போது, பொருளாதார வளர்ச்சிக்கு வேண்டிய மிக முக்கியமான வழி என்னவென்று சிந்திக்கத் தோன்றுகிறது. பல்லாண்டு காலமாக வரலாற்றறிஞர்கள் வலியுறுத்தி வரும் 'தொழில் புரட்சி'தான் நல்ல வழி என்று கூற முடியுமா? முடியாது. இதைப்பற்றியும் கருத்து முரண்பாடுகள் தோன்றியுள்ளன; அப்படியென்றால் வேறு வழி? கடந்த 20 ஆண்டுகால ஆய்வின் பயனாக இவ்வழி பற்றிய கருத்துகள் பல தோன்றியுள்ளன; அவற்றைப்பற்றி பின்வரும் அதிகாரங்களில் விரிவாகப் பார்ப்போம். இங்கு, அக்கருத்துகள் (தீர்வு காண முடியாத சில பிரச்சினைகள்) என்னவென்பதைப் பார்ப்போம்.

## வளர்ச்சிக்குத் தடைகள்

கடந்த ஓரிரு நூற்றாண்டுகளாகத்தான் பொருளாதார வளர்ச்சி மிக வேகமாக நடைபெற்று வந்துள்ளது; அதிலும் ஒரு சில நாடுகள்தான் முன்னேற்றமடைந்து வந்துள்ளன; ஏனைய நாடுகளோ தொடக்கத்திலிருந்து இன்று வரை முன்னேற்றமே இன்றி தேக்க நிலையிலேதான் இருந்து வருகின்றன. இதையெல்லாம் பார்க்கும்போது பொருளாதார வளர்ச்சி என்பது எளிதானதுமல்ல, சாதாரண விஷயமும் அல்ல என்றுதான் எண்ண வேண்டியுள்ளது. எனவே, பொருளாதார வளர்ச்சியைப் பற்றி ஆராயும்போது, அவ்வளர்ச்சிக்குத் தடையாக உள்ளது எஃது என்பதையும் நாம் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும். பொதுப்படையாகக் கூறின், பல நாடுகள் பொருளாதார முன்னேற்றமே இன்றி தேக்க நிலையிலேயே இருந்து வருவதற்குக் காரணம், அந்நாடுகளில் 'வறுமை வட்டம்' (Vicious Circle of Poverty) சுழன்று கொண்டிருப்பதுதான் என்றே பல அறிஞர்கள் கருதுகின்றனர். அதாவது, ஒருநாடு வறுமையில் இருப்பதால் முன்னேற முடியவில்லை; முன்னேற முடியாததால் வறுமையிலேயே

இருக்கின்றன. சுருங்கக்கூறின், ஒரு நாடு வளர்ச்சியோ முன்னேற்றமோ இன்றி தேக்க நிலையிலேயே இருப்பதற்குக் காரணம், அந்நாட்டின் வறுமைதான்.

இப்பொதுவான கருத்தை எண்பிக்கும் வகையில் எத்தனையோ விதமான விளக்கங்களைத் தர முடியும். சான்றாக, தொன்மைக் கோட்பாட்டின்படியும் உபரி உழைப்புக் கோட்பாடுகளின்படியும் தீவிரமான பிரச்சினையாக உள்ள மக்கள் தொகைப் பிரச்சினையை எடுத்துக் கொள்வோம். மக்களின் தலா வருமானம் மிக மோசமான அளவுக்குத் தாழ்வாக இருந்தால், கொடுமையான 'வறுமை வட்டத்தின்' சுழற்சியிலோ 'மக்கள் நெருக்கடி வலை'யிலோ அகப்பட்டுக் கொண்டு ஒருநாடு எப்படித் தத்தளிக்கக் கூடும் என்பதை நாம் கற்பனை செய்து பார்க்கக் கூடும். சான்றாக, வறுமை நிறைந்ததொரு நாட்டில் (2–3 வரைபடத்தின்படி தலா வருமானம் $OT$ ஆக இருந்து) தலா உற்பத்தி அதிகரிப்பதாக வைத்துக் கொள்வோம். அப்படி யென்றால் முதன் முதலில் அந்நாட்டின் இறப்பு வீதம் குறைந்து விடுவதன் வழியாக மக்கள்தொகை வளர்ந்து விடுகிறது. இதன் விளைவாக ஏற்படக் கூடியது, தலா வருமானம் எவ்வளவு அதிகரித்தாலும், அவ்வளர்ச்சி வீதத்தை எஞ்சி மக்கள்தொகை வளர்ந்து விடுகிறது. அப்படியென்றால் பழையபடி தலா வருமானம் குறைந்து விடுகிறது. இவ்வாறாக, நமது 2-3 வரைபடத்தின்படி $T$ புள்ளிக்கு வலது புறமாக நகர்ந்து செல்லச் செல்ல மக்கள்தொகை வளர்ச்சி வீதக் கோடு மொத்த உற்பத்தி வளர்ச்சி வீதக் கோட்டைக் காட்டிலும் உயர்ந்தே இருக்கின்றது; அப்படியென்றால், தலா வருமானம் பழையபடி $OT$க்கே குறைந்து விடுகிறதல்லவா!




வரைபடம் 2-3. மக்கள்தொகைப் பெருக்க வலை*

*R. R. Nelson அவர்களின் "A Theory of the Low - Level Equilibrium Trap" என்னும் கட்டுரையிலிருந்து இப்படம் எடுக்கப்பட்டு ஒரு சில மாறுதல்களுடன் இங்கு புகுத்தப்படுகிறது. American Economic Review Vol. XLVI No. 5. (December 1956) இதழில் 900 ஆம் பக்கத்தில் 3A படமாக இது வெளிவந்துள்ளது.

இதற்கு நேர்மாறாக தலா வருமானம் மிக உயர்வாக இருக்கும் போது, மக்களின் வாழ்க்கைத் தரமும் உயர்ந்துவிடுவதால் மக்கள் தொகை அதிகரிக்காமலிருக்கலாம், அல்லது மிகக் கொஞ்சமாக அதிகரிக்கலாம். இந்த நிலை ஏற்பட்டுவிட்டால் பொருளாதார முன்னேற்றம் தானாகவே ஏற்பட்டுக்கொண்டிருக்கும். அதாவது நமது வரைபடத்தின்படி $G$ புள்ளிக்கு வலது புறமாக நகர்ந்து விட்டால் உற்பத்தி வளர்ச்சிக்கோடு, மக்கள்தொகை வளர்ச்சிக் கோட்டைக்காட்டிலும் மேலே சென்று விடுகிறது; எனவே தலா உற்பத்தியும் மென்மேலும் உயர முடிகிறது. இவ்வாறாக, போதுமான அளவுக்குச் செல்வந்த நாடாகிவிட்டால், பின்னர் அது மேலும் மேலும் செல்வமிக்க நாடாகத் திகழ முடிகிறது. ஆனால் வறுமையுள்ள நாடோ வறுமையிலேதான் இருக்கவேண்டியுள்ளது. ஆனால் கொடுமையான வறுமைச் சுழற்சியை 2-3 வரைபடம், ஒரு வகையில்தான் விளக்க முற்படு கிறது.

பெரும்பாலும் இந்த வறுமைச் சுழற்சியை மூலதனத் திரட்சி யின் வாயிலாக ஆராய்வதுதான் வழக்கம். வருங்கால உற்பத்தி அளவை உயர்த்த வேண்டுமென்பதற்காக இன்றைய நுகர்ச்சியை ஓரளவு தியாகம் செய்வதுதான் மூலதனத் திரட்சியின் முக்கிய அம்ச மாகும். நடைமுறையிலுள்ள உற்பத்தியின் ஒரு பகுதியை உடனடி யாக நுகர்வதற்குப் பதிலாக மேலும் உற்பத்தித் திறனை அதிகரிக் கக்கூடிய வழியில் அதை மூலதன இருப்பில் சேர்த்துவிடுகின்றோம். இதைப்பற்றி ஏற்கனவே முந்திய அதிகாரத்தில் பார்த்துள்ளோம்.

பொதுவாக, வளர்ச்சி குன்றிய நாடுகளில் பெரும்பாலான மக்கள் ஏழைகளாகத்தான் இருக்கின்றனர்; போதுமான உணவோ, தரமான உடையோ, வசதியான உறைவிடமோ இன்றி வாழ்க் கையை ஓட்டுகின்றனர், பயிர்த்தொழில் செய்யும் விவசாயி, மரக் கலப்பைப் போன்ற பழங்காலச் சாதனங்களைக் கொண்டுதான் சாகுபடி செய்கின்றான்; சாகுபடி செய்யும் முறையோ மிகப் புராதன மானதாய் திறனற்ற நிலையில் உள்ளது. ஒரு வேளை நல்ல நேரம் வந்துவிட்டால் அவனும், அவன் குடும்பத்தினரும் உயிர்வாழக் கூடிய அளவிற்குப் போதுமான விளைச்சல் கிடைத்துவிடுகிறது. ஆனால் நல்ல நேரம் எப்போதும் வருவதில்லை. சில சமயங்களில் பருவமழை தவறி, பஞ்சம் ஏற்பட்டு விடுகிறது. நோய் நொடி களும் சூழ்ந்து கொள்கின்றன. அப்படிப்பட்ட இக்கட்டான வேளை யில் உயிர் வாழ்வதே பெரும் பிரச்சினையாகி விடுகிறது. இவ்விதச் சூழ்நிலையில் ஏழை நாட்டு மக்கள் தம் நுகர்ச்சியைக் குறைத்துக்

கொண்டு சேமிப்பதும் மூலதனத்தைத் திரட்டுவதும் மிகக் கடினம். இப்போது, விவசாயி தன் விளைச்சலை அதிகரிக்க முடிவதாக வைத்துக்கொள்வோம்; அப்படியானால் நுகர்வை ஓரளவுத் தியாகம் செய்து மூலதனத்தைத் திரட்டுவது சாத்தியம்தான். ஆனால் இங்குத்தான் கொடுமையான வறுமைச் சுழற்சி வேலை செய்கிறது. எப்படியெனில், தரமான நவீனக் கருவிகளும், முறைகளும் இருந்தால்தான் விளைச்சலைப் பெருக்க முடியும்; அதாவது விளைச்சலைப் பெருக்குவதற்கே மூலதனம்தான் தேவை மூலதனம் அதிகரிக்கவில்லையென்றால் விளைச்சலும் குறைவாகத்தான் இருக்கும். எனவே, விளைச்சலும் உற்பத்தித் திறனும் குறைவாக இருக்கும் போது, கணிசமான அளவிற்குச் சேமிப்பதோ மூலதனத்தைத் திரட்டுவதோ அவ்வளவு எளிதான காரியமல்ல.

இச்சான்று மிக எளிமையாக்கப்பட்ட சான்று என்பது குறிப்பிடத்தக்கது; அதோடு இதற்குப் பல எதிர்ப்புகளும் உள்ளன. அதனால்தான் கொடுமையான 'வறுமைச் சுழற்சி' என்ற கருத்திற்கே இன்றைய பொருளாதார அறிஞர்கள் சிலர் எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர்; அதோடு மட்டுமன்றி, வளர்ச்சி குன்றிய நாடுகள் சில முக்கியமான தடைகளை யெல்லாம் தகர்த்துவிட்டுத்தான் முன்னேற முடியும் என்ற கருத்தைக்கூட எதிர்க்கின்றனர்.[8] உண்மையில், எவ்வளவுதான் வறுமை நிறைந்த நாடாக இருந்தாலும், அந்நாட்டில் கூட, சேமிப்பதற்கும் முதலீடு செய்வதற்கும் சில வசதிகள் இருக்கத்தான் செய்கின்றன. இடைக்கால ஐரோப்பா எவ்வளவே வறுமையில் இருந்தும் புகழ்மிக்க கிருத்துவ ஆலயங்களை எழுப்பவில்லையா? உலகப்புகழ்வாய்ந்த கூடக் கோபுரங்கள் பழங்கால எகிப்து நாட்டில்தானே தோன்றின! அதோடு மட்டுமா. இன்றுள்ள ஏழை நாடுகளில் கூட திருவிழாக்கள். திருமணம் போன்ற வைபவங்களுக்காக மக்கள் ஏராளமாகச் செலவிட்டு வருகின்றனரே! கொள்கையளவில் பார்த்தால், இவ்வகைச் செலவுகளை யெல்லாம் சிக்கனமாக்கி, ஆக்கமிக்க வழியில் உற்பத்தியைப் பெருக்குவதற்கான மூலதனத்தைத் திரட்டியிருக்க முடியும். இங்கு, மற்றொரு உண்மையையும் நாம் மறந்துவிடக்

8. முன்னேற்றத்திற்குத் 'தடைகள்' இருப்பதாக அடிக்கடி பேசிவருகின்றனர் என்று எதிர்ப்புத் தெரிவிக்கும் ஆசிரியர் A.O. ஹிர்ஷ்மன் (A.O. Hirschman) அவர்கள் இவ்வாசிரியர் "The Strategy of Economic Development" (New Haven : Yale University Press, 1958). என்ற நூலை எழுதிப் புகழ் பெற்றவர். இவரது கருத்துப்படி முன்னேற்றத்திற்குத் தடை என்று ஒன்றும் கிடையாது; முன்னேற வேண்டுமென்ற முடிவை எடுக்கக்கூடிய சக்தி குறைவாக இருப்பது ஒன்றுதான் தடை. இச்சக்தியை மட்டும் நாம் பெற்று ஒன்றுபட்டுவிட்டால் ஏனைய தடைகளெல்லாம் தாமாகவே மறைந்து விடும். பேராசிரியர் ஹிர்ஷ்மன் அவர்களின் இக்கருத்தைப் பற்றி நாம் பிற்பாடு பார்ப்போம்.

கூடாது. வறுமை நிறைந்த எல்லா நாடுகளிலுமே, மன்னர் பரம்பரையினர், பிரபுக்கள், பெரு நிலக்கிழார். பிரபலியமான வியாபாரிகள் என்று சில செல்வந்தர்கள் இருந்து வருகின்றனர் என்பது நாம் அறிந்ததுதான். அவர்களில் பலர் உல்லாச வாழ்க்கை நடத்தி வருவதும் நமக்குத் தெரியும். அவர்கள் அனைவருமே தத்தம் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்காக முதலீடு செய்யக் கூடிய ஆற்றல் படைத்தவர்கள்தான். மேலும், ஏழை நாடுகள் பல யுத்தத்திற்கென்றும் நாட்டின் பாதுகாப்பிற்கென்றும் ஏராளமாக செலவிட்டுள்ளதை வரலாறே புலப்படுத்துகின்றது. எனவே எல்லா நாடுகளிலுமே முன்னேற்றமடைவதற்குரிய சாத்தியங்கள் இருக்கத்தான் செய்கின்றன; கொடுமையான வறுமைச் சுழற்சி என்பது நமது கற்பனைப் படைப்புத்தானேயன்றி உண்மையானதல்ல; அப்படியே இருந்தாலும் அச்சுழற்சி கொடுமையானதுமல்ல, சுழலும் தன்மைகொண்டதுமல்ல; அச்சுழற்சியிலிருந்து விடுதலை பெறுவது கடினமுமல்ல என்றெல்லாம் சிலர் வாதாடுவர்.

இத்தகைய வாதங்களும் ஆராய்ச்சிகளும் நாம் எடுத்துக் கொண்டுள்ள பிரச்சினையைத் தணிக்கத்தான் முடியுமேயன்றி, அப்பிரச்சினையைத் தவிர்த்துவிட முடியாது என்பது குறிப்பிடத் தக்கது. மேலும், இப்பிரச்சினையை நாம் முழுமையாக அலசிப் பார்க்க வேண்டும். வறுமை நிறைந்த நாடுகளிலுள்ள ஒருசில செல்வந்தர்கள் தம் ஆடம்பர வாழ்க்கையையும் சுக போகங்களையும் விட்டுவிட்டு விவசாயத்துறையும் தொழில்துறையும் முன்னேற வேண்டுமென்பதற்காக அவற்றில் தம் செல்வத்தை யெல்லாம் முதலீடு செய்கின்றனர் என்றே வைத்துக்கொள்வோம். அப்படியானால் அதன் முடிவு என்னவாகும்? முதலாவது, வறிய நாடுகளில் இலாபம் தரக்கூடிய முதலீடு மிகக் குறைவாகத்தான் இருக்கும் என்பது வியப்பாக இருக்கலாம், ஆனால் உண்மை. வறுமை மிக்க விவசாய நாட்டில் இங்கும் அங்குமாகச் சிதறிக் கிடக்கும் கிராமப்புறங்களில்தான் பெரும்பாலான மக்கள் வாழ்ந்து வருகின்றனர்; அப்படியிருக்க, விரிவான அங்காடி ஏற்படுவதற்கே அங்கு வாய்ப்பு இராது. போக்குவரத்து வசதிகளோ போதுமான அளவில் இருப்பதில்லை ஏழை நாடுகளில். இதுவே மாபெரும் தடையாக இருக்கக்கூடும். இவ்விதமான சூழ்நிலையில் ஓரளவிற்காகிலும் பெரிய தொழிலை அங்கு இலாபகரமாக நடத்துவதெப்படி? அத்தொழிலுக்கு வேண்டிய மூலப்பொருள்களைப் பெறுவதற்கு என்ன வழி? அல்லது அத்தொழில் உற்பத்தி செய்துள்ள

பொருள்களை நாடெங்கிலும் விற்பனை செய்து இலாபம் பெறுவது தான் எவ்வாறு?

முதலீடு செய்யக் கூடிய வாய்ப்பு எழுப்பும் இப்பிரச்சினைகள் கொடுமையான வறுமைச் சுழற்சியின் ஏனைய அம்சங்களுக்கும் நம்மை இழுத்துச் செல்கின்றன. சிறிய அங்காடியினால் ஏற்படும் சுழற்சி (Vicious circle of limited market) என்றும் ஒன்று உள்ளது. பெரிய அளவில் தொழில்களை நடத்த வேண்டுமானால் அதற்கென்று அங்காடியும் விரிவானதாக இருக்கவேண்டும். ஆனால் வறுமை நிறைந்த நாட்டிலோ அங்காடி மிகச் சுருக்கமான தாகத்தான் இருக்கும். மேலும், பெரிய அளவில் தொழிற் சாலைகளை எப்பாடுபட்டாவது ஏற்படுத்தும் வரை அங்காடி விரி வடைவதற்காக வாய்ப்புக் கிடையாது. இங்கு மற்றொரு பிரச்சினையும் எழுகிறது. உற்பத்தி செய்வது என்பது, ஒன்றை யொன்று சார்ந்துள்ளதால் மற்ருெரு வகையான வறுமைச் சுழற்சியும் சில சமயங்களில் ஏற்பட்டு விடுகிறது. ஏதாவதொரு பொருளை மட்டும் அல்லது அப்பொருளின் ஒரு பாகத்தை மட்டும் உற்பத்தி செய்யும் தொழில் தனித்து இயங்க முடியாது. ஏனெனில், அத் தொழில் வேறு எத்தனையோ வகையான தொழில்களைச் சார்ந்து இயங்க வேண்டியுள்ளது. எந்த ஒரு நிறுவனமும், தான் உற்பத்தி செய்யும் பண்டத்தை விற்பனை செய்தால் மட்டும் போதாது; அந்நிறுவனத்திற்கு வேண்டிய கருவிகளையும், தளவா டங்களையும், மூலப்பொருள்களையும் அளிக்கக்கூடிய தொழில் களும் இருக்கவேண்டும். அப்படி வேண்டிய பொருள்களை அளிக்கக்கூடிய தொழில்கள் தோன்றாமலிருக்கும்போது, அத் தொழிலை எப்படி நிறுவ முடியும்? ஏதாவதொரு தொழிலையே நிலைநாட்ட முடியாதபோது, ஏனைய தொழில்களைத் தோற்று விப்பதுதான் எப்படி?

இவ்வளவு தானே பிரச்சினை என்று நினைத்து விடாதீர்கள். உண்மையில், மக்களின் மனப்பான்மையையும் சமூக அமைப்பு களையும் சார்ந்த இன்னும் எத்தனையோ பெரும் பிரச்சினைகளும் உள்ளன. சான்றாக, இங்கு நாம் ஒரே ஒரு பிரச்சினையை மட்டும் எடுத்துக் கொள்வோம். செல்வந்தர்களான ஒரு சிலர், தம் ஆடம்பர வாழ்க்கையை விட்டு விட்டு, தம் செல்வத்தையெல்லாம் தொழில் களிலும் வியாபாரத்திலும் முதலீடு செய்ய முன்வரக் கூடும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்? இடைக்கால ஐரோப்பாவில் வியாபாரம் செய்வதே இழிவான தொழிலாகக் கருதப்பட்டதே! வியாபாரி களுக்குச் சமுதாயம் மதிப்புத் தரவில்லையே! வட்டிக்குப் பணம்

கொடுப்பது மதத்திற்கு மாறான பாவச் செயல் என்று மக்கள் கருத வில்லையா! இன்று மட்டும் மக்களின் மனப்பான்மை முற்றிலும் மாறி விட்டதா? இல்லையே. வளர்ச்சியடையாத பல ஏழை நாடு களில் இன்றும்கூட சில தொழில்கள் இழிவானதாகக் கருதப்படு கின்றன. படித்தவர்களோ உடலை வருத்திப் பாடுபடும் தொழிலைத் தமக்கு ஒவ்வாத தொழிலாகத்தான் நினைக்கின்றனர். வேறு வேலையே கிடைக்காவிட்டாலும், சும்மா இருந்தாலும் இருப்பார் களே தவிர, தமக்கு ஒவ்வாததாக நினைக்கும் வேலையைச் செய்வ தில்லை. அதோடு மட்டுமா! வறுமையுள்ள எல்லா நாடுகளிலுமே பெரும்பாலான மக்கள் முன்னேற்றத்திற்கும் மாறுதல்களுக்குமேற்ப தங்களை மாற்றிக் கொள்ளாமல், தம் பழங்காலப் பழக்க வழக்கங் களையொட்டியேதான் வாழ்ந்து வருகின்றனர். வறுமையான நிலையிலும் அவர்கள் எதற்கெல்லாம் அதிக மதிப்பும் முக்கியத் துவமும் தருகின்றனரோ அதன்படியேதான் எப்போதும் வாழ விரும்புகின்றனர். பொருளாதார முன்னேற்றத்திற்கு இதைவிடப் பெரிய தடை வேண்டுமா?

இந்தப் பிரச்சினைகளெல்லாம் வெறும் கற்பனைதான் என்று நினைக்க வேண்டாம். உலகிலுள்ள வறுமையான நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தை அடைவது எவ்வளவு கடினம் என்பதை கடந்த 20 ஆண்டுகால அனுபவமே தெளிவாகக் காட்டி விட்டது. வறுமையான சில நாடுகளில் பொருளாதார முன்னேற் றத்திற்காகப் பாடுபடும் இலட்சியவாதிகளோ, எதிர்பார்த்த அள விற்கு இன்னும் நாடு முன்னேறவில்லையே என்று வேதனைப் படுகின்றனர்; வறிய நாடுகள் முன்னேறுவது எவ்வளவு கடினம் என்பது இலட்சிய வாதிகளுக்குத் தெரியாமலிருக்கலாம்; ஆனால் உண்மையை உணர்ந்தவர்களுக்கு அது நன்றாகப் புரியும்.

## வளர்ச்சியைத் தானே ஊக்குவிக்கும் அம்சங் களும், தானே கட்டுப்படுத்தும் அம்சங்களும் (Self-Sustaining and Self-Limiting Aspects of Growth)

பொருளாதார வளர்ச்சியைத் தொடங்கும் பிரச்சினையைக் கூடு மானவரை தெளிவாக அறிந்து கொள்வதற்கு, வறுமை தாண்டவ மாடும் நாட்டை விட்டு விட்டு, பொருளாதார வளர்ச்சி ஏற்கனவே தோன்றி, இன்று வரை தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கும் நாட்டிற்குச் சென்று விடுவோம். பொருளாதார வளர்ச்சியடைந் துள்ள இந்நாட்டில் அவ்வளர்ச்சியே மேலும் வளர்வதற்கு வேண்டிய அம்சங்களையும், மனப்போக்கையும், நுட்பத்தையும் உருவாக்கி,

வளர்ச்சி தொடர்ந்து நடைபெறும் வகையில் ஊக்குவிக்கின்றது என்று பல பொருளாதார அறிஞர்கள் கூறுவர். இஃது எப்படி என்று விளக்கம் தரக்கூடிய ஒரு சில காரணங்கள் வருமாறு:

1. விரிவாகி வரும் அங்காடி: பொருளாதார வளர்ச்சி என்றாலே உற்பத்தி பெருகி வருகிறது என்றுதான் பொருள்; உற்பத்தி பெருகி வந்தால் அங்காடி விரிவடைந்து கொண்டே இருக்கின்றது என்றுதான் அர்த்தம். உண்மையில், தீவிரமாக முன்னேறி வரும் நாட்டில் போக்குவரத்து வசதிகளும், ஒருவரோடு ஒருவர் தொடர்பு கொள்ளும் வசதிகளும் பெருகிக் கொண்டிருக்குமாதலால் அங்காடியும் விரிவடைந்து கொண்டேதான் இருக்கும். நாடு முழுவதும் போக்குவரத்து வசதிகளைப் பெற்றிருக்கும் போது, சிறப்புத் தேர்ச்சி பெற்ற தொழில்கள் நடைபெற முடிகிறது. தொழில்கள் விரிவடைந்து கொண்டே இருக்கும் போது, அத்தொழில்களின் உற்பத்திப் பொருள்களை வாங்கும் தொழில்கள் மட்டுமன்றி, அவற்றிற்கு வேண்டிய மூலப் பொருள்களையும் இயந்திர தளவாடங்களையும் விநியோகம் செய்கின்ற தொழில்களும் முன்னேற்றமடைகின்றன. பொதுவாகக் கூறின், அந் நாட்டின் பொருளாதாரமே வளர்ச்சி பெற்று, அங்குள்ள ஒவ்வொரு பொருளாதாரத் துறையும் விரிவடையும்படி செய்யும்.[9] நுணுக்கமான வேலைப் பகுப்பும், தொழில்களின் அளவும் விரிவாகிக் கொண்டே போனால், நாட்டு மக்களின் தலா உற்பத்தி மேலும் உயர முடிகிறது; அந்நாடு மென் மேலும் முன்னேறுகிறது.

2. மூலதனத் திரட்சி: பிழைப்பு மட்டத்தைத் தாண்டி கணிசமான அளவுக்கு முன்னேறிக் கொண்டிருக்கும் நாட்டில், மக்கள் தம் வருமானத்தில் ஒரு பகுதியைச் சேமிக்கவும் முதலீடு செய்யவும் முடியும். மேலும், (இதைக் காட்டிலும் குறிப்பிடத்தக்கது) அவ்வாறு சேமிப்பதற்கும் முதலீடு செய்வதற்கும் வேண்டிய வாய்ப்புகளும் வசதிகளும் தாராளமாக இருக்கும். நாம் சற்று முன்னர் உபரி உழைப்புக் கோட்பாட்டின் விளக்கத்தில் கண்டது போல், முன்னேறி வரும் தொழில், மேலும் முன்னேற்றமடைவதற்கு வேண்டிய மூலதனத்தை தானே அடைந்து கொள்ள முடிகிறது. தொழில் முன்னேறிவரும் போது நிறுவனங்கள் இலாபம் சம்பாதிக்கின்றன; இந்த இலாபத்தை அந் நிறுவனங்கள் மறுபடியும் முதலீடு செய்து

9. இங்குதான் 'புறச் சிக்கனங்கள்' (external economics) என்றழைக்கப்படும் சிக்கனங்களுக்கு நாம் வருகிறோம். ஏனைய நிறுவனங்களோ தொழில்களோ வளர்ச்சி அடைவதால், குறிப்பிட்டதொரு நிறுவனத்தின் அல்லது தொழிலின் உற்பத்திச் சூழ்நிலைகள் அபிவிருத்தி அடைகின்றன. இப்படிப் பட்ட புறச் சிக்கனங்கள் தோன்றுவதால், ஒரு நாட்டின் பொருளாதாரமே முன்னேற்றமடையக் கூடும் என்று பல பொருளாதார அறிஞர்கள் கருதுவர்

தம் முதலீட்டைப் பெருக்கக் கூடும். அப்படிச் செய்யும்போது, மறுபடியும் தொழில் விரிவடையவும், நிறுவனங்கள் இலாபம் சம்பாதிக்கவும், அந்த இலாபத்தை மறுபடியும் முதலீடு செய்யவு மாக இப்படியே தொடர்ந்து செயல்பட முடிகிறது இவ்வாறாக, தொழில் முன்னேற்றத்தினால் இலாபம் அதிகரித்துக் கொண்டும். தொழில் செய்வோர் அந்த இலாபத்தைப் பொருளாக்க வழியில் பயன்படுத்திக் கொண்டும் இருக்கும் போது, பொருளாதார முன்னேற்றம் தானாகவே நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இதன்படி பார்த்தால், பொருளாதார முன்னேற்றம் தனக்கு வேண்டிய மூலதனத்தைத் தானே உருவாக்கிக் கொண்டு மேலும் முன்னேற்றமடைகிறது என்பது தெளிவாகிறது.

**3. புத்தாக்கமும் தொழில்நுட்ப முன்னேற்றமும் :** முன் னேறிக்கொண்டு வரும் நாட்டில் தொழில்நுட்ப மேம்பாட்டைப் புகுத்துவது எளிது. புத்தாக்கமும் பொருளாதார முன்னேற்றத் திற்கான ஏனைய காரணிகளும் ஒன்றையொன்று சார்ந்தேதான் செயல்படுகின்றன என்பதை இதிலிருந்தே ஓரளவுக்குத் தெரிந்து கொள்ளலாம். அதிக மூலதனமும் பேரளவு உற்பத்தியுமின்றி, புதிய தொழில்நுட்ப முறையைப் புகுத்த இயலாது; எனவே மூல தனத் திரட்சிக்கும் அங்காடி விரிவடைவதற்கும் காரணமாயிருக் கின்ற அனைத்தும் தொழில்நுட்ப முன்னேற்றத்திற்கும் ஊக்க மளிக்கின்றன. இவை தவிர, இன்னும் எத்தனையோ விதமான சக்திகளும் நடைமுறையில் இயங்கி வருகின்றன. சான்றாக, முன்னேற்றமுள்ள நாட்டில் கல்விக்கும் ஆராய்ச்சிக்குமென்று அதிகமாகச் செலவிடப்படும். வளர்ந்து வரும் தொழில்கள் தம் இலாபத்தை எப்படி மறுபடியும் இயந்திர சாதனங்கள் போன்ற பொருள்களில் முதலீடு செய்கின்றனவோ, அப்படியேதான் ஆராய்ச் சிக்கும் அபிவிருத்தித் திட்டங்களுக்கும் மென்மேலும் அதிகமாகச் செலவு செய்து கொண்டிருக்கும். கல்வியின் வழியாகத்தான் விஞ்ஞானிகளும் பொறியியல் வல்லுநர்களும் பயிற்சி அளிக்கப்படு கின்றனர்; அதே போல் பயிற்சியின் வாயிலாகத்தான் உழைப் பாளிகள் புதிய தொழில்நுட்ப முறைப்படி பணி செய்வதில் திறன் மிக்கவர்களாக மாறுகின்றனர். இன்னும் சிறிது ஆழமாகச் சிந்தித் துப் பார்த்தால் புத்தாக்கம், தொழில்நுட்ப மாறுபாடுகள், உருப்படி யான முன்னேற்றம் ஆகியவற்றின் அடிப்படைத் தத்துவமே சமுதாய மக்களிடையே பரவி விடக்கூடும்; அப்படி பரவிவிட்டால் பொருளாதாரம் தொடர்ந்து வளர்ச்சி பெற ஊக்கம் கிடைக்கிறது.

பொருளாதார வளர்ச்சி, தானாகவே ஊக்கிவிக்கப்படும் வளர்ச்சி யாகும் என்று இன்றைய பொருளாதார அறிஞர்கள் கருதுவதற்கு இவை ஒரு சில காரணங்களாகும். வளர்ச்சி தொடர்ந்து ஏற்பட்டுக் கொண்டேயிருக்கும் போது, முன்னேற்றத்தைத் தடுக்கக்கூடிய தடைகள் தாமாகவே மறைந்து விடுகின்றன. உற்பத்திச் சாதனங்கள் வரையறுக்கப்பட்டுள்ளதே, குறைந்து செல் விளைவு ஏற்பட்டுவிடுமே என்ற தொன்மைப் பொருளாதார அறிஞர்களின் அச்சத்திற்கோ கவலைக்கோ இடமில்லாமல் போய்விடுகிறது. பொருளாதார முன்னேற்றம் மென்மேலும் வளர்ச்சியை ஊக்குவித்து தலா உற்பத்தியையும், அதன் வழியாக மக்களின் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்திக் கொண்டே இருக்கும் தன்மை வாய்ந்தது.

இதுவரை, தானே ஊக்குவிக்கக் கூடிய பொருளாதார முன்னேற்றத்திற்குச் சாதகமான பல விளக்கங்களைப் பெருமிதத்துடன் வர்ணித்துக் கொண்டு வந்தோம். இப்போது, தொடர்ந்து நடை பெற்றுக் கொண்டே இருக்கும் பொருளாதார முன்னேற்றத்தைப் பற்றி நாம் மிக அழகாகத் தீட்டிய வருணனை நடை முறையில் எந்த அளவுக்குப் பொருத்தமானது என்பதைச் சற்று நிதானமாகச் சிந்தித்துப் பார்ப்போம். 'வறுமையின் சுழற்சி', 'சிறிய அங்காடிச் சுழற்சி' என்று சுழற்சிகளைப் பற்றியே பேசும்போது எப்படியோ, அப்படித்தான் இந்த வளர்ச்சி பற்றிய கருத்தும் பரிசீலனை செய்யப்பட வேண்டியுள்ளது.

முதலாவதாக, இக்கருத்து எந்த அளவிற்கு நடைமுறைக் கேற்றது என்பதைச் சரிபார்ப்பது மிக்க கடினம் என்று தான் சொல்ல வேண்டும். ஏனெனில், ஒரு நாட்டில் சிறிது காலம் வரை பொருளாதாரம் வளர்ச்சி பெற்று, அதன் பின்னர் சரிந்து தேக்க நிலை அடையலாம்; அதைக் கண்டவுடன் 'பொருளாதார வளர்ச்சி தானாகவே ஊக்குவிக்கப்பட்டு' மேலும் வளரக்கூடியது என்று எப்படிச் சொல்ல முடியும் என்ற சந்தேகம் ஏற்பட்டு விடுகிறது. மேலும், பொருளாதாரம் சாராத சில காரணங்கள்கூட நமது கருத்தைச் சிக்கல் நிறைந்ததாக்கி விடலாம். சான்றாக, கம்யூனிசப் புரட்சியினால் ரஷ்ய நாட்டு உற்பத்தி சிறிது காலம் வரைப் பெருமளவிற்குச் சரிவடைந்து விட்டது; அப்படியானால் புரட்சிக்கு முந்தி நடை பெற்று வந்த வளர்ச்சி 'தானே ஊக்குவிக்கப்படும் வளர்ச்சி'யாக இருந்திருக்க முடியாது என்று சொல்ல முடியுமா? அல்லது, புரட்சி ஏற்படாமல் இருந்திருந்தால் வளர்ச்சி தொடர்ந்து ஏற்பட்டு வந்திருக்கும் என்றுதான் சொல்ல முடியுமா? இதைப் பற்றியெல்லாம் திட்டவட்டமாக ஒன்றும் சொல்ல முடியாது. ஏனெனில் இந்த

நிகழ்ச்சிகளைப் பொருத்தவரை எஃது உண்மையென்று தெளிவாகத் தெரிவதில்லை.

இரண்டாவதாக, பொருளாதார வளர்ச்சி சம்மந்தப்பட்ட அம்சங்களில், வளர்ச்சியை ஊக்குவிக்கக்கூடிய தன்னியல்பான அம்சங்கள் மட்டுமன்றி, இதற்கு நேர்மாறான அம்சங்களும் உள்ளன. நோபல் பரிசு பெற்ற அமெரிக்கப் பொருளாதார அறிஞரான சைமன் குஸ்நெட்ஸ் (Simon Kuznets) அவர்கள் இதைப்பற்றிக் கூறும்போது, பொருளாதார வளர்ச்சியைத் தானே கட்டுப்படுத்தக் கூடிய அம்சங்களும் வளர்ச்சியில் உள்ளன என்று குறிப்பிட்டுள்ளார். அவற்றில், இயற்கை வளங்கள் வரையறுக்கப்பட்டிருப்பதும் குறைந்து செல்வினைவும் ஒன்று. குஸ்நெட்ஸ் கூறும் வேறு சில அம்சங்கள் வருமாறு: வருமானம் அதிகமாக உயர உயர, மேலும் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆர்வம் மக்களிடம் தணிந்து விடலாம்; அதே போல் ஒரு நாட்டில் ஏதாவதொரு பொருளாதாரத் துறையில் கடுமையான போட்டி இருக்கும்போது, சுயநலம் வலுவடைந்து வளர்ச்சியைக் கட்டுப்படுத்தி விடலாம். மேலும், பொருளாதார முன்னேற்றம் உலகெங்கும் பரவி ஏற்பட்டுவிட்டால், அம் முன்னேற்றத்தைத் தாமாகவே கட்டுப்படுத்தக்கூடிய அம்சங்கள் சக்தி வாய்ந்தவையாகி விடக்கூடும். தொழில் வளமிக்க நாடுகள் மட்டும் விரைவாக முன்னேறி வரும்போது, அம்முன்னேற்றத்தினால் ஏற்படும் உயிர் வாழ்தல் சார்ந்த பிரச்சினைகளும் சுற்றுப்புறம் சார்ந்த பிரச்சினைகளும் தீவிரமடைந்து விடுகின்றன. அதோடு மட்டுமன்றி, இந்தியா, சைனா, ஆப்ரிக்கா, லத்தீன், அமெரிக்கா போன்ற நாடுகள் தாமும் அமெரிக்காவையும் ஐரோப்பாவையும் போல் துரிதமாக முன்னேற வேண்டுமென்று தீவிரமாக முயன்று வருகின்றன; இம்முயற்சி அவ்வளவு பலனளிக்காது என்று சிலர் மதிப்பிட்டுக் கூறுகின்றனர். எஃது எவ்வாறிருப்பினும், பொருளாதார முன்னேற்றம் தீவிரமடைந்து, பல நாடுகளுக்கும் பரவிவிட்டால், அதனால் ஏற்படக்கூடிய உயிர் சம்மந்தப்பட்ட ஆபத்துகளைத் தடுத்துவிட முடிந்தாலும்கூட, அவற்றைப் பற்றிய அச்சமே பொருளாதார வளர்ச்சியைக் கட்டுப்படுத்தக் கூடிய தடைகளை அதிகமாக்கிக் கொண்டுதான் இருக்கும்.

ஒரு நாடு பொருளாதார முன்னேற்றப் பாதையில் காலடி எடுத்து வைத்துவிட்டால் போதும், (அரசாங்கம் விவேகமில்லாத கொள்கைகளைக் கடைப்பிடித்தால் கூட) அது தானாகவே, தங்கு தடை ஏதுமின்றி மென்மேலும் முன்னேறிக்கொண்டே செல்லும் என்று கருதுவது தவறு. ஏனெனில், அந் நாட்டின் தவறான

பொருளாதாரக் கொள்கைகளால் முன்னேற்றம் தடைப்பட்டு விடலாம். இதற்குச் சிறந்த சான்றாக விளங்குவது அர்ஜன்டைனா. 19 ஆம் நூற்றாண்டின் இறுதியில் பல ஐரோப்பிய நாடுகளுடன் போட்டியிடக்கூடிய அளவுக்கு அர்ஜன்டைனா முன்னேற்றம் அடைந்து வந்தது; இரண்டாம் உலகப் போர் முடிந்த சமயம் லத்தீன் அமெரிக்காவிலேயே மிக உயர்ந்த வாழ்க்கைத் தரம் கொண்டிருந்த ஒரு சில நாடுகளில் அர்ஜன்டைனாவும் ஒன்றாக இருந்தது. மேலும் துரிதமாக முன்னேற்றமடையக் கூடிய வாய்ப்புகளும் நிறைய இருந்தன. அப்படியிருந்தும், மோசமான பல பொருளாதாரக் கொள்கைகளை அந்நாட்டு அரசாங்கம் தொடர்ந்து அமுலுக்குக் கொண்டு வந்தது; அதோடு மட்டுமன்றி, அண்மையில் இராணுவ ஆட்சி ஏற்பட்டு, இராணுவ அரசாங்கம் மேற்கொண்ட ஒவ்வாத பல நடவடிக்கைகளால் அந்நாட்டின் பொருளாதார வளர்ச்சியே திணறிப்போய் விட்டது. இதைப்பற்றிக் குறிப்பிட்ட (New york Times) பத்திரிகை, "அண்மையில் அர்ஜன்டைனாவின் இராணுவத் தளபதிகள் சேர்ந்து, வியக்கத்தக்க வகையில் தாராள குணமுள்ள இயற்கையின் ஆற்றல் மிக்க தடைகளோடு போராடி, உண்மையிலேயே வளமிக்க அந்நாடு நொடித்து விடும்படியாகத் திறமையுடன் நிர்வாகம் செய்துவிட்டனர்"[10] என்று வஞ்சப் புகழ்ச்சியுடன் விமரிசனம் செய்துள்ளது. அர்ஜன்டைனாவின் பொருளாதார வளர்ச்சி (1960 முதல் 1968 வரை அந்நாட்டின் மொத்த உற்பத்தி ஆண்டொன்றுக்கு 2·9 சதவீதமாக வளர்ந்து வந்ததாக மதிப்பிடப்பட்டது) ஒரேயடியாக நின்றுவிடவில்லை; எனினும், இப்போது அதன் வளர்ச்சி வீதமோ பல ஏழை நாடுகளில் உள்ளதைக் காட்டிலும் குறைந்துவிட்டது. அதன் தலா வருமானம் மிக மோசமான அளவுக்குக் கீழே வந்துவிட்டது. வருங்கால முன்னேற்ற வாய்ப்பும் பெரும் பணவீக்கப் புகை மண்டலத்தால் சூழப்பட்டுள்ளது (1972 இல் முதல் ஆறு மாதங்களுக்குள் விலைவாசிகள் 31 சதவீதம் உயர்ந்து விட்டன) வேலையில்லாப் பிரச்சினை அதிகரித்துவிட்டது; இறைச்சிக்குக் கூட கிராக்கி ஏற்பட்டுவிட்டது. இவ்வாறாக, ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றம், அரசாங்கத்தின் ஒவ்வாத பொருளாதாரக் கொள்கைகளால் பெருமளவிற்குப் பாதிக்கப்பட்டு விடலாம்; ஒரு வேளை முன்னேற்றமே பின்னால் தள்ளப்பட்டும் விடலாம்.

நான்காவது, நீண்டகால ஆய்வின்படி பொருளாதார வளர்ச்சி எவ்வளவுதான் திடமாகத் தோன்றினாலும், குறுகிய காலத்தில்

[10] H. J. Maidenberg அவர்கள் "Latin-American Economics Take Mixed Course' என்ற தலைப்பில் எழுதி, 1972. ஜூலை 10 ஆம் தேதி திங்கட்கிழமை வெளிவந்த New York Times பத்திரிகையில் 49 ஆம் பக்கம்.

அது கணிசமான அளவிற்குத் தடுமாற்றம் அடைந்து விடுவதை நாம் அறிவோம். குறிப்பாகச் சுதந்திரமான, அங்காடிப் பொருளாதார அமைப்புடைய நாட்டில் முன்னேற்றம் சில சமயங்களில் திடீரென்று மேலேயும் வேறு சில சமயங்களில் கீழேயும் தள்ளப் பட்டு விடுகிறது. வேறுவிதமாகக் கூறின், உற்பத்தி விரிவடைந்து விலைவாசிகள் உயரும் காலமும் உண்டு; அதையடுத்து, பொருளாதார நடவடிக்கைகள் சுருக்கமடைந்து பின்னிறக்கம் பெற்றுவிடும் காலமும் வருவதுண்டு. அப்படிப் பின்னிறக்கம் அடைந்துவிட்டால் வேலையின்மை தோன்றிவிடுவதோடு, பயன்படுத்தப்பட முடியாத உற்பத்தி சக்திகளும் அதிகரித்து விடுகின்றன. மேலும், பொருளாதார மந்தம் பெருமளவில் ஏற்பட்டு விட்டால் முன்னேற்றமே நின்று விடலாம். 1930-க்குப் பின் ஒரு சில ஆண்டுகளாக அமெரிக்கா பெற்ற அனுபவமே இதற்குச் சான்று.

கடைசியாகக் கூறப்பட்ட இந்த விளக்கம் வணிகச் சுழற்சியைக் (business cycle) குறிப்பிடுகிறது என்பது நாம் அறிந்ததுதான். வணிகச் சுழற்சி என்பது, மிகவும் முக்கியமான பிரச்சினை மட்டுமன்றி, சிக்கல் நிறைந்த பிரச்சினையுமாகும். அதைப்பற்றிய ஆய்விற்கு இங்கு இடமில்லைதான்; எனினும், வணிகச் சுழற்சியினால் ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றம் பெருமளவில் பாதிக்கப் பட்டு விடலாம் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. ஏனெனில் அது வலியுறுத்தும் உண்மை மிக முக்கியமானதொன்று. அதாவது, ஒரு நாடு வளர்ச்சியடையக்கூடிய சாத்தியமான வீதத்திற்கும், நடைமுறையில் அது வளர்ச்சியடையும் வீதத்திற்கும் கணிசமான வேறுபாடு இருக்கக் கூடும். சான்றாக, ஒரு நாட்டில் வேலையின்மை அதிகமாக இருப்பதாக வைத்துக்கொள்வோம்; அவ்வாறாயின், அந்நாடு வேலை நிறைவு அடைந்திருந்தால் எவ்வளவு உற்பத்தி செய்திருக்க முடியுமோ அதைக்காட்டிலும் அதன் உற்பத்தி இப்போது குறைவாகத்தான் இருக்கும். வேறுவிதமாகக் கூறின், பொருளாதார முன்னேற்றம் தொடர்ந்து நடைபெற வேண்டுமானால், ஒரு நாடு மென்மேலும் அதிகமாக உற்பத்தி செய்துகொண்டிருக்க வேண்டும் என்பது மட்டும் முக்கியமல்ல; உற்பத்தியாகும் எல்லாப் பொருள்களுக்கும் தேவை இருக்கின்றதா என்பதும் முக்கியம். ஆனால் நமது சான்றின்படியோ, தானே ஊக்குவிக்கும் வளர்ச்சியானது உற்பத்தியைப் பெருக்குவதன் வழியாக அளிப்பு நிலையை மட்டும் குறிப்பிடுவதாகவே உள்ளது; அதனால்தான் முன்னேற்றம் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருப்பதாகப் புலப்படுத்துகிறது.

ஆனால், தொழில்வள மிக்க பல நாடுகளின் அனுபவமோ அப்படியல்ல.

பொருளாதார வளர்ச்சி பற்றிய எல்லாக் கருத்துகளையும் மொத்தமாகச் சேர்த்துப் பார்த்தால், 'தானே ஊக்குவிக்கப்படும்' வளர்ச்சி பற்றி ஆரம்பத்தில் நாம் பெருமிதத்துடன் கூறிய விளக்கத்தில் முக்கியமானதொரு மாற்றம் செய்ய வேண்டியுள்ளது எனபது தெரிகிறது. எனினும், இந் நூலாசிரியரின் கருத்துப்படி, அக்கருத்துகள் நாம் தீட்டிய ஓவியத்தில் செய்யப்பட வேண்டிய மாறுதலைத்தான் வலியுறுத்துகின்றனவே தவிர, நமது ஓவியத்தையே அவை அழித்து விடுவதில்லை. 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலோ 20 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலோ முன்னேறத் தொடங்கிய நாடுகள் அனைத்தும், பெரும்பாலும் தொடர்ந்து முன்னேறிக் கொணடேதான் வருகின்றன எனபதை மறந்துவிட வேண்டாம். அதோடு மட்டுமன்றி, மற்றொரு நிகழ்ச்சியையும் இங்கு சுட்டிக்காட்ட வேண்டும். சென்ற நூற்றாண்டில் முன்னேற்றமடையத் தொடங்கிய நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரத்தையும் முன்னேற்றமடையத் தொடங்காத நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால், வாழ்க்கைத் தரத்திலிருந்த ஏற்றத்தாழ்வு இன்று அதிகரித்துள்ளதை நாம் காணலாம். எனவே, ஒரு நாடு நவீன முறையில் வளரத் தொடங்கிவிட்டால் அது தொடர்ந்து முன்னேறிக் கொண்டேதான் இருக்கும் என்பதற்கு இதுவே நல்ல சான்றாகும். மேலும், அண்மையில், பல ஏழை நாடுகள முன்னேற்ற மடைவதற்கென்று தீவிரமான முயற்சிகளை மேற்கொண்டு வந்துள்ளன; அப்படியிருந்தும் இந்த ஏற்றத்தாழ்வு இருந்து கொண்டேதான் வருகிறது சான்றாக, 1960 முதல் 1970 வரை முன்னேற்ற நாடுகளின் தலா உற்பத்தி 13 சதவீதம் அதிகரித்துள்ளது; ஆனால் முன்னேற முயன்று வரும் நாடுகளின் தலா உற்பத்தியோ 21 சதவீதம்தான் அதிகரித்துள்ளதாக மதிப்பிடப்பட்டுள்ளது.

வருங்காலத்தில் வேண்டுமானால் நிலைமை மாறலாம்; பொருளாதார வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளின் முன்னேற்றம் தேய்ந்து விடலாம், நின்று விடலாம் அல்லது ஒரேயடியாகச் சரிந்து கீழேயே வந்துவிடலாம். எப்படி வேண்டுமானாலும் நீங்கள் யூகித்துக் கொள்ளுங்கள். ஆனால் ஒன்று, இது வருங்காலம் பற்றிய பிரச்சினை என்பதை மட்டும் மறந்துவிடாதீர்கள். இன்றைய நிலைமைப்படி பாாத்தால் தொழில் வளமிக்க எல்லா நாடுகளுமே இன்னும் சில ஆண்டுகள் வரை முன்னேறிக் கொண்டேதான்

இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது (சில சமயங்களில் அஞ்சவும் படுகிறது).

## வளர்ச்சியைத் தொடங்கிவிடல்: தொழில் புரட்சி, மேலெழு நிலை, வலுவான தள்ளு
## (Getting Started: Industrial Revolution Take-off Big Push)

ஓர் ஏழை நாடு முன்னேற்றமடைவதற்குள்ள தடைகளையும், ஏற்கனவே முன்னேற்றமடைந்துள்ள நாடு தொடர்ந்து முன்னேறு வதற்கான சக்திகளையும் கொண்டு பார்த்தால், வளர்ச்சியைத் தொடங்குவதுதான் மிக முக்கியமான பிரச்சினை என்பது தெரியும். இஃது எவ்வளவு முக்கியமான பிரச்சினை என்றால், பொருளாதார வளர்ச்சியைத் தொடங்குவதைப் புலப்படுத்துவதற்காக, தொழில் புரட்சி மேலெழு நிலை (take-off), வலுவான தள்ளு (big push), தொடக்கத் தள்ளு (initial push) தடைகளை உடைத்துக் கிளம்புதல் (break through), குறைந்த பட்சத் தீவிரமான முயற்சி (Critical minimum effort) என்ற சொற்களையெல்லாம் பொருளா தார அறிஞர்கள் பயன்படுத்தி வந்துள்ளனர். அதோடு, மிக அண்மையில் சைனா 'முன்னேற்றத்தை நோக்கி பெரிய பாய்ச்சல், என்ற சொற்றொடரைப் பயன் படுத்தியுள்ளது. ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் இச் சொற்கள் அனைத்துமே ஒரே பொருளைத்தான் குறிப்பிடுகின்றன என்பது புலனாகும். அதாவது, பொருளாதார வளர்ச்சிப் பிரச்சினைகளில் அடிப்படையான பிரச்சினை அவ் வளர்ச்சியைத் தொடங்கி வைப்பதுதான். வேறு விதமாகக் கூறின், பொருளாதார முன்னேற்றத்தைப் படிப்படியாகவோ மெதுவாகவோ தொடங்காமல் தீவிரமான மாறுதல்களுடன் முழு மூச்சாகத் தொடங்க வேண்டும். இவ் வகையில் பார்த்தால், பொருளாதார வளர்ச்சி என்பது வெறும் 'சிணுங்கல்' போலன்றி 'பேரொலி' போலத்தான் தொடங்குகிறது. அப்படியின்றி ஓர் ஏழை நாடு மிக மெதுவாக வளர்ச்சியைத் தொடங்கினால், அந்நாடு 'வறுமைச் சுழற்சி'க் குள்ளேயே அகப்பட்டுக் கொள்ள வேண்டியதுதான்; ஏனெனில் பொருளாதார முன்னேற்றப் பாதையை நோக்கி மிக வேகமாகத் தள்ளினால்தான் வளர்ச்சி தொடர்ந்து ஏற்பட்டு அதன் பலன் களையெல்லாம் பெற முடியும்.

இந்தக் கருதுகோள் (hypothesis) இரண்டு விதமான ஆதாரங் களைக் கொண்டது. நாம் ஏற்கனவே முந்திய இரு பிரிவுகளிலும் பொதுவாகக் கண்ட வாதங்களும் காரணங்களும் ஒன்று. அடுத்து,

புரட்சிகரமான மாறுதல்களுடன் தான் வளர்ச்சி தொடங்கியது என்ற வரலாற்று அனுபவம். இவ்விரு ஆதாரங்களையும் நாம் ஒப்புக் கொண்டோமானால், பொருளாதார முன்னேற்றப் பிரச்சினைக்கு இந்தக் கருதுகோள் எவ்வளவு பொருத்தமானது என்பது தெளிவாகும். அதோடு, தொழில்வளமிக்க நாடுகள் அனைத்தும் எப்படி முன்னேற்றமடைய முடிந்தது என்பதைச் சிந்தித்துப் பார்த்தால், அவை அனைத்துமே வியக்கத்தக்க மாறுதல் களுடன்தான் பொருளாதார முன்னேற்றத்தைத் தொடங்கின என்ற உண்மை புலப்படும். அதோடு, பொருளாதார வரலாற்று அறிஞரான W. W. ரோஸ்டாவ் (W. W. Rostow) அவர்கள் அண்மையில் மேற்கொண்ட புகழ் வாய்ந்த ஆராய்ச்சியின் முடிவு களும் இதைத்தான் உறுதிப்படுத்துகின்றன. ரோஸ்டாவ் அவர்கள், முதலில் ஒரு கட்டுரையிலும், அதன் பின்னர் செல்வாக்குப் பெற்று அதிக விற்பனை கண்ட 'The Stages of Economic growth' என்ற நூலிலும் 'மேலெழுநிலை' என்ற கருத்தை வரையறை செய்ததோடு மட்டுமின்றி, தொழில் வளமிக்க நாடுகளின் அநுபவத்தைக் கொண்டு அக்கருத்தை உறுதிப்படுத்தியுள்ளார் என்பதும் குறிப் பிடத்தக்கது.

பட்டியல் 2-1.

ரோஸ்டாவின் மதிப்பீட்டின்படி பல்வேறு நாடுகள் மேலெழு நிலையை அடைந்த காலம்.

| நாடு | | | மேலெழுநிலை |
|---|---|---|---|
| கிரேட் பிரிட்டன் | ... | ... | 1783—1802 |
| பிரான்ஸ் | | ... | 1830—1860 |
| பெல்ஜியம் | ... | ... | 1833—1860 |
| அமெரிக்கா | ... | ... | 1843—1860 |
| ஜெர்மனி | ... | ... | 1850—1873 |
| சுவீடன் | ... | ... | 1878—1900 |
| ஜப்பான் | ... | ... | 1878—1900 |
| ரஷ்யா | ... | ... | 1890—1914 |
| கனடா | ... | ... | 1896—1914 |
| அர்ஜன்டைனா | ... | ... | 1935— |
| துருக்கி | ... | ... | 1937— |

பொருளாதார வரலாற்று அறிஞர் ஒருவரின் மதிப்பீட்டின் படி பல்வேறு நாடுகளின் பொருளாதார வளர்ச்சியில் மிகத் தீவிரமான காலம் எது என்பதைத்தான் இப்புள்ளி விவரங்கள் குறிப்பிடுகின்றன.

மூலம்: Rostow அவர்களின் 'The Stages of Economic growth' என்ற நூல், பக்கம் 38.

இந் நாடுகள் அனைத்தும் ஏறத்தாழ 20 அல்லது 30 ஆண்டுகளில்தான் தத்தம் பொருளாதார அமைப்பின் அடிப்படையை மட்டுமன்றி, அரசியல், சமூக அடிப்படைகளையும் மாற்றி அமைத்து, அம் மாறுதல்களின் வழியாக பொருளாதார முன்னேற்றத்தைத் தொடங்கி மென்மேலும வளர்ச்சி அடைந்தன என்பதுதான் ரோஸ்டாவ் அவர்களின் முடிவாகும் இம் முடிவைத்தான் 2-1 பட்டியல் காட்டுகிறது.[11] இப் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ள ஆண்டுகள் தோராயமானது தானேயன்றி, திட்டவட்டமானவை அல்ல என்றும் ரோஸ்டாவ் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்; எனினும், அடிப்படையான மாறுதல்கள் ஏற்பட்ட மிகச் சிறிய காலத்தில்தான் பொருளாதார முன்னேற்றம் திடமாகத் தொடங்கப்பட்டது என்ற அவரது முடிவு மிகத் தெளிவானதுதான் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

அடுத்து வரும் கேள்வி: மிக முக்கியமான காலமாகக் கருதப்படும் இக் குறுகிய காலத்திற்குள் அடிப்படையான மாறுதல்களை அடைபவை எவை? இவைதான் அப்படி மாறுதல் அடைகின்றன என்று பொருளாதார அறிஞர்களும் வரலாற்று அறிஞர்களும் ஒப்புக் கொள்கின்றனரா?

பரந்த கண்ணோட்டத்தில் பார்த்தால் இக்கேள்விக்கு 'ஆம்' என்றுதான் பதில் கூற வேண்டும். சான்றாக, பொருளாதார வளர்ச்சியடைந்துள்ள நாடுகளில், முன்னேற்றம் ஏற்படத் தொடங்கிய அதே சமயம் தொழில்நுட்ப முறையிலும் மேம்பாடான பல மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டேதான் இருந்தது என்பதில் சந்தேகமே கிடையாது. அதேபோல், முதற்கருவிப் பொருள்களில் செய்யப்பட்ட முதலீட்டு வீதமும் உயர்ந்து கொண்டு வந்தது. அதோடு மட்டுமன்றி, சிறப்புத் தேர்ச்சியுடன் உற்பத்தி செய்யும் முறையும், பேரளவுத் தொழில்களும் அதிகரித்து, தொழில் அமைப்பு முறையே மாறிக்கொண்டும் வந்தது. பொதுவாக, எல்லா நாடுகளிலுமே இப்படிப்பட்ட மாறுதல்கள் ஏற்பட்டு வந்ததால்தான் தொழிலாளர்களுக்கும் தொழில் முயல்வோருக்கும் கிராக்கி அதிகரித்து வந்தது.

பொதுவாக, வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளில் இவ்வகையான அடிப்படை மாறுதல்கள் தோன்றும் வகையில் முன்னேற்றத்திற்கான முன்னேற்பாடுகள் செய்யப்பட்டன என்றும் அனைவரும்

11. Rostow அவர்களின் 'The Stages of Economic growth' என்ற நூலில் 8, 9ஆம் பக்கங்கள்.

ஒப்புக்கொள்வர். முன்னேற்றத்திற்கு வேண்டிய பொதுவானதொரு கட்டமைப்பை அரசாங்கம் அமைக்க வேண்டியிருந்தது. மக்களும் தம் சொந்த நலனுக்காகவோ, பொது நலக் குறிக்கோளுடனோ அல்லது யுத்த காரணங்களுக்காகவோ பொருளாதார முன்னேற்றத்தில் அக்கறை கொண்டு பாடுபட்டனர். இவ்வாறாக, பொருளாதார முன்னேற்றத்திற்கு ஏதாவதொரு தூண்டுகோல் அவசியமாயிற்று.

எனினும், இப்படிப் பொதுவாகப் பார்க்காமல் ஏதாவதொரு நாட்டை மட்டும் ஆராய்ந்து பார்க்கும் போதுதான் பிரச்சினை (கருத்து முரண்பாடும்) ஏற்படுகிறது. பொருளாதார வளர்ச்சியில் மேலெழு நிலைக்கு என்னென்ன நிபந்தனைகளெல்லாம் அவசியமென்று ரோஸ்டாவ் அவர்கள் வலியுறுத்தினார்களோ அவை அனைத்துமே தவறென வரலாறே நிரூபித்து விட்டது. சான்றாக, ஒரு நாட்டில் மேலெழு நிலை தோன்ற வேணடுமானால் அந்நாட்டின் மொத்த உற்பத்தியில் சேமிப்பும் முதலீடும் ஏறத்தாழ 5 சதவீதத்திலிருந்து 10 சதவீதத்திற்கு மேல் அதிகரிக்க வேண்டுமென்று வலியுறுத்தினார்; அதாவது, வளர்ச்சியின் தீவிரமான தொடக்கத்தின் போது மூலதனத் திரட்சி இரண்டு மடங்காவது பெருக வேண்டுமென்று மதிப்பிட்டார். ஆனால், ரோஸ்டாவ் ஆராய்ந்த அதே காலத்தில், அவர் ஆய்ந்த அதே நாடுகளில் ஒரு நாட்டில்கூட மூலதனம் இரண்டு மடங்கு அதிகரித்ததில்லை என்பதை பேராசிரியர் குஸ்நெட்ஸ் அவர்கள் நிரூபித்துள்ளார்கள். இவ்வாறாக, ஒரு நாடு எப்படி பொருளாதார வளர்ச்சியைத் தொடங்குகிறது என்ற கேள்விக்குத் திட்டவட்டமான பதில் கிடையாது என்றுதான் தெரிகிறது; எனினும், முன்னேற்ற மடைந்துள்ள நாடுகள் எப்படி முன்னேறத் தொடங்கின என்பதை அறிந்து கொள்வதற்கு இக் கேள்வி துணை செய்யலாம்.

எவ்வாறிருப்பினும், இக் கேள்விகள் முக்கியமானவை என்பதை நாம் புறக்கணிக்க முடியாது; அதிலும் குறிப்பாக, பொருளாதார முன்னேற்ற மடையாத இன்றைய நாடுகளுக்கு இப் பிரச்சினைதான் மிக முக்கியமான பிரச்சினையாகும். 'மேலெழு நிலை' 'வலுவான தள்ளு' ஆகியவை புலப்படுத்தும் பொதுவான கருத்து உண்மையென்றால், வளர்ச்சி குன்றிய நாடு தீவிரமாக முயற்சி செய்தால்தான் பொருளாதார முன்னேற்றத்தை அடைய முடியும். தீவிரமான முயற்சி என்றால் நாட்டிலுள்ள எல்லாப் பொருளாதாரத் துறைகளிலுமே பலவகையான மாறுதல்களைச் செய்ய வேண்டும் என்றும் பொருள் கொள்ளலாம்; அல்லது அந் நாட்டின் அடிப்படைத் தொழில்களில் புரட்சிகரமான மாறுதல்களைச் செய்ய வேண்டுமென்றும் பொருள் கொள்ளலாம். எப்படிப் பொருள் கொண்டாலும்

அடிப்படையான கருத்து ஒன்றுதான். அதாவது, முன்னேற்ற மில்லாத நாடு வளர்ச்சியடைய வேண்டுமானால் தன் பிரச்சினை களுக்கெல்லாம் முடிவுகட்ட உறுதியுடன் முயற்சி செய்ய வேண்டும்.

இவ்வாறு கூறும்போது, அதன் உட்பொருள் என்ன என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். சான்றாக, வளர்ச்சி குன்றிய நாடு பொருளாதார முன்னேற்றம் அடைய பெரு முயற்சி செய்ய வேண்டும் என்றால், அம் முயற்சியை மேற்கொள்வது யார்? காலமெல்லாம் வறுமையிலேயே உழன்று கொண்டிருக்கும் ஒரு நாட்டில் தனிப் பட்ட ஒரு சிலரோ அல்லது தொழில் முயல்வோரோ முன்னேற்றத் திற்கான வழி முறைகளை வகுத்து அவற்றைச் செயல்படுத்த முடியுமா? அவர்களால் முடியாதென்றால் அரசாங்கமே மேற் கொள்வதா? அப்படி அரசாங்கமே முன்னேற்றத்திற்கான திட்டங் களை வகுத்துச் செயல்பட்டால் அந்த அரசாங்கம் எப்படிப்பட்டதாக இருக்கும்? இவ்வாறாக பல பிரச்சினைகள் எழுகின்றன. எனவே, வளர்ச்சி குன்றிய நாடுகளில் பொருளாதார முன்னேற்றம் தானா கவே ஏற்பட முடியாது, முன்னேற்றம் அடைய வேண்டுமானால் தீவிரமாகப் பாடுபட வேண்டும் என்பதை நாம் ஒப்புக் கொள்ள வேண்டியுள்ளது; அப்படி ஒப்புக் கொண்டால் எப்படி முன்னேறுவது என்ற பிரச்சினைகளெல்லாம் வெறும் பொருளாதாரப் பிரச்சினை களாக மட்டும் இல்லாமல் அரசியல் பிரச்சினைகளாகவும் ஆகிவிடு கின்றன.

சுருங்கக் கூறின், எப்படிப் பொருளாதார முன்னேற்றத்தைத் தொடங்குவது என்ற கருத்து, முன்னேற்ற மடைந்துள்ள நாடு களின் வரலாற்றை ஆராய்வதற்கும், முன்னேற்ற மில்லாத நாடு களிலுள்ள பிரச்சினைகளை ஆராய்வதற்கும் வேண்டிய பொதுவான கருத்தாகும். எனினும், எல்லா நாடுகளுக்கும் பொதுவான வழி என்ன என்பதை இந்த இடத்தில்தான் பரிசீலனை செய்ய வேண்டி யுள்ளது. கடந்த காலத்தில் பொருளாதார முன்னேற்றம் எப்படித் தொடங்கப்பட்டது என்பதற்கும், இப்போது எப்படித் தொடங் கினால் முன்னேற்றத்தை அடைய முடியும் என்பதற்கும் எவ்வளவு தான் ஒற்றுமை இருந்தபோதிலும் நிறைய வேறுபாடுகளும் உள்ளன என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. பொதுப்படையாகப் பார்த் தால் 18 ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் தொடங்கிய தொழில் புரட்சிக்கும் அண்மையில் 'முன்னேற்றத்தை நோக்கி ஒரே பாய்ச்சல்' என்று சைனா கண்ட கனவிற்கும் வேறுபாடு இல்லையென்றுதான் தோன்றும்; ஆனால் இவ்விரு நாடுகளையும் தனித்தனியாக

ஆராயும் போதுதான் பிரச்சினை எவ்வளவு மாறுபட்டது என்பது புலனாகும். மேலும், பொருளாதார முன்னேற்றத்தில் ஒரே மாதிரியான கட்டத்தை அடைந்துள்ள நாடுகளில்கூட வளர்ச்சியின் தொடக்கம் வெவ்வேறாகத்தான் இருந்திருக்கிறது. இவ்வேறுபாடு, வளர்ச்சி எப்போது ஏற்படத் தொடங்கியது, அந்நாடு வளர்ச்சிக்கு வழிகாட்டியாக விளங்கியதா அல்லது வேறொரு நாட்டைப் பின்பற்றி வளர்ச்சி அடைந்ததா என்பது போன்ற எத்தனையோ விதமான சூழ்நிலைகளைப் பொருத்தது.

எனவே, பொருளாதார முன்னேற்றத்தைப் பற்றிப் பொதுவாக ஆராய்வதை விட்டு விட்டு, ஒவ்வொரு நாட்டிலும் முன்னேற்றத்திற்குரிய சக்திகள் என்னென்ன என்பதைத் தனித்தனியாக ஆராய முற்படுவோம்.

## சுருக்கம்

கடந்த ஓரிரு நூற்றாண்டுகளாகவே, பொருளாதார முன்னேற்றத்தின் பொதுக் கோட்பாட்டை உருவாக்கும் முயற்சியில் பல பொருளாதார அறிஞர்கள் ஈடுபட்டு வந்துள்ளனர். அவர்களில் ஒரு சிலர் பரிவர்த்தனை செய்யப்படும் விதத்தில் ஏற்பட்டுள்ள மாறுதல்களைக் கொண்டும், வேறு சிலர் பல்வேறு உற்பத்தித் துறைகளின் முக்கியத்துவத்தில் ஏற்பட்டுள்ள மாறுதல்களின் அடிப்படையிலும் பொருளாதார முன்னேற்றத்தின் பல்வேறு பருவ நிலைகளை வரையறை செய்ய முயன்றுள்ளனர். கார்ல் மார்க்ஸ் அவர்களோ 'வர்க்கப் போரின்' வழியாக உற்பத்திச் சாதனங்களைக் கட்டுப்படுத்துவதில் ஏற்படும் மாறுதல்களையே 'பருவ நிலை' களாகக் கொண்டார். மார்க்ஸின் நூல்கள் செல்வாக்கு மிக்கவை; குறிப்பாக, ஏழை நாடுகளில் அவரது செல்வாக்கு ஓங்கிப் பரவியது. எனினும், மேற்கத்திய நாடுகளில் மக்களின் வாழ்க்கைத்தரம் இந்த அளவுக்கு உயரும் என்பதிலோ, எந்தச் சூழ்நிலையில், எந்த நாட்டில் கம்யூனிசப் புரட்சி தோன்றக்கூடும் என்பதிலோ அவரது கூளுரைகள் ஒன்றும் பலிக்கவில்லை. எனவே, நவீனத் தொழில் முன்னேற்றத்தைப் பற்றிய ஆய்விற்கு அவரை ஒரு நல்ல வழிகாட்டியாகக் கருத முடியாது.

பொருளாதார வளர்ச்சி பற்றிய பழைய கோட்பாடுகளில் மால்தசும் ரிக்கார்டோவும் வரைந்த தொன்மைக் கோட்பாடு இன்றைக்கும் கூட ஓரளவு பொருத்தமானதாக உள்ளது. இவ்விரு அறிஞர்களுமே, மக்கள்தொகை வளர்ச்சி, வரையறுக்கப்பட்டுள்ள இயற்கை வளங்கள் ஆகிய இரண்டு உற்பத்திக் காரணிகளை மட்டுமே அதிக

மாக ஆராய்ந்தனர்; எனவே, பெரும்பாலான மக்கள் பிழைப்பு மட்டத்தில் வாழ வேண்டிய 'தேக்க நிலை'யை நோக்கித்தான் ஒரு நாடு இயல்பான பொருளாதார வளர்ச்சியை அடைய முடியுமென்ற முடிவுக்கு வந்தனர்.

மக்கள் நெருக்கடியுள்ள நாடுகளைப் பற்றிய ஆய்வு 'உபரி உழைப்பு' என்னும் நவீனக் கோட்பாடுகளுக்கு வழி வகுத்தது. கோட்பாட்டளவில் பார்க்கும்போது, இவ்வகை நாடுகளில் பொருளாதார முன்னேற்றம் ஏற்படுவதற்கு ஒரே வழிதான் உண்டு. அதாவது, ஆக்கமற்ற (இறுதி நிலை உற்பத்தி சூன்யமாக உள்ள) விவசாயத் துறையிலிருக்கும் தொழிலாளிகளை ஓரளவு குறைந்த கூலியிலேயே தொழில் துறைக்கு மாற்றி, தொழில் உற்பத்தியை மட்டுமன்றி தொழில்களில் கிடைக்கக்கூடிய இலாபத்தையும் அதிகரித்து அந்த இலாபத்தை மறுபடியும் தொழில்களில் முதலீடு செய்ய வேண்டும். ஆனால், விவசாயத் துறையிலும் கணிசமான முன்னேற்றம் ஏற்பட வேண்டும் என்ற நிபந்தனையும் வேறு பல நிபந்தனைகளும் நிறைவேறினால்தான் இந்த வழி சுமூகமாகச் செயல்படக் கூடும்.

நவீனப் பொருளாதார வளர்ச்சி பற்றிய ஆய்விற்கு இக் கோட்பாடுகளெல்லாம் ஓரளவிற்குத்தான் விளக்கம் தருகின்றன; பொதுவான ஆய்விற்கு இவை அனைத்துமே பொருத்தமற்றவைதான். பொதுவான முறையில் வளர்ச்சியைப்பற்றி ஆராயும்போது, ஒன்றொடொன்று நெருங்கிய தொடர்புடைய பல கருத்துகள் தோன்றுகின்றன. இக் கருத்துகள் எதைச் சார்ந்தவை என்பது வருமாறு:

முன்னேற்றத் தடைகள்: ஏழை நாடுகள் நவீன முன்னேற்றமடைவதில் மிக முக்கியமான பிரச்சினைகள் உள்ளன; இந் நாடுகள் 'வறுமைச் சுழற்சி'யில் அகப்பட்டுக் கொண்டு தவிப்பதாகக்கூட ஒரு சில பொருளாதார அறிஞர்கள் வலியுறுத்துகின்றனர்.

தானே ஊக்குவிக்கும் வளர்ச்சி: வளர்ச்சியினால் உருவாக்கப்படும் மனப்பான்மைகளும், வளர்ச்சி செயல்படும் முறைகளும் சில வழிகளில் மேலும் வளர்ச்சியை ஊக்குவிக்கின்றன என்பதைக் காட்ட முடியும். ஒரு முறை நவீன வளர்ச்சியைத் தொடங்கி விட்டால், அவ்வளர்ச்சி தானாகவே ஊக்கம் பெற்று மென்மேலும் வளர்ந்து கொண்டே இருக்க முற்படும்; எனினும், நெடுங்காலத்தில் வளர்ச்சியைத் தானே கட்டுப்படுத்தக்கூடிய அம்சங்களும் அவ் வளர்ச்சியில் தோன்றக் கூடும்.

வளர்ச்சியைத் தொடங்குவது : வளர்ச்சியில் மேலெழு நிலை, தொழில் புரட்சி, வலுவான தள்ளு போன்ற எத்தனையோ கருத்துகள் உள்ளன; இவை அனைத்துமே வளர்ச்சியைத் தொடங்கும் காலம்தான் மிக முக்கியமானதென்று வலியுறுத்து கின்றன; அதோடு, நாட்டின் பொருளாதார அமைப்பின் அடிப் படையில் முக்கியமான மாறுதல்கள் ஏற்பட்டால்தான் வறுமைமிக்க நாடு வளமான நாடாக முன்னேற முடியும் என்பதையும் இக் கருத்துகள் புலப்படுத்துகின்றன.

இக் கருத்துகள் திட்டவட்டமாக எதைப் புலப்படுத்துகின்றன என்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன; அதோடு மட்டுமன்றி, இவற்றை நடைமுறையில் ஆராயும்போது இவை புலப்படுத்தும் விஷயங்கள் பொருத்தமானதாக இல்லை. எனவே, பொருளாதார வளர்ச்சியைப் பற்றி பொதுவாக ஆராய்வதற்குப் பதிலாக, பல் வேறு நாடுகளின் நிலைமைகளுக்கேற்ப தனித்தனியாக ஆராய்வது தான் நல்லதெனத் தோன்றுகிறது.

# 3. பொருளாதார முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் வளர்ச்சி தொடங்கிய முறைகள்

பொருளாதார முன்னேற்ற மடைந்துள்ள நாடுகள் முன்னேற்ற மடையத் தொடங்கிய வழி முறைகளின் சில அம்சங்களைத்தான் இந்த அதிகாரத்திலும், அடுத்த அதிகாரத்திலும் ஆராய இருக்கின்றோம். இந்த நாடுகளெல்லாம் நவீனப் பொருளாதார வளர்ச்சியை எப்போதோ தொடங்கி இன்று முன்னேற்ற நிலையில் உள்ளன என்பது வரலாறு புலப்படுத்தும் உண்மையாகும். ஆனல், இன்று உலகிலுள்ள வளர்ச்சி குன்றிய நாடுகள் முன்னேற வேண்டுமானால் அவை சமாளிக்க வேண்டிய பிரச்சினைகள் வேறு விதமானவை; அப் பிரச்சினைகள் எவ்வளவு சிக்கலானவை என்பதை இந் நூலின் கடைசிப் பிரிவில் பார்க்கலாம்.

## அன்று முன்னேற்றம் தொடங்கிய விதம்

பொருளாதார வளர்ச்சியின் தொடக்கம் பற்றிய பிரச்சினைகளைத்தான் இவ்வதிகாரத்தில் ஆராயப் போகின்றோம். பொருளாதார முன்னேற்ற மடைந்துள்ள நாடுகள் எப்படி முன்னேறத் தொடங்கின? முதன்முதலில் எந்த நாட்டில் வளர்ச்சி தொடங்கியது? எப்போது? ஒரு நாட்டிலிருந்து ஏனைய நாட்டிற்கு அது பரவியது எவ்வாறு?

பொதுவாகப் பார்த்தால், முன்னேற்ற மடைந்துள்ள நாடுகள் எப்படி வளரத் தொடங்கின என்ற வரலாற்றில் சில பொதுவான பண்புகளைக் காணலாம். எல்லா நாடுகளிலுமே

1. வளர்ச்சி பெறுவதற்கென்று முன்னேற்பாடு செய்யப்பட்ட காலம் இருந்தது; அந்தக் காலத்தில் சமூக மாறுதல்கள் மட்டுமின்றி, அரசியல் பொருளாதார மாற்றங்களும் ஏற்பட்டு வந்தன.

2. தொழில் நுட்ப முன்னேற்றமும் தீவிரமாக நடைபெற்று வந்தது.

3. தொழில் அமைப்பு முறையிலும் எத்தனையோ விதமான மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டு வந்தன.

> அம்மாறுதல்களில் குறிப்பிடத்தக்கவை வருமாறு: தொழில் நிறுவனங்களில் மூலதனம் மென்மேலும் பயன்படுத்தப் பட்டு அந்நிறுவனங்கள் விரிவடைந்து வந்தன; உற்பத்தி செய்யும் முறை இயந்திர மயமாக்கப்பட்டதோடு நுணுக்க மான வேலைப்பகுப்புகளும் புகுத்தப்பட்டன; இவ்விதமான மாறுதல்களுக்கேற்ப தொழிலாளரும் தம்மை மாற்றிக் கொண்டு வந்தனர். இவற்றின் விளைவாக, உற்பத்தித் திறன் மென்மேலும் அதிகரித்து வந்ததோடு, தொழில் முயற்சிகளும் மேம்பாடு அடைந்து விரிவு பெற்று வந்தன.

தொழில் புரட்சி ஏற்பட்ட எல்லா நாடுகளிலுமே அப்புரட்சி யின் தொடக்கத்தில் இவ்வகையான மாறுதல்களும் முன்னேற்றங் களும் ஏற்பட்டு வந்தன. இருந்த போதிலும் எல்லா நாடுகளிலுமே தொழில் புரட்சி ஒரே சமயத்தில் தோன்றவில்லை, முதன்முதலில் தொழில் புரட்சி தோன்றிய நாடும் உண்டு; அதைப் பின்பற்றி தத்தம் நாட்டிலும் தொழில் புரட்சியை ஏற்படுத்திய நாடுகளும் உள்ளன. தொழில் நுட்ப முறையிலும் கூட அப்படித்தான். ஏனைய நாடுகளுக்கு வழிகாட்டியாக இருந்த நாடு சொந்தமாகவே தொழில் நுட்ப முன்னேற்ற வழிவகைகளைக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது ; ஏனைய நாடுகளோ அவற்றை அப்படியே கடன் வாங்கிப் பயன்படுத்தின. இந்த கண்ணோட்டத்தில் பார்த் தால் சற்றுமுன்னர் நாம் குறிப்பிட்ட பொதுவான அம்சங்களில் கூட நாட்டிற்கு நாடு வேறுபாடு இருந்தது என்பது புலப்படும். எனவே, நமது ஆய்வையும் இரு பிரிவுகளாகப் பிரித்துக் கொள்வது நல்லது : 1) முதன்முதலில் இங்கிலாந்தில் ஏற்பட்ட வளர்ச்சியின் தொடக்க பிரச்சினைகள், 2) அதன் பின்னர், ஏனைய நாடுகள் சற்று வேறுவிதமாக வளரத் தொடங்கிய பிரச்சினைகள்.

## இங்கிலாந்தின் தொழில் புரட்சி

நவீனப் பொருளாதார உலகம் 18 ஆம் நூற்றாண்டின் பிற் பகுதியில் இங்கிலாந்து நாட்டில்தான் தோன்றியது எனலாம்.[1] அது

[1]. தொழில் புரட்சி 1760 முதல் 1832 வரை ஏற்பட்டது என்று கூறுவது மரபாகி விட்டது; எனினும் இந்தக் காலத்தில்தான் அப்புரட்சி ஏற்பட்டதென்று திட்டவட்டமாகக் கூறமுடியாது. ஏனெனில் ரோஸ்டாவ் அவர்களின் ஆய்வுப்படி இங்கிலாந்து நாட்டில் மேலெழு நிலை ஏற்பட்ட காலம் 1783 - 1802 என்பதை முன்னமே நாம் குறிப்பிட்டோம். ஆனால் அண்மையில் மேற் கொள்ளப்பட்ட ஆராய்ச்சியிலிருந்து இன்னும் முன்ன தாகவே அந்நிலை ஏற்பட்டு விட்டதாக அறிய வருகின்றோம். சான்றாக, Phyllis Deane, W. A Cole ஆகிய பொருளாதார வரலாற்றறிஞர்கள் இருவருமே 1740 - 1749 காலத்தைத்தான் மிக முக்கியமான காலமாகக் கருதுகின்றனர். British Economic Growth, 1688-1959 (Cambridge ; Cambridge University Press, 1962) என்ற நூலில் 18, 19 ஆம் நூற்றாண்டு களில் பிரிட்டனின் பொருளாதார முன்னேற்றம் பற்றிய பல புதிய விவரங் களை அவர்கள் தருகின்றனர்.

வரை, பொருளாதார வளர்ச்சி குறிப்பிடத்தக்க வகையில் ஏற்பட வில்லை ; அப்படியே ஏற்பட்டிருந்தாலும், அஃது இங்கும் அங்குமாக மிக மெதுவாகத்தான் ஏற்பட்டிருக்கும். ஆனால் 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிக்குப் பின்னரோ, இங்கிலாந்தில் மட்டு மின்றி, ஏனைய பல நாடுகளில் கூட பொருளாதார வளர்ச்சி துரித மாக ஏற்பட்டு வந்துள்ளது. இன்றோ முன்னேற்றம் என்பது அன்றாட நிகழ்ச்சியாகி விட்டது. இந்தக் கண்ணோட்டத்தில் பார்க்கும் போது, இங்கிலாந்தில் ஏற்பட்ட தொழில் புரட்சி புதிய தொரு சகாப்தத்தையே உருவாக்கி விட்டது என்றுதான் கூற வேண்டும்.

### நீண்டகால முன்னேற்பாடு

இங்கிலாந்தில் ஏற்பட்ட புரட்சிகரமான மாறுதல்களுக்கு மூல காரணங்கள் யாவை? இக்கேள்விக்கு விடை காண வேண்டுமாயின் பழைய ஐரோப்பிய வரலாற்றிற்குத்தான் செல்ல வேண்டும். இடைக் கால ஐரோப்பாவில் பொருளாதார முன்னேற்றத்திற்கான வாய்ப்பு இருந்திருக்க முடியாது. ஏனெனில் இடைக்கால ஐரோப்பாவோ வறுமை நிறைந்த ஒரு விவசாய உலகமாகத்தான் இருந்தது. நில உடைமை முறையை எண்ணிப் பார்த்தால் பெரும்பாலும் சுய நிறைவு பெற்ற மேனர் பண்ணைகள்தான் (Manorial Estates) அதிகமாக இருந்தன. அப் பண்ணைகள் அனைத்தும் திறனற்ற முறையில் நிர்வகிக்கப் பட்டதோடு, அவற்றில் அடிமைகள்தான் பெரும்பாலும் வேலை செய்து வந்தனர். படைமானியப் பிரபுக்களோ (feudal lords) பொருளாதார விஷயங்களில் அதிக அக்கறை காட்டாமல் போரில்தான் நாட்டம் கொண்டிருந்தனர். அன்றைய ஐரோப்பாவில் செல்வாக்குப் பெற்றிருந்த மதமோ இலாபத்திற்காகச் செய்யும் எல்லா வேலைகளுமே பாவச் செயல் என்றுதான் போதித்து வந்தது. அதோடு, அக்கால ஐரோப்பாவில் வலுவான மைய அரசாங்கம் ஏதுமில்லாத காரணத்தால், சட்டம் ஒழுங்கு என்ற முறையே இல்லாமல் இருந்தது.

இப்படியெல்லாம் இருந்தும்கூட, 10 ஆம் நூற்றாண்டின் இறுதியிலேயே இவை அனைத்தையும் மாற்றக்கூடிய சக்தி வாய்ந்த பல நிகழ்ச்சிகள் ஏற்பட்டு வந்தன. ஐரோப்பிய வணிகம் விரிவடையத் தொடங்கின. இம்மாறுதல்களைப் பற்றிக் குறிப் பிட்ட வரலாற்று அறிஞர் ஒருவர், "நமது நாகரீக வரலாற்றில் இதுதான் மிகப் பெரியதொரு திருப்பு கட்டமாகும்" எனக் கூறி

யுள்ளார்.[2] ஆனால் அந்த வணிகம் கூடச் சிறு அளவில்தான் நடைபெற்றது. அன்று மிகப் பிரபலிய வணிக நகரமாக விளங்கிய வெனிஸ் நகரக் கப்பல்கள் அனைத்தும் ஏற்றிச் சென்ற சரக்குகளையெல்லாம் இன்றைய சரக்குக் கப்பல் ஒன்றில் ஏற்றினால் கூட நிறைய இடம் காலியாகத்தான் இருக்கும். எனினும், அன்றை வணிகம் சிறிதளவு விரிவடைந்ததால் ஏற்பட்ட விளைவுகள் மகத்தானவை. எங்கெல்லாம் அங்காடி வளர்ச்சி பெற்று விரிவடைந்ததோ அங்கெல்லாம் படை மானியமுறை, மேனர் பண்ணை முறை ஆகியவற்றின் அடித்தளமே ஆட்டம் கண்டுவிட்டது. பெரிய ஊர்களும் நகரங்களும் வளரத் தொடங்கின. நகரங்களில் தோன்றிய புதிய அங்காடிகள் விரிவடைந்து, சுய தேவை நிறைவு செய்யும் வகையில் அமைக்கப்பட்டிருந்த விவசாய உலகில் புகுந்து அவ்வுலகை மாற்றத் தொடங்கி விட்டன. வணிகம் பெருகப் பெருக சிறு கைவினைத் தொழில்களும் (ஒரு சில பேரளவுத் தொழில்களும் கூட) செழித்து வளர்ந்தன. இவ்வாறாக, பொருளாதார முன்னேற்றம் எவ்வளவு தான் மெதுவாகவும் இங்கும் அங்குமாகவும் ஏற்பட்டு வந்த போதிலும், முன்னேற்றம் தொடங்கி விட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த முன்னேற்றத்தை ஊக்குவிக்கும் வகையில் 15 ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து ஐரோப்பிய வரலாற்றிற்கே மகத்துவம் அளித்த பல்வேறு நிகழ்ச்சிகளும் ஏற்பட்டன. புதிய உலகமும், கிழக்கு நாடுகளுக்குச் செல்லப் புதிய வழிகளும் கண்டுபிடிக்கப்பட்டதால், ஐரோப்பிய அங்காடிகள் மேலும் விரிவடைந்து, 'வணிகப் புரட்சி' ஏற்படத் தொடங்கி விட்டது. வியாபாரம் பெருகியது; மத்திய தரைக் கடலின் மகிமை மங்கி, அட்லாண்டிக் கடல் மகிமை பெற்று விட்டது; குடியேற்ற நாடுகள் நிலை நாட்டப்பட்டன. மேலும் 16 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் புதிய உலகிலிருந்து கொண்டு வரப்பட்ட தங்கமும் வெள்ளியும் முதன் முதலில் ஸ்பெயின் நாட்டிலும், அதன் பின்னர் ஏனைய நாடுகளிலும் வந்து குவிந்தன. விலையுயர்ந்த இத்தங்கமும் வெள்ளியும் வந்து குவிந்ததால் விலைவாசிகள் ஏறின; அதனால் சம்பாதிக்கக் கூடிய வாய்ப்புகள் பெருகியதோடு, சமுதாயத்தில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்று இருந்து வந்த மரபும் மாறிவிட்டது. வணிகர்களும் செல்வந்தர்களும் தம் பணபலத்தாலும் அதிகாரத்தாலும் உயர்ந்த குடிமக்கள் ஆகிவிட்டனர்.

அதே சமயம், மறுமலர்ச்சி, சமயப் புரட்சி, இன்னும் இதர கலாச்சார மாறுதல்களெல்லாம் சேர்ந்து மக்களின் மனப்போக்கையே மாற்றி வந்தன. இவற்றின் விளைவாக, மத சார்பற்ற, இவ்வுலகம்

[2] Robert S. Lopez, 'The Trade of Medieval Europe: the South," Cambridge Economic History of Europe, Vol. II (1952) P. 289.

சார்ந்த, பகுத்தறியும் ஆற்றல் மிக்க சமுதாயம் படிப்படியாக உரு வாயிற்று. இடைக்காலத்தில் கத்தோலிக்கத் திருச்சபைதான சக்தி வாய்ந்ததொரு ஸ்தாபனமாகத் திகழ்ந்தது ; இப்போதோ, அரசு தான் வலிமை மிக்கதாகி விட்டது. இடைக் காலத்தில் இலாபம் சம்பாதிப்பதே பாவச் செயலாக நம்பப்பட்டு வந்தது ; ஆனால், இப்போதோ சம்பாதிக்க வேண்டுமென்ற சுயநல நடவடிக்கைதான் நாட்டின் செல்வத்தை மட்டுமின்றி, அதன் வலிமையையும் புகழையும் ஓங்கச் செய்யும் கருவியென்று வணிக நாட்டம் கொண்ட ஆட்சியாளர்கள் சுருதத் தொடங்கி விட்டனர். அறிவியல் வாயிலாக உலகினை ஆராயும் நிலை முன்பெல்லாம் ஏதோ தற்செயலாகத் தான் ஏற்பட்டு வந்தது; ஆனல், இப்போதோ இந்தப் பிரபஞ் சத்தில் எது நடந்தாலும் அதை அறிவியல் ரீதியில் ஆராயும் ஆவல் பரவி விட்டது. இவ்வாறாக, அரசியல், சமூக, விஞ்ஞான முன்னேற்றங்கள் அனைத்தும் பொருளாதாரத் துறையிலும் பிரதி பலிக்கத் தொடங்கின. புதிதாகத் தோன்றிய சக்தி வாய்ந்த அரசுகள் தத்தம் நாட்டுத் தொழில்களும் வியாபாரமும் பெருகும் வகையில் அங்காடிகளை உருவாக்கி விரிவு பண்ணும் நடவடிக்கை களில் தீவிரமாகப் பாடுபட்டன. கிறித்துவ சமயச் சீர்திருத்த வாதிகளோ மக்கள் அனைவரும் சுறு சுறுப்பாக வேலை செய்து சிக்கன மாக வாழ வேண்டுமென்ற தத்துவத்தை வலியுறுத்தினர்; இத் தத்துவம் மூலதனம் திரட்ட வேண்டுமென்ற சமுதாய நற்பண்பை உறுதி செய்வதாக அமைந்தது.[3] எதையும் அறிவியல் அடிப் படையில் ஆராயும் மனப்பான்மை மக்களிடையே பரவி விட்டதால், பொருள் உற்பத்தியில் ஈடுபட்டிருந்தோர் தத்தம் உற்பத்தியைப் பெருக்குவதற்கும், கைவேலையைக் குறைக்கவும் கூடிய உபாயங் களைக் கண்டுபிடிக்க முடிந்தது. இவ்வாறாக, ஐரோப்பிய பொருளாதாரமே படிப்படியாக முன்னேறி கணிசமான அளவிற்கு மாறுதல் அடைந்து விட்டது.

இவ்வாறான மாறுதல்கள் ஐரோப்பா முழுவதும் ஏற்பட்டன; எனினும் இங்கிலாந்தில்தான தீவிரமாக ஏற்பட்டன. எனவே, இம் மாறுதல்களின் விளைவாக 16 ஆம் நூற்றாண்டிலிருந்தே இங்கிலாந்து முன்னேற்ற மடைந்து வந்தது.

3. சமயப் புரட்சியினால் ஏற்பட்ட மதமாறுதல்களுக்கும் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டதற்கும் உள்ள தொடர்பு கவர்ச்சியானதுதான்; ஆனால் கருத்து முரண்பாடுகள் கொண்டது. இதைப்பற்றி விவரமாகத் தெரிந்துகொள்ள விரும்புவோர் பின்வரும் நூல்களைப் படிக்கவும் Max Weber, The Protestant Ethic and the Spirit of Capitalism (New york : Scribner, 1952) ;R. H. Tawney, Religion and the Rise of Capitalism (New york : Mentor, Books 1952.)

புரட்சிகரமான பொருளாதார மாறுதல்கள் முதன்முதலில் ஏன் இங்கிலாந்தில் ஏற்பட்டன? இக்கேள்வி வரலாற்றுச் சிறப்புடைய கேள்விதான்; எனினும், சிக்கல் நிறைந்தது. எனினும், ஏனைய ஐரோப்பிய நாடுகளைக் காட்டிலும் இங்கிலாந்துதான் முதன் முதலில் படைமானிய முறையை ஒழித்துக் கட்டிவிட்டு, சக்திவாய்ந்த அரசை உருவாக்க முடிந்தது. மேலும், ஐரோப்பாவில் ஏற்பட்ட யுத்தங்களின் போதெல்லாம் ஏனைய நாடுகள்தான் சூரையாடப் பட்டன; இங்கிலாந்தோ மிகப் பாதுகாப்புடன் விளங்கியது. அதோடு ஏனைய பல ஐரோப்பிய நாடுகளில் இல்லாதிருந்த நடுத்தர வகுப்பினரை, பல்வேறு காரணங்களினால் இங்கிலாந்து உருவாக்கி விட்டது. பெரும்பாலான இந்த நடுத்தர வகுப்பினர் ஆர்வமிக்கவர்களாயுமிருந்தனர். இதனால் தொழில் முயற்சிக்கு நிறைய வாய்ப்பும், பெரிய தேசிய அங்காடிக்கு இருக்க வேண்டிய வசதிகளும் இங்கிலாத்தில் தோன்றி விட்டன; பொது மக்களுக்கு வேண்டிய பொருள்களை ஏராளமாக உற்பத்தி செய்து விற்கக் கூடிய சாத்தியமும் ஏற்பட்டிருந்தது. மாறாக, ஏனைய ஐரோப்பிய நாடுகளில், குறிப்பாக பிரான்ஸ் நாட்டில், செல்வந்தர்களின் உல்லாச வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்கள் தான் அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டு வந்தன.

இவ்வாறாக, உலக நாடுகளுக்கெல்லாம் வழிகாட்டக் கூடிய அளவுக்கு இங்கிலாந்து செல்வாக்குப் பெற்றுவிட்டதற்கு வரலாற்று அறிஞர்கள் என்ன விளக்கம் கொடுத்தாலும் பரவாயில்லை ; ஆனால் ஒன்று மட்டும் முக்கியமானது. அதாவது, 18 ஆம் நூற்றாண்டில் புரட்சிகரமான மாறுதல்களை உருவாக்கி, அவற்றைச் செயல்படுத்து வதற்கு இங்கிலாந்துதான் முதன்முதலில் தயாராக இருந்தது என்பதில் மட்டும் சிறிதளவும் ஐயமில்லை. இங்கு நாம் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவை மூன்று உள்ளன.

முதலாவது, விஞ்ஞானத்திலும் தொழில் நுட்ப முன்னேற்றத் திலும் ஐரோப்பாவிலேயே முதல்தரமான நாடாக இங்கிலாந்துதான் விளங்கியது என்பது உலகம் அறிந்த விஷயம்தான். 17 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட விஞ்ஞானப் புரட்சியில் உலகப் புகழ் அடைந்த சர் ஐசக் நியூடன் (Sir Isaac Newton) அவர்கள் இங்கிலாந்து நாட்டவர்தான். 1600 ஆம் ஆண்டில் ஏற்படுத்தப் பட்ட அரசகுழு (Royal Academy) பொது விஞ்ஞான ஆராய்ச்சி வளர்வதற்கு ஓர் அறிகுறியாக மட்டுமின்றி, காரணமாகவும் இருந் தது. இங்கிலாந்து நாட்டில் வாழ்ந்து வந்த நிலக்கிழார் உட்பட எல்லா மக்களுமே தத்தம் வாழ்க்கையை முன்னேற்ற வேண்டுமென்ற ஆர்வம் கொண்டு பாடுபட்டு வந்தனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இரண்டாவது, விவசாய அமைப்பு முறையிலும் உற்பத்தி முறையிலும் எத்தனையோ வகையான சீர்திருத்தங்களை ஏற்கனவே இங்கிலாந்து நாடு செய்து வந்ததோடு, மேலும் பல திருத்தங்களையும் தொடர்ந்து செய்து கொண்டு வந்தது. அங்காடி விரிவடைந்து வந்ததன் பலனாக அடிமை முறை ஒழிக்கப்பட்டு விட்டது; அதோடு, நிலச்சுவான்தார்கள் தத்தம் நிலத்திலிருந்து அதிக இலாபம் பெறக்கூடிய முறையில் விவசாயம் செய்யத் தொடங்கி விட்டனர். சிக்கல்கள் நிறைந்திருந்த மேனர் பண்ணைகளையெல்லாம் ஒருங்கிணைத்து, ஒவ்வொரு பண்ணையையும் அதன் சொந்தக்காரர்களே திறமையுடன் நிர்வகிக்க முற்பட்டனர்; அதன் விளைவாக தத்தம் பண்ணைகளைச் சுற்றி வேலிகள் அமைத்து, இலாபம் தரக்கூடிய ஒரு தொழிலாக விவசாயத்தை மாற்றி வந்தனர். நிலச் சுற்றடைப்புத் திட்டத்தின் (enclosure movement) வழியாக, புதிய நிலங்கள் சாகுபடிக்குக் கொண்டு வரப்பட்டன. அதோடு, சிறு சிறு துண்டுகளாகச் சிதறிக் கிடந்த நிலங்களையெல்லாம் ஒருங்கிணைத்து, திறமையான முறையில் பண்ணைகள் நிர்வகிக்கப்படத் தொடங்கி விட்டதால் விவசாய உற்பத்தி அதிகரிக்க முற்பட்டது. இவ்வாறு, விவசாய உற்பத்தி அதிகரித்தது தொழில் துறையும் விவசாயத் துறையும் வளர்வதற்கு ஆதாரமாக விளங்கியது.[4]

இறுதியாக, இங்கிலாந்து நாட்டிலிருந்த பல்வேறு தொழில்களும் கூட முன்னேற்றமடைந்து வந்தன. 16 ஆம் நூற்றாண்டில் வேண்டுமானால் ஏனைய ஐரோப்பிய நாடுகளைக் காட்டிலும் இங்கிலாந்தின் தொழில்கள் பின்தங்கிய நிலையில் இருந்திருக்கலாம். ஆனால் 18 ஆம் நூற்றாண்டிலோ தொழில் நுட்பத்திலும், தொழில் அமைப்பு முறையிலும் ஏனைய நாடுகளைக் காட்டிலும் விரைவாக முன்னேற்றமடைந்து, அவற்றிற்கெல்லாம் வழிகாட்டக் கூடிய அளவுக்கு இங்கிலாந்து நாடு வளர்ச்சி பெற்று விட்டது. பித்தளை, செம்பு, தேனிரும்பு போன்ற பல்வேறு உலோகத் தொழில்கள் பெரிய அளவில் நடைபெற்று வந்தன. கம்பள நெசவுத் தொழிலிலோ வியாபார-முதலாளித்துவ முறை பல்லாண்டுகளுக்கு

[4]. தொழில் புரட்சி ஏற்பட்ட அதே சமயத்தில் மட்டுமின்றி, அதற்கு முன்பும் இங்கிலாந்து நாட்டின் விவசாயம் முன்னேற்றம் அடைந்து வந்தது. இதைச் சிந்தித்துப் பார்க்கும் போது பொருளாதார மேலெழு நிலை சம்மந்தப்பட்ட முக்கியமானதொரு பிரச்சினை நினைவிற்கு வருகிறது. அதாவது, விவசாயதுறையை முன்னேற்றாமல் தொழில் துறையை மட்டும் ஒரு நாடு தீவிரமாக முன்னேற்ற முடியுமா? அல்லது தொழில் புரட்சியும் விவசாய புரட்சியும் சேர்ந்தே நடைபெற வேண்டுமா? இன்றைய வளர்ச்சிக் குன்றிய நாடுகள் பொருளாதார முன்னேற்றமடையத் தீவிரமாக முயற்சி செய்யும் போது இப்பிரச்சினைகள்தான் முக்கியமானவையாகும். இதைப் பற்றி 5, 6 அதிகாரங்களில் பார்க்கலாம்.

முன்பிருந்தே பிரபலியமாக நடைபெற்று வந்தது. இம்முறையின் படி, செல்வமிக்க வியாபாரிகள் நகரங்களிலும் கிராமப்புறங்களிலும் வாழ்ந்து வந்த நூற்போர், நெசவாளர், சாயம் தோய்ப்பவர் ஆகியோருக்கு வேண்டிய மூலப் பொருள்களை விநியோகம் செய்து, அதன் பின்னர், நெய்து முடிக்கப்பட்ட கம்பளத் துணிகளையெல்லாம் சேகரித்து விற்பனை செய்து வந்தனர். இந்த வியாபாரிகளின் தொழில், இடைக்காலத்தில் இருந்த தொழில்களைப் போலின்றி, பெருமளவில் நடைபெற்று வந்தது. ஒரு வியாபாரியின்கீழ் நூற்றுக் கணக்கான மக்கள் வேலை செய்து வந்தனர். அதோடு மட்டுமின்றி, முதலாளியின் வேலை எது, தொழிலாளியின் வேலை எது என்று திட்டவட்டமான வேலைப் பாகுபாடும் இருந்து வந்தது. பொதுவாகக்கூறின், 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்கிலாந்தில் ஏற்பட்ட தொழில் புரட்சி, திடீரென்று தோன்றவில்லை; அப்புரட்சிகான முன்னேற்பாடுகள் பல்லாண்டுகளாகவே செய்யப்பட்டு வந்தன.

இவ் விவரங்களையெல்லாம் ஆராயும்போது, ஒன்று தெளிவாகிறது. அதாவது, ஏனைய நாடுகளில் ஏற்பட்டதொழில் புரட்சிகள் உண்மையிலேயே புரட்சியானவைதான்; ஆனால் இங்கிலாந்தில் ஏற்பட்ட மாறுதல்களோ அப்படியின்றி, பல்லாண்டு காலமாகவே எதிர்பார்க்கப்பட்டவை; எனவே, அம்மாறுதல்களைத் 'தொழில் புரட்சி' என்று வர்ணிப்பது தவறு என வரலாற்று அறிஞர்கள் பலர் கூறுவது ஏன் என்று இப்பொழுது புரிகிறது. அம்மாறுதல்கள் நீண்ட காலமாகவே எதிர்பார்க்கப்பட்டவை யாதலால் அவற்றைப் 'புரட்சி' என்று சொல்வதற்குப் பதிலாக, படிப்படியாகத் தோன்றிய வளர்ச்சி (Evolution) என்று அழைப்பது தான் பொருத்தமானதாகும் என்று அவர்கள் வாதாடுகின்றனர். ஆனால் இவ் வாதத்தை ஏற்றுக்கொள்ளாத அறிஞர்களும் உளர். அவர்களின் கருத்துப்படி, இங்கிலாந்து நாட்டில்தான் முதன்முதலில் இம் மாறுதல்கள் விரைவாகவும் தொடர்ச்சியாகவும் ஏற்பட்டன; எனவே விரைவாகவும் தொடர்ச்சியாகவும் ஏற்பட்ட மாறுதல்களைப் 'புரட்சி' என்றுதான் அழைக்கவேண்டும் எனத் தெரிகிறது. இந்த விதமான வாதத்தையும் எதிர் வாதத்தையும் கொண்டு முடிவாகக் கூற வேண்டுமாயின், இங்கிலாந்து நாட்டில் ஏற்பட்ட மாறுதல்கள் திடீரென்று ஏற்படாமல், பல்லாண்டு காலமாகவே எதிர்பார்க்கப் பட்டவைதான் என்ற நிபந்தனையுடன், அவற்றைப் புரட்சி என்றழைப்பதுதான் உசிதமானது என்று கூறலாம்.

### தொழில் நுட்பத்தில் புரட்சி

இம்மாறுதல்களின் விளைவாகத்தான் 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்கிலாந்து நாட்டின் தொழில் நுட்ப முறைகள்

வியக்கத்தகுந்த வகையில் துரிதமாக முன்னேற்ற மடைந்தன என்பதை எவரும் மறுக்க இயலாது. இந்த அடிப்படையில் பார்த்தால் இங்கிலாந்தின் தொழில் புரட்சிதான் நவீனப் பொருளாதார வளர்ச்சிக்கே ஒரு பொதுவான வழியை அமைத்துத் தந்தது என்று கூறலாம்; ஏனெனில் பொருளாதார முன்னேற்ற மடைந்துள்ள நாடுகள் அனைத்துமே உற்பத்தி முறையில் புகுத்திய மேம்பாடான புதிய முறைகளின் வழியாகத்தான் நவீன வளர்ச்சி பெற்றுள்ளன. ஆனால் இங்கிலாந்து நாட்டின் முன்னேற்ற வழிமுறைகளில் சிறப்பானதோர் அம்சம் உண்டு; அதாவது, ஏனைய நாடுகளைப் போலின்றி, இங்கிலாந்து நாடு, தனது பொருளாதார நெருக்கடிகளுக்கும் தேவைக்கு மேற்ப தொழில் நுட்ப முன்னேற்ற முறைகளைச் சொந்தமாகவே கண்டுபிடித்து, அவற்றைச் செயல் படுத்தியது.

அவ்வாறு செயல் படுத்திய புதுவகையான மாறுதல்களைக் கண்ட அனைவருமே வியப்படைந்தனர். அயல் நாட்டவர்கள் கூட அவற்றை வந்து பார்த்து திகைத்து விட்டனர். சான்றாக, ஜெர்மனியைச் சேர்ந்த பயணி ஒருவர், "நம்ப முடியாத அளவுக்கு ஆண்டு தோறும் புதுப்புது படைப்புகளாக வந்து கொண்டே இருக்கின்றன'' என்று வியந்துள்ளார். பிரான்ஸ் நாட்டவர் ஒருவர் "இரவெல்லாம் எங்கு சுற்றினாலும் ஒரே நெருப்புமயமான காட்சிதான், நாடே பெரும் நெருப்பு மூட்டப்பட்டு விட்டது போல்" காட்சியளித்தது என்று திகைத்துப்போய் விட்டார். மண்பாண்டத் தொழிலில் புதுமைகளைக் கண்டுபிடித்துப் புகழ் பெற்ற ஜோசையா வெட்ஜ்உட் (Josiah Wedgewood) என்ற ஆங்கிலேயரோ புதிய உற்பத்தி முறைகள் தோன்றி வந்தவேகத்தைக் கண்டு, "என் தலையே சுற்றுகிறது; கடற்கரையிலுள்ள மணலைப் போல் எண்ணிச் சொல்லமுடியாத அளவிற்குப் பெருகியுள்ளது. பருத்தி நெசவாலைத் தொழிலில் கூட சொல்ல முடியாத அளவிற்கு வந்து விட்டது. இந்த வேகத்தில் பறந்து சென்றால், அதை யாராவது சுட்டு வீழ்த்திவிட வேண்டியதுதான்; இல்லை யென்றால் ஏனைய நாடுகளெல்லாம் வெகு தொலைவில் பின்தங்கி விடும்'' என்று வியப்படைந்து கூறியுள்ளார்.

இதற்கும இன்னும் எத்தனையோ சான்றுகளையும் தரமுடியும். உதாரணமாக, 1760 முதல் 30 ஆண்டுகளுக்குள் கண்டுபிடிக்கப்பட்ட புதுமையான முறைகள் எவ்வளவோ உண்டு; 16 ஆம் நூற்றாண்டில் கண்டுபிடிக்கப்பட்ட புதுமைகளைக் காட்டிலும் இந்த 30 ஆண்டுகளில் கண்டுபிடிக்கப் பட்டவைதான் அதிகம். அதே போல்

## பட்டியல் 3-1. இங்கிலாந்தின் தொழில் புரட்சியில் தோன்றிய சில புதுமை முறைகள்

| ஆண்டு | புதுமை | புதுமையைக் கண்டுபிடித்தோர் | தொழில் |
|---|---|---|---|
| 1709 | நிலக்கரியைப் பயன்படுத்தி உருக்கும் முறை | அபிரஹாம் டர்பி | இரும்பு, எஃகு |
| 1733 | விசை நாடா | ஜான் கே | நெசவு |
| 1761 | மான்செஸ்டர்-ஊர் சிவி கால்வாய் | பிரிட்ஜ் வாட்டர் பிரபாகிய ஜேம்ஸ் பிரின்ட்லே | நீர்ப்போக்குவரத்து |
| 1764 | நூற்கும் ஜென்னி | ஜேம்ஸ் ஹார்கிரேவ்ஸ் | நெசவு |
| 1769 | நீராவி இயந்திரம் | ஜேம்ஸ்வாட் | சகல தொழில்கள் |
| 1776 | நான்கு மாற்றுப் பயிர் முறை | விஸ்கவுண்ட் டவுன் சென்ட் அவர்களின் 'நார்ஃபோல்க்' முறைப்படி ஹால்காமைச் சேர்ந்த கோக் அவர்கள் | விவசாயம் |
| 1776 | நிலக்கரியைப் பயன்படுத்தி இரும்பை உருக்க நீராவி ஊதுலை | ஜான் வில்கின்ஸன் | இரும்பு, எஃகு |
| 1779 | நூல் நூற்கும் மியூல் ("mule") | சாமுவேல் கிராம்டன் | நெசவு |
| 1784 | தேனிரும்பாக்க உருகிய இரும்பைக் கலக்கும் கொதிகலன் | ஹென்ரி கார்ட் | இரும்பு, எஃகு |
| 1785 | விசைத்தறி | எட்மண்ட் கார்க்ரைட் | நெசவு |

(பிரிட்டனின் தொழில் நுட்ப முறைகளை மாற்றி, 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொழில் நுட்ப வளர்ச்சி வேகத்தை அதிகரித்த கண்டுபிடிப்புகள் எத்தனையோ உள்ளன. அவற்றில் ஒரு சில மட்டும்தான் இப் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளன.)

16 ஆம் நூற்றாண்டில் புதுமையான முறைகளைக் கண்டுபிடிப்ப தற்கென்று அரசாங்கம் அளித்த உரிமைகளைக் காட்டிலும், இந்த 30 ஆண்டுகளில் வழங்கப்பட்ட உரிமைகள் தான் அதிகமானது. இந்த 30 ஆண்டுகளில் கண்டுபிடிக்கப்பட்ட புதுமைகளில் ஒரு சிலவற்றைத்தான் 3-1 பட்டியலில் கொடுத்துள்ளோம். சுருக்க மாகச் சொன்னால், முக்கியமான தொழில்நுட்ப முறைகள் புகுத்தப் படாத துறையே ஒன்றும் கிடையாது எனலாம். எனவே, நீராவி இயந்திரத்தைப் போல் முக்கியமானதொரு வகை புதுமையைக் கண்டு பிடித்ததால்தான் தொழில் நுட்பப் புரட்சி ஏற்பட்டது என்று சொல்ல முடியாது. பொதுவாகக் கூறின், இங்கிலாந்து நாட்டில் தொழில் நுட்ப முன்னேற்றங்கள் ஏற்படுவதற்கான வாய்ப்புகள் இருந்ததோடு மட்டுமின்றி, அவ்வாய்ப்புகளைப் பயன்படுத்தக் கூடிய நிலையை மக்கள் எதிர்நோக்கிய வண்ணம் இருந்தனர் என்பதும் குறிப்பிடத்தக்கது. புதிய உற்பத்தி முறைகளைக் கண்டு பிடிக்க வேண்டிய அவசியத்தை மக்கள் நன்குணர்திருந்தனர். அதோடு அவற்றைக் கண்டுபிடிக்க முடியும் என்ற நம்பிக்கையும் கொண்டிருந்தனர். பொருளாதார முன்னேற்றமடைவதற்கு மக்களின் மனப்பான்மை எவ்வளவு முக்கியமானது என்பதை இதிலி ருந்தே தெரிந்து கொள்ளலாம்.

இவ்வாறாக, ஒரு புறம் புதிய தொழில் நுட்ப முன்னேற்றம் ஏற்பட்டுக் கொண்டிருந்த அதே சமயத்தில், மறு புறம், இங்கிலாந் தில் தோன்றிய பல்வேறான பொருளாதாரப் பிரச்சனைகளை சமாளிக்க வேண்டிய அவசியமும் நிலவி வந்தது. எனவே, புதிய தொழில் நுட்ப முறைகளைக் கண்டுபிடித்தோரும், அவற்றை நடை முறையில் பயன்படுத்தியோரும் ஏதோ ஊகமாகத்தான் கண்டு பிடித்தனர் என்று சொல்ல முடியாது. புதுமைகளைக் கண்டு பிடித் தவர்களில் ஜேம்ஸ்வாட் ஒருவர் தான் நல்ல பயிற்சியும் விஞ்ஞான அறிவும் பெற்று, அறிவியல் ரீதியில் கண்டுபிடித்தார்; மற்றவர்கள் அனைவருமே தத்தம் தொழில்களில் ஏற்பட்ட சிக்கல்களையும், பிரச்சினைகளையும் தீர்ப்பதற்கென்றுதான் புதுமைகளைக் கண்டு பிடித்தனர். பிரச்சினைகளோ பலவேறு வகையாக இருந்தன. சில சமயங்களில் சாதனங்கள் போதுமான அளவுக்கு இல்லாமல் மிகக் குறைவாகவே இருந்தன; சான்றாக 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மரக்கட்டைகளும் மரக்கரியும் போதுமான அளவில் கிடைக்காததால்தான் இரும்பை உருக்கித் தேனிரும்பு செய்யும் தொழிலில் மரக்கரிக்குப் பதிலாகத் நிலக்கரியைப் பயன்படுத்தும் முறை கண்டுபிடிக்கப்பட்டது. சில சந்தர்ப்பங்களில் ஏனைய

தொழில்களின் கிராக்கியால் பிரச்சினை உருவானது; சான்றாக நிலக்கரியை மலிவாக ஏற்றிச் செல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டதால் தான் கால்வாய்கள் வெட்டப்பட்டன.

சில சமயங்களில், குறிப்பிட்டதொரு தொழிலில் மட்டும் நெருக்கடிகள் ஏற்பட்டன. அத்தொழிலில் ஏதாவதொரு உற்பத்திப் படி நிலையில் வியக்கத்தக்க வகையில் தொழில் நுட்ப முன்னேற்றம் ஏற்பட, அதற்கு இணையாக ஏனைய படி நிலைகளிலும் முன்னேற்றம் காண வேண்டிய இக்கட்டான நிலை ஏற்பட்டது. இதற்குச் சிறந்த சான்று பருத்தி நெசவாலைத் தொழில்தான். இங்கிலாந்தின் தொழில் புரட்சியிலேயே மிகச் சிறப்பு வாய்ந்த மாறுதல்களுடன் மிக வேகமாக முன்னேற்ற மடைந்த தொழில் இது தான். இத்தொழிலில் ஏதாவதொரு உற்பத்தி படிநிலையில் (நெசவில்) தொழில் நுட்ப முன்னேற்றம் ஏற்பட்ட போது, அதனால் ஏனைய படிநிலையிலும் (நூல் நூற்றல்) துரிதமான முன்னேற்றம் இன்றியமையாததாக ஆகிவிட்டது. இந்த இன்றியமையாத முன்னேற்றத்தை அடைந்த போது, மறுபடியும் முதல்படி நிலையில் (நெசவில்) நெருக்கடி தோன்ற, இப்படியே தொழில் நுட்ப முன்னேற்றம் மாறி மாறிச் செய்யப்பட வேண்டியதாயிற்று.[5]

இந்தச் சான்றுகள் அனைத்தும் எவ்வளவு முக்கியமான விஷயங்களைப் புலப்படுத்துகின்றன என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். அவை வருமாறு: அக்காலத்தில் இங்கிலாந்து நாட்டின் தேவைக்கும் சூழ்நிலைக்கு மேற்ற வகையில் தான் அந் நாட்டின் தொழில் நுட்பம் முன்னேற்றமடைந்தது. அதோடு, வியக்கத்தக்க வகையில் ஏற்பட்ட இம் முன்னேற்றம் திடீரென்று ஏற்படாமல் படிப்படியாகத்தான் ஏற்பட்டது. அதாவது, இங்கிலாந்து நாட்டில் இருந்த இயற்கை வளங்களுக்கும் ஏனைய உற்பத்திக் காரணிகளுக்கும் பொருத்தமான வகையில்தான் தொழில்

[5]. சான்றாக, 18 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஜான்கே அவர்கள் கண்டுபிடித்த விசைநாடாவினால் நெசவுத் தொழில் வேகமாக முன்னேறி, நூலுக்குச் கிராக்கியை ஏற்படுத்திவிட்டது. அதனால் நூலுக்கு அதிகமாகிவிட்ட தேவையை நிறைவு பண்ணும் வகையில் நூல் நூற்பதிலும் முன்னேற்றம் அவசியமாயிற்று. போதுமான அளவு நூல் கிடைக்காததால் புதிய முறையில்அதிகமாக நூல் நூற்கும் இயந்திரத்தைக் கண்டு பிடிப்போருக்குப் பரிசு வழங்கப்படுமென்று கலை உற்பத்தி, வியாபார முன்னேற்றக் கழகம் 1760இல் விளம்பரம் செய்ய வேண்டியதாயிற்று. அதன் விளைவாகத்தான் ஜேம்ஸ் ஹார்கிரேவ்ஸ் அவர்கள் நூற்கும் ஜென்னியைக் கண்டுபிடித்தார்கள். அதன பின்னர், நீர்ச்சட்டமும். அதையடுத்து நூற்கும் இயந்திரமான மியூலும் கண்டு பிடிக்கப்பட, நூற்கும் தொழில் வேகமாக முன்னேறியது. நெசவாளர்களால் சமாளிக்க முடியாத அளவுக்கு நூல் குவிந்தது. அதன் விளைவாக, 1785இல் கார்ட்ரைட் அவர்கள் விசைத்தறியைக் கண்டு பிடித்தர். அதற்குப் பின்னரோ நீராவி இயந்திரங்கள் புகுத்தப்பட்டு, நெசவாலைத் தொழில் தீவிரமாக முன்னேற்ற மடைந்தது.

நுட்பங்கள் முன்னேற்றப் பட்டன. அதோடு மட்டுமின்றி, முன்னேற்றமடைந்த தொழில் நுட்பங்கள் அனைத்துமே, அவற்றிற்கு முந்திய நிலையிலிருந்த நுட்பங்களிலிருந்து தான் மேம்பாடு செய்யப்பட்டன. இஃது ஓரளவிற்கு முக்கியமான தொரு நிகழ்ச்சியாகும். இங்கிலாந்து நாட்டையும், அதற்கு பின் வளர்ச்சி பெற்ற பிறிதொரு நாட்டையும் ஒப்பிட்டுப் பார்த்தால், இங்கிலாந்து எவ்வளவு இக்கட்டான நிலையில் இருந்தது என்பது புலப்படும். முதன்முதலில் தொழில் புரட்சி ஏற்பட்ட நாடாகை யால், ஏனைய நாட்டைப் போல் ஏற்கனவே கண்டுபிடிக்கப் பட்ட தொழில் நுட்ப முறைகளை அப்படியே மேற்கொள்ள முடியாத நிலையில், தனக்கு வேண்டிய தொழில் நுட்ப மாறுதல்களை யெல்லாம் தானே செய்துகொள்ள வேண்டியிருந்தது. அப்படி இருந்ததும்கூட ஒரு விதத்தில் நல்லதுதான். எவ்வாறெனில் தானே சொந்தமாகப் புதுப்புது தொழில் நுட்பத்தைக் கண்டு பிடித்து முன்னேற வேண்டியிருந்ததால், தன் சொந்த உற்பத்திக்கு இருந்த தேவைக் கேற்ப, உரிய நேரத்தில் உரிய விதமான நுட்ப முறையைக் கண்டுபிடித்து முன்னேற முடிந்தது.

### தொழிற்சாலை

இங்கிலாந்து நாடு, தொழில் நுட்ப முன்னேற்றத்தை மட்டும் செய்து நவீனப் பொருளாதார வளர்ச்சியின் மேலெழு நிலையை அடைந்துவிடவில்லை. அதோடு, தொழில் அமைப்பின் அடிப்படையையே மாற்றியும்தான் அந்நிலையை அடைய முடிந்தது. தொழிற்சாலை முறை என்ற பெயரில் வியக்கத்தகுந்த மாறுதல் களைத் தொடங்கியது. புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டு உருவாக்கப் பட்ட இயந்திர சாதனங்களைப் பயன்படுத்துவதற்குப் பெரிய அளவில் நிறுவனங்களை அமைக்க வேண்டியிருந்தது. பெரிய நிறுவனங்கள் தான் புதிய இயந்திர சாதனங்களையெல்லாம் பயன் படுத்த உதவின. தொழிற்சாலை முறை என்பது இங்கிலாந்து நாட்டிற்கு ஒன்றும் புதிதல்ல; கடந்த காலத்தில்கூட தொழிற் சாலைகளை அஃது உருவாக்கியுள்ளது. எனினும், பெரும்பாலும் எல்லாப் பொருள்களுமே தொழிற் சாலைகளில் உற்பத்தி செய்யப் படும் முறை இப்போது தான் முதன்முதலாகத் தோன்றியது.

தொழிற்சாலை என்பதுதான் என்ன? இக் கேள்விக்கு எத்தனையோ விதமான விளக்கங்கள் பல ஆண்டுகளாகவே கொடுக்கப்பட்டு வந்துள்ளன. எனினும் தொழிற்சாலை முறை யின் முக்கியமான அம்சங்கள் இவை தான்: 1) புதிய ஆலை

களுக்கு அதிக மூலதனமும் இயந்திர சாதனங்களும் தேவைப் பட்டன; அதோடு, இந்த ஆலைகள் பெருமளவில் பொருள்களை உற்பத்தி செய்ய முடிந்தது. 2) பழைய வியாபாரி-முதலாளி முறையின் கீழ் இருந்ததைப் போலன்றி, இப்புதிய தொழிற்சாலை முறைப்படி ஒரே கட்டடத்தில் அல்லது பட்டறையில் தான் பொருள் உற்பத்தி நடைபெற்றது. 3) என்றுமில்லாத அளவுக்கு அதிக மான வேலைப்பகுப்பு ஏற்பட்டதோடு, முதலாளி-தொழிலாளி என்ற பாகுபாடும் அதிகரித்து விட்டது. 4) முன்பெல்லாம் தொழிலாளர் தம் இஷ்டப்படி தனித்தனியாக எந்த நேரத்தில் வேண்டு மானாலும் வேலை செய்து வந்தனர்; ஆனால் இப்போதோ அவர்கள் ஒரே இடத்தில் புதியதொரு கட்டுப்பாட்டு ஒழுங்கின் படிதான் வேலை செய்ய வேண்டும்; அதோடு, ஒவ்வொரு தொழிலாளியும் ஒரே மாதிரியான வேலையைத் தான் நாள் பூராவும் செய்யவேண்டியிருந்தது. அமைதியான சூழ்நிலைக்குப் பதிலாக இயந்திரங்கள் போடும் சப்தத்தில் தான் இப்போது வேலை நடந்தது.

இவ்வாறாக, பொருளாதார வளர்ச்சிக்கு வேண்டிய முக்கிய மான காரணிகளையெல்லாம் ஒன்று சேர்ந்து, நாட்டின் மொத்த உற்பத்தியையும் தலா உற்பத்தியையும் பெருக்கக்கூடிய வகையில் உற்பத்தி செய்து தள்ளும் ஒருவகையான தொழில் அமைப்பைத் தான் தொழிற்சாலை என்று சொல்கின்றோம். அதோடு, முன்பை விட அதிக உற்பத்தி, சிறப்புத் தேர்ச்சி X-திறன் உயர்வு, ஒவ் வொரு தொழிலாளியும் வேலை செய்வதற்கென்று அதிக மூலதனம், மேம்பாடான தொழில் நுட்பம் ஆகிய அனைத்தையும் கொண்டது தான் தொழிற்சாலை.

இத்தொழிற் சாலைகள் தோன்றியது எப்படி? இப்புதிய ஆலை கள் தோன்றுவதற்கு வேண்டிய இயந்திரங்களையும் இதர முதற் கருவிப் பொருள்களையும் பெறுவதற்கு வேண்டிய நிதியை முதலில் திரட்ட வேண்டியிருந்தது; இதில் வேலை செய்ய தொழிற்சாலைக் கட்டுப்பாடுகளுக்கெல்லாம் இசைந்து நடக்கக் கூடிய தொழிலாளர் ஆயிரக்கணக்கில் தேவைப்பட்டனர். அதோடு மட்டுமல்ல. வருங் கால வாய்ப்புகளையெல்லாம் முன்கூட்டியே நன்குணர்ந்து, உழைப்பு, மூலதனம், தொழில் நுட்பம் போன்ற உற்பத்திக் காரணி களையெல்லாம் பொருத்தமான வீதத்தில் தொகுத்து, அவற்றைப் பலனுள்ள வகையில் இயங்கச் செய்யக்கூடிய ஆற்றல் வாய்ந்த தொழில் முயல்வோரும் தேவைப்பட்டனர். சுருங்கக் கூறின், உற்பத்திக் காரணிகள் மட்டுமின்றி, கண்ணுக்குப் புலனாகாத தொழில் முயல்வோர் பணிகளும் அதிகமாக வேண்டியிருந்தது.

இங்கிலாந்தின் தொழில் புரட்சியைப் பற்றிய சிறப்பு அம்சங்களில் ஒன்று இங்கு குறிப்பிடத்தக்கது. அதாவது, அயல் நாட்டு உதவியோ அரசாங்கத்தின் தலையீடோ (உதவியோ முட்டுக் கட்டையோ) அதிகமின்றி தொழில் புரட்சிக்கு வேண்டியதனைத்தையும் தனிப்பட்டவர்களே பூர்த்தி செய்து கொண்டனர். சொல்லப் போனால், முதன் முதலாக நவீன முறையில் பொருளாதார வளர்ச்சி தோன்றிய காலமே தலையிடாக் கொள்கை (laissez faire) அமுலில் இருந்த காலம்தான்.

இந்த உண்மையை நாம் அறிந்து கொள்ள வேண்டுமாயின், பிரிட்டன் நாட்டில் அக்காலத்திலிருந்த சூழ்நிலையின் சிறப்பான அம்சங்களைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். முதலாவது, தொழில் புரட்சி ஏற்படுவதற்கு முன்பே அந்நாடு பிழைப்பு மட்டத்திலிருந்து உயர்ந்துவிட்டதென்பதை அந்நாட்டின் முன்னேற்ற வரலாறே புலப்படுத்துகின்றது. தொடக்கத்திலிருந்தே பொருளாதார முன்னேற்றத்திற்கு மிகமுக்கியமாக வேணடிய மூலதனம், விவசாயத் துறையில் மட்டுமின்றி, வியாபாரத்துறை, தொழில் துறை ஆகிய வற்றிலும் தாராளமாகக் கிடைத்தது.

இரண்டாவதாக, இங்கிலாந்தின் தொழில் புரட்சி திடீரென்று தோன்றிவிடாமல், பல்லாண்டு காலமாகவே படிப்படியாகத் தோன்றிய தாகையால் சமுதாய அமைப்பைத் தீவிரமாக மாற்றி அமைக்க வேண்டிய அவசியமின்றி, தனிப்பட்டவர்களே சாதிக்கக் கூடிய புரட்சியாக அமைந்து விட்டது. உண்மையில் இன்றைய தொழிற்சாலையின் அளவைக் கொண்டு பார்த்தால் இங்கிலாந்தின் தொழிற்சாலை முறையே மெதுவாகவும் படிப்படியாகவும் தான் தோன்றியது. சான்றாக, இங்கிலாந்தின் தொழில் புரட்சிக்கே சிறந்த இலக்காக விளங்கிய நெசவுத் தொழிலை எடுத்துக் கொள்வோம். 1830 ஆம் ஆண்டில் கூட இங்கிலாந்திலிருந்த விசைத் தறிகளைக் காட்டிலும் கைத்தறிகள்தான் நான்கு மடங்கு அதிகமாயிருந்தன. இன்னும் சொல்லப்போனல் 19 ஆம் நூற்ருண்டின் மத்தியில் உலகத்திற்கே ஒரு பட்டறையாக இங்கிலாந்து விளங்கிய தெனினும், அப்போது வாழ்ந்த 21 மில்லியன் மக்கட் தொகையில் பெரிய இயந்திர இயக்கமுடைய தொழில்களில் வேலை செய்தோர் 1·7 மில்லியன் பேர்தான் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. இப்படிக் கூறுவதால் புதிய தொழிற்சாலைகளின் முக்கியத்துவமே குறைந்துவிடுவதாக எண்ணிவிட வேண்டாம் - தொழிற் சாலைகள் எவ்வளவு ஆக்கத்திறன் மிக்கவையாய் இருந்திருக்க வேண்டும் என்பதை இப்புள்ளி விவரங்களே எண்பிக்கின்றன—மாறாக, கட்டுப்

பாட்டுடன் நிர்வாகம் செய்யக்கூடிய வேகத்தில்தான் இங்கிலாந்தின் பொருளாதார முன்னேற்றம் நடைபெற்றது என்பதுதான் இங்கு குறிப்பிடத்தக்கது.

இறுதியாக, இங்கிலாந்தில் ஏற்பட்ட மாறுதல்கள் சீராகவே ஏற்பட்டதால் தொழிற் சாலைகளைச் சிறிய அளவில் தொடங்கி இலாபத்தை மறுபடியும் அத்தொழிலிலேயே முதலீடு செய்து தொழில்களை விரிவுபடுத்த முடிந்தது. சான்றாக, ஜோசையா வெட்ஜ்வுட் அவர்கள் இப்படித்தான் செல்வமிக்க தொழிலதிபர் ஆனார்; ஆரம்பத்தில் ஒன்றுமே இல்லாமல் வாழ்க்கையைத் தொடங்கிய அவர், சாகும்போது 245,000 பவுன் மதிப்புள்ள சொத்துக்களுக்கு அதிபராக விளங்கினார். ரிச்சர்ட் ஆர்க்ரைட் அவர்களும் அப்படித்தான். மயிர்த்தோகை செய்பவராக வாழ்க்கையைத் தொடங்கி, ஜோசையா வெட்ஜ்வுட் அவர்களைக் காட்டிலும் இரு மடங்கு செல்வந்தராக மரணமடைந்தார். மரண மடைவதற்கு முன்பு 'எனக்கு மட்டும் ஆண்டவன் நீடிய ஆயுளைத் தந்தால் நாட்டுக்கடனையே தீர்த்து விடுவேன்' என்று தற்பொருமை கொண்டார். ஆரம்பத்திலிருந்தே இலாபத்தை மறுபடியும் முதலீடு செய்யும் பழக்கம் இங்கிலாந்தில் இருந்து வந்தது. இதற்குச் சான்று வேண்டுமாயின், இங்கிலாந்தின் தொழில் புரட்சி ஆராய்ச்சியில் உலகப் புகழ்பெற்ற டி. எஸ் ஆஸ்டன் (T. S. Ashton) அவர்கள் Samuel Walker andCo. என்ற நிறுவனத்தின் வளர்ச்சியை எப்படிச் சுட்டிக் காட்டுகிறார் என்பதைப் பார்ப்போம்:

> சிறிய அல்லது பெரிய தளவாடங்கள் என்று ஆண்டு தோறும் புதிதாகச் சேர்க்கப்பட்டன ..... மூலதனக் கையிருப்பு 1757 இல் 7500 பவுன்களாகத்தான் இருந்தது; அதுவரை Walker கம்பெனியார் இலாப ஈவே பகிர்ந்து கொள்ளாமல் முதல் தடவையாக அந்த ஆண்டில் தான் 140 பவுன்களை இலாப ஈவாகப் பகிர்ந்து கொண்டனர்; இவ்வாறாக, பல ஆண்டுகளுக்குப் பின்னரும் இலாபத்தில் மிகச் சிறிய வீதத்தைத்தான் இலாப ஈவாகப் பகிர்ந்து கொண்டனர். இதன் விளைவாக 1774 இல் இக்கம்பெனி யின் மூலதனம் 62,500 பவுன்களுக்கு அதிகரித்து விட்டது ......... இக்கம்பெனியின் பழைய முதலாளிகளைப்பற்றி யார் என்ன குறை கூறினாலும், அவர்கள் சுயநலத்தோடு தான் கம்பெனியை நடத்தி வந்தனர் என்று மட்டும் எவருமே கூற முடியாது.[6]

[6]. T. S. Ashton அவர்களின் The Industrial Revolution (London: Home University Library of Modern Knowledge, 1948) என்ற நூலில் 86-87 பக்கங்கள்.

இவ்வாறாக தொழில்களைச் சிறிய அளவில் தொடங்குவது சாத்திய மாக இருந்தது; அதோடு பல்லாண்டுகளாகவே ஏற்பட்டு வந்த சமூக, பொருளாதார மாறுதல்களின் விளைவாக சந்தர்ப்பத்தைக் கைவிட்டுவிடாமல் முன்னேற்றமடைய வேண்டுமென்ற மனப்பான் மையை மக்கள் கொண்டிருந்தனர். இவ்விதச் சூழ்நிலையில் முன் னேற்றத்திற்குத் தேவைப்பட்ட மூலதனச் சாதனங்களைத் தொழி லதிபர்கள் கஷ்டமின்றிப் பெற முடிந்தது; தொழில் முன்னேற முன்னேற, தம் சொந்த மூலதனமே பெருகிவந்தது.

தனியார் முயற்சிப் பொருளாதார அமைப்பையும், அரசாங் கத்தின் தலையிடாக் கொள்கையையும் கொண்டிருந்த நாட்டில் தான் தொழில்புரட்சி முதன்முதலாக ஏற்பட்டது என்பது மிக முக்கிய மான உண்மையாகும். கோட்பாட்டளவில் மட்டும் அதன் செல்வாக்கு உயரவில்லை;[7] மாறாக, இங்கிலாந்து அமெரிக்கா, இன்னும் பல நாடுகளின் பொருளாதார நடைமுறைகளிலும் அதன் செல்வாக்கு அதிகம்தான். எனவேதான், கடந்த 50 ஆண்டு களுக்கு முன்புவரை பொருளாதார முன்னேற்றம் பற்றிய ஆய்வும் தனியார் முதலாளித்துவத் தோற்றம்பற்றி ஆய்வும் ஒரே ஆய்வாகத்தான் பெரும்பாலும் இருந்து வந்தது.

அவ்வாறு இருந்த காரணத்தால் இங்கிலாந்தின் அனுபவம் தான் எல்லா நாடுகளுக்குமே பொருத்தமானது என்ற முடிவுக்கு நாம் வந்துவிடக் கூடாது. இங்கிலாந்து நாட்டில் ஏற்பட்ட தொழில் மாறுதல்களும், தொழில் நுட்ப முன்னேற்றங்களும் படிப்படியாக மெதுவாக ஏற்பட்டவை; அதோடு, அம்மாறுதல்கள் நீண்டகாலமாகவே எதிர்பார்க்கப்பட்டவை. எனவே, இங்கிலாந்து நாட்டின் தொழில் முயல்வோர் மேற்கொண்ட பணிகள் கடினமான

[7] இதன் விளைவாகத்தான் பிந்திய பொருளாதார ஆய்வுகளில் அங்காடி யும் சாதனப் பங்கீடும் அதிக முக்கியத்துவம் பெற்றன. இங்கிலாந்தின் தொழில்புரட்சி ஏற்பட்ட போது வாழ்ந்த பொருளாதார அறிஞர்களோ கட்டுப்பாடில்லாத சுதந்திர அங்காடிதான் திறமையானதென்று பெரிதும் பாராட்டினர். சுதந்திரமான அங்காடி நிலையில், தனியார் மேற்கொள்ளும் சுயநல நடவடிக்கைகள், கண்ணுக்குப் புலனாகாத கரத்தின் வாயிலாகப் பொது நலத்தையும் பேணுகிறதென்று ஆடம் ஸ்மித் அவர்கள் வாதாடி னார்கள். பிற நாட்டு வாணிபத்தில் தடை ஏதுமில்லாமல் இருந்தால்தான், ஒவ்வொரு நாடும் ஏனைய நாடுகளைக் காட்டிலும் மலிவாக உற்பத்தி செய்யக்கூடிய பொருள்களைமட்டும் சிறப்பாக உற்பத்தி செய்து பிற நாடுகளுக்கு அனுப்ப முடியும்; அப்போது தான் எல்லாப் பொருள் களையுமே உலக நாடுகள் அனைத்தும் மலிவாகப் பெற்று அனுபவிக்க முடியுமென்று ரிக்கார்டோ வாதாடி விளக்கினார். பொருளாதார ஆய்வே இவ்விதம் தொடங்கிய காரணத்தால்தான், அன்றையிலிருந்து 1930 ஆம் ஆண்டு வரை பொருளாதார ஆய்வுகள் அனைத்தும் பெரும்பாலும் சாதனப் பங்கீட்டைப்பற்றியே இருந்து வந்தது. பொருளாதார முன்னேற்றத்திற்குச் சாதனப் பங்கீடு முக்கியம் தான்; எனினும் அது தான் முக்கியமென்று சொல்ல முடியாது. (இதற்குச் சான்றாக, ரஷ்யாவின் வளர்ச்சி பற்றிய ஆய்வைப் பார்க்கவும்.)

தெனினும் சாத்தியமானது தான். இந்தச் சூழ் நிலையில், ஆடம் ஸ்மித், டேவிட் ரிக்கார்டோ, இன்னும் அவர்களது காலத்தில் வாழ்ந்த எத்தனையோ பொருளாதார அறிஞர்கள் நம்பியதுபோல் அரசாங்கத்தின் தலையிடாக் கொள்கை பயன்மிக்கதாக இருந்திருக் கலாம். ஆனால் அதற்குப் பின்னால் ஏற்பட்ட சூழ் நிலையோ அப்படியல்ல. பிற்காலத்தில் வாழ்ந்த தொழில் முயல்வோருக்கு ஏற்பட்ட பிரச்சினைகளோ 18 ஆம் நூற்றாண்டின் இறுதியில் இங்கிலாந்து நாட்டிலிருந்த பிரச்சினைகளிலிருந்து மாறுபட்ட தாகும். இந்தச் சூழ் நிலைகளில் இங்கிலாந்தின் பாதையிலிருந்து பல நாடுகள் விலகிச் செல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது என்பதற்கு வரலாறே சான்று கூறும்.

### இங்கிலாந்தின் சாதனைகள்

இவ்வாறாக, இங்கிலாந்து நாட்டின் தொழில் புரட்சி பல்வேறு அம்சங்களைக் கொண்ட புரட்சியாகும்; அதாவது, மெதுவாக முன்னேற்றமடைந்து வந்த வரலாறு, அம் முன்னேற்றத்திற்கான முன்னேற்பாடு, துரிதமான தொழில் நுட்ப முன்னேற்றம். தொழிற்சாலை முறையின் தொடக்கம் ஆகிய பல்வேறு கூறுகளைக் கொண்டது அப்புரட்சி. அப்படியென்றால் அப்புரட்சியின் வி...ளவுகள் தான் என்ன ?

தொழில் புரட்சியின் விளைவுகள் அனைத்துமே மகிழ்ச்சிகர மானவை என்று சொல்வதற்கில்லை. புதிய இயந்திர சாதனங்களும் தொழில் அமைப்பு முறையும் ஒரு சிலருக்குத் தான் பலன் அளித்தன: ஏனையோர் அவற்றால் துன்புற்றனர். அதோடு, சமுதாயமே பிளவுபட்டு விட்டது. ஐந்து குழந்தைகளைப் பராமரிக்க வேண்டிய தொழிலாளி, புதிதாகத் தொடங்கப்பட்ட நெசவாலை யொன்றில் சிதறிவிழும் பஞ்சையெல்லாம் சேகரிக்கும் வேலையையே நாள் முழுவதும் செய்து பிழைக்க வேண்டுமென்றால் பொருளாதார முன்னேற்றத்தினால் அத்தொழிலாளிக்கு என்ன பலன் ? எனவே, தொழில் புரட்சியினால் எத்தனையோ துன்பங்களும் துயரங்களும் ஏற்பட்டன என்பதை எவரும் மறுக்க முடியாது. ஆனால் அதற்காக இடைக்கால சமுதாயமும் பொருளாதார வாழ்க்கையும் தான் நல்லதென்று பாராட்டவும் முடியாது.

எனினும், பொருளாதார முன்னேற்றத்தைப்பற்றி ஆராயும் போது, தொழில் புரட்சியினால் இங்கிலாந்து நாட்டின் உற்பத்தி எவ்வளவு அதிகரித்தது என்பதைத்தான் நாம் காண வேண்டுமே தவிர ஏனைய விளைவுகளைப்பற்றியல்ல. இவ்வாறாக, தொழில்

வளர்ச்சியினாலும் தொழில் நுட்ப முன்னேற்றத்தாலும் பருத்தி நெசவுத் தொழில் போன்ற சில தொழில்கள் கனவிலும் காணாத அளவுக்கு விரைவாக முன்னேற்ற மடைந்தன. அவற்றைத் தொடர்ந்து ஏனைய தொழில்களும் முன்னேறி வந்தன. சான்றாக,

பட்டியல் 3-2. குறிப்பிட்ட சில ஆண்டுகளில் பிரிட்டன் இறக்குமதி செய்த பருத்திப் பஞ்சு

| ஆண்டு | | இறக்குமதி செய்த பருத்திப் பஞ்சின் அளவு (மில்லியன் பவுண்டுகளில்) |
|---|---|---|
| 1701 | ... | 1 |
| 1751 | ... | 3 |
| 1771 | ... | 4.8 |
| 1781 | ... | 5.3 |
| 1784 | ... | 11.5 |
| 1789 | ... | 32.6 |
| 1799 | ... | 43 |
| 1802 | ... | 60.5 |

தோராயமான இப்புள்ளி விவரங்களிலிருந்தே பிரிட்டனின் பருத்தி நெசவாலைத் தொழில் எவ்வளவு விரைவாக முன்னேற்றமடைந்தது என்பதைக் காணலாம். 1781 முதல் 1802-க்குள் இறக்குமதி செய்யப்பட்ட பருத்திப் பஞ்சு 11 மடங்கு அதிகரித்து விட்டது.

மூலம்: Paul Mantoux அவர்களின் 'Industrial Revolution in the Eighteenth Century', 2 nd ed. (New York: Harper and Row, 1962) என்ற நூலில் 252 ஆம் பக்கம்.

நிலக்கரி உற்பத்தி 40 ஆண்டுகளில் பத்து மடங்கு அதிகரித்தது. தேனிரும்பு உற்பத்தியோ 1788 இல் 68,000 டன்களாக இருந்தது 1839 இல் 1,347,000 டன்களாக அதிகரித்தது. மேலும், தொழில் புரட்சி நடைபெற்ற போது மட்டுமின்றி, 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அப்புரட்சி முடிவடைந்த பின்னரும் உற்பத்தி தொடர்ந்து அதிகரித்துக் கொண்டேதான் இருந்தது. 1950 வரை அதிகரித்துக் கொண்டு வந்த உற்பத்தி ஒரே சீராக இல்லை; எனினும், 18 ஆம் நூற்றாண்டிற்கு முன்பிருந்த எவரும் நினைத்துக் கூடப் பார்த்திருக்க முடியாத அளவுக்கு அதிகரித்து வந்தது.

தொழில் புரட்சி ஏற்படத் தொடங்கியதிலிருந்து 1950 வரை பிரிட்டனின் மொத்தத் தொழில் உற்பத்தி எவ்வளவு துரிதமாக அதிகரித்து வந்தது என்பதைத்தான் 3-1 வரைபடம் காட்டுகிறது. இப்படம், பேராசிரியர் வால்டர் ஹாஃப்மன் (Prof Walter Hoffman) அவர்கள் தயாரித்த குறியீட்டெண்களைக் கொண்டு வரையப் பட்டுள்ளது.

நெடுங்காலத்திய பொருளாதார வளர்ச்சியை அளவிடுவது கடின மான காரியம்தான் ; எனவே, இப்பிரச்சினை எவ்வளவு கடின மானது என்பதைப் புரிந்து கொள்ள பின் வரும் குறிப்புகளை மனதில் பதிய வைத்துக் கொள்வது நல்லது :

1. தொழில் புரட்சிக்கு முந்திய புள்ளி விவரங்கள் அனைத்தும் சிதறலானவை ; எனவே நம்பத் தகுந் தவை அல்ல. பொருளாதார முன்னேற்றத்தின் விளைவாகத்தான் புள்ளி விவரங்களைச் சேகரிக்கும் பழக்கமே முறைப்படி தோன்றியது.

2. நெடுங்கால வளர்ச்சியின் அளவீடுகள் அனைத்தும் முக்கியமான பல கருத்துப் பிரச்சினைகளைக் கொண்டவை. ஒரு நாட்டின் உற்பத்தி அமைப்பு முறை சதா மாறிக் கொண்டேயிருக்கும் இயல்புடையது ; அதோடு, புதுப் புதுப் பண்டங்களும் தோன்றிய வண்ணம் இருக்கின்றன. இதனால் ஏற்படும் பிரச்சி னைகள் புள்ளியியல் வல்லுநரின் மதியூகத்தை (மனச் சாட்சியையும் கூட) சோதிக்கக் கூடியவை.

3. பொதுவாக, பொருளாதார வளர்ச்சி பற்றிய வரை படங்களையும் புள்ளி விவரங்களையும் தயாரிக்கும் போது, பல முக்கியமான பண்டங்களும் பணிகளும் கணக்கில் சேர்க்கப்படாமல் விடப்பட்டு விடுகின்றன. சான்றாக, அதிகரிக்கும் ஓய்வு நேரம் சேர்க்கப்படுவ தில்லை ; அதே போல் வீட்டுப் பெண்மணிகளின் பணிகளும் விற்பனைக்கில்லாத இதர பணிகளும் கைவிடப்பட்டு விடுகின்றன.

4. இதைக்காட்டிலும் முக்கியமானது, பொருளாதார வளர்ச்சியின் 'செலவு'களில் பல கழிக்கப் படாமல் விடப்பட்டு விடுகின்றன. சான்றாக, தொழில் செறி வினாலும் நகர நெருக்கடியினாலும் வாழ்க்கையில் தோன்றும் பல சுமைகள், அசௌகரியங்கள், சில சமயங்களில் ஏற்படும் சேதங்கள் கூட வளர்ச்சிச் 'செல வில்' அடங்குபவைதான்.

இவ்விதப் பிரச்சினைகளும் இன்னும் பல்வேறு சிக்கல்களும் இருக் கின்ற காரணத்தால் நெடுங்காலப் பொருளாதார வளர்ச்சியின் அளவீடுகளையெல்லாம் தோராயமானதாகவேதான் கொள்ள வேண்டும்.

பிரச்சினைகளைப் பற்றிய இவ்விளக்கமே போதுமானது. எனினும், பொருளாதார முன்னேற்றம் பற்றிய அடிப்படையான உண்மையை இவ்வரைபடம் காட்டுகிறது என்பதில் சந்தேகம் கிடையாது. ஹாஃப்மன் அவர்களின் மதிப்பீட்டின்படி, 1760 முதல் 1950 வரையில், அதாவது 190 ஆண்டுகளில் பிரிட்டனின் தொழில் உற்பத்தி 70 மடங்கிற்கு மேல் அதிகரித்து விட்டது. இவ்வளவு அதிகரித்து விட்டதா என்று நீங்கள் வியப்படையலாம். ஆனால், அடுத்த அதிகாரத்தில் அமெரிக்க நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்தைப்பற்றி நாம் ஆராயும்போது, இஃது ஒன்றும் அப்படி வியக்கத்தக்க சாதனையல்ல என்பதைப் புரிந்து கொள்வீர்கள். இருந்த போதிலும், அதற்கு முன் செய்யப்பட்டு வந்த உற்பத்தியோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இது வியப்பான சாதனையாகவேதான் தோன்றுகிறது. இவ்வாறாக, நவீனப் பொருளாதார வளர்ச்சி எப்படி ஏற்படுகிறது என்பதற்கு இங்கிலாந்தின் தொழில் புரட்சிதான் சிறந்ததொரு எடுத்துக் காட்டாக விளங்கியது. இங்கிலாந்து நாடு பொருளாதார வளர்ச்சித் தடைகளையெல்லாம் வென்று என்றோ வீறு கொண்டு எழுந்து விட்டது.




வரைபடம் 3—1

1760 முதல் 1950 வரை குறிப்பிட்ட சில ஆண்டுகளில் பிரிட்டன் நாட்டின் மொத்தத் தொழில் [கட்டடங்கள் உட்பட] உற்பத்தி (1913 = 100)

[மூலம்: Walter G. Hoffman அவர்களின் British Industry 1700-1950 Oxford: Basil Blackwell, 1955 என்ற நூலில் 54ஆவது பட்டியல்.

## ஏனைய நாடுகளில் நவீன முன்னேற்றம் தொடங்கிய விதம்

"தொழில் புரட்சியினால் சமுதாயத் தீமைகள் தான் அதிகரித்து விட்டன; எங்கு பார்த்தாலும் இயந்திரமயமான தொழில்கள் தான்; ஒரே மாதிரியான பொருள்களையே உற்பத்தி செய்து தள்ளுவதால் மனிதத் தன்மைதான் சீரழிந்து வருகிறது". இப்படியெல்லாம், சமுதாய அறிஞர்கள் தொழில் புரட்சி தொடங்கிய நாளிலிருந்தே குறை கூறி வந்துள்ளனர். 1970ஆம் ஆண்டிற்குப் பின்னரோ இவ்விதக் குறை கூறும் பழக்கம் அதிகமாகப் பரவிவிட்டது. 'இத்தகைய நவீன முன்னேற்றம் இன்னும் எத்தனை ஆண்டுகளுக்குத் தான் தொடர்ந்து நடைபெறுகிறதென்று பார்ப்போம்' என்று கூட சவால் விடப்படுகிறது. 1970-க்கு முன்னர் இப்படிப்பட்ட சவால்கள் எழுந்ததே இல்லை. வரலாற்று ரீதியாகப் பார்த்தால் ஒரு நாடு முன்னேற்றமடையக் கூடிய சூழ்நிலை ஏற்படுபோது, தொழில் வளர்ச்சியினால் சமுதாயத்திற்கு ஏற்படக்கூடிய தீங்குகளைப்பற்றி அதிகமாக அக்கரைப் படாமல் நாடு முன்னேற்றமடைவது தான் முக்கியம் என மக்கள் தீர்மானித்து வந்துள்ளனர் என்பது தெளிவு

### தொழில் புரட்சி பரவுதல்

இங்கிலாந்து நாடு தொழில் துறையில் முதன்மையான நாடாக முன்னேற்றமடைந்த பின்னர், ஏனைய பல நாடுகளும் தீவிரமாக முன்னேற்றமடையத் தொடங்கின. ஒன்றன் பின் ஒன்றாகப் பல நாடுகள் இங்கிலாந்திற்குப் போட்டியாகவும் சில இங்கிலாந்தை எஞ்சிவிடக் கூடிய அளவிற்கும் முன்னேற்றமடைந்து விட்டன. 1870ஆம் ஆண்டில் கூட உலகில் உற்பத்தியான மொத்த பொறி செய் பொருள்களில் இங்கிலாந்து மட்டும் 31.8 சதவீதம் உற்பத்தி செய்தது; ஆனால் 1920 ஆம் ஆண்டிலோ அதன் உற்பத்தி அளவு 10 சதவீதம் கூட இல்லை. இந்த அளவுக்கு இங்கிலாந்து நாட்டுடன் போட்டியிட்டு முன்னேற்ற மடைந்த நாடுகளில் ஜெர்மனியும், முக்கியமாக அமெரிக்காவும்தான் குறிப்பிடத்தக்கவை. சான்றாக, 1893 முதல் 1913 வரையிலான 20 ஆண்டுகளில் பிரிட்டனின் எஃகு உற்பத்தி 136 சதவீதம் தான் அதிகரித்தது; ஆனால் அதே சமயம், ஜெர்மனியின் உற்பத்தி 522 சதவீதம் உயர்ந்தது; அமெரிக்காவின் உற்பத்தியோ வியக்கத்தகுந்த வகையில் 715 சதவீதம் பெருகி விட்டது. இவ்வாறாக, தொழில் முன்னேற்றத்தில் 19ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்து பெற்றிருந்த உன்னத நிலையை இந்த 20ஆம் நூற்றாண்டில் அமெரிக்கா கைப்பற்றி விட்டது. ஆனால், இன்று ரஷ்யா, ஜப்பான், இன்னும்

சில ஐரோப்பிய நாடுகள் முன்னேறி வரும் வேகத்தைப் பார்த்தால் இன்னும் சில ஆண்டுகளில் அந்நாடுகள், அமெரிக்க நாட்டினை அறைகூவும் நாடுகளாக, அமெரிக்காவைக் காட்டிலும் பெரிதும் முன்னேற்றமடைந்துவிடுமோ என்று கருத வேண்டி உள்ளது.

ஆனால், இன்று எல்லா நாடுகளிலுமே தொழில் துறை முன்னேற்றம் தொடங்கிவிட வில்லை. உலக மக்களில் பெரும்பாலானோர் தொழில் புரட்சியின் விளைவுகளால் ஏற்படும் பலன்களை இன்றும் அடையாமல்தான் இருக்கின்றனர் (சில சமயங்களில் ஏனைய நாடுகளின் தொழில்புரட்சியினால் பாதிக்கப்பட்டிருக்கலாம்.) இங்கிலாந்து நாட்டிற்குப் பின்னர், நவீன முறையில் முன்னேற்ற மடைந்துள்ள நாடுகளெல்லாம், ஒன்று ஐரோப்பிய நாடுகளாகவோ அல்லது அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா, நியூஸிலாந்து போன்ற ஐரோப்பிய மக்கள் குடியேறிய நாடுகளாகவோ தான உள்ளன. இந் நாடுகளின் மக்கள் அனைவருமே பெரும்பாலும் ஒரே விதமான பண்பாடு உடையவர்கள் தான். எனவே, இங்கிலாந்து நாட்டில் இருந்ததைப் போலவே இந்நாடுகளிலும் மக்களின் மனப்போக்கும் சமுதாய அமைப்புகளும் பொருளாதார முன்னேற்றத்திற்குச் சாதக மாக இருந்தன. இந் நாடுகளின் இட அமைப்பைப் பார்த்தால், இவை அனைத்துமே மிதமான தட்ப வெப்ப நிலை கொண்டவை தான் என்பது புலனாகும். இந் நாடுகள் பெரும்பாலானவற்றில், குறிப்பாக, புதிதாகக் குடியேறிய நாடுகளில் நிலமும் ஏனைய இயற்கை வளங்களும் ஏராளமாக இருந்தன. மேலும், சமீப காலம் வரை, ஐரோப்பிய நாடுகளுடன், குறிப்பாக இங்கிலாந்துடன் இணைந்திருந்த நாடுகள்தான் பொருளாதார முன்னேற்றமடைந்து பயனடைந்துள்ளன; இந் நாடுகளின் இயற்கைச் சூழ்நிலையும் முன்னேற்றத்திற்குச் சாதகமாக இருந்தது என்பது குறிப்பிடத் தக்கது.

பொதுவாக, மேற்கூறியதனைத்தும் உண்மைதான்; எனினும் சில விதிவிலக்குகள் இருப்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. இவ்விதிவிலக்கிற்கு முதல் தரமான சான்றாக விளங்குவது ஜப்பான் நாடு. 19ஆம் நூற்றுண்டின் இறுதியில் ஜப்பான் நாட்டு மக்கள் தொகை அளவுக்கு மிஞ்சி இருந்தது; அதோடு, மேற்கத்திய பண்பாடே கண்டிராத நாடு ஜப்பான். 1853 இல் கமோடோர் பெர்ரி(Commodore Perry) அவர்கள் ஆட்சிக்கு வரும்வரை ஏனைய நாடுகளோடு தொடர்பேயின்றி தனித்து வாழ்ந்து வந்தது. அப்படியிருந்தும், 1868 இல் மன்னர் மீண்டும் ஆட்சிக்கு வந்த

பின்னர், மேற்கத்திய நாடுகளைப்போல் தாமும் விரைவாக முன்னேற்றமடைய வேண்டுமென்று மன உறுதியுடன் பாடுபட்டது. அதன் விளைவாக மகத்தான சாதனைகளையும் கண்டது. சான்றாக 1870இல் இரயில் பாதையே இல்லாமலிருந்த ஜப்பான் நாட்டில் 1900 இல் 3,855 மைல் நீளமுள்ள இரயில் பாதைகள் அமைக்கப்பட்டு விட்டன. அதே போல் 1870 முதல் 1900 ஆம் ஆண்டிற்குள் அதன் தேனிரும்பு (Pig-iron) உற்பத்தி ஏழு மடங்கு அதிகரித்தது. அதே சமயம், அதன் சுனிப்பொருள் உற்பத்தி 20 மடங்கிற்கு மேல் பெருகியது. அதன் அரிசி உற்பத்தியை எடுத்துக் கொண்டால் 1873இல் 119.1 மில்லியன் மரக்கால் அளவாக இருந்தது; 1900இல் 205 6 மில்லியன் மரக்கால் அளவுக்கு அதிகரித்து விட்டது.

பொருளாதார வளர்ச்சியடைந்துள்ள பல நாடுகளைக் காட்டிலும் மிகப் பின்தங்கிய நிலையில் இருந்துதான் ஜப்பான் முன்னேறத் தொடங்கியது. அதோடு மட்டுமின்றி, மக்கள்தொகைப் பெருக்கத்தாலும், உலகப் போர்களினால் ஏற்பட்ட பெரும் நாசத்தாலும் ஜப்பான் நாடு பெருமளவிற்குப் பாதிக்கப்பட்டு விட்டதால், அதன் தலா வருமானம் செல்வமிக்க ஒரு சில மேற்கத்திய நாடுகளைக் காட்டிலும் இன்று குறைவாக உள்ளது; எனினும், அந் நாடுகளுக்கு இணையாகப் போட்டியிட்டு முன்னேறி வருகிறது என்பதை எவரும் மறுக்கவோ மறக்கவோ முடியாது. 1950 முதல் 1960 வரை தொழில் வளமிக்க ஏனைய நாடுகளைக் காட்டிலும் விரைவாக முன்னேற்றமடைந்து வந்தது ஜப்பான் நாடுதான். இதன் விளைவாக 1970இல் தொழில் உற்பத்தியில் உலக நாடுகளிலேயே மூன்றாவது இடத்தைப் பிடித்துவிட்டது. இவ்வாறாக, உறுதியுடன் பொருளாதார வளர்ச்சியைத் தொடங்கிய ஜப்பான், கடந்த 20 ஆண்டுகளில் எவ்வளவு வேகமாக முன்னேறிவிட்டது என்பதை எண்ணிப் பார்க்கும்போது தளரா உறுதியுடன் தொடர்ந்து முன்னேற்றமடைவதெப்படி என்ற ரகசியத்தை அந்நாடு தெரிந்து கொண்டு விட்டது என்பதில் சந்தேகம் கிடையாது. மேலும், மிக மோசமான நிலையிலிருந்தும் கூட ஒரு நாடு விரைவாக முன்னேற்றமடையக் கூடும் என்பதற்கு ஜப்பான் நாடுதான் மிகச்சிறந்ததோர் எடுத்துக் காட்டாக உள்ளது.[8]

[8] ஜப்பான் நாடு எவ்வாறு பொருளாதார முன்னேற்றம் அடையத் தொடங்கியது என்பதை விரிவாகக் காண வேண்டுமாயின், W.W. Lockwood அவர்களின் 'The Economic development of Japan : Growth and Structural change, 1869-1938' (Princeton : Princeton University Press, 1954) என்ற நூலைப் பார்க்கவும், உலகப் போருக்குப் பின்னர் அதன் முன்னேற்றத்தை அறிந்து கொள்ள G. C. Allen அவர்களின் 'Japan's Economic Expansion' (London : Oxford University Press, 1965) என்ற நூலைப் படிக்கவும்.

## பிந்திய முன்னேற்றத் தொடக்கத்தின் சில அம்சங்கள்

இந்த நாடுகள் முன்னேறத் தொடங்கிய போது இருந்த பிரச்சினைகள் ஒரே மாதிரியானவை அல்ல; அந்தந்த நாட்டின் வரலாறு, கலாச்சாரம், இட அமைப்பு ஆகியவை போன்ற சூழ் நிலைகளுக்கேற்ப பிரச்சினைகளும் வெவ்வேறாகவே இருந்தன. இங்கிலாந்தைப் போலவே இந்நாடுகளும் பொருளாதார முன்னேற்றத்திற்கு வேண்டிய முன்னேற்பாடுகளைச் செய்த பின்னர் தான், புதிய தொழில் நுட்பம், பெரிய ஆலைகள், மூலதனம் செறிந்த தொழில்கள் ஆகியவற்றை விரைவாகப் புகுத்தின. இதிலும் கூட நாட்டிற்கு நாடு வேறுபாடுகள் இருந்தன. அதிலும் குறிப்பாகக் கூற வேண்டுமாயின் முதன்முதலில் தொழில் புரட்சி ஏற்பட்டு ஏனைய நாடுகளுக்கெல்லாம் வழி காட்டியாக ஆகிவிட்ட காரணத்தால் இங்கிலாந்து நாட்டில் இருந்த பிரச்சினைகளுக்கும் ஏனைய நாடுகளின் பிரச்சினைகளுக்கும் கணிசமான மாறுபாடுகள் இருந்தன. தொழில் புரட்சி ஏற்கனவே தோன்றி பொருளாதார, தொழில் நுட்ப முன்னேற்றங்கள் நடைபெற்றுக் கொண்டிருந்த போது தான் இந்த நாடுகள் அனைத்தும் முன்னேறத் தொடங்கின. எனவே பொதுவாகக் கூறின், முன்னேற்றத் தொடக்கத்தில் இங்கிலாந்திற்கும் இந்த நாடுகளுக்கும் முக்கியமான சில மாறுதல்கள் இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு.

1. தொழில் புரட்சி ஏற்பட்டு இங்கிலாந்து நாடு ஏற்கனவே முன்னேற்றம் அடைந்திருந்தது; அதுவே இந்த நாடுகளுக்கு ஓர் எடுத்துக் காட்டாக இருந்து ஊக்கமளித்தது; அதோடு, இங்கிலாந்து நாட்டிலிருந்த தொழில் நுட்பத்தை மட்டுமின்றி, மூலதனத்தையும் இந்நாடுகள் பயன்படுத்த முடிந்தது. இங்கிலாந்து நாடு ஏற்கனவே நீராவி இயந்திரத்தைக் கண்டுபிடித்து விட்டதால், அதைப் புதிதாகக் கண்டுபிடிக்க வேண்டிய அவசியம் இந்நாடுகளுக்கு ஏற்படவில்லை. அதே போல், இங்கிலாந்து நாடு ஏற்கனவே கண்டுபிடித்து விட்ட புதிய தொழில் நுட்ப முறைகளையெல்லாம் இந்நாடுகள் அப்படியே கடைப்பிடிக்க முடிந்தது; வேண்டுமானால் தத்தம் சூழ் நிலைகளுக்கேற்ப ஒரு சில மாறுதல்களை மட்டும் செய்திருக்கலாம். அதோடு மட்டுமின்றி, அப்புதிய உற்பத்தி முறைகளைப் புகுத்துவதற்கென்று இங்கிலாந்து நாட்டின் தொழில் நுட்ப அறிஞர்களை மட்டுமின்றி மூலதனத்தையும் கூட இந்நாடுகள் பெற்றுப் பயன்பெற முடிந்தது. சான்றாக, முதல் உலகப் போருக்கு முன்னர் 50 ஆண்டுளுகக்கு மேலாக பிரிட்டன் நாட்டவர் ஏனைய நாடுகளிலும் கூட பெருமளவிற்கு முதலீடு செய்து வந்தனர். 1880–89 ஆம் ஆண்டுகளிலும் 1911-1913 ஆம் ஆண்டுகளிலும் பிரிட்டனின் தேசிய வருமானத்தில்

6. 5 சத வீதம் வெளி நாடுகளில் முதலீடு செய்வதற்கென்று சென்று கொண்டிருந்து. இறுதியாக, இங்கிலாந்து நாடு, தொழில் புரட்சியின் வழியாகப் பிற நாடுகளுக்கு ஓர் இலக்காகவும் மாதிரியாகவும் அமைந்து விட்டது மிக முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது. தொழிற் புரட்சி என்ற கருத்தையே இந்த நாடுகளுக்கு வழங்கியது இங்கிலாந்துதான்.

பொதுவாகக் கூறின், ஏற்கனவே தொழில்மயமாகிவிட்ட இங்கிலாந்து நாட்டின் சாதனைகளின் வழியாக தொழில் புரட்சியின் அவசியத்தையும் அதை எப்படிச் செய்வதென்ற விவரங்களையும் ஏனைய நாடுகள் அனைத்தும் தெரிந்துகொள்ள முடிந்தது. அப்படியென்றல் இந்த நாடுகள் இங்கிலாந்தைப் போல் அவ்வளவு சிரமப்பட்டு முயற்சி செய்ய வேண்டிய அவசியம் இல்லை என்று எண்ணிவிட வேண்டாம்; சொல்லப் போனால் சில நாடுகள் இங்கிலாந்தைக் காட்டிலும் அதிகமாக முயற்சி செய்து சிரமப்பட்டிருக்கலாம். இங்கிலாந்தின் தொழில் புரட்சிக்குப் பின்னர் ஜப்பான், ரஷ்யா போன்ற நாடுகள் முன்னேற்பாடுகள் அதிக மின்றியே தத்தம் பொருளாதாரத்தை மிக விரைவாக முன்னேற்றி விட்டன என்பது உண்மைதான்; எனினும், அப்படிச் செய்ததால் ஏற்கனவே இருந்து வந்த சமூக, அரசியல், பொருளாதார அமைப்புகள் எவ்வளவு இக்கட்டுகளுக்கு ஆளாகிப் பலியாகி விட்டன என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

2. தொழில் நுட்ப முன்னேற்றம் பல ஆண்டுகளாகத்தொடர்ந்து ஏற்பட்டு வந்ததால் தொழில்களில் இயல்பே மாறிவிட்டதோடு தொழில் புரட்சியில் எந்தத் தொழில் முக்கியத்துவம் வாய்ந்தது என்ற நிலையும் மாறிவிட்டது. இங்கிலாந்து நாட்டில் பருத்தி நெசவாலைத் தொழில்தான் வழிகாட்டியாக முன்னேற்றமடைந்து வந்தது. ஆனால் இங்கிலாந்திற்குப் பின்னர் முன்னேற்ற மடைந்த நாடுகளிலே அப்படியல்ல; நெசவாலைத் தொழில் முக்கியமானதாக இருந்தும், ஏனைய தொழில்கள் தான், குறிப்பாக இரயில்வே தொழில் தான் தொழில் புரட்சிக்கே முக்கியமான தொழிலாக ஆகிவிட்டது. இரயில் போக்குவரத்துத் தொழில் முக்கியத்துவம் பெற்றதற்கான காரணம் நாம் அறிந்தது தான். அத்தொழில் தான் பெரிய அங்காடிப் பகுதிகளையெல்லாம் ஒருங்கிணைத்து, நாட்டிலிருந்த ஒவ்வொரு தொழிலும் போக்குவரத்து சிக்கனத்தைப் பெற்று வளர்ச்சி அடைவதற்குத் துணைசெய்தது. அமெரிக்காவில் இரயில்வேத் தொழில் தான் அடிப்படையான தொழிலாக அமைந்தது; ஐரோப்பாவிலும் கூட அப்படித்தான். 1840 ஆம் ஆண்டில் ஐரோப்பாவில் இருந்த இரயில் பாதை 1930

மைல் தான் ; ஆனால் 1860 இல் 32,240 மைல்களாகவும், பின்னர் 1880 இல் 104,580 மைல்களாகவும் இரயில் பாதை விரிவடைந்து விட்டது; அப்படியென்றால் அதற்காக மேற்கொள்ளப்பட்ட முயற்சி களையோ அல்லது அததொழிலால் ஏற்படக் கூடிய பொருளாதாரப் பலன்களின் முக்கியத்துவத்தையோ நாம் மிகைப்படுத்திக் கூற வேண்டிய அவசியமில்லை.

இங்கிலாந்திற்குப் பின்னர் முன்னேற்ற மடைந்த நாடுகளில் வளர்ச்சிக்கான தடைகளைப் பீறிட்டு மேலெழுநிலை ஏற்பட்டதற்கு இரயில்வேத் தொழில் முன்னேற்ற மடைந்தது தான் காரணமாகும். அப்படியென்றால் இந்நாடுகள் இங்கிலாந்தைக் காட்டிலும் எவ்வளவோ அதிக முதலீட்டை இந்த இரயில் போக்குவரத்துத தொழிலில் தான் செய்தன. இரயில் பாதைகளை அமைப்பதற்கே ஏராளமான செலவு ஆகும் அப்படியிருக்க, அரசாங்கத்தின் ஆதரவோ பாங்குகளின் உதவியோ அயல் நாட்டு உதவியோ இன்றி இத்தொழிலுக்கு வேண்டிய மூலதனத்தைத் தனிப்பட்டவர்கள் பெற்றிருக்க முடியாது.

3. இறுதியாக, தொழில் புரட்சியின் தொடக்க காலத்தில் இந்த நாடுகளிலெல்லாம் அரசாங்கம்தான் முயற்சி செய்து ஊக்கமளித்தது; இங்கிலாந்திலோ அப்படியல்ல. இப்படிப் பொதுவாகக் கூறுவதால் சிலர் சண்டைக்குக் கூட வரலாம். ஏனெனில், அமெரிக்கா போன்ற ஒரு சில நாடுகளில் (மைய, மாநில, தல) அரசாங்கத்தின் தலையீடு ஓரளவிற்கு இருந்தது; எனினும், பொருளாதார முன்னேற்றத் திற்குக் கருவூலமாக இருந்தது தனியார் மேற்கொண்ட முயற்சியும் தொழில் ஆர்வமும்தான். மேலும், இந் நாடுகளிலெல்லாம் சமூகப் பழக்க வழக்கங்களைச் சார்ந்த தடை ஏதுமின்றி, பொருளாதார வளர்ச்சி தொடங்கிய அதே சமயத்தில் தனிப்பட்டவர்களின் தொழில் ஆர்வமும் துணிவும் வளர்ச்சி அடைந்து வந்தன.

இருந்த போதிலும், இங்கிலாந்தைத் தவிர ஏனைய பல ஐரோப்பிய நாடுகளும் ரஷ்யா, ஜப்பான் போன்ற நாடுகளும் எப்படி முன்னேற்றமடையத் தொடங்கின என்பதைச் சிந்தித்துப் பார்த்தால் அரசாங்கத்தின் தீவிரமான முயற்சிதான் காரணமாகும் என்பது தெளிவாகும். இந்த விஷயத்தில் ஜப்பான் நாடுதான் கவர்ச்சியான தொரு சான்றாக விளங்குகிறது. ஜப்பான் மிகக் கடினமான சூழ்நிலையில் இருந்தும் கூட, அயல் நாட்டு மூலதனம் அதிகமின்றி, தன் பொருளாதாரத்தை நவீனமயமாக்க முயற்சி செய்தது. மிகப் பின் தங்கிய இந்த நாட்டை பொருளாதார முன்னேற்றப் பாதைக் குக் கொண்டு வந்து சேர்ப்பது அவ்வளவு எளிதான காரியமல்ல;

மிக இக்கட்டான சூழ் நிலையில் தனிப்பட்டவர்கள் மட்டும் சாதிக்கக் கூடிய காரியமுமல்ல. எனவேதான் 1868 இல் மன்னர் ஆட்சி மறு படியும் ஏற்பட்ட பின்னர், ஜப்பான் நாட்டு அரசாங்கம் தொழில் துணிவும் ஆர்வமும் மிக்க பலரைத் தேர்ந்தெடுத்து ஒரு குழுவை நிய மித்தது. இக் குழுவினரின் ஒத்துழைப்பைக் கொண்டு தொழில் புரட்சி துரிதமாக ஏற்படும் வகையில் பல்வேறு தொழில்களை அரசாங்கமே தொடங்கியது ; அதோடு மட்டுமின்றி, தனியார் தொழில்களுக்கு ஊக்கமும் வழியும் காட்டும் விதத்தில் பல்வேறு உதவிகளையும் அரசாங்கம் செய்தது.[9]

இன்னும் பொதுவாகப் பார்த்தால், இந் நாடுகள் அரசாங்கத் தின் தலையிடாக் கொள்கையைக் கைவிட்டு முன்னேறத் தொடங் கியதற்குப் பல காரணங்கள் இருந்திருக்கலாம் என்றே தோன்று கிறது : 1) பொருளாதாரக் குறிக்கோளையும் அரசியல் குறிக் கோளையும் இணைத்து முன்னேற்றம் அடைந்தால் உள்நாட்டு அரசியலில் மட்டுமின்றி, உலக அரசியல் அரங்கிலும் செல்வாக்கைப் பெற முடியுமென்று இந்நாடுகள் நினைத்திருக்கலாம் ; 2) அல்லது, இங்கிலாந்தையும் அதைத் தொடர்ந்து முன்னேற்ற மடைந்த இதர நாடுகளையும் விடத் துரிதமாக முன்னேற வேண்டுமென்ற துடிப்பின் விளைவாக இருந்திருக்கலாம் ; 3) அல்லது, நாம் ஏற்கனவே சுட்டிக் காட்டியது போல், பல கஷ்டங்களுக்கிடையேயும் இரயில்வேத் தொழிலைப் போல் மூலதனச் செறிவுள்ள தொழில்களுக்கு வேண்டிய மூலதனத்தைத் தனியார் வழியாகத் திரட்டுவது மிகக் கடினம் என்று கருதியிருக்கலாம்.

எனவே, பொருளாதார முன்னேற்றத்தைப் பிந்தித் தொடங்கிய நாடுகள் பழங்காலப் பழக்க வழக்கங்களையும் சமுதாய அமைப்பு முறைகளையும் கைவிட்டு விட்டு, தனியார் சுதந்திரத் தத்துவத்தின் அடிப்படையில்தான் முன்னேற்றமடைந்தன ; எனினும், தொடக்கத் தில் அரசாங்கம்தான் பெருமளவிற்கு முயற்சி செய்தது என்பதற்கு மேற்கூறிய காரணங்களே அடிப்படையாக இருந்தன.

### ரஷ்யா தொடங்கிய விதம்

அரசாங்கத் தலையீட்டிற்கு மிகச் சிறந்த சான்றாக விளங்குவது ரஷ்யாதான். உலக அரங்கில் ரஷ்யா முக்கியமான பங்கு வகிக்கும்

[9] பொருளாதார வளர்ச்சியின் தொடக்க காலத்தில் ஜப்பானிய அர சாங்கமே முயற்சி செய்து பல புதிய தொழில்களைத் தொடங்கி, பின்னர் அவற்றை தனியார் துறையிலிருந்த பெரிய நிறுவனங்களுக்குக் கொடுத்து விட்டது. இதன் விளைவாக, 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து 1930 வரை அரசாங்கத்திற்குச் சொந்தமான தொழில்கள் குறைந்து கொண்டே வந்தன. பொதுவாகக் கூறின், ஜப்பான் நாட்டின் நவீனப் பொருளாதார வரலாற்றில் அரசாங்கமும் தனியார் தொழில்களும் சேர்ந்தே தான் பாடுபட்டு வந்தன.

நாடாக விளங்குவதால் அதன் முன்னேற்றத்தைப் பற்றிக் கட்டாயம் குறிப்பிட வேண்டியுள்ளது.

மிகச் சுருக்கமாகக் கூறின், தொழில் புரட்சியில் பிந்தி ஈடுபட்ட நாடுகளில் ரஷ்யாதான் பல விதங்களில் நம் கவனத்தை அதிகமாக ஈர்க்கின்றது. 1928 ஆம் ஆண்டில் ரஷ்யாவின் மக்கள்தொகை பிரிட்டனில் இருந்ததைக் காட்டிலும் நான்கு மடங்கு அதிகமாயிருந்தது; அப்படியிருந்தும், அதன் மொத்தத் தொழில் உற்பத்தி, பிரிட்டன் நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட அளவில் நான்கில் ஒரு பங்குதான் இருந்தது; தலா உற்பத்திக் கணக்கில் பார்த்தால், பிரிட்டனில் இருந்ததில் பதினாறில் ஒரு பங்குதான் இருந்தது. ரஷ்யாவின் முந்திய வரலாற்றைப் பார்த்தால், பொருளாதாரத் துறையில் அந்நாடு மிகப் பின்தங்கிய நிலையில் இருந்ததோடு மட்டுமின்றி, காலத்திற்கொவ்வாத சமூகப் பழக்க வழக்கங்களையும் அமைப்புகளையும் கொண்டிருந்தது புலனாகும். சான்றாக, இங்கிலாந்து நாடு 16 ஆம் நூற்றாண்டின் மத்தியிலேயே அடிமை முறையை வேறொடு ஒழித்துக் கட்டி விட்டது; ஆனால் ரஷ்யாவிலோ 18 ஆம் நூற்றாண்டின் மத்தியில் கூட அந்நாட்டிலிருந்த 19 மில்லியன் மக்கள்தொகையில் 15 மில்லியன் பேர் அடிமைகளாகத்தான் வாழ்ந்து வந்தனர். தொழில் கூடங்களில் வேலை செய்தோர் கூட பெரும்பாலும் அடிமைகள்தான். இங்கிலாந்தில் தொழில் புரட்சி தொடங்கி நூறு ஆண்டுகளான பின்னர்தான் (1861) ரஷ்ய நாட்டு அடிமை மக்கள் சுதந்திரமடைந்தனர்.

ரஷ்யா, மேற்கத்திய நாடுகளைவிட எவ்வளவோ பின்தங்கிய நிலையிலிருந்து முன்னேறி வர வேண்டியிருந்தது; அதோடு பொருளாதார முன்னேற்றத்திற்கு இடையூராக எத்தனையோ விதமான சமூக அமைப்பு, பழக்க வழக்கங்கள் சார்ந்த தடைகளும் இருந்தன. அவற்றையெல்லாம் சமாளித்து முன்னேற வேண்டுமாயின், தொழில் புரட்சியை வேறொரு வகையில்தான் ஏற்படுத்த வேண்டிய நிலை இருந்தது. எனவே, இருபதாம் நூற்றாண்டில் தொழில் புரட்சியை ஏற்படுத்துவதற்கு அரசாங்கமே தீவிரமாகப் பாடுபட்டது. பொருளாதார முன்னேற்றத்திற்காக அரசாங்கமே நேரடியாகத் தலையிடும் பழக்கம் ரஷ்ய வரலாற்றில் புதுமையானதல்ல. மாபெரும் பீட்டர் (Peter the Great) ஆட்சியின் போதே (1682-1725) அரசாங்க முயற்சியினால்தான் ரஷ்யாவின் தொழில்கள் ஓரளவிற்கு முன்னேற்றமடைந்தன; கால் படையையும் கப்பல் படையையும் வலுப்படுத்த வேண்டுமென்ற முக்கியமான காரணத்திற்காகத்தான் மாபெரும் பீட்டர் பல முயற்சிகளில் ஈடுபட்டார். இங்கிலாந்திற்கும் மேற்கத்திய ஐரோப்பாவிற்கும் சென்று பார்வையிட்டதோடு மட்டு

மின்றி. அயல் நாட்டுத் தொழில் நுட்ப வல்லுநர்களையும் அவர் வரவழைத்து வேலைக்கமர்த்தினார் என்பதெல்லாம் நாம் அறிந்தது தான். அதோடு மட்டுமின்றி, தொழிற்சாலைகளையும் புதிய தொழில்களையும் தோற்றுவிப்பதற்காக அவரே முயற்சி செய்ததோடு, அரசாங்கப் பணத்தையும் கூட அதற்காகச் செலவிட்டார். பொதுவாகக் கூறின், சர்வாதிகாரம் கொண்ட மன்னர் என்ற முறையில் ரஷ்யாவின் பொருளாதார நிலையைக் கூடுமானவரை விரைவாக முன்னேற்ற வேண்டுமென்று தம அதிகாரத்தையே அவர் பயன்படுத்தினார். அப்படியிருந்தும் 19 ஆம் நூற்றாண்டின் இறுதி வரை ரஷ்யா பின் தங்கிய நிலையிலேயேதான் இருந்து வந்தது.

19 ஆம் நூற்றாண்டின் இறுதியிலும், 20 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் தான் தொழில் புரட்சியைத் தீவிரமாகத் தொடங்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அப்போதும் கூட அரசாங்கத் தொழில் முயற்சிதான் மிக முக்கியமானதாக இருந்தது. இரயில் பாதைகளை அமைப்பதற்குப் பெரும்பாலும் ரஷ்யப் பேரரசு அரசாங்கம் தான் நிதி வழங்கியது ; தனியார் தொழில்களுக்கும் அரசு வங்கியே கடனுதவி செய்தது. பிற நாட்டுத் தொழில் நுட்பத்தையும் தொழில் நுட்ப அறிஞர்களையும் வரவழைப்பதற்கென்று அரசாங்கமே பல்வேறு வழிவகைகளைத் தொடர்ந்து மேற்கொண்டு வந்தது. புதிய தொழில்களுக்குப் பாதுகாப்பளிக்கும் வகையில் இறக்குமதி வரிகளை விதித்தது; விவசாயிகளின் மீது பளுவான வரிகளைவிதித்து பெருமளவில் தானியங்கள் ஏற்றுமதியாகும் விதத்தில் மறைமுகமான பல்வேறு உபாயங்களை மேற்கொண்டது ; அவற்றின் விளைவாக, சாதகமான வாணிப நிலை ஏற்படவும், அதிலிருந்து கிடைத்த நிதியைக் கொண்டு அயல் நாட்டுக கடனைப் பெறவும், அக்கடனைப் பொருளாதார முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்தவும் கூடிய உபாயங்களையும் அரசாங்கமே மேற்கொண்டது. அப்படியெல்லாம் இருந்த போதிலும், தொழில் புரட்சியைத் தொடங்குவதற்கு அரசாங்கம் தான் காரணமாயிருந்து என்று சொல்ல முடியாது ; வேண்டுமானால் அரசாங்கத்தின் முயற்சி தான் முக்கிய காரணம் என்று சொல்லலாம். எனினும், இந்த அளவுக்கு அரசாங்கத்தின் தலையீடு இங்கிலாந்து நாட்டில் எப்போதுமே இருந்ததில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த வழிமுறைகளை மேற்கொண்டதால் ரஷ்ய நாடு எந்த அளவுக்கு நவீன முறையில் நிரந்தரமான வளர்ச்சியை அடைந்திருக்கக் கூடும் என்று திட்டவட்டமாக எவராலும் கூற முடியாது. காரணம், முதல் உலகப்போர், ரஷ்யப் புரட்சி ஆகியவை ஏற்பட்டு

விட்டதோடு, ரஷ்யாவின் சமூக அரசியல், பொருளாதார வாழ்க்கையில் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்பட்டு விட்டதாலும் நிலையே மாறிவிட்டது. 1917-க்குப் பின்னர் மறுபடியும் தொழில் முன்னேற்றத்திற்காகத் தீவிரமான பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டபோது, ரஷ்யாவில் சர்வாதிகார ஆட்சியும் கெடுபிடியான திட்ட முறைகளும் ஏற்பட்டு விட்டன. இந்த விதமான ஆட்சி ஏன் ஏற்பட்டது என்பதைக் குறிப்பிடும் வகையில் 'ஆட்டிப் படைக்கக் கூடிய விரைவான முன்னேற்றத்தை அடைவதற்காகத்தான்' என்று காரணம் காட்டுகிறார் ஓர் அறிஞர்.[10] பெரும்பாலும் கெடுபிடியான வழி முறைகளைப் பின்பற்றி, அதிகமாக முதலீட்டைப் பெருக்குவது தான் மிக முக்கியமான வழியென நம்பி, நுகர்வைக் குறைத்துக் கொண்டு, விவசாயத்தைப்பற்றி அதிகமாக அக்கரைப்படாமல், தொழில் முன்னேற்றத்தையே குறிக்கோளாகக் கொண்டு, உயர்ந்த விஞ்ஞான, தொழில் நுட்பக் கல்வியின் வழியாக மிக விரைவாக முன்னேற்றம் அடைந்துள்ள ரஷ்யா, இன்று தொழில் உற்பத்தியில் ஐரோப்பிய நாடுகளையெல்லாம் எஞ்சி, அமெரிக்காவிற்கு அடுத்த படியான நிலைக்கு உயர்ந்து விட்டது.[11]

பொருளாதார முன்னேற்றத்தைப் படிக்கும் மாணவர்கள், அரசியல் சம்பந்தப்பட்ட விவகாரங்களை ஒதுக்கி விட்டு, ரஷ்யாவின் சாதனைகளைமட்டும் பார்த்தால், அவை எத்தனையோ விதங்களில் முக்கியத்துவம் வாய்ந்தவை என்பது புலனாகும். முதலாவதாக கெடுபிடியான சர்வாதிகார ஆட்சிமுறையிலும் கூட ஒரு நாடு தொழில் புரட்சியை மிகத் தீவிரமாகவும் விரைவாகவும் அடைந்து விடக்கூடும் என்பதை இச்சாதனைகள் உறுதிப்படுத்துகின்றன. இச்சாதனைகள் எப்படி ஏற்பட்டன என்ற வழி முறைகளை நாம் எந்த அளவுக்கு வெறுத்தாலும் சரி ; அவற்றின் விளைவுகள் மகத்தானவை, தெளிவானவை மட்டுமின்றி, விவாதிக்கக் கூட இடமளிப்பதில்லை என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

இரண்டாவது, முன்னேற்றத்தை அடைவதற்கென்று கையாளப்படும் இவ்வழி முறைகளில் சில குறைபாடுகள் உள்ளன என்பதை ரஷ்யாவின் சாதனைகளே புலப்படுத்துகின்றன. ரஷ்யாவின் தொழில் முன்னேற்றம் வியக்கத் தகுந்தவைதான்; ஆனால்,

[10] Robert W. Campbell, Soviet Economic Power, 2nd edi (Cambridge: Houghton Milfin 1966 ), பக்கம் 26.

[11] எனினும், ரஷ்ய நாட்டின் மொத்த உற்பத்தி, சிறப்பாக நுகர்வுப் பொருள் உற்பத்தி அமெரிக்காவில் உள்ளதை விடக் குறைவாகத்தான் இன்று உள்ளது. இருந்த போதிலும், ஏனைய வகையில், குறிப்பாகப் பெருந்த தளவாடங்களிலும் தொழில் முதலீட்டிலும் இந்த இரு நாடுகளுமே ஏறக் குறைய இணையாகவே முன்னேற்றமடைந்துள்ளன.

விவசாயத் துறையிலும் நுகர்வுப் பொருள் உற்பத்தியிலும் அந்நாடு எவ்வளவோ பின் தங்கி விட்டன. 'ரஷ்ய அரசாங்கத்தின் கொள்கையே அதுதான்' என்பது ஓரளவு உண்மைதான். நுகர்ச்சி என்றாலே முதலீட்டையும் பொருளாதார முன்னேற்றத்தையும் பாதிக்கக்கூடியது என்றுதான் பொருள்; அதேபோல் விவசாயத் துறையை வளர்த்தால் நவீன கனரகத்தொழில் முன்னேற்றம் பாதிக்கப்பட்டு விடும் என்றுதான் அர்த்தம். இருந்த போதிலும், இப் பிரச்சினை எது முக்கியமானதென்று தேர்ந்தெடுக்கும் பிரச்சினை மட்டுமல்ல. உண்மை என்னவென்றால் வலுவந்தமான முறையில் அமுல் நடத்தப்படும் திட்டங்களும் கட்டுப்பாடுகளும் தொழில் துறையில்தான் நல்ல பலனைத் தருகின்றதேயன்றி, விவசாயத் துறையில் அவ்வளவு வலிமையுடன் செயல் படுவதில்லை என்பது தான்.

மேலும், பொதுவாகப் பார்க்கும்போது, மேற்கத்திய நாடுகள் உற்பத்திக் காரணிகளின் ஆக்கத்திறனை அதிகரித்து முன்னேற்ற மடைந்து கொண்டிருக்க ரஷ்யாவோ காரணிகளின் உள்ளிடுகை யைத்தான் அதிகரித்து வருவதாகத் தெரிகின்றது. அதோடு, ரஷ்யத் திட்டங்கள் திறன் குறைந்தவை என்பதும் அந்நாட்டின் சாதனைகளிலிருந்து புலனாகிறது. சான்றாக, டிராக்டர்களுக்கு வேண்டிய பாகங்களைப் போதுமான அளவுக்கு எச்சாக (Spare parts) உற்பத்தி செய்யாமல் டிராக்டர்களை மட்டும் அதிகமாக உற்பத்தி செய்து வருகிறது. சொல்லப் போனால், சோவியத் நாட்டுப் பொரு ளாதார அறிஞர்களும் அதிகாரிகளும்கூட இக்குறைபாட்டைத் தற்போது உணர்ந்துள்ளனர்; அதனால் திறனை அதிகரிக்கும் வகையில் அங்காடியில் நிலவும் சக்திகளுக்கு ஓரளவாவது முக்கியத் துவம் தர வேண்டுமென்பதை அவர்கள் ஒப்புக் கொண்டுள்ளனர் என்றே தெரிகிறது.[12] 1960ஆம் ஆண்டிற்குப் பின்னர், ஓரிரு ஆண்டு களிலேயே இவவகைச் சீர்திருத்தம் அவசியம் தான் என்பதை

[12] 1960-69 ஆம் ஆண்டுகளில் சோவியத் நாட்டின் வளர்ச்சி வீதம் சிறிதளவு குறைந்து விட்டதைப் பார்க்கும்போது, அந் நாட்டிலுள்ள திட்டக் குழுவினர் அங்காடியின் சக்திகளுக்கும் முக்கயத்துவம் தரக்கூடும் என்று தான் தோன்றுகிறது. (1960-69 இல் சோவியத் நாட்டின் வளர்ச்சி பற்றிய ஆய்விற்கு Martin L. Weitzman அவர்களின் 'Soviet Post-war Economic Growth and Capital Labour Substitution' என்ற கட்டுரையைப் பார்க்கவும். இக் கட்டுரை 1970 செப்டம்பர் மாதம் வெளியான 'American Economic Review' என்ற இதழில் உள்ளது.) சொல்லப் போனால் பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க காலத்தில் உற்பத்தியைப் பெருக்குவதற்கான சிறந்த வழி காரணிகளின் உள்ளிடுகையை அதிகப்படுத்துவது தானேயன்றி அவற்றின் உற்பத்தித் திறனை அல்ல என்றும் நிருபிக்க முடியும். எனினும் வளர்ச்சியில் ஓரளவு முதிர்ச்சியும் அனுபவமும் அடைந்த பின்னர், அப்படிச் செய்வது நல்ல பலன் அளிக்காது. **காரணிகளின் உற்பத்தித் திறனை உயர்த்துவதுதான் சிறந்த வழியாகும்.**

சோவியத் நாட்டுப் பொருளாதார அறிஞரான இ. ஜி. லிபர்மென் (E. G. Liberman) அவர்கள் வலியுறுத்தி வந்தார்கள்; எனவே, அவருடைய பரிந்துரைகளை ஓரளவிற்கு ஒப்புக்கொண்ட சோவியத் அரசாங்கம் அவற்றை 1965 இல் எல்லாத் தொழில் நிறுவனங்களிலும் சிறிதளவு புகுத்தியது. எனினும், இச்சீர்திருத்தங்களை எந்த அளவுக்கு ரஷ்யத் தலைவர்கள் செயல்படுத்துவர் என்பதைத் திட்டவட்டமாகச் சொல்ல முடியாது. காரணம், இன்று வரை சோவியத் நாட்டின் பொருளாதார அமைப்பு முறை சிறிது கூட மாற்றப்படாமல் அப்படியேதான் இருந்து வருகிறது. இருந்த போதிலும், ரஷ்யப் பொருளாதாரத் திட்டம் அங்காடிச்சக்திகளுக்கும் முக்கியத்துவம் அளிக்க வேண்டிய வகையில் திருத்தப்பட வேண்டியுள்ளது என்பது தெளிவாகத் தெரிகிறது. எனவே, சோவியத் நாட்டின் திட்டத்தைப் பின்பற்றி பொருளாதார முன்னேற்றமடைய விரும்பும் நாட்டிற்கு இஃது ஓர் எச்சரிக்கையாக உள்ளது; குறிப்பாக, விவசாயத்துறை முன்னேற்றத்திற்கு அதிக முக்கியத்துவம் தந்து முன்னேற விரும்பும் நாடு இக் குறைபாட்டை மறந்துவிடக் கூடாது.

இறுதியாக ரஷ்ய நாட்டின் அனுபவம் அமெரிக்கர்களுக்கும் ஒரு வகையான எச்சரிக்கையை விடுகிறது. இதைத்தான் பேராசிரியர் அலெக்ஸாண்டர் ஜெர்ஷென்க்ரோன் (Professor Alexander Gerschenkron) அவர்கள் பின் வருமாறு புலப்படுத்துகின்றார் :

> இன்றைய சோவியத் நாட்டு அரசாங்க அமைப்பு முறை, மிகப் பின்தங்கியிருந்த பொருளாதார நிலையால் உருவாக்கப்பட்டது என்பதை எளிதாக நிரூபித்து விடலாம். "வரலாற்றை ஆதாரமாகக் கொண்ட கருதுகோள்" என்று ஏதாவது இருக்குமாயின், அஃது இது தான் என்றே தோன்றுகிறது : பொருளாதாரப் புரட்சியை உடனடியாக ஏற்படுத்தாமல் தள்ளிப் போட்டுக் கொண்டே சென்றதால் தான் அரசியல் புரட்சி தோன்றி விட்டது; அதன் விளைவாக, எல்லா அதிகாரங்களுமே சர்வாதிகார அரசாங்கத்தின் கைகளில் குவிந்து விட்டன ... ரஷ்யாவிலிருந்த குடியானவர்களுக்குச் சுதந்திரம் கொடுக்கத் தவறி விட்டதாலும் தொழில் முன்னேற்றத்திற்கான கொள்கைகளை முன்பே செயல்படுத்தத் தவறிவிட்டதாலும் ஏற்பட்டுள்ள நட்டங்களை ரஷ்யா மட்டுமின்றி, உலகமே இன்று அனுபவித்து வருகிறது. எனவே மிகப் பின்

> தங்கியபொருளாதார நிலை எங்கிருந்தாலும் சரி, அதை முன்னேற்ற நாடுகள் அலட்சியம் செய்து விட முடியாது.[13]

புரட்சிக்கு முன்னர் ரஷ்ய நாட்டு மக்கள் எந்த அளவுக்குப் பின் தங்கிய நிலையில் இருந்தனரோ அதைக் காட்டிலும் மோசமான நிலையில் உலக மக்களில் பெரும்பாலானோர் இன்று வாழ்க்கை நடத்தி வருகின்றனர். இந்த நிலையை நாம் மறந்துவிடக்கூடாது என்பது தான் முக்கியமானதொரு படிப்பினையாகும்.

## சுருக்கம்

உலகில் பொருளாதார வளர்ச்சியடைந்துள்ள நாடுகள் எப்படி முன்னேறத் தொடங்கின என்ற பிரச்சினைகளை இந்த அதிகாரத்தில் ஆராய்ந்தோம்.

**இங்கிலாந்தின் தொழில் புரட்சி**

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்கிலாந்து நாட்டில் தொடங்கிய தொழில் புரட்சி தான் நவீனப் பொருளாதார வளர்ச்சியின் ஆரம்பமாகும். இங்கிலாந்தைப் பொருத்தவரை, இந்தப் புரட்சிக்கான முன்னேற்பாடுகள் பல நூற்றுண்டுகளாகவே செய்யப்பட்டு வந்ததால் அப்புரட்சி தோன்றியபோது அந்நாடு அதற்குத் தயாராகவேதான் இருந்தது.

தொழில் புரட்சி ஏற்பட்ட காலத்தில், தொழில் நுட்ப முன்னேற்றம் வேகமாக வளர்ச்சி அடைந்ததும் நவீனத் தொழிற்சாலை முறை தோன்றியதும் குறிப்பிடத்தக்கவை. புதிய தொழில் நுட்பமும் புதுமையான உற்பத்தி முறையும் தொடர்ந்து கண்டுபிடிக்கப்பட்டு வந்ததால் அந்நாட்டின் பொருளாதாரத் துறைகள் அனைத்திலுமே உற்பத்தி செய்யும் முறையின் அடிப்படையே மாறிக் கொண்டு வந்தது. இந்தப் புதிய தொழில் நுட்ப முறையின் பிரதிபலிப்பாகத் தான் மூலதனம் செறிந்த பெரிய ஆலைகளில் ஆயிரக்கணக்கான பயிற்சி பெற்ற தொழிலாளிகள் சேர்ந்து கட்டுப்பாடுடன் வேலை செய்யும் முறை ஏற்பட்டது.

இம் மாறுதல்கள் அனைத்தும் அந்நாட்டிலிருந்த பொருளாதாரச் சூழ்நிலைகளுக்கேற்ப எப்படியெல்லாம் அமைய வேண்டுமோ

[13] Alexander Gerschenkron அவர்களின் "Economic Backwardness in Historical Perspective" என்னும் கட்டுரை இக்கட்டுரை Bert F. Hoselitz அவர்கள் பதிப்பீடான The Progress of Underdeveloped Areas (Chicago: University of Chicago Press, 1952) என்ற நூலில் வெளி வந்துள்ளது. இந் நூலில் 27-29 ஆம் பக்கங்களைப் பார்க்கவும்.

அப்படித்தான் அமைந்தன என்பதும் குறிப்பிடத்தக்கது. ஏனெனில் அப்படி அமைந்ததால் தான் பிறநாட்டு உதவி அதிகமின்றி, அரசாங்கத்தின் தலையீடுமின்றி, அந்நாட்டுத் தொழில் முயல் வோர் அவ்வளவு பெரிய முன்னேற்றங்களைச் செய்ய முடிந்தது.

தொழில் புரட்சியினால் பலவகையான சமூகக் கேடுகளும் தோன்றின ; எனினும், பொருளாதார வளர்ச்சிக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, அப்புரட்சியினால் ஏற்பட்ட பலன்கள்தான் முக்கியமானவை. அதற்கு முன் உலகமே காணாத அளவிற்கு அந்நாட்டின் உற்பத்தி பல்லாண்டுகளாக அதிகரித்துக் கொண்டே வந்தது.

**ஏனைய நாடுகளில் நவீன வளர்ச்சி தொடங்கிய விதம்:**

ஏனைய பல நாடுகளும் பிரிட்டனைத் தொடர்ந்து முன்னேற்ற மடைய முற்பட்டன ; அமெரிக்கா போன்ற சில நாடுகள் பிரிட்டனைக் காட்டிலும் விரைவாக முன்னேறிவிட்டன. பொதுவாகக் கூறின், ஐரோப்பாவிலும் ஐரோப்பாவோடு தொடர்பு கொண்ட நாடுகளிலும் தான் பொருளாதாரம் வேரூன்றி வளர்ச்சி அடைந்து வந்தது. இந்த வளர்ச்சிக்குப் புவியியல் சூழ் நிலையும் சாதகமாக இருந்தது. எனினும், இப்பொதுப் படையான உண்மைக்கு ஒரு சில விதி விலக்குகளும் இருந்தன. அவ்விதி விலக்குகளுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக ஜப்பான் நாடு விளங்கியது.

பொதுவாகக் கூறின், இங்கிலாந்தில் வளர்ச்சி தொடங்கிய தற்கும், அதன் பின்னர் ஏனைய நாடுகளில் வளர்ச்சி ஏற்படத் தொடங்கியதற்கும் பல முக்கியமான வேறுபாடுகள் இருந்தன. அவை : 1) இங்கிலாந்து நாடு ஏற்கனவே தொழில்மயமாகி விட்ட தால், அந்நாடு கண்டுபிடித்த தொழில் நுட்ப முறைகளை ஏனைய நாடுகள் பயன்படுத்த முடிந்தது ; அதோடு, பிரிட்டன் நாட்டினர் இந்த நாடுகளில் செய்த முதலீட்டின் வழியாக பல முக்கியமான உதவிகளும் இந்நாடுகளுக்குக் கிடைத்தன ; மேலும் பிரிட்டன் இந்நாடுகளுக்கெல்லாம் ஒரு முன்மாதிரியாக விளங்கியது. 2) தொழில் நுட்பம் முன்னேறிக் கொண்டே இருந்ததால் இந்த நாடுகளில் ஏற்பட்ட தொழில் புரட்சியின்போது வேறு வகையான தொழில்கள், குறிப்பாக இரயில்வேத் தொழில் தான் முன்னோடியாக இருந்து துரிதமாக வளர்ச்சி பெற்றது. 3) இங்கிலாந்தின் தொழில் புரட்சிக்கு அந்நாட்டு அரசாங்கம் அதிகமாக முயற்சி ஏதும் செய் வில்லை ; மாறாக, பிந்திய நாடுகளிலோ அரசாங்கம் தான் முன் னேற்றத்திற்கான முயற்சிகளை மேற்கொண்டது. அவ்வாறு

அரசாங்கமே முயற்சி செய்ததற்குப் பல காரணங்கள் இருந்திருக்கலாம். அரசியல் காரணத்தோடு மட்டுமின்றி, இங்கிலாந்திற்கு இணையாக விரைவில் முன்னேறிவிட வேண்டும் என்ற துடிப்பும் காரணமாக இருந்திருக்கலாம்; அல்லது மூலதனச் செறிவுள்ள தொழில்களுக்கு வேண்டிய மூலதனத்தைப் பெற வேண்டிய அவசியம் காரணமாயிருந்திருக்கலாம்.

அரசாங்கத்தின் தலையீட்டிற்குச் சிறந்த சான்றாக விளங்குவது ரஷ்யா தான். ரஷ்யா மேற்கொண்ட வழிமுறையில் திறனற்ற உற்பத்தி போன்ற சில குறைபாடுகள் உள்ளன ; எனினும், சர்வாதிகார ஆட்சியிலும் கூட ஒரு நாடு மிக விரைவாக முன்னேற்றமடைய முடியும் என்ற உண்மைக்கு ரஷ்யா ஓர் எடுத்துக்காட்டாக விளங்குவது குறிப்பிடத்தக்கது. இது, பொருளாதார ரீதியில் மட்டுமின்றி, அரசியல் ரீதியிலும் பல விதங்களில் முக்கியத்துவம் வாய்ந்த உண்மையாகும்.

# 4. அமெரிக்க நாட்டுப் பொருளாதார வளர்ச்சி

பொருளாதார முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் வளர்ச்சி தொடங்கிய விதம்பற்றிய பிரச்சினைகளை மட்டும்தான் முந்திய அதிகாரத்தில் ஆராய்ந்தோம். இப்போது, நீண்டகாலமாகத் தொடர்ந்து ஏற்பட்டு வரும் வளர்ச்சி சம்பந்தப்பட்ட பிரச்சினை களைப் பார்ப்போம். இந்த ஆய்வில் அமெரிக்கா மட்டுமே இடம் பெறும். காரணம், எல்லா நாடுகளையும்பற்றி ஆராய்வதற்கு இங்கு இடமில்லை என்பது ஒன்று. அதைக் காட்டிலும் முக்கியமான காரணம், உலகிலேயே அமெரிக்காதான் நவீனத் தொழில் வளர்ச்சியில் முதலிடம் பெற்றுள்ளது என்பது. இன்று உலக மக்களில் குறைந்த வாழ்க்கைத்தரம் கொண்டோர் 60 அல்லது 70 சதவீதம் இருக்கின்றனர்; அவர்கள் அனைவரும் சேர்ந்து செய்யும் மொத்த உற்பத்தி எவ்வளவோ, அந்த அளவுக்கு அமெரிக்கர்கள் மட்டும் உற்பத்தி செய்து வருகின்றனர். இங்கிலாந்தைவிட எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின்னர்தான் அமெரிக்கா முன்னேறத் தொடங்கியது; அப்படியிருந்தும், அதன் தலா உற்பத்தி பழைய தாய் நாட்டைக் காட்டிலும் இரண்டு மடங்கிற்கு மேல் அதிகமாக உள்ளது. உலகப் போருக்குப் பின்னர், மிகத் துரிதமாக வளர்ச்சி பெற்று வரும் ரஷ்ய நாட்டின் மொத்த உற்பத்திகூட அமெரிக்காவில் உள்ளதைக் காட்டிலும் குறைவாகத்தான் இருந்து வருகிறது. எனவே, நவீனப் பொருளாதார முன்னேற்றத்தின் பலன்களையும் அம்முன்னேற்றத்திற்குள்ள தடைகளையும் முழுமையாக ஆராய்வதற்குச் சிறந்த நாடாக விளங்குவது அமெரிக்காதான்.

## அமெரிக்க நாட்டு வளர்ச்சிக்குச் சாதகமாக இருந்த சூழ்நிலைகள்

அமெரிக்க நாட்டு வளர்ச்சியைப்பற்றி ஆராய்ந்து அதனை மதிப்பிட நாம் முயற்சிக்கும் போது, வேறு எந்த நாட்டிலுமே இல்லாத அளவுக்கு அங்கிருந்த சூழ்நிலைகள் சாதகமாக இருந்தன என்பதை மறந்துவிடக் கூடாது. சூழ்நிலை என்றால், வெறும் புவியியல் சார்ந்த இட அமைப்பை மட்டும் குறிப்பிடாது; அதோடு, அரசியல், சமூக, வரலாற்றுச் சூழ்நிலைகளையும் மக்களின் கலாச்

சார நிலையையும் கூட குறிப்பிடும். இவை அனைத்துமே அமெரிக்காவின் முன்னேற்றத்திற்குச் சாதகமாகத்தான் இருந்தன.

சான்றாக, அமெரிக்காவின் அரசியல் பெரும்பாலும் நிலையானதாகவேதான் இருந்து வந்திருக்கின்றது. உள் நாட்டுப் போர் ஏற்பட்டது உண்மைதான் ; எனினும், அப்போர் முடிந்ததிலிருந்து தொழில் முன்னேற்றம் ஏற்பட்ட காலம் வரை அமெரிக்காவில் சிறு சண்டைகூட நிகழவில்லை. இன்னும் கொஞ்சம் ஆழமாகச் சிந்தித்துப் பார்த்தால், அமெரிக்க நாட்டு அரசாங்க முறை நிலையானதாக இருந்து வந்துள்ளதோடு, காலத்திற்கேற்ப இணக்கம் அடைந்து வந்துள்ளது என்பதும் புலனாகும். இந் நாட்டு மக்கள் அனைவரும் தத்தம் தொழில் எதுவாயிருந்தாலும் அதை ஆர்வமுடன் செய்து வருகின்றனர் ; காரணம், அவர்கள் செய்யும் தொழிலுக்கேற்ற பலன் நிச்சயமாகக் கிடைத்துவிடுகிறது என்பதுதான். அதே சமயம் அந்நாட்டிலுள்ள விதிமுறைகள் வலுவந்தமானவையோ அதிகாரத் தோரணை கொண்டவையோ அல்ல ; மாறாக, அவை பெரும்பாலும் நடைமுறைக்கும் ஜனநாயக அமைப்பிற்குமேற்ப உள்ளன ; அதோடு, சூழ்நிலைக்கும் மக்களின் தேவைக்குமேற்ப இணக்கமானவையாகவும் இருக்கின்றன.

மேலும், அமெரிக்க நாட்டு மக்களுக்கென்று தனிப்பட்ட கலாச்சாரமும் வரலாற்று மரபும் கூட இருந்து வந்துள்ளது. அமெரிக்கர்கள் பெரும்பாலும் ஐரோப்பாவிலிருந்து, குறிப்பாக இங்கிலாந்து நாட்டிலிருந்து குடிவந்தவர்கள்தான். எனவே, அந்தப் பழைய நாட்டின் முன்னேற்ற அறிவும் திறமையும் மரபுப்படி, இப்புது உலகில் வாழும் அமெரிக்கர்களுக்கும் உள்ளன. அதோடு மட்டுமின்றி, அமெரிக்கா முன்னேற்றமடைந்து வந்த காலத்தில் ஏனைய பல நாடுகளிலிருந்து மக்கள் குடியிறங்கிய வண்ணம் இருந்தனர் ; அப்படி வந்து குடியிறங்கியோர், பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான தொழில் திறமை, ஆர்வம், இணக்கம் ஆகிய பண்புகளை மட்டுமின்றி, எத்தனையோ வகையான சாதனங்களையும் தம்முடன் கொண்டு வந்து சேர்த்தனர். இதனால் அமெரிக்காவின் அறிவும் திறமையும் விரைவாக வளர்ச்சி பெற்றது.

ஐரோப்பாவிடமிருந்து மரபுரிமை வாயிலாகப் பெற்ற எத்தனையோ விதமான பண்புகள் மட்டுமின்றி, அமெரிக்க நாடு ஏராளமான இயற்கை வளங்களையும் கொண்டிருந்தது. 19 - ஆம் நூற்றாண்டு வரையில்கூட பல ஐரோப்பிய நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்குப் படைமானிய முறையும் (old feudal relics) பழக்க வழக்கங்களும் பெரும் தடையாக இருந்தன ;

ஆனால் அமெரிக்காவிலோ அப்படிப்பட்ட அறி குறி கூட ஏதும் கிடையாது. நிற்க, அமெரிக்க மக்கள் தொடக்கத்திலிருந்தே இடம் பெயரும் பழக்கமுடையவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. சொல்லப் போனால் அமெரிக்க நாடே சதா இடம் பெயர்ந்து கொண்டிருக்கும் நாடாகத்தான் இருந்து வருகிறது. கிழக்கே யிருந்து மேற்குப் பகுதிக்கும், பண்ணைகளிலிருந்து ஆலை களுக்கும் கிராமங்களிலிருந்து நகர்ப்புறங்களுக்குமாக அந்நாட்டு மக்கள் இடம் பெயர்ந்த வண்ணமாகவே இருக்கின்றனர். அதே போல், அமெரிக்காவில் சமுதாய மாறுதல்களும் வேலை மாற்றங் களும் கூட அதிகமாகத்தான் இருந்து வருகிறது என்பதையும் மறந்துவிடக் கூடாது. படைமானிய முறை எதுவுமே அந் நாட்டில் இருந்ததில்லை; அதோடு மட்டுமின்றி, அந் நாட்டில் இணைந்துள்ள புதிய பிராந்தியங்களும், குடிமக்கள் அனைவரும் சமத்துவ மானவர்கள்தான் என்ற கொள்கையை வலியுறுத்தும் அரசியல், பொருளாதாரக் கோட்பாடுகளும் வலிமை பெற்றுள்ளன. இவை யனைத்தும் அமெரிக்காவில் இருப்பதால் அந்நாட்டு மக்கள் வேறு எந்த நாட்டிலும் இல்லாத அளவுக்குத் தங்கள் அந்தஸ்தை உயர்த்திக் கொள்ள முடிகிறது. "நேற்று குடிசையில் வாழ்ந்தோர் இன்று பங்களாவில் வாழும்" நிலை பொதுவாகக் கிடைப்பது அரிதுதான். ஆனால் அமெரிக்காவில் இது சாத்தியமானதொரு வாழ்க்கைதான். ஒரு வேளை, அமெரிக்க நாட்டில் மார்க்ஸ் வர்ணித்த 'வர்க்கப் போர்' என்ற சொல்லிற்கே இடம் இல்லாமல் போய்விட்டதற்கு இதுவும் ஒரு காரணமாக இருக்கலாம்.

இப்படியெல்லாம் வர்ணித்துக்கொண்டே போவதைப் பார்த்து, பொருளாதார முன்னேற்றத்திற்கு வேண்டிய சாதகமான சூழ்நிலை அமெரிக்காவில் தொடர்ந்து இருந்து வந்ததாக நினைத்துவிட வேண்டாம். ஒரு காலத்தில் அமெரிக்க நாட்டை அடிமை முறை ஆட்கொண்டிருந்தது. அடிமை முறை நியாயமான முறை தானா என்ற பிரச்சினை ஒரு புறம் இருக்கட்டும்; ஆனால் அம் முறை தொழில் வளமிக்க ஒரு நாட்டின் நாகரீகத்திற்கே ஒவ்வாத முறை என்றுதான் சொல்ல வேண்டும். 1970 ஆம் ஆண்டிற்குப் பின்னர் கூட அந் நாட்டில் காணும் இனவெறியும், பெரிய நகரங்களில் கூட யூதமக்கள் வாழும் பகுதிகளில் ஒரு சில மக்கள் வறுமையால் அவதிப் படுவதும் இந்த அடிமை முறை இருந்ததனால் ஏற்பட்ட விளைவு களாக இருக்கலாம். மற்றொன்றையும் நாம் மறந்துவிடக் கூடாது. அமெரிக்கா முன்னேற்றமடைந்து வந்த காலத்தில் வங்கிகள் அமைப்பும், பண முறையும், வரிக் கொள்கைகளும் கூட போதுமான அளவுக்கு வளர்ச்சி பெற்றிருந்ததில்லை; முறைப்படி அமைந்திருந் தன என்றும் சொல்ல முடியாது. சொல்லப் போனால் அந் நாட்டில்

எத்தனையோ முறைகள் பொருளாதாரச் சீர் கேடுகளும் இக்கட்டான நிலைகளும் ஏற்பட்டிருக்கின்றன. 1819, 1837, 1857, 1873, 1893, 1907, 1914 ஆகிய ஆண்டுகளிளெல்லாம் திகிலூட்டும் பொருளாதார இக்கட்டுகள் அந்நாட்டில் தோன்றியிருக்கின்றன; அதோடு மட்டுமின்றி, 1920-21 இல் தொழில் நடவடிக்கைகளே சுருக்கமடைந்து விட்டதோடு, 1929 இல் ஏற்பட்ட பெரும் பொருளாதார மந்தத்தினால் அமெரிக்க நாடே சீர்குலைந்து விட்டதும் நாம் அறிந்த விஷயங்கள் தான். எனவே, அமெரிக்க நாடு எந்த விதமான சீர்கேடுமின்றி, தொடர்ந்து முன்னேறிக் கொண்டே வந்ததாகச் சொல்ல முடியாது.

இருந்த போதிலும், அமெரிக்க வரலாற்றைப் பொதுப்படையாகப் பார்க்கும் போது, அவ்வப்போது அங்கு தோன்றிய தடைகளையெல்லாம் தகர்த்தெரியக் கூடிய வகையில் முன்னேற்றத்திற்கான சாதகமான சூழ்நிலைகள் தான் பெரும்பாலும் இருந்து வந்திருக்கின்றன என்பது புலனாகும். சொல்லப் போனால், பொருளாதார முன்னேற்றத்திற்கு வேண்டிய சாதகமான சூழ்நிலை அமெரிக்காவில் இருந்ததைப் போல் வேறெந்த நாட்டிலுமே இருந்ததில்லை; இனிமேல் இருக்குமா என்பதும் சந்தேகம்தான்.

## அமெரிக்கப் பொருளாதார முன்னேற்றத்தில் முக்கியமான சில போக்குகள்

அமெரிக்காவில் பொருளாதார முன்னேற்றம் தொடர்ந்து ஏற்பட்டு வந்ததால் என்னென்ன விளைவுகள் ஏற்பட்டன என்பதை அறிந்து கொள்வதற்கு, கடந்த 100 ஆண்டுகளுக்கு மேல் அங்கு நடைபெற்று வந்த முன்னேற்றத்தின் போக்கினைச் சுருக்கமாகவாவது தெரிந்துகொள்ள வேண்டும்.

1800 இல் அமெரிக்கா சிறியதொரு விவசாய நாடாகத்தான் இருந்தது. அன்று அந்நாட்டின் மக்கள்தொகை 5 மில்லியனுக்குச் சற்று அதிகமாகத்தான் இருந்தது. அன்று வேலை செய்தோரில் 80 சதவீதம் பேர் விவசாயத்துறையில் தான் பாடுபட்டு வந்தனர். புதிய நாடாக இருந்த அமெரிக்கா அன்று மூலப் பொருள்களையும் பக்குவப்படுத்தப்பட்ட உணவுப் பொருள்களையும் ஏற்றுமதி செய்து தனக்கு வேண்டிய பொறிவழியாக்கப் பொருள்களை இதர நாடுகளிலிருந்து இறக்குமதி செய்து வாழ்க்கை நடத்தியது. சிறிய நாடாக இருந்தபோதிலும் விவசாயிகள் மட்டும் இங்கிலாந்தில் இருந்த அளவிற்கு ஏராளமாக இருந்தனர். ஏனைய தொழில்களிலும் வியா

பாரத்திலும் ஈடுபட்டிருந்தோர் மிகக் குறைவுதான்; இங்கிலாந்து நாட்டோடு ஒப்பிட்டுப் பார்த்தால் 14-க்கு 1 என்ற வீதத்தில் தான் இருந்தனர். இயற்கை வளம் ஏராளமாக இருந்தும்கூட மக்களின் வாழ்க்கைத்தரம் சுமாராகத்தான் இருந்தது. இவ்வாறாக, தொழில் வளத்தின் அடிப்படையிலும் உற்பத்தி செய்திருக்கக் கூடிய சாத்தியத்தின்படியும் பார்த்தால் அன்றைக்கிருந்த அமெரிக்கா ஒரு 'பின் தங்கிய நாடு' என்று தான் சொல்ல வேண்டும்.

இருந்த போதிலும், அமெரிக்காவிலிருந்த இந்த நிலைமைகள் அனைத்தும் பொருளாதார முன்னேற்றத்தினால் மாறிவிட்டன; இம்மாறுதலைப் பல்வேறு அளவீட்டுகளைக் கொண்டு நாம் ஆராயலாம்.

**மக்கள்தொகை வளர்ச்சி**

அமெரிக்க நாட்டு மாறுதல்களில் நம் மனதிற்குத் தோன்றும் முதல் மாறுதல் மக்கள்தொகை வியக்கத்தகுந்த அளவிற்கு வளர்ச்சி அடைந்தது தான். 1800 முதல் 1970-க்குள் அந்நாட்டு மக்கள்தொகை 40 மடங்கிற்கு மேல் பெருகி விட்டது. இவ்வளவு துரிதமாக மக்கள்தொகை பெருகியதற்கு இனப்பெருக்கம் மட்டும் காரணமல்ல; பிற நாட்டவர் வந்து அந்நாட்டில் குடியிறங்கியதனாலும் தான் மக்கள்தொகை தீவிரமாகப் பெருகியது. இருந்த போதிலும், இறப்பு வீதத்தைக் காட்டிலும் பிறப்பு வீதம் எவ்வளவோ, அதிகமாக இருந்தது தான் மக்கள்தொகைப் பெருக்கமடைந்ததற்கு மிக முக்கியமான காரணமாகும்[1]. நாம் அறிந்தது போல் அமெரிக்காவின் பொருளாதார நிலை மேம்பட்டும், பொது மக்களின் உடல் நலத்திலும் மருத்துவ வசதியிலும் முன்னேற்றம் ஏற்பட்டும் வந்து கொண்டிருந்ததால், இறப்பு விகிதம் சரிந்து கொண்டே சென்றது. கடந்த நூறாண்டுகளில் அமெரிக்கப்

[1] 19ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 20 நூற்றாண்டின் தொடக்கத்திலும் தான்பெருவாரியான மக்கள் வந்து குடியிறங்கினர். அமெரிக்க நாட்டு மக்கள்தொகை அதிகரித்ததில் சுமார் நான்கில் ஒரு பங்கு முதல் மூன்றில் ஒரு பங்கு வரை அவ்வாறு குடியிறங்கிய மக்களால் தான் அதிகரித்தது. அமெரிக்கப்பொருளாதார வளர்ச்சியில் இப்படிக் குடியிறங்கிய மக்களால் ஏற்பட்ட விளைவு என்ன என்பதை இப்புள்ளி விவரங்களைக் கொண்டு கூறமுடியாது ; எனினும், உண்மையில் நடந்தது என்னவெனில், அவ்வாறு குடியிறங்கியோரில் ஆண்கள் தான் அதிகம்; அதிலும், அவர்கள் அனைவருமே பெரும்பாலும் தொழில் செய்யக் கூடிய வயது வந்தவர்கள் தான். எனவே, பிறநாட்டவர் வந்து குடியிறங்கியதால் அமெரிக்காவிலிருந்த தொழிலாளர் அதிகமாயினர். அதோடு மட்டுமின்றி, அமெரிக்க நாட்டிலிருந்த தொழில் நிலைமைகளுக்கேற்பத்தான் குடியிறக்கம் நடைபெற்றது; அதாவது, தொழில் செழிப்ப முற்றிருநத காலத்தில் குடியிறங்கியோரும் அதிகமாகி வந்ததால் தொழிலாளர்களுக்கு அவ்வளவாகக் கிராக்கி ஏற்படாமல் போய் விட்டது.

பொருளாதார நிலையும் விஞ்ஞான அறிவும் எந்த அளவுக்கு முன்னேறி, மக்களின் வாழ் நாளை எவ்வளவு அதிகரித்து விட்டது என்பதை 4-1 பட்டியல் காட்டுகிறது; மக்களின் சராசரி வாழ்வு காலம் 30 ஆண்டுகள் அல்லது 70 சதவீதம் அதிகரித்து விட்டது.




வரை படம் 4-1.

வரைபடம் 4-1. அமெரிக்காவின் மக்கள்தொகை- 1800 முதல் 1970 வரை (மூலம்: Elizabeth W. Gilboy and Edgar M. Hoover. "Population and immigration," in Seymour Harris [ed], American Economic History, New York: Mcgraw-Hill, 1961; Statistical Abstract of the United States, 1971 )

பிறப்பு வீதமோ ஒரே சீராக இல்லாமல் சில சமயங்களில் அதிகரித்தும் வேறு சில சமயங்களில் குறைந்து கொண்டும் போயிற்று. சான்றாக 1800ஆம் ஆண்டு முதல் ஒரு சில ஆண்டுகள் வரை பிறப்பு வீதம் மிக அதிகமாகி, பின்னர் 1900 ஆம் ஆண்டு வரை குறைந்து கொண்டே போயிற்று. உள்நாட்டுப் போருக்கு முந்தி பல ஆண்டுகளுக்கு முன்பிருந்து 19 ஆம் நூற்றாண்டின் இறுதி வரை அமெரிக்க நாட்டு மக்கள் திருமணத்தை தள்ளிப் போடுவதிலும் திருமணமான பின்னர் சிறு குடும்பமே போதும் என்பதிலும் நாட்டம் கொண்டிருந்தனர். இவ்விதமான மனப் போக்கை முன்னேற்றமடைந்துள்ள எல்லா நாடுகளிலுமே காணலாம். எனவே, ஒரு நாடு தொழில்மயமாவதனால் தான் இவ்வித மனப்போக்கை மக்கள் பெறுகின்றனர் என்று சொல்லப்

படுகிறது.[2] இந்த 20 ஆம் நூற்றாண்டிலும் அமெரிக்காவின் பிறப்பு வீதம் ஒரே சீராக இல்லாமல் அதிகரித்தும் குறைந்தும் வந்துள்ளது. சான்றாக 1910 ஆம் ஆண்டில் பிறப்பு வீதம் அதிகமாக, அதாவது 1000-க்கு 30 என்று இருந்தது; பின்னர் 1930-39 இல் 18 ஆகக் குறைந்து, அதன் பின் மறுபடியும் 25-க்கு அதிகரித்தது. 1955-க்குப் பின்னர் மறுபடியும் குறைந்து, 1970 இல் 1000-க்கு

### பட்டியல் 4-1.

**அமெரிக்காவில் மக்களின் வாழ்வு காலம் அதிகரித்து வந்துள்ளது**

| ஆண்டு | | பிறந்தது முதல் ஆணும் பெண்ணும் சராசரி வாழும் காலம், ஆண்டுகள்* |
|---|---|---|
| 1850 | ... | 39.4 |
| 1878-1882 | ... | 42.6 |
| 1890 | ... | 43.5 |
| 1900-1902 | ... | 49.24 |
| 1909-1911 | ... | 51.49 |
| 1919-1921 | ... | 56.40 |
| 1929-1931 | ... | 59.20 |
| 1939-1941 | ... | 63.62 |
| 1949-1951 | ... | 68.07 |
| 1954 | ... | 69.6 |
| 1963 | ... | 69.6 |
| 1968 | ... | 70.2 |

* 1850, 1878-1882, 1890 ஆகிய ஆண்டுகளின் விவரம் மசாசூட்டஸ் மாநிலத்திற்கு மட்டும் உரியன.

ஏனைய தொழில் வளமிக்க நாடுகளில் உள்ளதைப் போன்று. அமெரிக்காவிலும் பொருளாதார முன்னேற்றத்தின் விளைவாக கடந்த 100 ஆண்டுகளில் மக்களின் சராசரி வாழ்வு காலம் வியக்கத் தகுந்த அளவிற்கு அதிகரித்துள்ளது.

**மூலம்:** Gilboy and Hoover, op cit.; Statistical Abstract of the U.S., 1971.

[2] ஒரு நாடு பொருளாதார வளர்ச்சி அடைந்து விட்டால் அந்நாட்டின் பிறப்பு வீதமும் குறைய முற்படும் என்பதற்குப் பல காரணங்கள் உள்ளன. அவற்றில் சில வருமாறு: 1) கிராமங்களைக் காட்டிலும் நகரங்களில் வாழ்வோர் குழந்தைகளை வளர்த்துப் பராமரிப்பது கடினம்; 2) தொழில் முன்னேற்றம் என்றாலே பெண்களுக்கும் அதிக வேலை வாய்ப்பு என்று தான் பொருள். எனவே, மரபையொட்டி வீட்டிலேயே பெண்கள் தங்கியிருந்து குழந்தைகளுக்குப் பணிவிடை செய்வதற்குப் பதிலாக, பெண்களில் பலர் வெளி வேலைக்குச் செல்லலாம்; 3) வாழ்க்கைத்தரம் உயரும் போது, பெற்றோர் தம் குழந்தைகளுக்கு நல்ல கல்வியும் இன்னும் பிற வசதிகளும் தர விரும்பலாம்; அதனால் சிறு குடும்பமே சீரான வாழ்வு தரும் என்று அவர்கள் கருதலாம்; 4) மேலும் பொருளாதார வளர்ச்சியினால் சிறுவயதிலேயே ஏற்படும் மரணம் குறைக்கப்பட்டு விடுகிறது; எனவே, 2, 3 குழந்தைகள் இருந்தால் போதும் எனக்கருதும் பெற்றோர்கள் அதிகமாகக் குழந்தைகளைப் பெற வேண்டிய அவசியம் இல்லாமல் போய் விடுகிறது. பொதுவாகக் கூறின், வளர்ச்சி குறைந்துள்ள நாடுகளைக் காட்டிலும் வளர்ச்சியடைந்துள்ள நாடுகளில் பிறப்பு வீதம் குறைய முற்படும்.

18.2 என்று ஆகிவிட்டதாகக் கணிக்கப்பட்டுள்ளது. எனினும், அமெரிக்க நாட்டிலுள்ள பிறப்பு வீதம் பின் தங்கியுள்ள பல நாடுகளில் உள்ளதைக் காட்டிலும் கணிசமான அளவு குறைவுதான் என்பது குறிப்பிடத்தக்கது. இரண்டாம் உலகப் போர் முடிந்த சமயத்தில் அமெரிக்காவில் 'குழந்தைப் பெருக்கம்' இருந்தது உண்மைதான் ; ஆனால் இன்றோ அதெல்லாம் பழைய கதை என்றாகி விட்டது.

### எங்கே, எதில், எவ்வளவு நேர வேலை என்பதில் மாறுதல்கள்

19 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்களைக் காட்டிலும் இன்றுள்ள அமெரிக்க மக்கள் நீண்ட ஆயுள் உள்ளவர்கள்; அதோடு மட்டுமின்றி பல்வேறு இடங்களில் பலவிதமான தொழில்களைச் செய்து அதிக ஓய்வு நேரத்தையும் அனுபவித்து வருகின்றனர்.

1800 ஆம் ஆண்டில் அமெரிக்க மக்களில் பெரும்பாலானோர் கிராமப் புறங்களில் தான் வாழ்க்கை நடத்தினர்; ஆனால், இன்று மொத்த மக்கள் தொகையில் நான்கில் மூன்று பகுதியினர் நகர்ப் புறங்களில் வாழ்ந்து வருகின்றனர். ஏனைய தொழில் வளமிக்க நாடுகளைப் போல, அமெரிக்க நாட்டிலும் பொருளாதாரம் முன்னேற முன்னேற நகரங்களும் வளர்ச்சியடைந்தே வந்துள்ளன. இருப்பினும், ஏனைய நாடுகளைக் காட்டிலும் அமெரிக்க நாடு அதிக முன்னேற்றம் அடைந்துவிட்டதால் அந்நாட்டு நகர்ப்புற மக்கள் புதுமாதிரியாக வாழத் தொடங்கிவிட்டனர். அமெரிக்க நகரங்களில் மக்கள் நெருக்கடி அதிகமாகி விட்டதால் நகரங்களின் சுற்றுப் புறங்களில் (அதாவது எல்லையோரப் பகுதிகளில்) வாழும் பழக்கம் தற்போது அதிகரித்து விட்டது என்பதை 4-2 பட்டியல் காட்டுகிறது. நகரங்களின் மத்தியில் வாழ்வதைக் காட்டிலும் ஓரமாக வாழ்வோரின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது.

பட்டியல் 4–2.

அமெரிக்காவில் கிராம நகர்ப் புறங்களின் வாழ்க்கை

| கீழ்க்கண்ட இடத்தில் வாழும் மக்களின் சதவீதம் | ஆண்டு | | |
|---|---|---|---|
| | 1950 | 1960 | 1970 |
| நகர்ப் புறங்களில் | 64.0 | 69.9 | 73.5 |
| நகர எல்லைக்குள் | 45.0 | 53.5 | 58.3 |
| நகரின் மத்தியில் | 32.0 | 32.3 | 31.5 |
| நகரின் ஓரத்தில் | 13.8 | 21.1 | 26.8 |
| நகரத்தைச் சுற்றி வெளியில் | 18.2 | 16.4 | 15.2 |
| கிராமப்புறங்களில் | 36.0 | 30.1 | 26.5 |

மூலம் : Statistical Abstract of the U.S., 1971.

அமெரிக்க மக்கள் செய்து வந்த தொழில்களும் மாறிவிட்டன; ஆதலால் கிராமப் புறங்களில் வாழ்ந்து வந்தோர் நகர்ப்புறங்களுக்குக் குடியேறி விட்டனர். ஒரு நாட்டில் கிராமப் புறங்களிலிருந்து பெரும்பாலான மக்கள் நகர்ப்புறங்களுக்குக் குடிபெயர்ந்து விட்டாலே அந்நாடு முன்னேற்றமடைந்து விட்டதாக ஒரு சிலர் வாதாடுவர். இந்த வாதத்தின்படி பார்த்தால் கூட அமெரிக்க நாடு எவ்வளவோ தூரம் முன்னேறிவிட்டது என்பது தெளிவாகும். 1800 ஆம் ஆண்டிலிருந்த தொழிலாளரில் 80 சதவீதம் பேர் விவசாயத்தில் ஈடுபட்டிருந்தனர்; இன்றோ விவசாயத் தொழில் செய்வோர் குறைந்து கொண்டே வந்து 5 சதவீதம் பேர் கூட இல்லை என்றாகி விட்டது. இப்போது இன்னும் கூட குறைந்து கொண்டு வருகிறது. அமெரிக்க நாட்டுப் பண்ணைகளில் பயன்படுத்துவோர் யாருமின்றி சும்மா கிடக்கும் உற்பத்திச் சக்தி கணிசமான அளவுக்கு அதிகரித்து விட்டது என்பதே புரட்சிகரமான இம் முன்னேற்றத்திற்குச் சிறந்த சான்றாகும்.

விவசாயத்தில் வேலை செய்து வந்த தொழிலாளரின் சதவீதம் மிகப் பெருமளவில் குறைந்து வந்த அதே சமயத்தில், இதரத்




வரை படம் 4—2.

அமெரிக்காவில் விவசாயம் சாராத வேலைகளில் ஈடுபட்டிருந்தோரின் விவரம். 1919—1972.

(மூலம்: Employment and Earnings, June, 1972, பக்கம் 49.)

தொழில்களில் ஈடுபட்டிருந்தவர்களின் சதவீதம் பெருமளவிற்கு அதிகரித்து வந்தது என்பதை 4-3 பட்டியலும் 4-2 வரைபடமும் காட்டுகின்றன. பொருள்களை உற்பத்தி செய்யும் துறைகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது, (அரசாங்கத் துறைகளிலும் தனியார் துறையிலும்) பணிசெய் துறைதான் அதிகமாக வளர்ச்சி அடைந்து வந்துள்ளது. கடந்த 20 ஆண்டுகளில் நீலக் காலர் (Blue Collar) பணியாள்களைக் காட்டிலும் வெண்ணிறக் காலர் (White Collar) பணியாள்கள் தான் அதிகமாகி விட்டனர். சுருங்கக் கூறின்,

## பட்டியல் 4-3.

## அமெரிக்கத் தொழிலாளரின் வேலைகளில் மாறுதல்கள், 1950—1970.

| | | வேலையில் அதிகரித்துள்ள (+) அல்லது குறைந்துள்ள (—) சதவீதம் 1950—1970. |
|---|---|---|
| வெண்ணிறக்காலர் பணியாளர் | ... | + 70.1 |
| பணி செய்வோர் | ... | + 49.2 |
| நீலக்காலர் பணியாளர் | ... | + 18.0 |
| பண்ணைத் தொழிலாளர் | ... | — 58.1 |

மூலம் : Collin Clark, Condition of Economic Progress, 3rd Ed,. (London, 1957) பக்கம் 519-520. 1970 U.S. Statistical Abstract இல் இலண்டனிலுள்ள Macmillan கம்பெனியின் அனுமதியுடன் மறுபடியும் அச்சிடப் பட்டுள்ளது.

அமெரிக்க மக்கள் செய்து வரும் வேலைகளின் இயல்புகள் மட்டுமின்றி, அவர்கள் வாழும் இடங்கள் கூட மாற்றமடைந்து வந்துள்ளது.

அடுத்து, அமெரிக்க நாட்டு மக்கள் வேலை செய்யும் நேரம் குறைந்து விட்டது என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. அதாவது, அமெரிக்க நாட்டின் முன்னேற்றத்தின் விளைவாக, ஓய்வு நேரம் அதிகரித்துள்ளது. கடந்த 150 ஆண்டுகளுக்கு முன்னர் வாரத்திற்கு 6 நாட்கள் வேலை செய்தனர் அமெரிக்கத் தொழிலாளர்; இன்றோ 5 நாள்கள் மட்டுமே வேலை செய்கின்றனர். அதோடு, சூரியன் தோன்றிய நேரம் முதல் மறையும் நேரம்

வரை அன்று வேலை செய்தனர்; இன்றோ ஒரு நாளைக்கு 8 மணி நேரம் அல்லது அதற்கும் குறைவாகத்தான் வேலை செய்கின்றனர். சான்றாக, அதிகபட்ச வேலை நேரத்தை எடுத்துக் கொண்டால் 1870–ல் வாரத்திற்கு 67 மணி என்றிருந்தது; ஆனால் 1920இலோ அதிகப்பட்ச வேலை நேரம் 46.3 ஆகக் குறைக்கப்பட்டது; 1970 இல் அதிகப்பட்ச வேலை நேரம் 40 மணி தான் என்று குறைக்கப் பட்டுள்ளது. இது மட்டுமின்றி, வார விடுமுறை என்றும் சில தொழில்களில் கோடை விடுமுறை என்றும் விடுமுறை நாட்கள் எவ்வளவோ அதிகரித்துள்ளன. மற்றொன்றையும் நாம் மறந்துவிடக் கூடாது. அதாவது, இன்றைய இளைஞர் களில் பலர் மேல் படிப்பிற்காகச் சென்று விடுவதால், முன்னைவிட அதிக வயதில் தான் இன்று வேலையில் சேர்கின்றனர். மேலும் முன்பெல்லாம் ஓய்வெடுக்கக்கூடப் போதுமான நேரமின்றி கஷ்டப் பட்டுப் பாடுபட்டனர். இன்றோ அப்படியல்ல. முன்னேற்றத் தின் விளைவாக, ஓய்வு நேரம் அதிகரித்துள்ளதால், அந்த ஓய்வு நேரத்தில் என்ன செய்வது என்பதுகூடப் பிரச்சினையாக உள்ளது. எனவே, இப்பிரச்சினையைத் தீர்க்க, பெரிய தொழில்களில் வழிவகை களும் செய்யப்படுகின்றன.

### மொத்த உற்பத்தி, தலா உற்பத்தி அதிகரிப்பு

இறுதியாக, கடந்த நூறாண்டுகளுக்கு முன்பிருந்தே, அமெரிக்க நாட்டின் உற்பத்தி எவ்வளவோ பெருகி வந்துள்ளது. நவீனப் பொருளாதார முன்னேற்றம் என்றாலே தலா ஒவ்வொருவரும் செய் கின்ற உருப்படியான பொருள் உற்பத்தி அதிகரித்து விடுகின்றது என்பதுதான் மிக முக்கியமானது.

அமெரிக்க நாட்டின் மொத்த உற்பத்தியும் தலா உற்பத்தியும் எந்த அளவுக்கு அதிகரித்துள்ளன என்பதை 4-4 பட்டியலும், 4-3 வரைபடமும் காட்டுகின்றன. இவ்வரை படங்கள் குறிப்பாக எதைச் சுட்டிக் காட்டுகின்றன?[3]

[3] இவ்வரை படங்களிலிருந்து நாம் என்னென்ன தெரிந்து கொள் கின்றோம் என்பதைக் காணும்போது பின்வரும் விவரங்களையும் மனதில் கொள்ள வேண்டும்.

(அ) மொத்த உற்பத்தியைக் குறிப்பிடும் புள்ளிவிவரங்கள் நாட்டின் மொத்த உற்பத்தியைப் (GNP) புலப்படுத்துகின்றன. நாட்டின் மொத்த உற்பத்தியைக் (GNP) குறிப்பிடும் இப்புள்ளி விவரங்கள் அனைத்தும் குறிப்பிட்டதோர் ஆண்டில் மொத்த மூலதன இருப்பில் புதிதாகச் சேர்க்கப் படும் மூலதனம் எவ்வளவு என்பதையும் சேர்த்துக் காட்டுகின்றன; ஆனால் ஒன்று, அவ்வாண்டில் இயந்திர தேய்மானங்களையோ முற்றிலும் தேய்ந்து உற்பத்திக்கே உதவாத இயந்திர தளவாடங்களையோ சரிக்கட்டுவதற்

### பட்டியல் 4-4

### அமெரிக்காவில் 1839-1959 வரை மொத்த உற்பத்தி, தலா உற்பத்தி, மக்கள்தொகை ஆகியவற்றில் ஏற்பட்ட வளர்ச்சி

(ஒவ்வொரு ஆண்டிலும் ஏற்பட்ட சராசரி வளர்ச்சி சதவீதம்)

| | 1839-1959 முழுவதிலும் | 1899-1879 | 1879-1919 40ஆண்டு களுக்கு | 1919-1959 |
|---|---|---|---|---|
| நாட்டின் மொத்த உற்பத்தி | 3.66 | 4.31 | 3.72 | 2.97 |
| மக்கள்தொகை | 1.97 | 2.71 | 1.91 | 1.30 |
| தலா உற்பத்தி | 1.64 | 1.55 | 1.76 | 1.64 |

மூலம் : அமெரிக்கக் காங்கிரஸ் பொதுப் பொருளாதாரக் குழுவிடம் பேராசிரியர் ரேய்மாண்ட் கோல்ட் ஸ்மித் (Prof. Raymond Goldsmith) அவர்கள் கொடுத்த அறிக்கையிலிருந்து எடுக்கப்பட்டது. இவ்வறிக்கை Staff Report on Employment, Growth and Price levels (1959) என்ற அறிக்கையில் வெளிவந்துள்ளது.

4-4 பட்டியலில் கோல்ட் ஸ்மித் அவர்கள் தத்துள்ள இப்புள்ளி விவரங்களிலிருந்து நாம் அறிந்து கொள்ளும் விவரங்கள் வருமாறு:

1) 1839 முதல் 1959 வரையிலான 120 ஆண்டுகளில் அமெரிக்க நாட்டின் மொத்த உற்பத்தியும் தலா உற்பத்தியும் ஒரே சீராக அதிகரிக்க வில்லை; எனினும், இவ்விரண்டுமே அதிகரித்துக் கொண்டேதான் வந்துள்ளன.

கான மூலதன உற்பத்தியை நாட்டின் மொத்த உற்பத்திக் கணக்கில் நாம் சேர்ப்பதில்லை. எனவே, மொத்த மூலதன இருப்பில் புதிதாகச் சேர்க்கப் படுவது எவ்வளவு என்பதை அளவிடுவதைக் காட்டிலும் அந்நாட்டின் மொத்த உற்பத்தி எவ்வளவு அதிகரித்துள்ளது என்பதை அளவிடுவதுதான் எளிது. இருந்த போதிலும், நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தைத் தோராயமாக அளவிட முற்படும் போது. இவ்வித வேறுபாடுகளால் நமது அளவீடு அதிகமாகப் பாதிக்கப்பட்டுவிடாது.

(ஆ) இந்த அளவீடுகள் 1929 அல்லது 1958 ஆம் ஆண்டின் விலைகளின், அடிப்படையில் கணிக்கப்பட்டுள்ளன. அதனால் விலைவாசிகள் ஏறுவதால் மொத்த உற்பத்தி எவ்வளவு அதிகரித்து விடுகின்றன என்பதை நாம் புறக்கணித்து விடுகின்றோம். இவ்வாறாக. குறிப்பிட்டதோர் ஆண்டில் (1929 அல்லது 1958 இல்) நிலவிய விலை வாசிகளை நாம் அளவு கோலாகக் கொண்டுள்ளோம்.

(இ) இறுதியாக, இங்கிலாந்து நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தை நாம் ஆராய்ந்த போது, இவ்விதமான புள்ளி விவரங்களைப் பற்றிச் செய்த எச்சரிக்கைகளையும் நாம் மறந்துவிடக் கூடாது. குறிப்பாக இவ்விதப் புள்ளி விவரங்களைச் சேகரித்து அளவிடும்போது என்னென்ன குறைபாடுகளெல்லாம் எழுகின்றன என்பதை நாம் எண்ணிப்பார்க்க வேண்டும். எனவே இப்புள்ளி விவரங்கள் தரும் முடிவுகள் தோராயமானது தான் என்பது குறிப்பிடத்தக்கது.

2) இந்த 120 ஆண்டுகளில் நாட்டின் மொத்த உற்பத்தி அதிகரித்துள்ள வீதம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து வந்துள்ளது என்பதும் தெளிவு. அதாவது சராசரி ஆண்டொன்றுக்கு (1839–1879) 4.31 சதவீதமாக இருந்த அதிகரிப்பு (1879-1919) 3.72 சதவீதத்திற்குக் குறைந்து, பின்னர் (1919-1959) 2.97 சதவீதமாகக் குறைந்து விட்டது.

3) அப்படியிருந்தும், தலா உற்பத்தி அதிகரிப்புக் குறைந்து விடாமல் 1.64 வீதத்தில் அப்படியே இருந்துள்ளது. 120 ஆண்டுகளில் ஆண்டொன்றுக்குச் சராசரியாக எத்தனை சதவீதம் தலா உற்பத்தி அதிகரித்துள்ளதோ அதே வீதத்தில் தான் 1919–1959 இலும் அதிகரித்துள்ளது. இதிலிருந்து என்ன தெரிகிறதென்றால் மக்கள்தொகை வளர்ச்சி வீதம் குறைந்து விட்டதால் தான் தலா உற்பத்தி அதிகரிப்புக் குறையாமல் மொத்த உற்பத்தி வளர்ச்சிவீதம் மட்டும் குறைந்து விட்டது என்பது தான்.

4) தலா உற்பத்தி ஆண்டொன்றுக்குச் சராசரி 1 64 சதவீதம் வளர்ச்சி பெற்று வந்துள்ளது வியப்பானது தான். எந்த நாட்டின் வரலாற்றிலுமே இந்த அளவுக்கு அதிகரித்தது கிடையாது. இப்படி




வரை படம் 4–3

அமெரிக்க நாட்டு மொத்த உற்பத்தி, தலாஉற்பத்தி வளர்ச்சி, 1910—1970.
(மூலம்: அமெரிக்க அரசாங்க வணிகத்துறை.)

அதிகரித்துக் கொண்டே போனால் தலா உற்பத்தி 43 ஆண்டுகளில் இரண்டு மடங்காகி விடும்; அதாவது, 100 ஆண்டுகளில் 5 மடங்கு அதிகரித்துவிடக் கூடும் என்று தான் தோன்றுகிறது. (அப்படி யென்றால் அமெரிக்கக் குடும்பத்தின் சராசரி வருமானம் இன்று 10,000 டாலர்களென்று வைத்துக் கொண்டால் கூட, இன்னும் 100 அல்லது 200 ஆண்டுகளில் சராசரி வருமானம் எந்த அளவுக்கு அதிகரித்து விடும் என்பதை நீங்களே கணக்குப் பார்த்துக் கொள்ளுங்கள்.

அமெரிக்க அரசாங்க வணிகத்துறை வெளியிட்டுள்ள புள்ளி விவரங்கள் கூட இம் முடிவை உறுதி செய்வதாகவே உள்ளன அப்புள்ளி விவரங்களைக் கொண்டு வரையப்பட்டது தான் 4-3 வரைபடம். வணிகத்துறை தந்துள்ள புள்ளி விவரங்களின் படி, 1910 முதல் 1970 வரை அமெரிக்க நாட்டின் தலா உற்பத்தி 170 சதவீதம் அதிகரித்துள்ளது. அதோடு, 1960 முதல் 1970 வரை யிலான 10 ஆண்டுகளில் அமெரிக்காவின் தலா உற்பத்தி மட்டு மின்றி மொத்த உற்பத்தியும் வெகு வேகமாக வளர்ச்சி பெற்றுள்ளது என்பதும் தெளிவாகத் தெரிகிறது.

நவீனத் தொழில் முன்னேற்றத்திற்கான சக்திகள் எவ்வளவு வலிமை பெற்றுள்ளன என்பதைதான் இவ்வரை படங்களும் புள்ளி விவரங்களும் காட்டுகின்றன. இன்றைய அமெரிக்காவில் வாழ்வதே சலிப்பாகவும் தொந்தரவாகவும் உள்ளதென்பது உண்மைதான்; ஆனால் அதே சமயம், அமெரிக்காவின் பொருளாதார முன்னேற்றத் தினால், உலக வரலாறே இதுவரை காணாத அளவுக்கு அந்நாட்டு மக்கள் நீண்ட ஆயுளும் அதிக ஓய்வும் பெற்று வாழ்ந்து வருவ தோடு, நிறைந்த செல்வமும் பெற்று வசதியாக வாழ்க்கை நடத்தி வருகி்றனர் என்பதையும் எவரும் மறுக்க முடியாது.

## வரலாறு காணாத அளவுக்கு இம் முன்னேற்றம் ஏற்பட்டதெப்படி?

சீரும், சிறப்பும், செல்வமும், ஓய்வும் நிறைந்த வாழ்க்கையால் ஒருசில பிரச்சினைகளும் ஏற்பட்டுள்ளன. 100 அல்லது 200 ஆண்டுகளுக்கு முன்னர் அமெரிக்க மக்கள் எவ்வளவு மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனரோ அதைவிட மகிழ்ச்சியாக இன்று வாழ்கின்றனரா? அல்லது அந்த அளவுக்காகிலும் மகிழ்ச்சி கொண்டு வாழ் கின்றனரா? செல்வம் கொழிக்கும் அமெரிக்க நாட்டு மக்களுக்கு மன நிறைவாகிலும் உண்டா? பொருளாதார முன்னேற்றம் அடைந்துள்ள அமெரிக்காவில் அறநெறியாளர் எழுப்பும் இப்பிரச் சினைகள் நியாயமானவைதான்.

ஆனால், இப்பிரச்சினைகளுக்கும் பொருளாதாரத்திற்கும் நேரடியான தொடர்பு கிடையாது. பொருளாதார வளர்ச்சி அமெரிக்க நாட்டு மக்களின் வாழ்க்கையில் எவ்வளவோ மாறுதல்களை ஏற்படுத்தியுள்ளது என்பது மறுக்க முடியாத உண்மை. ஆனால் அம்முன்னேற்றம் நல்லதா என்ற அறநெறியியல் சார்ந்த பிரச்சினைகளை ஆராய்வதற்கு இங்கு இடம் கிடையாது. சமூக பொருளாதார முக்கியத்துவம் பெற்றுள்ள இந்த முன்னேற்றத்தைப் பற்றி ஆராயும் பொறுப்புச் சமூக அறிவியலைச் சார்ந்தது. எனவே, அமெரிக்க நாட்டின் பொருளாதார வளர்ச்சியின் சாதனைகள் எப்படிச் சாத்தியமாயின.

தொன்மைப் பொருளாதார இக்கட்டிலிருந்து தப்பித்தல்

இப்பிரச்சினையை ஆராய்வதற்கு முதலில் ஒரு கேள்வியை எழுப்புவோம்: தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் கண்ட இக்கட்டான விதியிலிருந்து அமெரிக்கா தப்பித்து வர முடிந்தது எப்படி? அந்நாட்டில் அளவுக்கு மிஞ்சி மக்கள் தொகைப் பெருக்கம் அடைந்தும் குறைந்து செல் விளைவு விதி அங்கு மட்டும் ஏன் செயல்படவில்லை.

இக் கேள்விக்குப் பதில் அளிப்பது மிக எளிது. முதலாவதாக, கடந்த 100 அல்லது 150 ஆண்டுகளாக அமெரிக்க நாட்டில் மக்கள் தொகை பெருகி வந்தது உண்மைதான்; ஆனால் மால்தஸின் விளக்கப்படி அது பெருகவில்லை. பெரும்பாலும், இயல்பான வழியில் மக்கள்தொகை பெருகியது என்று கூற முடியாது; ஏனெனில் பிறப்பு வீதம் அவ்வளவொன்றும் அதிகரித்துவிட வில்லை. அப்படியிருந்தும் மக்கள்தொகை பெருக்கமடைந்ததற்குக் காரணம் அமெரிக்க நாட்டில் மக்கள் வந்து குடியிறங்கியதுதான். அவ்வாறு குடியிறக்கம் நடைபெற்று வந்ததால் உற்பத்திக் காரணிகளும் பெருகிவந்தன. மூலதனம் அதிகரித்தது; அங்காடிகள் விரிவடைந்தன; தொழில் நுட்ப முன்னேற்றம் நடைபெற்றது; இவை எல்லாவற்றையும் விட வேலை செய்ய அதிக நேரம் கிடைத்ததும் குறிப்பிடத்தக்கது.

இரண்டாவதாக, அன்றைய அமெரிக்காவில் சாகுபடி நிலம் வரையறுக்கப் பட்டிருந்ததாகச் சொல்ல முடியாது. ஏனெனில் சுதந்திரப் போர் முடிந்த அடுத்த ஆண்டிலேயே அமெரிக்க நாட்டு எல்லைகள் விரிவடைந்தன. 1803இல் லூசியானாவை வாங்கியதால் மட்டும் அமெரிக்காவின் பரப்பளவு இரண்டு மடங்கு அதிகரித்துவிட்டது; அதற்கான செலவோ 12 மில்லியன் டாலர்கள் தான். மேலும், உள்நாட்டுப் போருக்கு முன்னர், அமெரிக்கா அண்டைப்

பகுதிகளைத் தொடர்ந்து வாங்கிக் கொண்டும் பெற்றுக் கொண்டும் இருந்தது; ஒருசில சமயங்களில் விட்டுக் கொடுக்க வேண்டியதும் இருந்தது; எனினும், இவற்றின் விளைவாக அதிகரித்த நிலம் மட்டும் ஒரு மில்லியன் சதுர மைலாகும். மொத்தத்தில், 1800 முதல் 1860-க்குள் அமெரிக்காவிற்குச் சொந்தமான நிலப்பரப்பு மூன்று மடங்கிற்கு மேல் அதிகரித்து விட்டது. இதன் விளைவாக,எவ்வளவு வேகமாக மக்கள்தொகை பெருகியும் கூட மக்கள் நெருக்கடி ஏற்பட வில்லை. ஒரு சதுரமைலுக்கு 6·1 என்று இருந்த மக்கள் நெருக்கம் இப்போது 10·6 என்ற அளவுக்குத் தான் அதிகரித்தது. சொல்லப் போனால், 19ஆம் நூற்றாண்டில் இருந்த அமெரிக்கா மக்கள் நெருக் கடி குறைந்த நாடாகத்தான் இருந்து வந்தது.

மேலும், ரிக்கார்டோ அவர்களின் கருத்துப்படி, முதன் முதலில் செழுமையான நிலங்கள் தான் சாகுபடி செய்யப்படும்; பின்னர், மக்கள் தொகை பெருகப் பெருக, வேறு வழியில்லாத காரணத்தால் வளம் குறைந்த நிலங்களும் சாகுபடி செய்யப்பட வேண்டியுள்ளது. ஆனால் அமெரிக்காவிலோ மென்மேலும் சாகுபடிக்குக் கொண்டு வரப்பட்ட நிலங்கள் வளம் குறைந்தவையல்ல. அங்கு முதன் முதலில் குடியேறியவர்கள் நியூ இங்கிலாந்தில் கல்லும் பாறையும் மிகுந்த நிலத்தைத் தான் முதலில் சாகுபடி செய்தனர்; அதன் பின்னர் தான் மத்திய மேற்குப் பகுதியிலிருந்த சமவெளிப் பகுதி யில் வளம் நிறைந்த நிலத்தைச் சாகுபடிக்குக் கொண்டு வந்தனர். அதனால் தான் அமெரிக்கப் பொருளாதார அறிஞர்களில் ஒருவரான ஹென்றி சார்லர் கேரி அவர்கள் (1793-1879), புதிய இடத்திற்குக் குடிசெல்வோர் முதலில் வளம் குறைந்த நிலத்தைச் சாகுபடி செய்த பின்னர் தான் வளமான நிலத்திற்குச் செல்வர் என்று ரிக்கார்டோ வின் கருதுகோளுக்கு நேர்மாறான கருதுகோளைக் கொண்டார். இது, அமெரிக்க அனுபவத்தைப் பொருத்தவரை உண்மைதான்; எனினும், ரிக்கார்டோவின் கருதுகோளைக் காட்டிலும் சிறந்த தென்று கூறமுடியாது.

இறுதியாக, அமெரிக்காவிலிருந்த சூழ்நிலையில், மக்கள் தொகை பெருகியதால் தலா உற்பத்தி குறைந்துவிட வில்லை; மாறாக, தலா உற்பத்தியை அதிகரிக்கப் பல வழிகளில் மக்கள் தொகைப் பெருக்கம் உதவியது. சான்றாக, உள்நாட்டு அங்காடி விரிவடைந்ததற்கு மக்கள் தொகைப் பெருக்கமும் ஒரு காரணமாகும். அப்படி அங்காடி விரிவடைந்ததால் தான் பேரளவில் சிறப்புத் தேர்ச்சியுடன் உற்பத்தி செய்வதில் அமெரிக்கா புகழடைய முடிந்தது. அதோடு, தொழில் முதலீட்டை அதிகரிப்பதற்கான ஊக்கமும் கிடைத்தது. அதன் வாயிலாக வேலை வாய்ப்புகளும் பெருகி,

வேலை நிறைவுள்ள அளவிற்கு நடை முறை உற்பத்தி பெருக முடிந்தது. நிற்க, மக்கள்தொகை வளர்ச்சியினால் 'கண்ணுக்குப், புலனாகாத' 'வகையில் 'X-திறனும்' அதிகரித்து, அமெரிக்க நாட்டினரின் உழைப்புத் திறனும் நிர்வாகத் திறமையும் உயர் வடைந்தன. மாறாக, மக்கள் தொகை வளர்ச்சி அடையாமல் 1800 இல் இருந்த அளவிற்கே இருந்திருக்குமானால் அந்நாட்டு மக்கள் கிழக்குக் கரை யோரமாகப் பரவலாகத் தான் வாழ்ந்திருப்பர்; அப்படி வாழ்ந்திருந்தால் அமெரிக்காவின் முன்னேற்றத்திற்கு ஊக்கமளித்த இடப் பெயர்ச்சியோ இணக்க மனப்பான்மையோ இருந்திருக்க முடியாது. அல்லது புதியதைக் கண்டுபிடிக்க வேண்டுமென்ற ஆர்வம் தோன்ற வழி ஏற்பட்டிருக்காது. அப்படியெல்லாம் இல்லாது இருந்திருந்தால் அமெரிக்கா இவ்வளவு துரிதமாக முன்னேற்றம் அடைந்திருக்கவும் முடியாது.

சுருங்கக் கூறின், அமெரிக்க நாட்டுப்பொருளாதார முன்னேற்றத் திற்கு மக்கள்தொகை வளர்ச்சி ஊக்கமளித்ததேயன்றி, எந்த விதத் திலும் தடையாக இருந்ததில்லை. எனவே, தொன்மைப் பொருளா தார அறிஞர்கள் விட்ட அம்பு அமெரிக்காவைத் தாக்கவில்லை. மாறாக, அந்த அம்பு வேறு திசையில் பறந்து கொண்டு சென்றது.

### தலா உற்பத்தியை அதிகரிக்கச் செய்த காரணிகள்

தொன்மைப் பொருளாதாரப் பிரச்சினையை ஒழித்துக் கட்டு வதற்கு மேற்கண்ட சுருக்கமான விளக்கமே போதும் எனினும் அவ் விளக்கம், அமெரிக்க நாட்டின் முன்னேற்றச் சாதனைகளை முழு மையாக விளக்குவதற்குப் போதுமானதல்ல. சான்றாக, அமெரிக்க உள்நாட்டு அங்காடி விரிவடைந்ததற்கு மக்கள்தொகை வளர்ச்சி அடைந்ததும் ஒரு காரணம் என்பதை மறுப்பதற்கில்லை; எனினும் மக்கள்தொகை வளர்ச்சியினால் தான் அங்காடி விரிவடைந்தது என்று சொல்ல முடியாது. அதேபோல், அமெரிக்காவின் நிலப்பரப்பு விரிவடைந்ததால் குறைந்து செல்விளைவு விதியிலிருந்து அந் நாடு தப்பித்துக் கொள்ளமுடிந்தது என்பதும் ஓரளவிற்கு உண்மை தான்; ஆனால் இதைநாம் மிகைப்படுத்தி விடக்கூடாது. ஏனெனில், 19 ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஒரு பகுதியை அமெரிக்கா இழந்து விட்ட பின்னரும் கூட அந்நாட்டின் தலா உற்பத்தி வீதம் குறைந்து விடாமல் அதிகரித்தேதான் வந்துள்ளது. எனவே, குறைந்து செல் விளைவு விதி செயல்படாமல் போனதற்கு வேறு பல சக்திகளும் இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு.

**மூலதனத் திரட்சி**

அச்சக்திகளில் தொடர்ந்து மூலதனம் திரட்டப்பட்டு வந்ததும் ஒன்றாகும் என்று சொல்லத் தேவையில்லை. அமெரிக்கா ஒரு குடியரசு நாடாக ஆனது முதல் அந்நாட்டின் மூலதன இருப்பு அதிகரித்துக் கொண்டே வந்து, நூற்றுக்கான மடங்கில் பெருகி விட்டது. சொல்லப் போனால் அந்நாட்டு மக்கள் தொகையும் தொழிலாளரும் அதிகரித்ததைக் காட்டிலும் மூலதனம் மிக வேகமாக அதிகரித்தது. சான்றாக 1879-இலிருந்து 1944-க்குள் மூலதனத்திற்கும் ஊழைப்பிற்கு மிருந்த வீதாச்சாரம் மூன்று மடங்கு அதிகரித்தது.[4] அதையடுத்து 1945 முதல் 1965-ச்குள் மறுபடியும் உற்பத்தி செய்யக்கூடிய மூலதனம்[5] இரண்டு மடங்கு பெருகி, பின்னர் (1958 ஆம் ஆண்டின் விலைகளில்) 1.6 டிரில்லியன் டாலராக (ஒரு டிரில்லியன் என்பது நூறாயிரம் கோடி யாகும்)அதிகரித்து விட்டது. கல்வி, சுகாதாரம் போன்ற கண்ணுக்குப் புலனாகாத மூலதனத்தையும் சேர்த்துப்பார்த்தால் 1965இல் அமெரிக்க நாட்டிலிருந்த மூலதனம் 2.6 டிரில்லியன் டாலர் அளவுக்கு அதிகரித்திருக்கும்.[6] பொதுவாகப்

[4] ஏற்கனவே குறிப்பிட்ட Simon Kuznets அவர்களின் "Long Term Changes in the National Product of the United States of America Since 1870" என்ற கட்டுரையிலிருந்து. Income and Wealth Series II என்ற வெளியீட்டில்.

[5] நீடித்துப் பயன்தரும் நுகர்வுப் பொருள்கள், அரசாங்கச் சொத்துக்கள் தனியார் தொழில் மூலதனம் ஆகிய அனைத்தும் கொண்ட மூலதனம்.

[6] William Nordhous and James Tobin, "Is Growth Obsolete" in Economic Growth : Fiftieth Anniversary Colloquium V. National Bureau of Economic Research (New York : Columbia University Press, 1972) பக்கம்-30. Nordhous அவர்களும் Tobin அவர்களும் சேர்ந்து அமெரிக்காவில் இருந்த தனியார், பொதுத்துறைச் சொத்துக்களைக் கொண்ட மொத்த மூலதன இருப்பை மதிப்பீடு செய்துள்ளனர்; இந்த மதிப்பீட்டில் திரும்பவும் உற்பத்தி செய்ய முடியாத விவசாய நிலம், குடியிருக்கும் நிலம், குடியில்லாத நிலம், பொது நிலம், பிறநாட்டிலுள்ள நிகரச் சொத்துகள் ஆகியவற்றையும் மூலதனக் கணக்கில் சேர்த்துள்ளனர். 1965 ஆம் ஆண்டிற்கான அவர்களது மதிப்பீட்டின்படி மூலதன இருப்பு விவரம் வருமாறு :

பில்லியன் டாலர்களில் (1958 விலைகளில்)

| | |
|---|---|
| மறுபடியும் உற்பத்தி செய்யக் கூடிய நிகர மூலதனம் ... ... | 1,676·2 |
| மறுபடியும் உற்பத்தி செய்ய முடியாத மூலதனம் ... ... | 392·4 |
| கல்வி சம்மந்தப்பட்ட மூலதனம் | 879·4 |
| பொது உடல் நலம் ... ... | 121·2 |
| மொத்தம் (1965 இல் அமெரிக்காவில் இருந்த பொதுத்துறை, தனியார் துறைச் சொத்துக்களின் நிகர இருப்பு) ... ... | 3,069.2 |

(இந்த மதிப்பீட்டின் ஆதாரத்தைப் பார்க்க விரும்புவோர் அவர்கள் இருவரின் மதிப்பீட்டின் A 8பட்டியலை அவர்தம் ஆய்வுரையின் 30 ஆம் பக்கத்தில் பார்க்கவும்.)

பார்த்தால் ஒவ்வொரு தொழிலாளிக்கும் சராசரியாக இருந்த இயந்திரம், கருவிகள், கட்டிடங்கள், துணைச்சாதனங்கள் அனைத்தும் தொடர்ந்து அதிகரித்துக் கொண்டே வந்துள்ளது தெரியும். பண்ணைத் தொழிலாளர் களாயிருந்தாலும் சரி, அல்லது ஆலைத் தொழிலாளர்களாயிருந்தாலும் சரி, அவர்கள் பயன்படுத்தி வரும் முதற்கருவிப் பொருள்கள் தொடர்ந்து அதிகரித்து வந்துள்ளன. அதோடு மட்டுமின்றி, வீட்டுப் பெண்மணிகள் பயன்படுத்தக் கூடிய எத்தனையே விதமான இயந்திர சாதனங்களும் பிற உடைமைப் பொருள்களும் கூட எவ்வளவோ அதிகரித்து விட்டன. இதனால் உடல் உழைப்பு எவவ்ளவோ குறைக்கப்பட்டு, எல்லாம் இயந்திர சாதனங்களால் செய்யப்பட்டு வருகிறது.

அமெரிக்க நாட்டின் மூலதன இருப்பு எத்தனையோ வழிகளில் பெருகி வந்தது. பொருளாதார முன்னேற்றம் தொடங்கிய காலத்தில் பிற நாடுகளிலிருந்தும் சிறிதளவு மூலதனம் வந்து சேர்ந்தது. சான்றாக, 1860 முதல 1830 வரை இரயில் பாதைகளை அமைப் பதற்குப் பயன்படுத்தப்பட்ட மூலதனம் பெரும் பாலும் பிறநாடுகளி லிருந்துதான் வந்தது. சொல்லப்போனால், 19–ஆம் நூற்றாண்டு முழுவதும் அமெரிக்க நாடு ஏனைய நாடுகளிலிருந்து தான் பெரும் பாலான மூலதனத்தை இறக்குமதி செய்து வந்தது.

அடுத்து, மத்திய, மாநில, தல அரசுகள் கூட மூலதனத்தைத் திரட்டுவதில் பல வழிகளில் உதவி செய்து வந்தன. சான்றாக, புகழ்மிக்க எரி கால்வாயை நியூயார்க் அரசாங்கமே சொந்தச் செலவில் கட்டி முடித்தது. அதே போல் 1860 இல் 9,000 மைல் நீளமுள்ள தென்பிராந்திய ரயில்பாதை கட்டி முடிக்கப்பட்டது ; அதற்கான 245 மில்லியன் டாலர் செலவில் 60 சதவீத நிதியை அரசாங்கமே வழங்கியது. இவ்வாறாக, பொதுப் பணிகளைச் செய்வதற்கு வேண்டிய மூலதனத்தைப் பெறுவதற்கு அரசாங்கம் எத்தனையோ வழிகளில் உதவி செய்து வந்தது என்பதற்கு இன்னும் எத்தனையோ சான்றுகள் உள்ளன.

இருப்பினும், அமெரிக்க நாடு முன்னேற்றமடைந்துள்ள காலம் முழுவதையும் எண்ணிப் பார்த்தால், அம்முன்னேற்றத்திற்குத் தேவையான மூலதனம் பெரும்பாலும் அந்நாட்டு மக்களாலேயே திரட்டப்பட்டது என்பது தெரியும். குறிப்பாக, தனிப்பட்டவர்களும் தனியார் துறை நிறுவனங்களும்தான் ஏராளமான முதலீடு செய்திருக்கின்றனர். தனியார் துறையிலுள்ள தொழில்கள் தம் சொந்தத் தொழில் சேமிப்பின் வழியாகவோ, அல்லது பங்கு அங்காடிகள், வங்கிகள், தரகர்கள், தனிநபர்களின் சேமிப்பு ஆகிய

வற்றின் மூலமாகவோதான் தமக்கு வேண்டிய இயந்திர தளவாடங்களையும் இதரச் சாதனங்களையும் பெருக்கி வந்தன. அதோடு மட்டுமின்றி, தொழில் நிறுவனங்களும் சரி, பண்ணைகளும் சரி, அல்லது கார்ப்பரேஷன்களும் சரி, தமக்குக் கிடைத்த இலாபத்தில் ஒரு பகுதியை மறுபடியும் முதலீடு செய்வதற்கென்று ஒதுக்கி வந்தன. இவ்வாறாக, அமெரிக்காவிலுள்ள தொழில்கள் பெரும்பாலும் தமக்கு வேண்டிய மூலதனத்தை உள்நாட்டிலேயேதான் திரட்டி வந்தன. இவ்வாறு திரட்டப்பட்ட மூலதனம் தான் ஏனைய வழிகளில் வந்ததைக் காட்டிலும் அதிகம். இன்றும் கூட அப்படித்தான். இன்று, அமெரிக்க நாட்டுக் கார்ப்பரேஷன்கள் தங்களுக்குக் கிடைக்கும் இலாபத்தையும் தேய்மான நிதியையும் கொண்டுதான் தத்தம் முதலீட்டைப் பெருக்கி வருகின்றன.

அமெரிக்க நாட்டுப் பொருளாதாரம் துரிதமாக முன்னேற்றமடைந்து வந்ததால்தான் தனியார் துறைத் தொழில்கள் தமக்கு வேண்டிய மூலதனத்தை உள் நாட்டிலேயே பெற முடிந்தது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. ஒவ்வொரு ஆண்டும் முந்திய ஆண்டைக் காட்டிலும் அதிகமாக உற்பத்தி செய்ய முடிந்ததால் அமெரிக்கமக்கள் தம் நுகர்வுச் செலவைக் குறைத்துக் கொள்ளாமலேயே சேமிப்பையும் முதலீட்டையும் பெருக்க முடிந்தது. அதே போல், அமெரிக்கத் தொழில் நிறுவனங்களும் கார்ப்பரேஷன்களும் வளர்ச்சியடைந்து கொண்டே வந்ததால்தான் மென்மேலும் வளர முடிந்தது. இவ்வாறாக, அமெரிக்க நாட்டின் முன்னேற்றத்தின் போது, உற்பத்தி பெருகிக் கொண்டே வந்ததால்தான் 'மொத்த' மூலதனத்தையும் பெருக்க முடிந்தது.[7]

### போக்குவரத்தும் உள்நாட்டு அங்காடியும்

அமெரிக்க நாட்டு முன்னேற்றத்திற்குக் காரணமான சக்திகளில் மற்றொன்று, 19 ஆம் நூற்றாண்டில் அந்நாட்டில் உருவான பெரிய அங்காடியாகும். உலகம் கண்டிராத அளவுக்கு, எந்நாட்டவரும் தங்கு தடையின்றி வியாபாரம் செய்யக் கூடிய ஒரு பெரிய அங்காடியாக

[7] இங்கு 'மொத்த' என்ற சொல் முக்கியமானது. ஏனெனில், நாட்டின் மொத்த உற்பத்தியில் சேமித்து முதலீடு செய்த விகிதம் அதிகரித்ததாகத் தெரியவில்லை. கடந்த 50 ஆண்டுகளாக மொத்த உற்பத்தியில் முதலீட்டு வீதம் அதிகரிக்காமல் அப்படியே இருந்ததாகவோ ஒரு வேளை குறைந்து போய் விட்டதாகவோதான் தோன்றுகிறது. (சான்று வேண்டுமென்றால் L. R. Klein and R. F. Kosobud அவர்களின் 'Some Econometrics of Growth : Great Ratios of Economics' என்ற கட்டுரையைப் பார்க்கவும். இக்கட்டுரை 1961 மே மாதம் வெளிவந்துள்ள Quarterly Journal of Economics, Vol. LXXV. No. 2 என்ற இதழில் வெளி வந்துள்ளது.) சுருங்கக் கூறின், அமெரிக்க நாட்டு முன்னேற்றத்தின் போது, அந்நாட்டின் மொத்த உற்பத்தி எவ்வளவு விரைவாக அதிகரித்ததோ அந்த அளவுக்கு (அல்லது ஒரு வேளை அதைக் காட்டிலும் அதிக அளவுக்கு) அந்நாட்டவரின் நுகர்வும் அதிகரித்தே வந்துள்ளது.

அமெரிக்கா அன்று விளங்கியது. இதுபோன்ற பெரிய அங்காடியை உருவாக்கும் நோக்கத்துடன் தான் ஒன்றோடொன்று மாறுபட்டிருந்த ஐரோப்பிய நாடுகளெல்லாம் ஒன்றுசேர்ந்து ஐரோப்பிய பொது அங்காடி என்ற பெயரில் மாபெரும் அங்காடியை இன்று உருவாக்கியுள்ளன ; தமக்குள் பொருளாதார ஐக்கியத்தையும் வியாபார ஒப்பந்தத்தையும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டுமென்பதுதான் இந்த அங்காடியின் முக்கிய குறிக்கோளாகும்.

அமெரிக்காவில் தோன்றிய மாபெரும் தேசிய அங்காடி பல்வேறு காரணிகளால் உருவாக்கப் பட்டதாகும். மக்கள்தொகை வளர்ச்சி, சாதகமான அரசியல் சூழ்நிலை, புவியியல் சூழ்நிலை, மக்களின் வருமான உயர்வு ஆகிய அனைத்தும் அப்பெரிய தேசிய அங்காடி தோன்ற உதவியாயிருந்தன. இவையெல்லாவற்றைக் காட்டிலும் முக்கிய காரணியாக அமைந்தது, அந் நாட்டில் ஏற்பட்ட போக்குவரத்து முன்னேற்றம் ; அதிலும், இரயில் போக்குவரத்து முன்னேற்றமடைந்ததுதான் குறிப்பிடத்தக்கது.

அமெரிக்க நாடு முழுவதுமே இரயில் போக்குவரத்து வசதிகளைப் பெறவேண்டுமென்பதற்காக, 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அமெரிக்க மக்கள் பெரு முயற்சி செய்தனர்; அவர்கள் செய்த முயற்சியும் காட்டிய ஆர்வமும் ஈடு இணையற்றதாகும் என்பது குறிப்பிடத்தக்கது. வேறெதிலுமே அவர்கள் இந்த அளவுக்கு ஆர்வம் காட்டியதில்லை என்றுதான் சொல்ல வேண்டும். இதன் விளைவாக, 1860 முதல் 1900-க்குள் அமெரிக்க நாட்டிலிருந்த இரயில் பாதை விரிவடைந்து ஏறக்குறைய ஆறு மடங்கு (அதாவது 31,000 மைல்களாக இருந்தது 1,93,000 மைல்களாக) அதிகரித்தது. 1860 இலிருந்து 1880 வரை அந் நாட்டின் மொத்த வருமானத்தில் ஏறத்தாழ 10 சதவீதம் இரயில் பாதைகளை அமைப்பதற்கென்று செலவிடப்பட்டது. இதன் விளைவாக, 1900 ஆம் ஆண்டில் ஏனைய எல்லாப் பொறி செய் தொழில்களிலும் இருந்த முதலீட்டைக் காட்டிலும் இரயில்வேயில் செய்யப்பட்டிருந்த முதலீடு அதிகரித்துவிட்டது. 19-ஆம் நூற்றாண்டில் அமெரிக்கா சாதித்த சாதனைகளிலெல்லாம் மிகப்பெரும் சாதனை இதுதான்.

இரயில் போக்குவரத்து ஏற்பட்டதால் எத்தனையோ விதமான பலன்கள் தோன்றின. அமெரிக்க நாட்டின் விவசாயம் மட்டுமின்றி, எத்தனையோ வகையான தொழில்களும் மலிவான போக்குவரத்துச் செலவினால் ("புறச்சிக்கனங்கள்" பெற்று) பலனடைந்தன. இரயில் பாதைகளை அமைப்பதற்குத் தேவைப்பட்ட பொருள்களுக்குத்

தேவை விரிவடைந்தது; அதனால் அப்பொருள்களை உற்பத்தி செய்த தொழில்கள், குறிப்பாக, இரும்பு எஃகுத் தொழில் துரிதமாக முன்னேற்றமடைந்தது. இரயில் போக்குவரத்து அமெரிக்க நாட்டையே ஒன்றுபடுத்தி விட்டதோடு, அந்நாட்டின் ஒவ்வொரு பகுதியும் ஏதாவதொன்றில் சிறப்புத் தேர்ச்சி பெற வழி செய்தது. அதோடு மட்டுமின்றி, பெரிய அளவுத் தொழில்களும் ஏராளமாக உற்பத்தி செய்யும் தொழில்களும் வளர்ச்சி பெற முடிந்தது. மேலும், ஒருசில பகுதிகள் பொருளாதார முன்னேற்றத்தைத் தொடங்குவதற்கே இரயில் போக்குவரத்துத்தான் காரணமாயிருந்தது, சான்றாக, மேற்கு எல்லையோரப் பகுதியில் இரயில் போக்குவரத்திற்குப் போதுமான தேவை இல்லாமல் இருந்தும் கூட அப்பகுதியிலும் இரயில் பாதைகள் அமைக்கப்பட்டன; அதனால் அப்பகுதியும் முன்னேறத் தொடங்கியது. ஒரு வேளை, இரயில் பாதைகள் அங்கு அமைக்கப்படாமல் இருந்திருந்தால் அப்பகுதி முன்னேற்றமடைந்திருப்பது கடினம்.

இரயில் போக்குவரத்து முன்னேற்றத்தினால் அமெரிக்கப் பொருளாதார வளர்ச்சியில் ஏற்பட்ட விளைவுகளைப் பற்றி வரலாற்று அறிஞர்கள் எத்தனையோ ஆண்டுகளாக விவரித்து வந்திருக்கின்றனர். எனினும் அவ்விளைவுகளைத் திட்டவட்டமாக அளவீட்டு முறையில் மதிப்பிட்டுக் கூறும் முயற்சிகள் இப்போதுதான் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இவ்வாறு அளவிட்டுக் கூறும் ஆய்வு 'புதுப் பொருளாதார வரலாறு' ("New Economic History") என்று ஒரு சிலரால் அழைக்கப்படும் வரலாற்றில் ஒரு பகுதியாகும். புள்ளி விவரங்களுடன் அளவிடக்கூடிய பொருளாதாரக் கோட்பாட்டின் ஆய்வைத்தான் புதுப்பொருளாதார வரலாறு என்றழைக்கின்றனர். இவ்வகையான புது வழிமுறையில் ஆராயும் ஆய்வு ஒரு புதிய தனிப்பாடமாகக் கருதப்படுவதற்கு உரியதா என்பது சர்ச்சைக்குரியது; எனினும் அது தனிப்பாடமாக வளர்ச்சி அடைவதற்குரிய வாய்ப்பு உண்டு என்று வாஷிங்டன் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டக்ளஸ் சி. நார்த் (Douglass C. North) போன்ற பல அறிஞர்கள் நினைக்கின்றனர். எஃது எப்படியிருப்பினும், இரயில் போக்குவரத்தைப் பொருத்தவரை, அப்போக்குவரத்து வசதியால் ஏற்படும் பொருளாதார விளைவுகளை வரலாற்றறிஞர்கள் மிகைப்படுத்திக் கூறி வந்துள்ளதாகவே தெரிகிறது. இரயில் போக்குவரத்தினால் கணிசமான அளவுக்கு முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது என்பது உண்மைதான்; எனினும், வரலாற்று அறிஞர்கள் கூறியுள்ளதைப்போல் அவ்வளவு பிரமாண்டமான முன்னேற்றம் ஏற்பட்டுவிட வில்லை என்றே தோன்றுகிறது. சான்றாக, அமெரிக்க நாட்டில் இரயில் போக்குவரத்து வசதிகளால்

1890 ஆம் ஆண்டில் 5 முதல் 10-15 சதவீதம் வரைதான் சாதனங்கள் மிச்சப்படுத்தப்பட்டன என்று அண்மையில் மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சியிலிருந்து அறிய வருகிறோம். கடந்த பல ஆண்டுகளாக அறிஞர்கள் கற்பனை செய்து வந்த அளவோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இச்சிக்கனம் குறைந்த அளவுதான்; எனினும் இதுகூட சமுதாயத்திற்கு முக்கியத்துவம் வாய்ந்த சிக்கனம் என்றுதான் சொல்ல வேண்டும். இப்படிப் பார்த்தால் உள்நாட்டுப் போருக்கு முன்னர் அமைக்கப்பட்ட இரயில் பாதைகள் கூட அன்றைக்கிருந்த தேவையைக் காட்டிலும் அதிகமானவைதான் என்று கூற வேண்டும். அதோடு மட்டுமின்றி, இரயில் பாதைகளை அமைத்ததனால் தான் மத்திய மேற்குப் பிராந்தியங்கள் முன்னேற்றமடைந்தன என்று சொல்ல முடியாது. ஏனெனில் இரயில் பாதைகள் அமைக்கப் படுவதற்கு முன்பே அப்பகுதிகள் முன்னேற்றமடைந்து விட்டன என்று ஒருசிலர் வாதாடுவர். ஆனால் ஒன்றை நாம் மறந்துவிடக் கூடாது. அதாவது, அப்பகுதிக்குக் கிழக்கே ஏற்கனவே இரயில் பாதைகள் அமைக்கப்பட்டு விட்டதால் தான் இந்த மத்திய மேற்குப் பகுதிகள் முன்னேற்ற மடைந்தன. இதற்கு ஒரே ஒரு சான்றை மட்டும் எடுத்துக் கொள்வோம். "இயோவா (Iowa), விஸ்கான்ஸின் ஆகிய இடங்களில் இரயில் பாதைகள் அமைக்கப்படுமுன்னரே, அவ்விடங்கள் முன்னேற்ற மடைந்து வந்தன; எனினும் ஓஹியோவில் ஏற்கனவே இரயில் பாதைகள் இருந்ததனால் தான் இவ்விடங்கள் முன்னேற்ற மடைந்து, தனியார் துறையினர் இவ்விடங்களில் இரயில் பாதைகளை அமைத்தனர்."[8]

சுருக்கமாகக் கூறின், அமெரிக்க நாட்டு இரயில் வேக்களினால் ஏற்பட்ட பொருளாதார விளைவுகளை மதிப்பிடுவது அவ்வளவு எளிய காரியமல்ல; இருந்த போதிலும், இதுவரை நம்பப்பட்டு வந்த அளவுக்கு இரயில்வேக்கள் அவ்வளவு பிரமாண்டமான முக்கியத்துவம் பெற்றவையல்ல என்பது தற்போதைய ஆராய்ச்சிகளிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. எனினும், 19 ஆம் நூற்றாண்டின்போது அமெரிக்காவில் பொருளாதார முன்னேற்

[8] Albert Fishlow அவர்களின் 'American Railroads and the Transformation of the Ante-Bellum Economy' (Cambridge: Harvard University. Press, 1965) நூலில் 204 ஆம் பக்கம். இந்நூலை மட்டுமின்றி, Robert W. Fogel அவர்களின். 'Railroads in American Economic Growth' (Baltimore. Johns Hopkins Press, 1964) என்ற நூலையும் படிக்கவும். அமெரிக்க இரயில்வேக்களின் பொருளாதார முக்கியத்துவத்தை Fishlow அவர்கள் குறைத்துள்ளதைக்காட்டிலும் Fogel அவர்கள்தான் அதிகமாகக் குறைத்து மதிப்பிட்டுள்ளார்கள். மேலும், இரயில்பாதைகளின் முக்கியத்துவத்தை நல்லமுறையில் திறனாய்வு செய்ய விரும்புவோர் Peter D. McClelland அவர்களின், ஆராய்ச்சிக் கட்டுரையான 'Social Rates of Returns on American Railroads in the Nineteenth Century" (Preliminary Discussion paper No. 188, Harvard Institute of Economic Research 1971) என்ற கட்டுரையைப் படிக்கவும்.

றத்தை ஏற்படுத்திய காரணிகளில் மிக முக்கியமானதொன்று இரயில் போக்குவரத்து முன்னேற்றம்தான் என்று திட்டவட்டமாகத் தோன்றுகிறது.

## தொடர்ந்து ஏற்பட்டு வந்த தொழில் நுட்பப் புரட்சி

புதிய தொழில் நுட்பம் படைத்த படைப்புகளில் ஒன்றுதான் இரயில் பாதை; எனினும், தொழில்நுட்ப முறையினால் கண்டு பிடிக்கப்பட்ட புதுமைகள் இரயில் பாதையோடு நின்றுவிட வில்லை. இன்றும் தொடர்ந்து ஏற்பட்டு வரும் தொழில் நுட்பப் புரட்சியும் அமெரிக்க நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்திற்கு முக்கியமானதொரு காரணியாகும்.

ஒருவிதத்தில் பார்த்தால், அமெரிக்க நாட்டில் ஏற்பட்ட தொழில்நுட்ப முன்னேற்றம் அனைத்துமே 18 ஆம் நூற்றாண்டின் போது இங்கிலாந்தில் தொடங்கிய தொழில்நுட்ப வளர்ச்சியின் தொடர்ச்சிதான் என்பது புலனாகும். நூற்கும் ஜென்னியும் நீராவி இயந்திரமும் முதற்கொண்டு பின்னர் வந்த இரயில்பாதை, நீராவிக் கப்பல், தந்தி, தொலைபேசி, மின்சாரம், கார், ரேடியோ, செயற்கைக் கச்சாப்பொருள், அணுசக்தி என்று ஒவ்வொன்றாகக் கண்டுபிடிக்கப்பட்ட புதுமைகள் அனைத்தும் தொடர்ந்து ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றி அமெரிக்க நாடு உற்பத்தி செய்யும் பொருள்களின் தன்மையில் மட்டுமின்றி, அவற்றை உற்பத்தி செய்யும் முறைகளிலும் பிரதிபலித்துக் கொண்டிருக்கின்றன. தொழில் நுட்பப் புரட்சியின் விளைவாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ள இப்புதுமைப் படைப்புகளின் வரிசையில் கணக்கிடும் பிரமாண்டமான கருவியும் (computer) தானே இயங்கும் பொறியும் (automation) மிக அண்மையில் இடம்பெற்றுள்ளன; இவை இரண்டுமே அமெரிக்க நாட்டு வியாபாரத்திலும் தொழில் நடவடிக்கைகளிலும் பிரதிபலித்துக் கொண்டு இருக்கின்றன.

இவ்வாறாக, அமெரிக்க நாட்டின் தொழில்நுட்ப முன்னேற்றம் கடந்தகால நுட்பத்தின் தொடர்ச்சியாக இருந்தபோதிலும், அஃது எந்த அளவுக்கு அந்நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தின் திசையையே மாற்றி அமைத்துவிட்டது என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வளவு வலிமை நிறைந்த தொழில்நுட்ப முன்னேற்றத்தை உருவாக்கிய பல்வேறு காரணிகள் யாவை ? அமெரிக்க நாட்டு மக்களின் கல்வித் தரமும் அறிவும் வளர்ச்சியடைந்து வந்திருப்பதும் ஒரு காரணமாகும். இந்த அதிகாரத்தின் தொடக்கத்தில் நாம் குறிப்பிட்டதுபோல், இதைத்தான் நாம் 'கண்ணுக்குப் புலனாகாத' கல்வி

மூலதனம் என்று அழைக்கின்றோம். கடந்த 70 ஆண்டுகளாகக் கல்வியின் தரம் மட்டுமின்றி கல்வி கற்போரின் சதவீதமும் எவ்வளவோ அதிகரித்துள்ளது என்பதைத்தான் 4-5 பட்டியல் எடுத்துக் காட்டுகிறது. 17 வயது நிரம்பிய வாலிபர்களில் உயர் நிலைப்பள்ளிப் பட்டம் பெற்றவர்களின் சதவீதம் எவ்வளவோ உயர்ந்துள்ளது; 1980 ஆம் ஆண்டிற்குள் இன்னும் அதிகமாக உயர்ந்து விடலாம் என்றே தோன்றுகிறது. உயர் நிலைப் பள்ளிப் பட்டம் பெற்றோரைக் காட்டிலும் முக்கியமானவர்கள் கல்லூரிப் பட்டதாரிகள். அவர்களின் சதவீதம் கூட இந்த 70 ஆண்டுகளில் எவ்வளவோ அதிகரித்துவிட்டதுதான் மிக முக்கியமான நிகழ்ச்சி யாகும். இவ்வாறாக, கல்வி கற்றோரின் வீதம் உயர்ந்து கொண்டே வந்துள்ளதால், அமெரிக்க நாட்டு மக்கள் புதிய தொழில் நுட்பங் களைக் கண்டுபிடிப்பதில் மட்டுமின்றி, சூழ்நிலைக்கேற்ப அவற்றை மாற்றி அமைத்துப் பயன்படுத்துவதிலும் திறன்மிக்கவர்களாக ஆகிக்கொண்டு வருகின்றனர் என்பதில் சந்தேகம் இல்லை.

பட்டியல் 4-5.

**1900-1970 இல் இருந்த உயர்நிலைப்பள்ளி, கல்லூரிப் பட்ட தாரிகளும் 1975 இலும் 1980 இலும் இருக்கக்கூடிய பட்டதாரி களும்.**

| பட்டம் பெற்ற ஆண்டு | உயர்நிலைப்பள்ளி. எண்ணிக்கை (ஆயிரத்தில்) | உயர்நிலைப்பள்ளி. 17 வயதுடையோரில் பட்டம் பெற்றோர் சதவீதம் | கல்லூரி. எண்ணிக்கை (ஆயிரத்தில்) |
|---|---|---|---|
| 1900 | 95 | 6·4 | 27 |
| 1920 | 311 | 16·8 | 49 |
| 1940 | 1,221 | 50·8 | 187 |
| 1950 | 1,200 | 59·0 | 432 |
| 1960 | 1,864 | 65·1 | 592 |
| 1970 | 2,906 | 76·5 | 784 |
| 1975* | 3,507 | 83·9 | 959 |
| 1980* | 3,759 | 89·5 | 1,133 |

* எதிர் நோக்கப்படுவது.

(மூலம்: U.S. Statistical Abstract, 1971.)

இரண்டாவதாக, கடந்த நூற்றாண்டுகளாக தொழில்நுட்ப முன்னேற்றத்தை ஊக்குவிக்கும் வகையில் அமெரிக்க நாடு முறைப் படியான ஆராய்ச்சி செய்வதற்கு முக்கியத்துவம் தந்து, அவ்வாராய்ச்

சிக்கென்று மென்மேலும் செலவிட்டு வந்துள்ளது. நல்ல பயிற்சியோ முறையான கல்வியோ இல்லாமல் ஏதோ தன்னிச்சையாக ஆராய்ச்சி செய்து புதியனவற்றைக் கண்டுபிடிக்கும் ஆற்றல் படைத்தோரும் அமெரிக்காவில் இருக்கக்கூடும்; ஆனால் அப்படிப்பட்ட ஆராய்ச்சியைப்பற்றித் திட்டவட்டமாக ஒன்றும் தெரியாது. அப்படியே தெரிந்தாலும் அவ்விதமான ஆராய்ச்சிகளை மட்டும் நம்பி நாடு முன்னேற முடியாது. எனவே, அமெரிக்க நாட்டில் விஞ்ஞானிகள், பொறியியல் வல்லுநர்கள், திறன் மிக்க தொழில்நுட்ப அறிஞர்கள் என்று பலரைக் கொண்ட நவீன ஆராய்ச்சி நிலையங்கள் எத்தனையோ நிறுவப்பட்டுள்ளன. குறிப்பாக இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர்தான் இவ்வகை ஆராய்ச்சி நிலையங்கள் அதிகமாக ஏற்படுத்தப் பட்டுள்ளன. சான்றாக, யுத்தத்திற்கு முன்னர் இவ்வகை ஆராய்ச்சிக்கென்று செலவிடப்பட்ட தொகை 1 பில்லியன் டாலராகிலும் இருந்திருக்குமா என்பது சந்தேகம்; ஆனால் 1953-இல் 5 பில்லியன் டாலரும், அதன் பின்னர் 1967 இல் 24 பில்லியன் டாலரும் செலவிடப்பட்டுள்ளது. விஞ்ஞான அறிவியல் ரீதியான ஆராய்ச்சிக்கு மட்டுமின்றி, நடைமுறை ஆராய்ச்சிக்கும் அமெரிக்க அரசாங்கம் முக்கியத்துவம் அளித்து வருகிறது. அரசாங்கம் மட்டுமின்றி, எத்தனையோ வகையான தொழில்கள், ஆராய்ச்சி நிலையங்கள், பல்கலைக் கழகங்களும் கூட ஆராய்ச்சியில் அக்கரை காட்டி வருகின்றன. எனினும், 1965 ஆம் ஆண்டிற்குப் பின்னர், ஆராய்ச்சிக்கென்று மென்மேலும் அதிகமாகச் செலவிடப்பட்டு வந்த வீதம் குறைந்து கொண்டு வருகிறது. குறிப்பாக, மத்திய அரசாங்கம் அதிகரித்து வந்த வீதம் குறைந்து விட்டது. ஆனால், அதேசமயம், நாட்டின் பாதுகாப்பு, வானவெளி ஆராய்ச்சி நீங்கலாக ஏனைய ஆராய்ச்சி நடவடிக்கைகளுக்காக மத்திய அரசாங்கம் செய்துவந்த செலவுவீதம் ஓரளவு அதிகரித்துள்ளது.[9]

அமெரிக்க நாட்டு வரலாற்றை எண்ணிப் பார்த்தால், என்றுமில்லாத அளவுக்கு இன்று கல்விக்கும், முறையான ஆராய்ச்சிக்கும் அதிக முக்கியத்துவம் தரப்படுகிறது. இது, அமெரிக்க நாட்டு முன்னேற்றத்திற்கு ஒரு காரணமென்றும் சொல்லலாம், அதே சமயம் அம் முன்னேற்றத்தினால் ஏற்பட்ட விளைவு என்றும் கூறலாம்.

[9] சான்றாக, 1965 ஆம் ஆண்டில் ஆராய்ச்சிக்கும் அபிவிருத்திக்குமென்று மத்திய அரசாங்கம் செய்த செலவில் 84 சதவீதம் பாதுகாப்பு, வானவெளி ஆராய்ச்சிக்காகச் செலவிடப்பட்டது. 1970 இல் 79 சதவீதமாகக் குறைக்கப்பட்டு விட்டது. Edwin Mansfield அவர்களின், 'Technological Change' (W.W. Norton & Company, Inc., New York, 1971) என்ற நூலில் 153 ஆம் பக்கம்.

அன்று, இங்கிலாந்து நாட்டில் ஏற்பட்டு வந்த தொழில்நுட்ப மாறுதல்களைக் கண்டு எத்தனையோ பேர் வியப்படைந்தனர். ஆனால் இன்று அப்படியல்ல. தொழில்நுட்ப மாறுதல்கள் என்பது எல்லா நாடுகளிலுமே நடைபெறுகின்ற அன்றாட நிகழ்ச்சியாகவும் ஒழுங்குபடுத்தப்படக் கூடியதாகவும் ஆகிவிட்டது. எனவே அவற்றின் முடிவுகள் எவ்வளவுதான் வெற்றிகரமாக இருந்தபோதிலும், அவற்றைக் கண்டு மக்கள் வியப்படைவதில்லை.[10] சொல்லப் போனால் 1970 ஆம் ஆண்டிற்குப் பின்னர் ஏற்பட்டு வரும் தொழில்நுட்ப மாறுதல்களைக் கண்டு தொழில்நுட்ப முன்னேற்றமே நின்று விட்டால் என்ன என்று நாம் பயப்படுவதில்லை; மாறாக, தொழில் வளமிக்க நாட்டில் அம் முன்னேற்றத்தினால் மக்களின் வாழ்க்கை எப்படி ஆகிவிடப் போகின்றதோ என்ற பயம்தான் தோன்றுகிறது. ஒரு வேளை நமது வாழ்க்கையே கூடப் பாதிக்கப்பட்டு விடலாம். அந்த அளவுக்கு முன்னேற்றம் ஏற்பட்டுக் கொண்டேதான் இருக்கும். அப்படிப்பட்ட முன்னேற்றம் நல்லதா என்பதுதான் இன்றைக்குள்ள பிரச்சினை.

## அமெரிக்கப் பொருளாதார வளர்ச்சிக்கான காரணிகளின் தராதர முக்கியத்துவத்தை அளவிடுதல்

கடந்த நூறாண்டுகளாக அமெரிக்க நாட்டின் உற்பத்தி வியக்கத்தக்க அளவுக்குப் பெருகிவிட்டதற்கு மேற்கண்ட சக்திகள் செயல்பட்டதும் காரணமாகும். அமெரிக்க நாட்டின் முன்னேற்றத்தைப் பின்னணியிலிருந்து பார்த்தால், சாதகமான அரசியல், கலாச்சார, வரலாற்றுச் சூழ்நிலைகளில்தான் அந்நாடு முன்னேறத் தொடங்கியது என்ற உண்மை புலப்படும். அதே சமயம், முன்னணியிலிருந்து பார்த்தால் எத்தனையோ விதமான சக்திகள்

[10] மக்களின் மனப்பான்மை இந்த அளவுக்கு மாறிவிட்டதைப் பார்த்தால், காலம் கடந்த பேராசிரியர் சும்பீட்டர் Schumpeter) அவர்கள் வலியுறுத்திக் கூறிய தொழில் முயல்வோரின் பணிகள் அல்லது புதுமையைக் கண்டு பிடிப்போரின் பணிகள் இப்போது பன்னவாகி விட்டது என்ற கேள்வி எழுகிறது. தொழில்நுட்ப மாறுதல்களுக்கேற்ப ஒரு நாட்டினர் தம் மனப்பான்மையையும் மாற்றிக்கொண்டிட போகும்போது புதுமைகளைக் கண்டு பிடிக்கும் வேலைகளோ தொழில் முயல்வோரின் பணிகளோ அவ்வளவொன்றும் முக்கியமானதாகவும் பிரமாதமாகவும் தோன்றுவதில்லை. சொல்லப் போனால், சும்பீட்டர் அவர்களே இப்படித்தான் நினைத்தார்கள். அதிக வளர்ச்சி அடைந்துள்ள நாடுகளில் முன்னேற்றம் என்பதே அன்றாட நிகழ்ச்சியாகிவிடக் கூடுமென்று அவர் முன்கூட்டியே எதிர்பார்த்தார் போலும்! அப்படிப்பட்ட நாட்டில் தொழில் முயல்வோர் பணிகள் அவரது பாணியிலேயே சொன்னால் -வழக்கற்றுப் போகின்றன (obsolete), Joseph A. Schumpeter அவர்களின் Capitalism, Socialism and Democracy (New York: Harper, 1950) என்ற நூலில் 131-134 ஆம் பக்கங்களைப் பார்க்கவும்.

அம்முன்னேற்றத்தை ஊக்குவித்து வந்தன என்பது தெரியும். அவ்வாறு ஒன்றுபட்டு செயல்பட்ட சக்திகளில், அந்நாட்டின் எல்லை விரிவடைந்து, மக்கள்தொகை பெருகி, போக்குவரத்து வசதிகள் மேம்பட்டு பெரியதொரு தேசிய அங்காடியை உருவாக்கியதும், தலா ஒவ்வொரு தொழிலாளியும் பயன்படுத்தி வந்த மூலதனம் அதிகரித்துக் கொண்டே வந்ததும், மேம்பாடான தொழில்நுட்ப முறையைக் கண்டு பிடிப்பதற்காக இடைவிடாமல் மென்மேலும் அதிக அளவில் மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சியும் குறிப்பிடத் தக்கவை.

இப்பொழுது, அமெரிக்க நாட்டின் முன்னேற்றத்தைப் பற்றிக் கொஞ்சம் ஆழ்ந்து சிந்தித்து, அம்முன்னேற்றத்தை ஊக்குவித்த காரணிகளின் தராதர முக்கியத்துவத்தின் அடிப்படையில் அவற்றை வரிசைப்படுத்தி ஆராய்வது நல்லதென்றே தோன்றுகிறது. பல்வேறு நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தில் காரணிகளின் உள்ளிடுகைக்கும், அவ்வுள்ளிடுகை ஒவ்வொன்றுக்கும் விளைகின்ற அதிகப்படியான உற்பத்திக்குமுள்ள தொடர்பினை முதல் அதிகாரத்திலேயே (பட்டியல் 1-2) கண்டோம். இப்போது, அதைப்பற்றிய பிரச்சினையைச் சற்று நுண்ணிப்பாகப் பார்ப்போம்.

மிக எளிமையான சான்றைக் கொண்டு தொடங்குவோம். மக்கள்தொகை வளர்ச்சி, அதிகரித்துவரும் மூலதன இருப்பு, தொழில்நுட்ப முன்னேற்றம் ஆகிய மூன்று சக்திகளைமட்டும் கொண்டு ஒரு நாடு வளர்ச்சி அடைவதாக வைத்துக் கொள்வோம். அதோடு, காரணிகளின் உள்ளிடுகை அளவுக்கேற்ப விளைவு கிடைக்கும் விதத்தில் (அளவுச் சிக்கனம் ஏதுமின்றி) உற்பத்தி ராசி இருப்பதாகவும் வைத்துக் கொள்வோம். அப்படியென்றால் தொழில் நுட்ப முன்னேற்றத்தினால் மட்டும்தான் உற்பத்தித்திறன் அதிகரிக்கும் என்ற வகையில் ‘தொழில் நுட்ப முன்னேற்றம்’ என்ற சொற்றொடரை விரிவான பொருளில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

இப்போது, ஒரு படி மேலே செல்வோம். குறிப்பிட்டதொரு காலத்தில் மொத்த உற்பத்தி எந்த வீதத்தில் அதிகரிக்கின்றதோ அந்த வீதத்தை உழைப்பும் மூலதனமும் அதிகரித்துள்ள வீதத்தால் வகுத்தால் என்ன முடிவு கிடைக்குமோ அதுதான் தொழில் நுட்பத்திற்குச் சமமாக இருக்கும் என்று கூறலாம்.

> மிக எளிமையான சான்றின்படி, உழைப்பும் மூலதனமும் ஆண்டொன்றுக்கு 2 சதவீதம் என்ற ஒரே வீதத்தில் அதிகரிப்பதாகவும், மொத்த உற்பத்தி

4 சதவீதம் அதிகரிப்பதாகவும் வைத்துக் கொள்வோம். அப்படியென்றால் காரணிகளின் உள்ளிடுகையைக் காட்டிலும் மொத்த உற்பத்தி அதிக வீதத்தில் அதிகரிக்கின்றது என்பது தெளிவு. அவ்வாறாயின், தொழில் நுட்ப வளர்ச்சி ஆண்டொன்றுக்கு 2 சதவீதம் அதிகரிக்கின்றதென்று கணக்கிடலாம்.

இப்போது, ஒருபடி மேலே செல்வோம். நடைமுறையில் உள்ளது போல் உழைப்பும் மூலதனமும் ஒரே வீதத்தில் அதிகரிக்காமல் வெவ்வேறு வீதங்களில் அதிகரிப்பதாக வைத்துக் கொள்வோம். (இப்படி வைத்துக் கொண்டால்தான் நடைமுறைக்கும் பொருத்தமானதாக இருக்கும். எவ்வாறெனில், நாம் ஏற்கெனவே கண்டதுபோல் அமெரிக்க நாட்டில் மூலதன உழைப்பு வீதம் அதிகரித்துக் கொண்டேதான் வந்துள்ளது. அதாவது, உழைப்பின் அளிப்பைக்காட்டிலும் மூலதன இருப்புத்தான் வேகமாக அதிகரித்து வந்துள்ளது.) அப்படியென்றால், அந்நாட்டில் மூலதன அதிகரிப்பு எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது, உழைப்பின் அதிகரிப்பு எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை அளவிடுவதற்கு ஏதாவதொரு மதிப்பீடு அவசியம். இப்படி அளவிடுவதற்குரிய சாதாரண வழி, அந்த நாட்டின் பொருளாதார வளர்ச்சியை எந்த ஆண்டிலிருந்து மதிப்பிட வேண்டுமோ, அந்த ஆண்டை ஆதார ஆண்டாக (base year) வைத்துக்கொண்டு, அவ்விரு காரணிகளின் தராதர முக்கியத்துவத்தை எடைபோட வேண்டும். அதாவது, மொத்த உற்பத்தியில் உழைப்பின் பங்கு எவ்வளவு, மூலதனத்தின் பங்கு எவ்வளவு என்பதை அளவிட வேண்டும். இப்போது, மேலும் செல்வதற்குப் பல கருதுகோள்களை (சான்றாக, உற்பத்திக் காரணிகள் தத்தம் இறுதிநிலை உற்பத்திக்கேற்ற விலை பெறுவதாகவும், தொழில்நுட்ப முறை முன்னேறினால்தான் அவற்றின் இறுதிநிலை உற்பத்தி அதிகரிக்கும் என்பது போன்ற பல கருதுகோள்களை) அனுமானித்துக் கொண்டு செல்ல வேண்டியுள்ளது. அவ்வாறாயின், (1) உற்பத்திக் காரணிகளின் உள்ளிடுகையை (அதிகரிப்பதால் மொத்த உற்பத்தி எவ்வளவு) அதிகரிக்கின்றது. (2) ஒவ்வோர் உள்ளிடுகையின் திறனை அதிகரிப்பதால், அல்லது உற்பத்திக் காரணிகளின் ஆக்கத் திறனை உயர்த்துவதால் மொத்த உற்பத்தி எவ்வளவு அதிகரிக்கின்றது என்பதைக் காணவேண்டும்.[11]

11 இப்படி ஆராய்ச்சி செய்யும் புதிய நூல்கள் இப்போது ஏராளமாக வெளிவந்துள்ளன. அவற்றில் பிரபலியமான ஒருசில நூல்கள் பின்வருமாறு: Robert M. Solow, "Technological Change and the Aggr gate Production Function," Review of Economics and Statistics, Vol. XXX!X, No. 3 (August, 1957); Moses Abramowitz, "Resource and Output Trends in the

நாம் ஏற்கெனவே முதல் அதிகாரத்தில் பார்த்தது போல், பொருளாதார வளர்ச்சியின் போது தலா ஒவ்வோர் உள்ளிடுகைக்கும் கிடைக்கின்ற அதிகப்படியான உற்பத்தி எவ்வளவு என்பதைத்தான் இந்த ஆய்வுகளிலிருந்து அறிந்து கொள்கின்றோம். சான்றாக, ஒரு விதமான ஆராய்ச்சியின்படி, 1950 முதல் 1960 வரை காரணிகளின் உற்பத்தித் திறன் அதிகரித்ததால் மட்டும் (நமது சான்றின் படி, காரணிகளின் உள்ளிடுகையை அதிகரித்ததால் அதிகரித்துள்ள மொத்த உற்பத்தி போக எஞ்சியிருக்கும் அதிகப்படியான உற்பத்திக்குக் காரணமான 'எஞ்சிய காரணியால்') ஏற்பட்ட வளர்ச்சி வீதம் பின்வருமாறு என்று அறிய வருகின்றோம்: அமெரிக்காவில் 47 சதவீதம், கனடா 30 சதவீதம், பிரிட்டன் 25 சதவீதம், ஜெர்மனியில் 50 சதவீதம், ஜப்பானில் 44 சதவீதம்.[12] இப்போது, இந்நாடுகளின் வளர்ச்சியில் ஒவ்வோர் உழைப்பாளியும் முன்பைவிட அதிக மூலதனம் பெற்று வேலை செய்ததால் அதிகரித்த வீதம் எவ்வளவு, தொழில் நுட்ப முன்னேற்றத்தால் அதிகரித்த வீதம் எவ்வளவு என்று கேள்வியை சிறிது மாற்றிக் கேட்போமானால் தொழில் நுட்ப முன்னேற்றத்தினால் அதிகரித்த வீதம் இன்னும்கூட அதிகமாகத் தான் இருக்கும் என்பது தெளிவாகும்.

பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவும் காரணிகளின் தராதர முக்கியத்துவத்தை எடை போடுவதற்காக இப்படி மேலோட்டமாக நாம் ஆராயும் நிலையிலேயே தீர்வுகாண முடியாத பல பிரச்சினைகள் ஏற்பட்டுவிடுகின்றன. சான்றாக, 'தொழில் நுட்ப முன்னேற்றத்தை' மட்டும் எடுத்துக் கொள்வோம். இத் தொழில் நுட்ப முன்னேற்றம் என்பது வெறும் 'எச்சமான' காரணியென்று எப்படிக் கொள்ளலாம்? தொழில் நுட்ப முன்னேற்றம் என்பதே பல்வேறு உற்பத்திக் காரணிகளின் பிரதிபலிப்பாக அமைவதுதான்.

United States since 1870," National Bureau of Economic Research, Occasional Paper No. 52 (1956); Solomon Fabricant, " Basic Facts on Productivity Change," National Bureau of Economic Research, occasional Paper No. 63 (1959) ; John W. Kendrick, Productivity Trends in the United States (Princeton : Princeton University Press, 1961) ; Edward F. Denison, Sources of Economic Growth in the United States (Committee for Economic Development, Supplementary Paper No 13, January, 1962) ; இதுபற்றிய சுருக்கமான ஆய்விற்கு Edwin Mansfield அவர்களின், ' Technological Change' என்ற நூலில் 2 ஆம் அதிகாரத்தைப் பார்க்கவும்; மேலும் விரிவான முறையில் இவ்வாய்வைத் தெரிந்துகொள்ள விரும்புவோர் Lester B. Love அவர்களின், Technological Change: Its Conception and Measurement (Englewood Cliffs, N.J.; Prentice - Hall, 1966) என்ற நூலைப் பார்க்கவும்.

[12] E. Domar, S. M. Eddie, B Herrick, P. Hohenberg, M. Intriligator, I. Miyamoto ஆகியோரின் "Economic Growth and Productivity in the United States, Canada, United Kingdom, Germany and Japan in the Post War Period" என்ற கட்டுரையிலிருந்து. இக்கட்டுரை 'The Review of Economics and Statistics' Vol. XIVI (February 1964) No. 1 என்ற இதழில் வெளிவந்துள்ளது.

அதோடு மட்டுமன்றி, உற்பத்திக் காரணிகளைப் பாகுபடுத்து வதிலும் பண்டங்களின் தன்மையைக் கொண்டு பாகுபடுத்துவதிலும் மிக இக்கட்டான பிரச்சினைகள் எவ்வளவோ உள்ளன. சான்றாக, நம் எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்துள்ளதொரு பிரச்சினையை எடுத்துக்கொள்வோம். தொழில் நுட்ப முன்னேற்றமும் மூலதனத் திரட்சியும் ஒன்றையொன்று சார்ந்ததோடு மட்டுமன்றி, ஒன்றோ டொன்று பின்னிப் பிணைந்துள்ளன என்பதை நாம் அறிவோம். அப்படியிருக்க அவ்விரண்டையும் தனித்தனிக் காரணிகளாகப் பாகு படுத்துவது எப்படி ? மூலதனத் திரட்சியேயின்றிப் புதிய தொழில் நுட்பம் ஏற்படக் கூடுமென்று (அதாவது உருப்படியான பொருள் களில் பிரதிபலிக்காத தொழில்நுட்ப முன்னேற்றம் இது என்று) நாம் சிந்தித்துப் பார்க்கவாவது முடியுமா ? அல்லது, புதுவகையான முதற்கருவிப் பொருள்களின் மூலமாகத்தான் புதிய உற்பத்தி முறையைக் காணமுடியும் (உருப்படியான பொருள்களில் பிரதிபலிக் கும் தொழில் நுட்ப முன்னேற்றம் இது) என்று நினைக்கத்தான் முடியுமா? இதோடு மட்டுமன்றி இன்னும் எத்தனையோ பிரச்சினை களும் உள்ளன. சான்றாக, கல்வியையும் ஆராய்ச்சியையும் வெவ் வேறாகப் பாகுபடுத்துவதிலும் சிக்கல்கள் உள்ளன. ஆள்சார் மூல தனத்தைத் (human capital) திரட்டுவதற்கும் தொழில் நுட்ப அறிவை முன்னேற்றுவதற்கும் என்ன வேறுபாடு உள்ளது ? இவ் விரண்டும் ஒன்றோடொன்று பின்னியவை யல்லவா ? இவ்வாறாக, பொருளாதார முன்னேற்றத்திற்குரிய அடிப்படையான சக்திகளை எல்லாம் நுணுக்கமாகச் சிந்தித்துப் பார்த்தால் இவ்விதமான ஆய்விலுள்ள பிரச்சினைகளும் உற்பத்திக் காரணிகளைப் பாகுபடுத்து வதிலுள்ள பிரச்சினைகளும் எவ்வளவு கடினமான பிரச்சினைகள் என்பது தெளிவாகும்.

இவற்றையெல்லாம் நாம் நினைவில் வைத்துக்கொண்டு நமது முக்கியமான பிரச்சினைக்கு இப்போது திரும்பவும் வருவோம் : அமெரிக்கப் பொருளாதார வளர்ச்சிக்குக் காரணமான சக்திகளின் தராதர முக்கியத்துவத்தை எடைபோடுவதில் ஏற்பட்டுள்ள முன் னேற்றம்தான் என்ன ? அமெரிக்க நாட்டில் 1950 முதல் 1962 வரை ஏற்பட்ட பொருளாதார வளர்ச்சியில் E. F. டெனிசன் அவர்கள் கண்ட முடிவுகளை 4-6 பட்டியலில் பாருங்கள்.[13] நாம் ஏற்கெனவே குறிப்பிட்டது போல், பொருளாதார வளர்ச்சிக்கான எல்லாக் காரணி களையும் கொண்டு ஆராய்ச்சி செய்த டெனிசன் அவர்கள் அமெரிக்க

13 டெனிசன் அவர்கள் எழுதிய முந்திய நூலிலும் (1962) 1929-1957 -ல் அமெரிக்க நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்திற்கான காரணிகளின் தராதர முக்கியத்துவத்தை மதிப்பிடுவதற்கு இம்மாதிரியான வழியைத்தான் கடைப்பிடித்தார்கள். E. F. Denison அவர்களின், 'Sources of Economic Growth in the United States' என்ற அதே நூலைப் பார்க்கவும்.

நாட்டின் பொருளாதார வளர்ச்சி ஆண்டொன்றுக்கு 3·32 சதவீதமாக இருந்ததெனக் கணக்கிட்டுள்ளார்கள். இந்த 3·32 சதவீதத்தில் முன்னேற்றத்திற்கான பல்வேறு காரணிகளின் பங்கு என்ன என்பதைப் பின்வருமாறு மதிப்பிட்டுள்ளார் : 1) உழைப்பின் உள்ளிடுகை அதிகரிப்பால் கிடைத்தது 1·12 ; 2) மூலதன உள்ளிடுகையை அதிகரித்ததால் கிடைத்தது ·83 ; 3) நிலத்தின் உள்ளிடுகை அதிகரிப்பால் ·00 ; 4) கல்வி மேம்பாட்டினால் (அதாவது, நமது சான்றின்படி தொழில் நுட்ப முன்னேற்றத்தோடு தொடர்புடையது) ·76 ; 5) திறமையான சாதனப் பங்கீட்டினால் (நமது பங்கீட்டுத்திறனோடு சம்பந்தப்பட்டது) ·29 ; 6) அளவுச் சிக்கனங்களால் ·36 [நாட்டிலிருந்த மொத்தத் தேவை அதிகமாகவோ குறைவாகவோ இருந்திருக்கலாம் என்பதால், அதைச் சரிக்கட்டுவதற்கென்று இந்த வளர்ச்சி வீதத்திலிருந்து (3·36) ·04 சதவீதத்தை டெனிசன் அவர்கள் கழித்துள்ளார்கள். மேலும் நாம் ஏற்கெனவே சுட்டிக் காட்டிய 'X- திறனை' (மதிப்பிட டெனிசன் அவர்கள் முயற்சி செய்யவில்லை என்பதையும் மறந்து விடாதீர்கள்).]

டெனிசன் அவர்களின் இந்த மதிப்பீடு அமெரிக்க வரலாற்றில் 19 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட பொருளாதார முன்னேற்றத்திற்குப் பொருத்தமுடையதாகாது என்பது திண்ணம். ஏனெனில், 19 ஆம் நூற்றாண்டின்போது அமெரிக்க நாட்டு மக்கள்தொகை வேகமாக வளர்ந்து வந்தது ; அதோடு, அமெரிக்கா அப்போது புதிய நில வளங்களையும் பெற்று வந்தது. எனவே, வளர்ச்சிக்கான காரணிகளின் தராதர முக்கியத்துவம் எப்போதும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. காலத்திற்கேற்ப அவற்றின் முக்கியத்துவமும் மாறி விடுகிறது. அதோடு மட்டுமன்றி, ஒரே காலத்தில்கூட அவற்றின் முக்கியத்துவம் எல்லா நாடுகளிலும் ஒரேமாதிரியாக இல்லாமல், நாட்டிற்கு நாடு வேறுபட்டு விடலாம் என்பதும் திண்ணம்.

### பட்டியல் 4-6.
### அமெரிக்க நாட்டு வளர்ச்சியில் (1950-1962) குறிப்பிட்ட சில காரணிகளின் தராதர முக்கியத்துவம் பற்றி டெனிசன் அவர்களின் மதிப்பீடு

| வளர்ச்சிக் காரணி | ஆண்டுச் சதவீதம் | |
|---|---|---|
| | மொத்த நாட்டு வருமானம் | வேலை செய்த ஒவ்வொருவரின் தலா தேசிய வருமானம் |
| நாட்டு வருமானம் | 3·32 | 2·15 |
| மொத்தக்காரணி உள்ளிடுகை | 1·95 | ·79 |
| உழைப்பு | 1·12 | ·22 |
| வேலை | ·90 | — |

| | | |
|---|---|---|
| வேலை நேரம் | —·17 | —·17 |
| வயது-இனவாரியான சேர்மானம் | —·10 | —·10 |
| கல்வி | ·49 | ·49 |
| மூலதனம் | ·83 | .60 |
| குடியிருப்புகள் | ·25 | ·23 |
| வெளிநாட்டுச் சொத்துகள் | ·04 | ·04 |
| குடியில்லாத கட்டடங்களும் தளவாடங்களும் | ·43 | ·29 |
| இருப்புகள் | ·10 | ·06 |
| நிலம் | ·00 | —·03 |
| தலா ஒவ்வோர் உள்ளிடுகையின் உற்பத்தி | **1·37** | **1·36** |
| அறிவு வளர்ச்சி | ·76 | ·75 |
| மேம்பாடான சாதனப் பங்கீடு | | |
| விவசாய உள்ளிடுகைக் குறைப்பு | ·25 | ·25 |
| விவசாயமல்லாத சொந்தமான வேலைக் குறைப்பு | ·04 | ·04 |
| பிறநாட்டு வாணிபத் தடைகள் குறைப்பு | ·00 | ·00 |
| அளவுச் சிக்கனங்கள் (Economics of scale) | | |
| அமெரிக்க நாட்டு விலைகளில் மதிப்பிடப்பட்ட தேசிய அங்காடி விரிவு | ·30 | ·30 |
| தல அங்காடிகள் சுயமாக விரிவடைந்தது | ·06 | ·06 |
| தேவையின் தீவிரத்தில் ஏற்பட்ட ஏற்ற இறக்கத்தைச் சரிக்கட்ட | —·04 | —·04 |

(மூலம் : ஏற்கெனவே குறிப்பிட்ட E. F. Denison அவர்கள் Jean Pierre Poulier அவர்களின் உதவியுடன் எழுதிய அதே நூல், பக்கம் 298.)

4·6 பட்டியல் எடுத்துக்காட்டும் ஆய்வு முறையைப் பற்றிப் பொதுவாகக் கூற வேண்டியதென்ன ? இந்த ஆய்வு முறையில்கூட முரண்பாடான கருத்துகள் இருக்கின்றன என்றுதான் சொல்ல வேண்டும். 1967-ல் டெனிசன் வெளியிட்ட நூலில்கூடப் பல முக்கியமான குறைபாடுகள் இருப்பதாக D.W. ஜோர்ஜென்சன் (D.W. Jorgenson) அவர்களும் Z. கிரிலிசெஸ் (Z. Griliches) அவர்களும் சுட்டிக்காட்டியுள்ளனர். குறிப்பாக, உற்பத்திக் காரணிகளின்

உள்ளிடுகையை அதிகரித்ததால் ஏற்பட்டுள்ள வளர்ச்சி வீதத்தை மிகக் குறைவாகவும், தலா ஒவ்வோர் உற்பத்திக் காரணியின் உள்ளிடுகைத் திறனை அதிகரித்ததால் ஏற்பட்டுள்ள வளர்ச்சி வீதத்தை மிகைப்படுத்தியும் டெனிசன் அவர்கள் மதிப்பீடு செய்துள்ளதாக இவர்கள் வாதாடுகின்றனர். சான்றாக, மொத்த உற்பத்தியில் உழைப்பின் பங்கினை மதிப்பிடும்போது, வேலை செய்த உழைப்பாளிகளின் உழைப்பைமட்டும்தான் கொண்டு மதிப்பிடுகின்றோமே தவிர நாட்டில் வேலையில்லாமல் இருக்கின்ற உழைப்பாளிகளையும் சேர்த்து மதிப்பிடுவதில்லை ; அதேபோல்தான் மூலதனத்தின் பங்கினையும் மதிப்பிட வேண்டும். வேலையில்லாதிருக்கும் உழைப்பாளிகளைப்போல் மூலதனத்திலும் சில பயன்படுத்தப்படாமல் சும்மா இருக்கலாமாகையால், பயன்படுத்தப்படும் மூலதனத்தைமட்டும் கொண்டுதான் மதிப்பிட வேண்டும். இப்படித்தான் ஜோர்ஜென்சன் அவர்களும் கிரிலிசெஸ் அவர்களும் முதன் முதலில் மதிப்பீடு செய்தனர். அதனால்தான் காரணிகளின் உற்பத்தித் திறன் அதிகரித்ததால் மொத்த உற்பத்தி எந்த அளவுக்கு அதிகரித்துவிட்டது என்பதை மதிப்பிடும்போது டெனிசன் அவர்கள் மிகைப்படுத்தி விட்டதாக இவர்கள் இருவருமே முடிவு செய்தனர். ஆனால், உண்மையில் 1945-1965-ல் அமெரிக்க நாட்டு வளர்ச்சி வீதத்தில் உற்பத்திக் காரணிகளின் திறன் அதிகரித்ததால் ஏற்பட்ட வளர்ச்சி 0·10 சதவீதம்தான் என இவர்கள் இருவரும் மதிப்பிட்டுள்ளனர்.[14]

[14] The Review of Economics and Statistics, Vol. XXXIV (3), No. 99 (July 1967) இதழில் D. W. Jorgenson அவர்களும் Z. Griliches அவர்களும் சேர்ந்து எழுதியுள்ள "The Explanation of Productivity Change" என்ற கட்டுரையைப் பார்க்கவும். அதோடு, மற்றொன்றையும் நாம் மறந்து விடக்கூடாது. அதாவது, இவ்விரு ஆசிரியர்களுக்கும் டெனிசன் அவர்களுக்குமிடையே நடைபெற்ற விவாதத்தின் விளைவாக, அவர்களுக்கிடையே இருந்துவந்த கருத்து முரண்பாடு கணிசமான அளவிற்குத் தணிந்துவிட்டது. ஜோர்ஜென்சனும் கிரிலிசெசும் தம் முடிவுகளை இப்போது மாற்றிக்கொண்டு விட்டனர். அதாவது, 'உற்பத்தித் திறன் அதிகரிப்பால் ஏற்பட்ட வளர்ச்சி வீதம் குறிப்பிடக்கூடிய அளவிற்கு ஒன்றும் அதிகமாக இல்லை' என்பதற்குப் பதிலாக, "1950-1962-ல் காரணிகளின் உற்பத்தித் திறன் அதிகரித்ததால் ஏற்பட்ட வளர்ச்சி கணிசமானதுதான்' என்று ஒப்புக்கொண்டுவிட்டனர். எனினும், வேறுசில கருத்து முரண்பாடுகள் இன்றைக்கும் இருந்து கொண்டுதான் இருக்கின்றன. "1950-1962-ல் உண்மையான நாட்டு வருமான வளர்ச்சியில் காரணிகளின் உள்ளிடுகையை அதிகரித்ததால் ஏற்பட்ட வளர்ச்சிதான் அதிகம்" என்று ஜோர்ஜென்சனும் கிரிலிசெசும் வலியுறுத்தி வருகின்றனர் ; ஆனால் அவர்களிருவருக்கும் முன்பு மதிப்பீடு செய்தவர்களோ அப்படிக் கூறுவதில்லை. மேலும் படிப்பதற்குரிய கட்டுரைகள் : 1) Edward F. Denison அவர்களின் "Some Major Issues in Productivity Analysis: An Examination of Estimates by Jorgenson and Griliches," Survey of Current Business, U. S. Department of Commerce, May, 1969, Vol. 49 No. 5, Part II ; 2) D.W. Jorgenson and Z. Griliches அவர்கள் எழுதியுள்ள 'The Sources of Economic Growth. A: Reply to Edward F. Denison' Harward Institute of Economic Research, Discussion Paper No. 131. August, 1970. இவ்விரு தரத்தாரும் இன்றும் வாதித்துக் கொண்டுதான் இருக்கின்றனர்.

இவ்வாறாக, இந்த மதிப்பீடுகளில் திட்டவட்டமான முடிவு காண முடியாத கருத்து முரண்பாடுகள் எத்தனையோ உள்ளன என்றுதான் தெரிகிறது. அமெரிக்க நாட்டில் சமீப காலத்தில் ஏற்பட்ட வளர்ச்சிக்கான காரணிகளின் முக்கியத்துவத்தை மதிப்பிடுவதிலேயே இவ்வளவு கருத்து முரண்பாடுகள் உள்ளதென்றால், இவ்வதிகாரத்தில் நாம் ஆராய்ந்துள்ள காலம் முழுவதையும் கொண்டு மதிப்பீடு செய்தால் இன்னும் எவ்வளவு முரண்பாடான முடிவுகள் ஏற்படும் என்பதை நாம் சொல்லத் தேவையில்லை. எனவே, இந்த நூலாசிரியரின் முடிவு இதுதான்: கல்வி அறிவு மேம்பாடு போன்ற கண்ணுக்குப் புலனாகாத காரணிகளின் முக்கியத்துவத்தை மதிப்பிடுவதில் இப்படிப்பட்ட கருத்து முரண்பாடுகள் ஏற்படுவதில்லை. இருந்தபோதிலும், நவீனப் பொருளாதார வளர்ச்சியைப் பற்றிய இவ்வகையான ஆராய்ச்சி எவ்வளவுதான் கவர்ச்சியானதாக இருந்தபோதிலும், அது மிகக் கடினமானது என்பதை மறந்துவிடக் கூடாது. ஏனெனில் இவ்வித ஆராய்ச்சி இன்றும் முழுமையான அளவுக்கு முதிர்ச்சியை அடையவில்லை.

## அமெரிக்கப் பொருளாதார வளர்ச்சியின் எதிர்காலம்

சற்று முன்னர் நாம் ஆராய்ந்ததுபோல், பொருளாதார வளர்ச்சிக்கான சக்திகளில் எது எது எந்த அளவுக்கு முக்கியமானதென்று திட்டவட்டமாகக் கூற முடிவதில்லை; அப்படியிருக்க, அமெரிக்காவின் பொருளாதார முன்னேற்றம் இனிமேல் எப்படி நடைபெறும் என்பதை உத்தேசமாகத்தான் கூறமுடியும். எனினும், பொதுவான ஒரு சில கருத்துகளைமட்டும் இங்குக் குறிப்பிடுவது நல்லது.

கடந்தகால முன்னேற்றத்தை எண்ணும்போது, அமெரிக்க நாட்டின் பொருளாதார வளர்ச்சியைத் தன்னியல்பாகவே தடைபோடும் அம்சங்களைக் காட்டிலும் தாமாகவே ஊக்குவிக்கும் அம்சங்கள்தாம் வலுவானவையாக இருந்துள்ளன என்பது தெளிவு. ஏராளமான வளங்கள் இருந்த காரணத்தினால் குறைந்துசெல் விளைவு விதிகூட அந்நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு இடையூறாக இருந்ததில்லை. மாறாக, பொருளாதார முன்னேற்றம் அடைய அடைய, பெரிய தேசிய அங்காடி உருவாகியதோடு, மூலதனம் கிடைக்கக்கூடிய வழிவகைகளும் பெருகி, தொழில்நுட்ப முன்னேற்றம் மென்மேலும் தொடர்ந்து நடைபெறுவதற்கான வாய்ப்பும் உருவாகிவிட்டது. இவையெல்லாம் சேர்ந்து அமெரிக்க நாட்டின் உற்பத்தி பெருகி மக்களின் வாழ்க்கைத்தரம் மேம்படுவதற்கான சக்திகளை வலுப்படுத்திவிட்டன. இவ்வாறாக, அந்

நாட்டின் பொருளாதாரம் மென்மேலும் வளர்ச்சி அடைவதற்கான ஊக்கமளித்து, வளர்ச்சிப் பாதையில் அந்நாடு மிக விரைவாக நடை போடும்படி செய்துவிட்டன.

கடந்த கால முன்னேற்றத்தை விட்டு விட்டு, 1970 ஆம் ஆண்டிற்குப் பின்னர் அமெரிக்க நாட்டின் வளர்ச்சியைச் சிந்தித்துப் பார்த்தால் ஒரு சில மாறுதல்கள் ஏற்பட்டுள்ளதை நாம் காணலாம். முதலாவதாக, அமெரிக்க நாட்டின் 'எல்லைப் பிராந்தியம்' என்றோ நழுவிப் போய்விட்டது ; அதனால் அந்நாட்டின் உற்பத்திச் சாதனங்கள் உடனடியாகக் குறைந்துவிட்டதாக எந்தப் பொருளாதார அறிஞரும் கருதுவதில்லை என்பது உண்மைதான். எனினும், கடந்த காலத்தில் அமெரிக்க நாடு முன்னேற்றமடைந்து வருவதற்கு இந்த எல்லைப் பிராந்தியம் எவ்வளவோ சாதகமாக இருந்தது என்பதை நாம் மறுக்க முடியாது. இப்போது அஃது இல்லாதது எவ்வளவு நட்டமானது என்பது போகப் போகத்தான் தெரியும். இன்னும் சிலகாலம் கழிந்த பின்னர்தான் வேண்டிய அளவுக்குச் சாதனங்கள் இல்லாமல் பொருளாதார முன்னேற்றமே கட்டுப் பட்டு விடுகிற நிலையை அந்நாடு உணரக்கூடும்.

அதேபோல், கடந்த காலத்திய முன்னேற்றத்தின்போது, மக்கள்தொகை வளர்ச்சி அடைந்து வந்ததும் போக்குவரத்து முன்னேற்றம் ஏற்பட்டதுமாகச் சேர்ந்து அமெரிக்க நாட்டின் உற்பத்தி பெருகுவதற்கு ஏதுவாயிருந்தன ; ஆனால், இனிமேல் அப்படி மக்கள்தொகை வளர்ச்சி பெற்று, போக்குவரத்து முன்னேற்றமும் ஏற்பட்டு அங்காடி இன்னும் விரிவடையுமா என்பது சந்தேகம்தான். இது வெறும் அபிப்பிராயமே தவிர, முடிவான கருத்தன்று ; எனவே, இதைப்பற்றி எத்தனையோ விதமான கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். இன்றைய தொழில் நுட்ப முன்னேற்றத்தினால் வருங் காலத்தில் புதிய உற்பத்தி முறைகள் தோன்றி, அதனால் புது வகையான சிறப்புத் தேர்ச்சியும் புது மாதிரியான அளவுச் சிக்கனங்களும் கூட ஏற்படக் கூடுமென்றோ, அல்லது அச் சிக்கனங்கள் ஏற்பட வேண்டுமென்றால் அமெரிக்க நாட்டு (உலக) அங்காடி எந்த அளவுக்கு விரிவடைய வேண்டியிருக்கும் என்றோ இப்போது ஒன்றும் கூறுவதற்கில்லை. அப்படிப்பட்ட மாறுதல்கள் ஏற்பட்டாலும் கூட, 19 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட மக்கள்தொகைப் பெருக்கம், சாதனங்களின் வளர்ச்சி, இரயில் பாதை முன்னேற்றம், மக்களின் வருமான உயர்வு ஆகியவை அனைத்தும் பொருளாதார வளர்ச்சியை ஊக்குவித்ததுபோல் இம்மாறுதல்களும் இனிமேல் ஊக்குவிக்கலாம் என்று நினைப்பது வெறும் கனவாகத்தான் இருக்கும்.

அடுத்து, மூலதனத்தைப்பற்றிச் சிந்தித்துப் பார்ப்போம். இனி வரும் காலத்தில் மூலதனத் திரட்சி எப்படியிருக்கும் என நினைத்துப் பார்க்கும்போது பல சிக்கல்கள் தோன்றுகின்றன. கடந்த காலத்தில் ஏற்பட்டதைப் போலவேதான் வருங்காலத்திலும் பொருளாதார முன்னேற்றம் தொடர்ந்து ஏற்படும் என்பதிலோ முதலீடும் அதிகரித்துக் கொண்டே செல்லும் என்பதிலோ சந்தேகம் கிடையாது; எனினும், ஒன்றை நாம் மறந்துவிடக் கூடாது. அதாவது, அமெரிக்க நாட்டின் உற்பத்தி எந்த வீதத்தில் அதிகரித்து வருகின்றதோ அதே வீதத்தில் மக்களின் நுகர்ச்சியும் அதிகரித்துவர முற்படுகிறது. எனவே, நாட்டின் மொத்த உற்பத்தியில் முதலீட்டு வீதம் அதிகரித்து வரலாம் என்று இனிமேல் எதிர்பார்க்க முடியாது; இன்றைய போக்கு நேர்மாறாக உள்ளது.[15] மேலும், இனிமேல் முதலீடு சம்பந்தமாக அரசாங்கம் மேற்கொள்ளக்கூடிய நடவடிக்கைகள் எப்படியிருக்குமோ தெரியாது. அரசாங்கத்தின் நடவடிக்கைகளால் தொழில் முதலீடு நேரடியாக மட்டுமன்றி மறைமுகமாகவும் பாதிக்கப்படலாம். அப்படிப்பட்ட அரசாங்கத்தின் வரிக்கொள்கையோ செலவீட்டுக் கொள்கையோ எப்படியிருக்கும் என்பதை இப்போது கூறமுடியாது. சுருக்கமாகச் சொன்னால், வருங்காலத்தில் மூலதனத் திரட்சி எப்படி அமையுமென்று திட்டவட்டமாக ஒன்றும் கூற முடியாது. நம்மால் இப்போது கூறக்கூடியது இதுதான்: கடந்த காலத்தில் மூலதனத் திரட்சியினால் பொருளாதார முன்னேற்றத்திற்கு எவ்வளவு ஊக்கம் கிடைத்ததோ அதைவிட அதிகமாக இனிமேல் ஊக்கம் கிடைக்கும் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது; கடந்த காலத்தில் மூலதனம் வளர்ச்சியடைந்த வேகத்தில் இனிமேலும் வளர்ச்சியடைய வேண்டுமென்றால் அதற்குரிய நடவடிக்கைகளை இப்போதிருந்தே மேற்கொள்ள வேண்டும்.

இந்த அடிப்படைகளில் பார்க்கும்போது, அமெரிக்க நாட்டுப் பொருளாதாரம் முன்னேற்றமடைந்து வந்தபோது இருந்த சாதகமான சூழ்நிலை இனிமேல் அவ்வளவாக இராது; அதிகப்பட்சம் முன்பிருந்த அளவுக்கு இருக்கலாமே தவிர அதிகமாக இருப்பதற்கு வாய்ப்பு இல்லை. மொத்தத்தில் பார்த்தால் அந்நாட்டின் பொருளாதாரம் வளர்ச்சியடையக் கூடிய வீதம் குறைந்துகொண்டு செல்லலாம் என்றுதான் தெரிகிறது.

ஆனால் ஒன்று: இதுவரை தொழில்நுட்ப முன்னேற்றத்தை நாம் கணக்கில் சேர்க்கவில்லை. தொழில்நுட்ப முன்னேற்றத்தைப்

[15] இதே அதிகாரத்தில் 7 ஆவது பின் குறிப்பைப் பார்க்கவும்.

பற்றிச் சிந்தித்துப் பார்த்தால் முன்போலவே தொழில்நுட்ப முன்னேற்றம் நடைபெறலாம் ; சொல்லப்போனால் அதைக் காட்டிலும் அதிகமாகக் கூடத் தொழில் நுட்ப முன்னேற்றம் ஏற்படலாம். ஏனெனில், இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் தான் திட்டவட்டமான முறையில் சிறப்புத் தேர்ச்சியுடன் கூடிய ஆராய்ச்சிகள் பெருமளவில் ஏற்பட்டுள்ளன. இவ்வகையான ஆராய்ச்சிகள் நாட்டிற்கே புதுவகையானவை என்றுகூடச் சொல்லலாம். எனவே, இவ்வகையான ஆராய்ச்சிகளின் விளைவாக அமெரிக்க நாட்டில் ஒரு புதுயுகமே தோன்றினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. கருத்தியல் விஞ்ஞானத் துறையில் மட்டுமன்றி, நடைமுறை விஞ்ஞானத் துறையிலும் அமெரிக்க நாடு தொடர்ந்து வளர்ச்சி பெற்று வந்துள்ளது ; ஒருவேளை இவ் வளர்ச்சி இனிமேல் அதிகரிக்கவும் கூடும்.

எனவே, நமது கணக்கின் முடிவை மாற்றிவிடுவதற்கு இஃது ஒன்றே போதுமானது. ஏனைய சக்திகளும் காரணிகளும் முன்போல் அவ்வளவு வலுவானவையாயும் சாதகமானவையாயும் இல்லாவிட்டாலும் கூட, அமெரிக்க நாட்டில் நடைபெற்று வரும் தொழில் நுட்ப முன்னேற்றம் மட்டும் இதே வேகத்தில் நடைபெற்று வருமானால் அந்நாடு இன்னும் அதிகமாக வளர்ச்சி அடையக் கூடும் என்றுதான் சொல்ல வேண்டும். இதைத்தான் நாம் ஏற்கெனவே சுட்டிக் காட்டினோம். அதாவது, நவீனப் பொருளாதார முன்னேற்றத்திற்கு கல்வி, அறிவு முன்னேற்றமும் மிக முக்கியமானவை. எனவே, அமெரிக்க நாட்டில் இன்றுள்ள தொழில்நுட்ப முன்னேற்றம் தொடர்ந்து திடமாக நடைபெறுமானால் அந்நாடு இதுவரை சாதித்ததைப் போல் இனிமேலும் பல பொருளாதாரச் சாதனைகளைச் செய்யமுடியும் என்பதில் சந்தேகம் கிடையாது.

இந்த முடிவுகூடத் தோராயமானதுதானேயன்றி, திட்டவட்டமானதன்று. ஏனெனில் இதற்கும் பல நிபந்தனைகள் உள்ளன. சான்றாக, முன்பிருந்ததைப் போல் இனிமேலும் பொருளாதார வளர்ச்சி வீதம் கணிசமான அளவிற்கு இருக்க வேண்டும் என அமெரிக்க நாட்டு மக்கள் விரும்புவார்கள் என்று எப்படிக் கூற முடியும் ? அப்படியே அந்நாடு முன்போலவே வளர்ச்சி அடைய முடிந்தாலும் கூட, அவ் வளர்ச்சியை நடைமுறையில் அடையக் கூடும் என்று எப்படிச் சொல்ல முடியும் ? உற்பத்தியை மென்மேலும் அதிகரிக்கக் கூடிய ஆற்றல் அந்நாட்டு மக்களுக்கு இருக்கலாம் ; ஆனால், ஆற்றல் இருந்தால் மட்டும் போதாது. உற்பத்தி எந்த

அளவுக்கு அதிகரிக்கின்றதோ அந்த அளவுக்கு நுகர்வோர், தொழில்கள், அரசாங்கம் ஆகியவற்றின் தேவைகளும் அதிகரித்துக் கொண்டு செல்லவேண்டும். ஏனெனில், அங்காடிப் பொருளாதார அமைப்பில் உற்பத்தி செய்யக் கூடிய சாத்தியத்தை மட்டும் கொண்டு உற்பத்தி செய்யப்படுவதில்லை.

எஃது எவ்வாறிருப்பினும், இந்த ஊகமான கருத்துகள் புலப் படுத்துவதெல்லாம் இதுதான்: அமெரிக்க நாடு முன்போலவே தொடர்ந்து வளர்ச்சி பெறக்கூடும்; அந்நாட்டின் தலா உற்பத்தி வளர்ந்து வரும் வீதத்தைக் கட்டுப்படுத்தவோ குறைக்கவோ கூடிய தடைகள் அங்கு இருப்பதாகத் தெரியவில்லை. ஒரு வேளை அந் நாட்டின் தலா உற்பத்தி குறையத் தொடங்கிவிட்டதென்றால், பொருளாதார முன்னேற்றத்தில் அந்நாட்டு மக்களிடம் இருந்து வந்த அக்கறை மங்கிவிட்டதென்றுதான் கருத வேண்டும். செல்வம் கொழிக்கும் அமெரிக்க நாட்டு மக்களுக்கு மேலும் மேலும் செல்வத் தைத் திரட்டுவதில் சலிப்பு ஏற்பட்டு விடலாம்.

## சுருக்கம்

உலகிலுள்ள முக்கியமான நாடுகளில் நவீனப் பொருளாதார வளர்ச்சியின் பலன்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கும் நாடு அமெரிக்காதான். பொருளாதார முன்னேற்றத்திற்குச் சாதக மான புவியியல், வரலாற்று, அரசியல் சூழ்நிலைகள் அமெரிக்காவில் இருந்த அளவிற்கு வேறெந்த நாட்டிலும் கிடையாது.

கடந்த நூறாண்டுகளுக்குமேல் அமெரிக்க நாட்டில் ஏற்பட்டு வந்த பொருளாதார முன்னேற்றத்தின் விளைவாக, அந்நாட்டு மக்களின் வாழ்க்கையில் பல்வேறு அடிப்படையான மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன. 1800–லிருந்து 1970–க்குள் அந்நாட்டு மக்கள் தொகை 40 மடங்கு அதிகரித்து விட்டதோடு, அந் நாட்டின் பரப் பளவும் எவ்வளவோ விரிவடைந்துவிட்டது வியக்கத்தகுந்த மாறு தல்களாகும். மக்கள்தொகை இவ்வளவு தூரம் துரிதமாக வளர்ச்சி யடைந்துள்ள காரணங்களில் குறிப்பிடத்தக்கதொன்று, அந் நாட்டின் இறப்புவீதம் குறைந்துகொண்டே வந்ததுதான். அதன் விளைவாக, கடந்த நூறாண்டுகளுக்குள் அந்நாட்டு மக்களின் வாழ்வு காலம் சராசரி 75 சதவீதம் அதிகரித்துவிட்டது. அது மட்டு மன்றி, அவர்கள் வேலை செய்துவந்த இடம், வேலையின் தன்மை, வேலை நேரம் ஆகியவையும் கணிசமான அளவுக்கு மாறியிருப்பதும் குறிப்பிடத்தக்கவை. கடந்த 100 அல்லது 150 ஆண்டுகளில்

கிராமப்புறங்களில் வாழ்ந்து வந்த அமெரிக்கர்களில் பெரும் பாலானோர் நகர்ப்புறங்களுக்குக் குடியேறிவிட்டனர் ; விவசாயம் செய்து வந்தோர் பல்வேறு தொழில்கள், வியாபாரம், நேரடிப் பணிகள் என்று வேறு வேலைகளுக்குப் போய்விட்டனர். அவர்கள் வேலை செய்து வந்த நேரம்கூட மென்மேலும் குறைந்து வந்து விட்டது ; அதனால் அவர்கள் இன்பமாகக் கழிக்கும் ஓய்வு நேரம் அதிகரித்துவிட்டது.

இறுதியாக, பொருளாதார முன்னேற்றத்தின் விளைவாக அமெரிக்க நாட்டின் மொத்த உற்பத்தி மட்டுமன்றி, தலா உற்பத்தி யும் எவ்வளவோ பெருகிவிட்டது. கடந்த ஒருசில ஆண்டுகளாக மக்கள்தொகை வளர்ச்சி வீதம் குறைந்துவிட்டதனால், அந்நாட்டின் உற்பத்தி வளர்ச்சி வீதமும் சிறிதளவு குறையத் தொடங்கிவிட்டது ; எனினும், அதன் தலா உற்பத்தி வளர்ச்சி வீதம் சிறிது கூடக் குறையாமல் அப்படியேதான் உள்ளது. அமெரிக்க நாட்டு மக்களின் தலா உற்பத்தி $1\frac{1}{2}$ சதவீதம் முதல் 2 சதவீதம் வரை தொடர்ந்து அதிகரித்துக் கொண்டே வந்ததால் அந்நாட்டு மக்கள் செல்வமிக்கவர் களாகத் திகழ்கின்றனர். இதனால் ஒரு சில நட்டங்களும் ஏற்பட்டன என்பது உண்மைதான்.

இந்த அளவுக்கு அமெரிக்க நாடு எப்படி முன்னேற்றமடைந்தது என்பதைக் காரணம் காட்டி விளக்குவது மிகக் கடினம் ; எனினும், பொதுவான சில காரணங்களை மட்டும் கொண்டு விளக்கலாம். முதலாவதாக, தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் குறிப்பிட்ட படி, குறைந்துசெல் விளைவு விதி அமெரிக்க நாட்டில் செயல்பட வில்லை ; அந்த ஆபத்திலிருந்து அமெரிக்கா தப்பிவிட்டது. மக்கள் தொகையும் அவர்கள் கூறிய அளவுக்கு அவ்வளவு துரிதமாகப் பெருகவில்லை ; அதோடு, அந் நாட்டின் உற்பத்திச் சாதனங்கள் நிரந்தரமாக வரையறுக்கப்பட்டு இல்லாமல் அதிகரித்துக்கொண்டே வந்தன. ரிக்கார்டோவும் மால்தசும் விளக்கியபடி அந் நாட்டில் பெரிய அங்காடி விரிவடையக்கூடிய வாய்ப்பும் வரையறுக்கப் பட்டிருக்க வில்லை. மொத்தத்தில் பார்த்தால், அமெரிக்க நாட்டில் மக்கள்தொகை வளர்ச்சியடைந்து வந்ததால் அந்நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரம் அதிகரித்துத்தான் வந்ததேயன்றி, குறைந்து விடவில்லை.

இரண்டாவதாக, அமெரிக்க நாட்டின் தலா உற்பத்தி அதிகரித் துக்கொண்டே வருவதற்குச் சாதகமான பல்வேறு சக்திகள் துணை செய்தன : 1) தலா ஒவ்வொரு தொழிலாளியும் பயன்படுத்திவந்த

முதற்கருவிப் பொருள்கள் அதிகரித்துக் கொண்டேயிருக்கும் வழியில் மூலதனம் பெருமளவில் திரட்டப்பட்டு வந்தது. 2) தேசிய அங்காடி விரிவடைந்து வந்ததோடு, இரயில் போக்குவரத்தும் அபிவிருத்தி அடைந்து வந்ததால் அமெரிக்க நாடே ஒன்றுபடவும், அந்நாட்டின் பிராந்தியங்கள் பல முன்னேற்ற மடையவும் ஏதுவாயின. 3) இங்கிலாந்து நாட்டில் ஏற்பட்ட தொழிற் புரட்சியின் போது தொடங்கிய தொழில்நுட்ப முன்னேற்றம் அமெரிக்காவில் மென்மேலும் தொடர்ந்து முன்னேற்றமடைந்தது ; கல்வியின் தரம் மேம்பட்டதும், பெரிய அளவில் திட்டவட்டமாக மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சிகளும் அம் முன்னேற்றத்தை ஊக்குவித்தன.

இக் காரணிகளெல்லாம் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவைதாம். எனினும், உற்பத்திக் காரணிகளின் ஆக்கத் திறனை அதிகரித்ததனால்தான் அந்நாட்டின் பொருளாதார வளர்ச்சி அதிக அளவு ஏற்பட்டதென்று அண்மையில் மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சிகளிலிருந்து தெரிகிறது. ஆனால், உற்பத்தியில் பயன்படுத்தப்படும் காரணிகளைத் தனித்தனியாகப் பாகுபடுத்துவது என்பது மிகக் கடினம். இருந்தபோதிலும், அமெரிக்க நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவிய காரணிகளில் கல்வியும் அறிவு வளர்ச்சியும்தான் அதிகமாக உதவியுள்ளன என்று இன்றைய ஆராய்ச்சிகளிலிருந்து அறிய வருகிறோம். ஆனால், இவ்வித ஆராய்ச்சி முடிவுகளைப் பொறுத்தவரை பொருளாதார அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் இருந்து வருகின்றன. எனினும், உழைப்பையும் மூலதனத்தையும் அதிகரிப்பதால் மட்டும் ஒரு நாடு முன்னேற்றமடைந்து விடாது ; தொழில் நுட்ப முன்னேற்றம் தான் பொருளாதார வளர்ச்சிக்கு மிக முக்கியமானது என்று பெரும்பாலான அறிஞர்கள் நினைக்கின்றனர்.

இந்த முடிவுகளை எண்ணிப்பார்க்கும் போது, அமெரிக்க நாடு இனிவரும் காலத்தில் முன்னேற்றமடையக்கூடிய வாய்ப்பு உள்ளதா என்று சிந்திக்கத் தோன்றுகிறது. வருங்காலத்தைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்தால், கடந்த காலத்தில் முன்னேற்ற மடைந்த அளவுக்கு, அல்லது அதைக் காட்டிலும் அதிகமாக முன்னேற்றமடைவதற்கு ஒரேஒரு வழிதான் உண்டெனத் தோன்றுகிறது. தொழில் நுட்ப முன்னேற்றம்தான் அந்த ஒரு வழியாகும். பொருளாதார முன்னேற்றத்திற்கு மிக முக்கியமான காரணியாக விளங்குவது தொழில்நுட்ப வளர்ச்சிதான். எனவே, அமெரிக்க

நாடு கடந்த காலத்தில் சாதித்த சாதனைகளைப் போல் இனி மேலும் சாதிக்க முடியும் என்றுதான் தோன்றுகிறது. வருங்காலச் சாதனைகள் குறைவாகிவிடும் என்பதற்கு எவ்வித ஆதாரமும் கிடையாது. அப்படியே குறைந்துவிட்டால், பொருளாதார முன்னேற்றத்தினால் ஏற்படும் பலன்களைக் காட்டிலும் அதனால் ஏற்படும் நட்டங்கள்தாம் அதிகம் என்று அமெரிக்க மக்கள் முடிவு செய்து விட்டனர் என்றுதான் நினைக்க வேண்டும்.

# 5. முன்னேற்றம் குன்றிய நாடுகளின் பிரச்சினைகள்

ஜெட் விமானம் பறக்கும் இக்காலத்தில் அமெரிக்காவிற்கும் ஆசியா, ஆப்பிரிக்கா, அல்லது இலத்தீன் அமெரிக்காவிலுள்ள ஒரு நாட்டிற்கும் இடையேயுள்ள தூரத்தை ஒரு சில மணி நேரத்திற்குள் கடந்துவிடலாம். ஆனால் இவற்றிற்கிடையேயுள்ள பொருளாதார இடைவெளியோ நாளுக்கு நாள் விரிவடைந்து கொண்டே வந்துள்ளது. 19 ஆம் நூற்றாண்டின் மத்தியிலிருந்து இரண்டாம் உலகப்போர் முடிவடைவதற்குள்ளாக அமெரிக்காவும் பொருளாதார முன்னேற்றமடைந்துள்ள ஏனைய நாடுகளும் திடமாக வளர்ச்சி பெற்றுச் செல்வமிக்க நாடுகளாகி விட்டன. ஆனால், உலகிலுள்ள ஏழை நாடுகளில் ஒரு சிலவற்றைத்தவிர ஏனைய நாடுகள் அனைத்தும் ஏழைநாடுகளாகவே பின்தங்கிவிட்டன. அவற்றில் பல மிகமோசமான நிலைக்குக்கூட வந்துவிட்டன. இதனைத்துமே கிறித்தவ சுவிசேஷத்தில் (Bible) கூறப்பட்டிருப்பதுதான்:

'உள்ளவன் எவனுக்கும் கொடுக்கப்படும்; அவனும் நிறைவு பெறுவான். இல்லாதவனிடமிருந்து உள்ளதும் எடுக்கப்படும்.' (புனித மத்தேயு 25ஆம் அதிகாரம், 29 ஆவது வசனம்)

இல்லாதவர்களின் கதையும் இன்றுள்ள ஏழை நாடுகளின் கதையும் ஒன்றுதான்.

## பொருளாதார முன்னேற்றம் குறைந்த நாடு என்றால் என்ன பொருள்?

உலகில் பொருளாதார முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகள் என்று ஒரு புறமும், முன்னேற்றம் குன்றிய நாடுகள் என்று மறுபுறமும் பாகுபடுத்திவிட முடியாது. முன்னேற்றமடைந்துள்ள நாடுகளிடையேகூட எத்தனையோ தரமான பாகுபாடுகள் உள்ளன. ஒரு நாடு எப்போது முன்னேறத் தொடங்கியது, எந்த அளவுக்கு முன்னேற்றம் கண்டுள்ளது என்பதைப் பொறுத்துத்தான் அதன் தராதரத்தைப் பாகுபடுத்த முடியும். சான்றாக, அமெரிக்கா அடைந்துள்ள முன்னேற்றத்தைக் கொண்டு பார்த்தால்,

சோவியத் நாடு கூட ஒரு சில விதங்களில் முன்னேற்றம் குன்றிய நாடு என்றுதான் சொல்ல வேண்டும்; அதேபோல் ஐரோப்பிய நாடுகள் சிலகூட முன்னேற்றம் குன்றியவை என்றுதான் கருத வேண்டும். மேலும், முன்னேற்றமடையக் கூடிய சாத்தியங்களைக் கொண்டு பார்த்தால் அமெரிக்காகூட மேலும் வளர்ச்சியடையக் கூடிய நாடாகத்தான் இருக்கின்றது.

அதேபோல், வறுமையிலுள்ள நாடுகளை மட்டும் எண்ணிப் பார்த்தால் கூட, அவற்றிடையேயும் எத்தனையோ விதமான தராதர நிலைகளை நாம் காணலாம். ஒருசில நாடுகள் மற்ற வற்றைக் காட்டிலும் கொடிய வறுமையில் வாடுகின்றன; சில நாடு கள் முன்னேற்றமடைந்து வருகின்றன; ஏனைய சில நாடுகளோ தொடக்கத்திலிருந்து அப்படியேதான் உள்ளன. மேலும், மேற் கத்திய நாகரிகத்தைக் காட்டிலும் பலவிதங்களில் சிறந்த நாகரிகம் கொண்ட இந்தியாவும் ஏழை நாடுதான்; அதேசமயம், காட்டு மிராண்டித்தனமான பழக்க வழக்கங்களைக் கொண்ட சில ஆப்பிரிக்க நாடுகளும் ஏழை நாடுகள்தாம். அதேபோல், இயற்கை வளங்கள் நிறைந்த சிலோன், கொலம்பியா, பெரு, இந்தோனேசியா போன்ற நாடுகளும் ஏழை நாடுகள்தாம்; அதேசமயம், முன்னேற்ற வளங் களே இல்லாத ஜோர்டான், யேமன் போன்ற நாடுகளும் ஏழை நாடுகள்தாம். அதோடுமட்டுமன்றி, ஏழை நாடுகளிலுள்ள மக்கள் நெருக்கடியில்கூட எத்தனையோ விதமான முக்கிய வேறு பாடுகள் உள்ளன. சான்றாக, தலா ஒவ்வொருவருக்குமுள்ள நிலப் பகுதியைக் கொண்டு பார்த்தால், தாய்வான் நாட்டைக் காட்டிலும் பிரேஸில் நாட்டிலுள்ள தலா நிலம் 30 மடங்கு அதிகம். அதே போல் மக்கள் தொகையைக் கொண்டு பார்த்தால், மிகக் குறைந்த மக்கள் தொகையுடைய ஆப்பிரிக்கா, இலத்தீன் அமெரிக்கா விலுள்ள நாடுகளும் ஏழை நாடுகள்தாம்; அதேசமயம், மக்கள் தொகை பெருமளவில் கொண்ட ஆசிய நாடுகளும் ஏழை நாடுகள் தாம். ஆனால், இவ்விதப் பாகுபாட்டு அடிப்படையில்கூட விதி விலக்குடைய நாடுகளும் பல இருக்கின்றன.

சுருங்கக் கூறின், ஏதாவதொரு நிலையைமட்டும் கொண்டு ஒரு நாட்டை ஏழைநாடு என்று பாகுபடுத்திவிட முடியாது. சிக்கல்கள் நிறைந்த பல்வேறு நிலைகள் ஏழை நாடுகளுக்கிடையே இருப்பதால், அவை முன்னேற்றமடைவற்கான வழியிலுள்ள தடை களும் ஒரே மாதிரியாக இல்லாமல் பல்வேறாக உள்ளன. எனினும், முன்னேற்றம் குன்றிய நாடுகளென்று நாம் குறிப்பிடும் நாடுகள் அனைத்துமே முன்னேற்றமடைந்துள்ள நாடுகளிலிருந்து வேறு

பட்டவைதான்; ஏழை நாடுகளில் பல இந்த நூற்றாண்டில்தான் முன்னேற்றப் பாதையையே அடைந்துள்ளன. அவற்றிலும் சில கடந்த 20 ஆண்டுகளாகத்தான் முன்னேற்றத்திற்கான முயற்சிகளை மேற்கொண்டுள்ளன. இந்நாடுகள் அனைத்துமே ஏதாவதொரு வழியில் முன்னேற்றத்தைத் தொடங்குகின்ற பிரச்சினையில்தான் இன்றும் உள்ளன. ஐரோப்பிய நாடுகள், வட அமெரிக்க நாடுகள், ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகப் போட்டியிட்டுக் கொண்டு முன்னேற்றப் பாதையில் ஓடத்தொடங்கி விட்டன; ஆனால் அதேசமயம், இந்த ஏழை நாடுகளோ இன்னும் ஓட்டத்தையே தொடங்காமல் தொடக்கக் குறிக்கோட்டிலேயே நின்று விட்டன. இதன் விளைவாகத்தான் செல்வமிக்க நாடுகள் இருக்கும் இவ்வுலகத்தில் வறுமையில் சிக்கிக் கொண்டுள்ள நாடு களையும் நாம் காண்கிறோம்.

## ஏழை நாடுகள் எந்த அளவுக்கு ஏழை நாடுகளாக உள்ளன ?

அமெரிக்க நாட்டிலுள்ள ஒரு ஏழைத் தொழிலாளியின வறுமை என்பதுவேறு ; அதே சமயம் கல்கத்தாவின் தெருக்களில் சுற்றிக் கொண்டிருக்கும் பிச்சைக்காரனின் வறுமை வேறு. எனவே, இன்றுள்ள முன்னேற்றம் குன்றிய நாடுகளின் வறுமையின் தராதரத்தை அளவிடுவது எப்படி ?

முன்னேற்றமடைந்துள்ள நாடுகள் பல்லாண்டுகாலமாக முன் னேற்றமடைந்து வந்துள்ளதை மதிப்பிடுவது எவ்வளவு கடினமான காரியமோ அதைப் போன்றுதான் ஏழை நாடுகளின் ஏழ்மையை மதிப்பிடுவதிலும் பல சிக்கல்கள் உள்ளன. சொல்லப் போனால் இந் நாடுகளிலுள்ள வறுமையின் தராதரத்தை மதிப்பிட்டுக் கூறக் கூடிய திட்ட வட்டமான புள்ளிவிவரங்கள் கிடைப்பதே அரிது ; அதோடு, இம் மதிப்பீட்டில் சேர்க்கப்பட வேண்டிய முக்கியமான பல இனங்களின் புள்ளி விவரங்களைச் சேகரிக்கக் கூட இயலுவ தில்லை. மேலும், ஏழைநாடுகள் உற்பத்தி செய்கின்ற பொருள் களின் தன்மையும் அவற்றின் அளவும் வேறு, பணக்கார நாடுகள் உற்பத்தி செய்கின்ற பொருள்களின் இயல்பும் அளவும் வேறு. எனவே உற்பத்தி செய்யப்படும் பொருள்களைக் கொண்டு ஒப்பிடு வது மிகக் கடினம். இதே போல் இன்னும் எத்தனையோ பிரச்சினை களும் உள்ளன.

இருந்தபோதிலும், முன்னேற்றம் குன்றிய நாடுகளின் தலா உற்பத்தியை அளவிட்டு, முன்னேற்றமடைந்துள்ள நாடுகளின் தலா உற்பத்தியோடு அவற்றை ஒப்பிட்டுப் பார்க்கும் பலவிதமான

முயற்சிகளின் வழியாகத்தான் நாடுகளின் பொருளாதாரத்தராதரத்தைப் பாகுபடுத்துவர். அப்படி ஒப்பிட்டுப் பார்த்தால்தான் இவ்விருவகை நாடுகளுக்கிடையே எவ்வளவு ஏற்றத் தாழ்வுகள் உள்ளன என்பது தெரிகிறது. இவ்வித மதிப்பீட்டு முறைகளில் எவ்வளவுதான் குறைபாடுகள் இருந்தபோதிலும், இந்த ஏற்றத்தாழ்வுகள் உண்மையில் எவ்வளவோ உள்ளன என்பது மட்டும் திண்ணம்.

1968 ஆம் ஆண்டில் பல்வேறு நாடுகளின் தலா உற்பத்தி அளவின் மதிப்பீட்டை 5-1 பட்டியலில் காணலாம். அந்தந்த நாடுகளில்நிலவிய வெளிநாட்டு நாணய மாற்று வீதத்தைக் கொண்டு (foreign exchange rate) அமெரிக்க டாலரில் அதனதன் தலா உற்பத்தி மதிப்பிடப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு நாட்டின் தலா உற்பத்தியையும் அமெரிக்கநாட்டு டாலரில் மதிப்பிட்டிருக்கும் முறை குறைபாடுடையதுதான். எவ்வாறெனில், பிற நாட்டு வியாபாரத்தில் இடம் பெறும் பொருள்களின் விலையைத்தான் வெளிநாட்டு நாணயமாற்று வீதம் பிரதிபலிக்கின்றது; ஆனால் வளர்ச்சி குன்றிய நாடுகளின் ஏற்றுமதிப் பொருள்களின் விலையோ உள்நாட்டிலேயே நுகரப்படும் பொருள்களின் விலையைவிடப் பெரும்பாலும் அதிகமாகத்தான் இருக்கும். எனவே, வெளிநாட்டு நாணய மாற்று-வீதத்தைக் கொண்டு பார்க்கும்போது ஏழை நாடுகளுக்கும் பணக்கார நாடுகளுக்குமிடையேயுள்ள ஏற்றத்தாழ்வு நடைமுறையிலிருப்பதைக் காட்டிலும் அதிகமாகிவிடக்கூடும். ஆகையால் இக் குறைபாட்டை நாம் மனத்தளவில் திருத்திக்கொள்ள வேண்டும்.

எப்படிச் சொன்னாலும் அல்லது செய்தாலும் சரி, உலகில் எத்தனையோ நாடுகளின் தலா உற்பத்தி மிக மோசமான அளவுக்குக் குறைவாகவே உள்ளது என்பதை 5-1 பட்டியலைப் பார்த்தவுடனே தெரிந்துவிடுகிறது. ஆண்டொன்றுக்கு 300 டாலர் கூட தலா வருமானம் இல்லாத நாடுகள் பெரும்பாலும் ஆசிய நாடுகளும் ஆப்பிரிக்க நாடுகளும்தான். ஆண்டொன்றுக்கு 100 டாலர் கூட இல்லாத நாடுகளும் இங்குதான் அதிகமாயுள்ளன. இதற்கு நேர்மாறாக, அமெரிக்காவிலோ ஆண்டொன்றுக்கு 4,000 டாலருக்கு மேல் தலா வருமானம் உள்ளது. மேலும், இப்பட்டியலில் A, B, C ஆகிய மூன்று பிரிவுகளிலும் உள்ள நாடுகளில்தான் பொருளாதார முன்னேற்றப் பிரச்சினைகள் அதிகமாயுள்ளன என்பதும் வெளிப்படை. அதோடு, உலக மக்கள்தொகையில் மூன்றில் இரண்டு பங்கு மக்கள் இந்த நாடுகளில்தான் வாழ்கின்றனர். இந்நாடுகளின் தலா வருமானம் பட்டியலில் உள்ளதைக்காட்டிலும் இரண்டு, மூன்று அல்லது நான்கு மடங்கு அதிகமாகவேயிருந்தால் கூட நமது முடிவு மாறப் போவதில்லை. எனவே, உலக மக்களில் மூன்றில் இரண்டு

பட்டியல் 5-1.

1968 *ஆம் ஆண்டின் தலா உற்பத்தி (வெளிநாட்டு நாணய மாற்று வீதத்தின் அடிப்படையில் அமெரிக்க டாலரைக் கொண்டு மதிப்பிடப்பட்டது.)

பிரிவு A : ஆண்டொன்றுக்கு 0-100 டாலர் தலா உற்பத்தி கொண்டவை.

| ஆப்பிரிக்கா | ஆசியாவும் மத்திய கிழக்குப் பகுதியும் | இலத்தீன் அமெரிக்கா |
|---|---|---|
| அங்கோலா | ஆப்கனிஸ்தான் | ஹெட்டி |
| போட்ஸ்வானா | பூடான் | |
| புருண்டி, சாட் | பர்மா | |
| காங்கோ (குடியரசு) | இந்தியா | |
| டஹோமெ | இந்தோனேசியா | |
| எதியோபியா | லாவோஸ் | |
| காம்பியா, கினியா | மஸ்கட், ஓமன் | |
| மலாவி | நேபாளம் | |
| மோஜம்பிக் | யேமன் | |
| நைஜர் | | |
| நைஜீரியா | | |
| ருவாண்டா | | |
| சொமாலியா | | |
| டான்ஸ ஜீனியா | | |
| உகந்தா | | |
| மேல் வோல்டா | | |

பிரிவு B : ஆண்டொன்றுக்கு 101-300 டாலர் தலா உற்பத்தி கொண்டவை.

| ஆப்பிரிக்கா | ஆசியாவும் மத்திய கிழக்குப் பகுதியும் | இலத்தீன் அமெரிக்கா |
|---|---|---|
| ஆல்ஜீரியா | கம்பாடியா | பொலிவியா |
| கேமரூன் | சிலோன் | டொமினிகன் குடியரசு |
| மத்திய ஆப்ரிக்கா (குடியரசு) | சீனா | ஈக்வடார் |
| கானா | ஈரான் | எல் ஸால்வடோர் |
| கென்யா | ஈராக் | குயானா |
| லிபேரியா | ஜோர்டான் | ஹோண்டுராஸ் |
| மடகாஸ்கர் | தென்கொரியா | பராகுவே |
| மாரிடானியா | பாகிஸ்தான் | பெரு |
| மாரிஸியஸ் | சௌதி அரேபியா | |
| மொராக்கோ | தென் வியட்நாம் | |
| ஸெனிகால் | சிரியா | |
| ஸியெரா லியோன் | தாய்லாந்து | |
| தென் ரொடீஷியா | | |
| சூடான் | | |
| ஸ்வாஸிலண்டு | | |
| டோகோ | | |
| டுனீஸியா | | |
| அரேபியக் குடியரசு | | |
| ஜாம்பியா | | |

பிரிவு C : ஆண்டொன்றுக்கு 301-600 டாலர் தலா உற்பத்தி கொண்டவை.

| ஆப்பிரிக்கா | ஆசியாவும் மத்திய கிழக்குப் பகுதியும் | இலத்தீன் அமெரிக்கா |
|---|---|---|
| காபன் | சீனா (தாய்வான்) | பிரேஜில் |
| ஐவரி கோஸ்ட் | ஹாங்ஹாங் | பிரிட்டிஷ் ஹோண்டுராஸ் |
| ரே யூனியன் | வடகொரியா | சிலி |
| ஐரோப்பா | லெபனான், மலேசியா | கொலம்பியா |
| பல்கேரியா, மால்ட்டா | பிலிப்பைன்ஸ் | கோஸ்ட்டா ரிகா |
| போர்ச்சுகல் | சௌதி அரேபியா | ஜமைகா |
| யூகோஸ்லாவியா | துருக்கி | மெக்ஸிகோ, நிகரகுவா |
| பசுபிக் பெருங்கடல் | | ஸுரினாம் |
| ஃபீஜி | | |

பிரிவு D : ஆண்டொன்றுக்கு 601-1,600 டாலர் தலா உற்பத்தி கொண்டவை.

| ஆப்பிரிக்கா | ஐரோப்பா | இலத்தீன் அமெரிக்கா |
|---|---|---|
| லிபியா, | ஆஸ்திரியா | அர்ஜன்டைனா |
| தென் ஆப்பிரிக்கா | கிரீஸ் | நெத் ஆண்டிலெஸ் |
| ஆசியாவும் மத்திய கிழக்குப் பகுதியும் | ஹங்கேரி | பனாமா |
| புருனெய் | அயர்லாந்து | பிவெர்ட்டொ ரீகோ |
| சைப்ரஸ் | இத்தாலி | டிரினிடாடு, டொபெய்கோ |
| இஸ்ரேல் | போலந்து | வெனிஸுலா |
| ஜப்பான், சிங்கப்பூர் | ருமேனியா, ஸ்பெய்ன் | |

பிரிவு E : ஆண்டொன்றுக்கு 1,601-3,000 டாலர் தலா வருமானம் கொண்டவை

| ஐரோப்பா | வட அமெரிக்கா | பசுபிக் பெருங்கடல் |
|---|---|---|
| பெல்ஜியம் | கனடா | ஆஸ்திரேலியா |
| டென்மார்க் | | நியூஜிலாந்து |
| கிழக்கு ஜெர்மனி | | |
| பின்லாந்து | | |
| பிரான்ஸ் | | |
| ஐஸ்லாந்து | | |
| லக்ஸம்பர்க் | | |
| நெதர்லாந்து | | |
| நார்வே | | |
| சுவிட்சர்லாந்து | | |
| பிரிட்டன் | | |
| சோவியத் யூனியன் | | |
| மேற்கு ஜெர்மனி | | |

பிரிவு F : ஆண்டொன்றுக்கு 3,000 டாலருக்கு மேல் தலா உற்பத்தி கொண்டவை.

| | சராசரி தலா உற்பத்தி |
|---|---|
| ஆசியாவும் மத்திய கிழக்குப்பகுதியும் | |
| குவெய்த் ... ... ... ... ... ... ... ... | 3,738 டாலர் |
| ஐரோப்பா | |
| சுவீடன் ... ... ... ... ... ... ... ... | 3,315 ,, |
| வட அமெரிக்கா | |
| அமெரிக்க ஐக்கிய நாடு (அமெரிக்கா) ... ... ... ... ... | 4,379 ,, |

* இப் புள்ளிவிவரங்கள் 1968 ஆம் ஆண்டிற்கான விவரங்களாகும். 1968–ற்கான புள்ளிவிவரங்கள் கிடைக்காத நாடுகளுக்கு மட்டும் கூடுமான வரை மிகச் சமீப ஆண்டில் கிடைத்த புள்ளிவிவரங்கள் தரப் பட்டுள்ளன.

மூலம் : United Nations Statistical Yearbook, 1969; Frank Tachau, ed., The Developing Nations: What Paths to Modernisation ? (New York : Dodd, Mead 1972).

பகுதியினர் வறுமையில் வாடுகின்றனர்; அவர்களில் கணிசமான பகுதியினர் மிக மோசமான நிலையில் வாழ்ந்து வருகின்றனர்.[1]

## முன்னேற உரிமைக் கோரிக்கை

இந்த நாடுகளிலெல்லாம் வறுமை என்பது ஒன்றும் புதியதன்று; கொடிய வறுமைகூடத் தொண்டு தொட்டு இருந்து வந்துள்ளது. பொருளாதார முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளில் ஏற்பட்டுள்ள தொழில் வளர்ச்சியினாலும் இந்த ஏழை நாடுகளின் வாழ்க்கைத்தரம் பாதிக்கப்பட்டுள்ளதென்று சில பொருளாதார அறிஞர்கள் வாதாடுவர்.[2] இது உண்மைதானா என்பது ஒருபுறம் இருக்கட்டும்; ஆனால் ஏழை நாடுகள் வறுமையில் வாடுவதற்கு இது காரணமல்ல. உண்மையில், இங்கிலாந்தின் தொழில்புரட்சி ஏற்பட்ட காலத்தில் கூட இந் நாடுகள் ஏழை நாடுகளாகவேதான் இருந்தன; இவற்றில் பல தொடக்கத்திலிருந்தே வறுமையான நாடுகளாகத்தான் இருந்து வந்திருக்கின்றன. எனவே வறுமை என்பது பெரும்பாலும் இந் நாடுகளுக்குப் புதியதன்று; அது மிகப்பழம் கதைதான்.

முன்னேற்றம் குன்றிய நாடுகள் வறுமையில் வாடுவது ஒன்றும் புதிதன்று; எனினும், தம் வறுமை நிலையை அந்நாடுகள் உணர்ந்து, விழிப்புணர்ச்சிபெற்று, அதை எப்படியாவது ஒழித்துக்கட்ட வேண்டு மென்று இப்போதுதான் தீர்மானித்துள்ளன. இவ்வித விழிப் புணர்ச்சியுடன் தீர்மானம் கொண்டிருப்பதுகூட தொழில்வளமிக்க

[1] அமெரிக்காவிலுள்ள நகரங்களில் வாழும் குடும்பத்தினரில் நான்கு பேர் கொண்ட குடும்பத்தினருக்கு மாத வருமானம் 4,000 டாலருக்கும் குறைவாக இருந்த தென்றால் அக்குடும்பத்தினர் ஏழைக்குடும்பத்தி னராகவே கருதப்பட வேண்டுமென்று 1972-ல் மதிப்பிடப்பட்டுள்ளது. இந்த அடிப்படையில் பார்த்தால் உலக மக்கள்தொகையில் ஏறக் குறைய 1 சதவீதத்தைத் தவிர ஏனைய மக்கள் அனைவருமே ஏழை மக்கள் என்று தான் கருதவேண்டும்.

[2] சான்றாக, தொழில் வளமிக்க நாட்டுத் தொழில்களுடன் ஏழை நாட்டுத் தொழில்கள் போட்டியிட முடிவதில்லை; எனவே, தொழில் வள மிக்க நாடுகளின் முன்னேற்றத்தால் ஏழை நாட்டுத் தொழில்கள் மென் மேலும் பின்வாங்கி விடுகின்றன என்றும், இதைப் 'பின் வாங்கும் விளைவு கள்' (backward effects) என்றழைக்கலாம் என்றும் பேராசிரியர் குன்னர் மிர்டால் (Gunnar Myrdal) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள். இதேபோல், தம் ஆதிக்கத்தின் கீழ் இருந்த குடியேற்ற நாடுகளின் தொழில்களைத் தாய் நாட்டு அரசாங்கம் திணரடிக்க வைத்ததும் உண்டு என்பதற்கு எத் தனையோ சான்றுகளையும் அவர் தருகின்றார். Gunnar myrdal அவர் களின் Economic Theory and Underdeveloped Regions (London: Duckwork, 1957) என்ற நூலைப் பாக்கவும். எனினும், மேற்கத்திய நாடுகளின் வளர்ச்சி யால் இப்படிப்பட்ட நாச விளைவுகள்தான் ஏற்படுகின்றன என்று எண்ணு வது சரியல்ல; குடியேற்ற நாடுகளுக்குத் தாய் நாட்டினால் ஏற்பட்ட நட் டங்கள் மட்டுமின்றி, எத்தனையோ விதமான பலன்களும் ஏற்பட்டிருக் கின்றன என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தின் விளைவாகத்தான் என்று தான் தோன்றுகிறது. இதைத்தான் ஒரு சில பொருளாதார அறிஞர்கள் 'பின்பற்றக்கூடிய விளைவு' (Demonstration effect)[3] என அழைக்கின்றனர்; இவ்விளைவு பல ஆண்டுகளாகவே உலகில் ஏற்பட்டு வந்துள்ளதாக அவர்கள் நினைக்கின்றனர். 19ஆம் நூற்றாண்டில் மேற்கத்திய நாடுகள் கிழக்கத்திய நாடுகளில் ஆதிக்கம் செலுத்தி வந்ததாலும், பின்னர், இந்த 20 ஆம் நூற்றாண்டில் போக்குவரத்து வசதிகளும் சாதனங்களும் முன்னேற்ற மடைந்ததாலும்தான் பொருளாதார முன்னேற்றமடைந்துள்ள நாடுகளின் வழிமுறைகளை இந்த ஏழை நாடுகள் பின்பற்ற முடிந்தது. பொருளாதார முன்னேற்றமடைந்துள்ள நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரம் எவ்வளவோ உயர்ந்து விட்டதைக் கண்ட இந்நாடு கள், தாமும் துரிதமாக முன்னேற வேண்டிய அவசியத்தை உணர்ந் துள்ளன.

தீவிரமாக முன்னேற்றமடைய வேண்டுமென்ற வேட்கையால் எத்தனையோ விதமான பிரச்சினைகளும் தோன்றியுள்ளன. அரசியல் ரீதியாகப் பார்த்தால் குடியேற்ற நாடுகளின் ஆதிக்கத்திற்கு எதிராக இந்நாடுகள் கோஷமிட்டன; அதோடு, கடந்த காலத்தில் அந்நியரின் ஆட்சிக்குப் பலியாகி விட்டதைக் குறிப்பிடும் கோஷங் களும், வருங்காலத்தில் சாதிக்கப் போகின்ற சாதனைகளுக்கு வாக்குறுதி யளிக்கும் முழக்கங்களும் இந்நாடுகளில் மலிந்து விட்டன. இதனால், சில சமயங்களில் எதற்காக அயல் நாட்டவரைப் பின்பற்று கின்றனவோ, அந்த முன்னேற்றத்தின் குறிக்கோளே பாதிக்கப்பட்டு விடுகிறது. சான்றாக, வளர்ச்சி குன்றிய சில நாடுகள், பொருளாதார முன்னேற்றம் அடைவதற்கு முன்பே மேற்கத்திய நாடுகளி

[3] ஒரு நாட்டிலுள்ள நுகர்வோர் மற்றவர்களின் நுகர்ச்சி முறைகளைப் பார்த்து அவ்வாறே தாமும் செய்ய வேண்டுமென்று விரும்பும் எழுச்சியைக் குறிப்பிடும் வகையில் 'பின்பற்றக் கூடிய விளைவு' என்ற சொல்லை முதன் முதலில் பயன்படுத்தியவர் Harvard பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த James S. Dusenberry அவர்கள்தான். Income, Saving, and the Theory of Consumer Behaviour (Cambridge: Harvard University Press, 1949) என்ற நூலில் தான் அவர் இச் சொல்லை முதன் முதலில் பயன்படுத்தினார். பின்னர், காலம் கடந்த Ragnar Nurkse அவர்கள், தம் Problems of Capital Formation in the Underdeveloped Areas (New York. Oxford University Press, 1953) என்ற புகழ் வாய்ந்த நூலில் உலக நாடுகளின் பொருளாதாரத் தொடர்பு களுக்கும் இக்கருத்தை விரிவுபடுத்தினார். அதாவது, உயர்ந்த வாழ்க்கைத் தரம் கொண்டுள்ள நாடுகளைப் போல் தாமும் முன்னேறி தம் வருமானத் தையும் பெருக்க வேண்டும்மென்று பிற நாடுகள் முயற்சி செய்வதையே இது பிரதிபலிக்கின்றது. வாழ்க்கைத்தரத்தை உயர்த்த வேண்டுமென விரும் பினால் மட்டும் போதாது. சொல்லப் போனால் ஏழை நாட்டவர் செல்வ மிக்க நாட்டவரைப் போல் தாமும் வசதியாக வாழ வேண்டுமென்று நுகர்ச் சிச் செலவை அதிகரிக்க முயல்கின்றனர். அப்படிச் செய்யும் போது, ஏழை நாட்டில் மூலதனத் திரட்சி பாதிக்கப்பட்டு விடுமாகையால், நீண்ட கால முன்னேற்றமே ஏற்படாமல் போனாலும் போகலாமென Nurkse அவர்கள் எச்சரிக்கை செய்துள்ளார்.

லுள்ளதைப்போல் சமூகப் பாதுகாப்புத் திட்டங்களையும் சமூக நலத் திட்டங்களையும் செயல்படுத்தி விடுகின்றன; மேற்கத்திய நாடுகளிலோ இத்திட்டங்கள் முன்னேற்ற மடைந்த பின்னர்தான் அமலாக்கப்பட்டன. இவ்வாறாக, தம் சக்திக்கு மீறி இச்சமுதாயத் திட்டங்களை ஏழை நாடு செயல்படுத்தி விடுவதால் நிரந்தரமான முன்னேற்றத்தின் சக்தி உறிஞ்சப்பட்டு விடுகிறது.

இறுதியாக, ஒன்று கூற வேண்டும்: அதாவது முன்னேற்ற மடைய வேண்டுமென்ற எழுச்சிதான் ஏழைநாடுகளில் வெகுகால மாக இருந்து வரும் வறுமையை ஒழித்துக்கட்டக் கூடியது. இந்த எழுச்சிமட்டும் ஏற்படாமல் இருந்திருந்தால் முன்னேற்றமடைவதி லுள்ள பிரச்சினைகளும் தோன்றியிராது; வறுமையும் மறைவதற்கு வழியிராது.

## முன்னேற்றத்திலுள்ள தடைகள்

இன்றைய உலகில் ஏழை நாடுகளும் முன்னேற்றமடைய வேண்டுமென்பது இன்றியமையாததுதான்; ஆனால் அப்படி முன்னேற்றமடைவதில் எத்தனையோ விதமான தடைகள் உள்ளன என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. 19 ஆம் நூற்றாண்டில் முன்னேறத் தொடங்கிய நாடுகளைக் காட்டிலும் இந்நாடுகள் முன்னேற்றத்தைத் தொடங்குவதே மிகக் கடினமான காரியமென்று பொருளாதார அறிஞர்கள் வலியுறுத்திக் கூறுகின்றனர்.

ஒரு விதத்தில் பார்த்தால் இப்படிக் கூறுவது வியப்பாகத்தான் உள்ளது. ஏனெனில் வளர்ச்சி குன்றிய நாடுகள் முன்னேற்றமடை வதற்கு மிக முக்கியமாகத் தேவைப்படும் தொழில்நுட்பம் தயாராகவே உள்ளது. முன்னேற்றமடைந்துள்ள நாடுகள் அபிவிருத்தி செய்துள்ள தொழில் நுட்பங்களை இந்நாடுகள் அப்படியே 'கடன்' வாங்கிப் பயன்படுத்தி முன்னேற முடியும். ஆனால் இதில்கூட எத்தனையோ விதமான நடைமுறைப் பிரச்சினைகள் உள்ளன. சான்றாக, ஆண்டொன்றுக்கு 100 டாலர்கூட தலா வருமானமில் லாத இந்தியாவில் சொந்தமாகவே அணு ஆராய்ச்சி நிலையம் தொடங்கியிருப்பது ஒரு விதத்தில் புதிராகத்தான் உள்ளது. அதே போல், மிகக் குறைந்த அளவில் தலா வருமானம் இருந்தும்கூட, சீனாவில் வெடிகுண்டு தயாரிப்பது விநோதமான நிலைதான்.

எனினும், 19 ஆம் நூற்றாண்டில் முன்னேறத் தொடங்கிய நாடுகளைப்போல் இந்நாடுகள் முன்னேற்ற மடைவதற்கான சாதகமான சூழ்நிலை இருக்கும் அதே சமயத்தில் பல பிரச்சினை

களும் உள்ளன என்பதை நாம் சற்று முன்னர்தான் குறிப்பிட்டோம். முன்னேற்றம் குன்றிய நாடுகள் எத்தனையோ விதமான பிரச்சினை களைச் சமாளிக்க வேண்டியுள்ளது; அதோடு, முன்னேற்றத்தின் குறுக்கேயுள்ள பல தடைகளைக் கடந்து செல்ல முடியாத அளவுக்குச் சூழ்நிலைகளும் பாதகமாகவே இருக்கின்றன. ஏற்கெனவே முன்னேற்றமடைந்துவிட்ட நாடுகளைக் காட்டிலும் இந்நாடுகள் முன்னேறத் தொடங்குவதே கடினம் என்பதற்குப் பல காரணங்கள் உள்ளன; அவற்றில் சில வருமாறு:

**1. மேற்கத்திய தொழில்நுட்பத்தைப் பின்பற்றுவதிலுள்ள சிக்கல்:** ஏழை நாடுகள் மேற்கத்திய தொழில் நுட்பத்தை அமலாக்குவதன் வாயிலாகத்தான் முன்னேற்றமடைய முடியும்; ஆனால் அத்தொழில் நுட்பத்தை அப்படியே பின்பற்றக்கூடிய சூழ்நிலை இந்நாடுகளில் கிடையாது. இந்தத் தொழில் நுட்பத்தை உருவாக்கிய நாடு எதுவாயிருந்தாலும், அதன் சூழ்நிலைக்கேற்பத் தான் அத்தொழில் நுட்பம் உருவாக்கப்பட்டிருக்கிறது; அதாவது, மேற்கத்திய நாடுகளில் புதிய தொழில் நுட்பத்தை அமலாக்குவதற்கு வேண்டிய பயிற்சியும் அனுபவமும் பெற்ற தொழிலாளரும் தொழில்நுட்ப அறிஞர்களும் உள்ளனர். ஆனால் ஏழைநாடுகளிலோ அப்படிப்பட்ட தொழிலாளரும் தொழில்நுட்ப அறிஞர்களும் அதிகமில்லை. மேலும், பெரும்பாலும் புதிய தொழில்நுட்ப முறைகளைப் பயன்படுத்துவதற்கு நிறைய மூலதனம் தேவை; ஆனால் ஏழை நாடுகளில் இருக்கும் மூலதனமோ மிகக் கொஞ்சம்தான். அதோடு, புதிய தொழில்நுட்பத்தைக் கையாள மனித உழைப்பு அவ்வளவாகத் தேவைப்படாது; ஆனால் இந்த ஏழைநாடுகளிலோ தொழிலாளர் மிதமிஞ்சிய அளவுக்கு ஏராளமாக உள்ளனர். எனவே, மேற்கத்திய நாட்டுத் தொழில்நுட்ப முறைகள் இந்நாடுகளுக்குப் பொருத்தமற்றதாகி விடுகின்றன. அதே சமயம் நவீனத் தொழில் நுட்ப முறைகளையும் இந்நாடுகள் பயன்படுத்த முடியாது. ஏனெனில் அதற்குரிய பொருளாதாரச் சூழ்நிலையும் இந்நாடுகளில் கிடையாது. இந்த நிலைமையில், ஏழை நாடுகள் வளர்ச்சியுற வேண்டுமானால், நவீனத் தொழில்நுட்ப முறைகளைத் தத்தம் சூழ்நிலைகளுக்கேற்ப மாற்றி அமைத்துப் புதுவகையான தொழில்நுட்ப முறையைப் பயன்படுத்துவதுதான் சிறந்த வழியாகும். அவ்வாறின்றி, மேற்கத்தி நாடுகளில் தற்போது பயன்படுத்தப்படும் தொழில்நுட்ப முறையை அப்படியே பின்பற்ற முயற்சித்தால் மூலதனம், பயிற்சியும் அனுபவமும் பெற்ற உழைப்பு ஆகியவற்றிற்குக் கிராக்கி மிகுந்துவிடும்; அதே சமயம், பயிற்சியும் வேலையுமின்றி சும்மா இருக்கும் தொழிலாளரின் எண்ணிக்கையோ பெருகிவிடும்.




வரைபடம் 5—1.
உழைப்பை மிச்சப்படுத்தும் தொழில் நுட்பத்திற்குச் சான்று

அதிக மூலதனமும் குறைந்த உழைப்பும் கொண்ட மேற்கத்திய தொழில்நுட்பத்தை ஏழை நாடுகள் அப்படியே பயன்படுத்த முயன்றால் என்ன ஏற்படும் என்பதை 5–1 வரைபடம் காட்டுகிறது. இப்படத்தில் உழைப்பின் இறுதி நிலை உற்பத்திக் கோடுகள் இரண்டு உள்ளன. இவற்றில் முதலாவது இறுதிநிலை உற்பத்திக் கோட்டிலிருந்து ($MP_{L1}$) இரண்டாவது இறுதிநிலை உற்பத்திக் கோட்டிற்கு ($MP_{L2}$) நகர்ந்தால் மொத்த உற்பத்தி அதிகரித்து விடுகிறது என்பதைப் பாருங்கள். ஆனால், நடப்பிலுள்ள கூலியில் (W) முன்பிருந்ததைக் காட்டிலும் குறைந்த அளவு உழைப்பைத்தான் பயன்படுத்த முடியும். அப்படியானால், ஏற்கனவே மக்கள்தொகைப் பெருக்கமுடைய அந்நாடு மிக இக்கட்டான பிரச்சினைக்கு ஆளாகிவிடுகிறது. உற்பத்தியைப் பெருக்குவதா அல்லது வேலைவாய்ப்பை அதிகரிப்பதா என்ற பெரும் சிக்கல் ஏற்பட்டு விடுகிறது. வேறு விதமாகக் கூறின் முன்னேற்றம் வேண்டுமா அல்லது தொழிலாளருக்கு வேண்டிய வேலை வேண்டுமா என்ற சிக்கல் தோன்றி விடுகிறது. வளர்ச்சி குன்றிய நாடுகள் பெரும்பாலும் இப்பிரச்சினையிலிருந்து விடுபட முடிவதில்லை.

**2.** தொழிற்புரட்சிக்கு வேண்டிய முன்னேற்பாடுகளும் கிடையாது: 19 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட தொழில் புரட்சி ஐரோப்பா நாடுகளிலோ அல்லது ஐரோப்பிய நாடுகளின் ஆதிக்கத்திலிருந்த நாடுகளிலோதான் ஏற்பட்டது. அப்போது, அந்நாடுகள் அப்புரட்சியை ஏற்றுக்கொள்ளும் வகையில் சமுதாய, பொருளாதார முன்னேற்பாடுகளுடன் தயாராகவே இருந்தன. ஆனால் இன்று முன்னேற்றமடையத் துடிக்கும் நாடுகளோ, தொழில் புரட்சிக்கு வேண்டிய முன்னேற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கும் அதே சமயத்தில் தொழில் புரட்சியையும் ஏற்படுத்துவதற்கு முயற்சித்து வருகின்றன. இதனால் பெரும் பிரச்சினை மட்டுமின்றி, சில சமயங்களில் அரசியல் குழப்பம்கூட ஏற்பட்டு விடுகிறது. சான்றாக, கடந்த 10 அல்லது 20 ஆண்டுகளில் முன்னேற்றம் குன்றிய பாகிஸ்தான், நைஜீரியா, இந்தோனேசியா, சிலோன், சூடான், புருண்டி,

காங்கோ, குயூபா போன்ற எத்தனையோ நாடுகளில் அரசியல் கிளர்ச்சியும் கொந்தளிப்பும் ஏற்பட்டுள்ளன. எனவே, வறுமை மிக்க பல நாடுகளில் தொழில் புரட்சி ஏற்படுவதற்கு முன்னர், சமூகப் புரட்சியும் அரசியல் புரட்சியும் இன்றியமையாததாகி விடுகின்றன. பொதுவாகக் கூறின், தொழில்புரட்சிக்கான முன்னேற்பாடுகளைச் செய்யாமலிருந்தால் இந்நாடுகளனைத்தும் தொழில்வள மிக்க நாடுகளைக்காட்டிலும் ஏழை நாடுகளாகவேதான் இருக்கவேண்டியிருக்கும். அப்படியென்றால், தொழிற்புரட்சி தொடர்ந்து நடைபெறுவதற்கு வேண்டிய விவசாய முன்னேற்றமும் வணிக வளர்ச்சியும் ஏற்பட முடியாது. அப்படி ஏற்படவில்லை யென்றால், நவீனப் பொருளாதார வளர்ச்சிக்கு வேண்டிய நிறுவனங்களோ அங்காடியோ அமைவதற்குரிய காலம் இன்னும் வரவில்லை என்றுதான் பொருள். ஏனெனில், ஒரு நாடு பொருளாதார வளர்ச்சியை அடைய வேண்டுமானால், அந்நாட்டு மக்கள் தங்களுடைய பொருளாதார நிலையை மேம்படுத்துவதற்காகத் துடித்துக் கொண்டிருக்க வேண்டும்; அதோடு, ஒழுங்கான வழிமுறையில், குறிப்பிட்டபடி, கடினமாக உழைக்கக் கூடிய ஆர்வம் கொண்ட மக்களாகவும் இருக்க வேண்டும்; வருங்கால நன்மையைக் கருதி எதையும் தியாகம் செய்யக் கூடியவர்களாகவும் இருக்க வேண்டும். இப்படிப்பட்ட மக்களின் மனப்போக்கு இல்லாத நாடு பொருளாதார முன்னேற்றத்தை அடைய முடியாது. ஆனால் வளர்ச்சி குன்றிய பல நாடுகளில் இப்படிப்பட்ட மனப் பக்குவமும் மனப்போக்கும் கொண்ட மக்கள் மிகச் சொற்பமாகத் தான் உள்ளனர்.

**3. மக்கள்தொகைப் பிரச்சினை:** சென்ற நூற்றாண்டில் மேற்கத்திய நாடுகளில் இருந்த மக்கள்தொகைப் பிரச்சினையோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இன்றுள்ள வறுமை நிறைந்த நாடுகளில் இப் பிரச்சினையே வேறுவிதமாகவும் மிகத் தீவிரமானதாகவும் உள்ளது என்பது தெளிவாகத் தெரியும். மக்கள்தொகை வளர்ச்சி வீதம் அதிகமாயிருக்கும் அதேசமயம், இந்நாடுகளில் இருக்கின்ற நிலத்தையும் இதர வளங்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் மக்கள் நெருக்கடியும் அதிகமாகவேதான் இருக்கின்றது.

நாம் ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல், வளர்ச்சி குன்றிய நாடுகள் பலவற்றில் 'பொது உடல் நலப் புரட்சி' ஏற்பட்டுள்ளதால் இறப்பு வீதம் குறைந்து விட்டது; ஆனால் அதே சமயம், பொருளாதார முன்னேற்றம் ஏற்படாமலேயே மக்கள்தொகை மிக வேகமாகப் பெருகி வருகிறது. சான்றாக, 1960–1970 இல் மக்கள்தொகை வளர்ச்சி ஆண்டொன்றுக்கு ஆப்பிரிக்காவில் 2·5 சதவீதமாகவும், ஆசியாவில் 2·6 சதவீதமாகவும், இலத்தீன் அமெரிக்காவில் 2 9 சத

வீதமாகவும் இருந்திருக்கிறது. இவ்வளவு துரிதமாக மக்கள்தொகை பெருகிவருவதால் இந்த ஏழை நாடுகளின் சுமை மென்மேலும் அதிகரித்து விடுவதோடு, மூலதனத்திரட்சி குறைந்துவிடவும் முற்படுகிறது. எவ்வாறெனில் திரட்டப்பட்ட மூலதனத்தைக் கொண்டு முன்பைவிட அதிகப்படியான மக்களுக்கு வேண்டிய முதற்கருவிப் பொருள்களை விநியோகம் செய்வதற்கே பயன்படுத்த வேண்டியுள்ளதால், நாட்டின் தலா உற்பத்தியை அதிகரிக்க முடியாமல் போய் விடுகிறது. இப்பிரச்சினை வருங்காலத்திலும் தொடர்ந்து நீடிக்கலாம். எப்படியெனில், முன்னேற்றமடைந்துள்ள நாடுகளைக் காட்டிலும் இந்த ஏழை நாடுகளின் பிறப்பு வீதம் இன்றுகூட அதிகமாகத்தான் உள்ளது. காலப்போக்கில் வேண்டுமானால் ஒரு வேளை குறைந்தாலும் குறையலாம்.

மேலும், ஏற்கெனவே மக்கள்தொகை அதிகமாகவும் நிலமும் ஏனைய வளங்களும் குறைவாகவும் உள்ள நாடுகளில் மென்மேலும் மக்கள்தொகை வளர்ச்சி அடைந்து வந்தால், பிரச்சினை தீவிரமாகி விடுகிறது. பெரும்பாலும் ஆசிய நாடுகளிலெல்லாம் இந்த நிலைதான் ஏற்பட்டுள்ளது. உலகிலுள்ள ஏழைமக்களில் பெரும்பாலானோர் இந்த நாடுகளில்தான் உள்ளனர். மேலும், பல ஆசிய நாடுகளில் மக்கள்தொகைப் பெருக்கத்தால் சாகுபடி செய்யும் நிலத்திற்கும் நெருக்கடி ஏற்பட்டுள்ளதால், தொன்மைப் பொருளாதார அறிஞர்களின் கூற்றும் உண்மையாகி விடுகிறது. குறிப்பாக, ஜாவா போன்ற சில நாடுகளில் மக்கள் நெருக்கடி மிக அதிகம்; ஒரு சதுர மைலுக்கு 1,000 பேர் என்று வாழ்ந்து வருகின்றனர். மக்கள்தொகை வளர்ச்சி அமெரிக்காவில் வேண்டுமானால் சாதகமாயிருந்திருக்கலாம். ஆனால் இப்படிப்பட்ட ஏழை நாடுகளில் மக்கள்தொகை பெருகினால் பொருளாதார முன்னேற்றம் பாதிக்கப்படுமே தவிர ஊக்கம் பெறாது. தொழில் முன்னேற்றத்திற்கு வேண்டிய மூலதனம் போதுமானதாக இல்லாததால் நகர்ப்புறங்களில் வாழும் மக்கள் பலர் வேலையின்றி, கிராமப்புறங்களுக்கே குடிபோக வேண்டியுள்ளது; அப்படிப்பட்ட நிலை ஏற்படும்போது, கிராமப்புறங்களில் நெருக்கடி அதிகமாகி விடுகிறது. இவ்வாறாக, ஏற்கெனவே வேலையில்லாத் தொழிலாளர் அதிகமுள்ள நாட்டில் மக்கள்தொகை துரிதமாக வளர்ச்சியடையும்போது, தொழில் துறையில் வேலைவாய்ப்பை அதிகரிப்பதற்கென்று எவ்வளவுதான் முயற்சி செய்தாலும் வேலையில்லாத் திண்டாட்டம் இருந்துகொண்டேதான் இருக்கும். அப்போது, பொருளாதார முன்னேற்றம் ஏற்படுவதற்கு மாறாக, வேலை

யில்லாத் தொழிலாளர், முழுநேரமும் வேலை கிடைக்காத தொழிலாளர் ஆகியோரின் சதவீதம் மென்மேலும் அதிகரித்துக்கொண்டேதான் இருக்கும்.[4]

**4.** பன்னாட்டுச் சூழ்நிலை இறுதியாக, 19 ஆம் நூற்றாண்டில் முன்னேற்றமடையத் தொடங்கிய நாடுகளுக்கு இல்லாததொரு புதிய பிரச்சினையும் இன்றைய ஏழை நாடுகளுக்கு இருப்பதாகப் பல பொருளாதார அறிஞர்கள் கருதுகின்றனர். அதாவது, தற்போதுள்ள ஏழை நாடுகள் முன்னேற்றமடைவதற்குரிய பன்னாட்டு சூழ்நிலை சாதகமாக இல்லை என்று அவர்கள் நம்புகின்றனர். எப்படியென்பதைப் பார்ப்போம். பொருளாதார வளர்ச்சி பொற்றுள்ள நாட்டவர், தம் அண்டையிலுள்ள ஏழை நாடுகளில் முதலீடு செய்வதற்கு இப்போது விரும்புவதில்லை. 19ஆம் நூற்றாண்டிலோ பிரிட்டிஷ் நாட்டவர் ஏழை நாடுகளிலும் ஏராளமாக முதலீடு செய்து வந்தனர். பிற நாட்டு மூலதனத்திற்கு எவ்விதமான எதிர்ப்போ அல்லது கட்டுப்பாடோ அன்று கிடையாது. ஆனால் இன்று அப்படியல்ல. இந்த 20 ஆம் நூற்றாண்டில், செல்வமிக்க நாட்டினர் ஏழை நாடுகளில் முதலீடு செய்வது மிகச் சொற்பம்தான். அந்நாடுகளுக்கு வேண்டிய அளவுக்கு பிற நாட்டவர் மூலதனம் வருவதில்லை. சான்றாக அமெரிக்காவையே எடுத்துக் கொள்வோம். அமெரிக்க நாட்டு மக்கள் கனடா, மேற்கு ஐரோப்பா போன்ற நாடுகளில் தான் அதிகமாக முதலீடு செய்து வருகின்றனர்; அவற்றையடுத்து, எண்ணெய், பெட்ரோல் போன்ற கனிப் பொருள்கள் கிடைக்கும் நாடுகளிலும் முதலீடு செய்கின்றனர். இவ்வகைக் கனிப் பொருள்கள் கிடைக்கும் நாடுகள் பெரும்பாலும் இப்பொருள்களையே நம்பி வாழ்கின்றன.

ஏழை நாடுகளில் பிறநாட்டவர் வந்து முதலீடு செய்யக்கூடிய சூழ்நிலை இப்போது கிடையாது. இதற்கு வளர்ச்சி குன்றிய நாடுகளின் மனப்போக்கும் முக்கிய காரணமாகும். இந்நாடுகள் ஒரு காலத்தில் அந்நிய நாடுகளின் ஆதிக்கத்தில் இருந்ததால் அவர்கள் மீது ஓரளவு வெறுப்படைந்துள்ளன; அதோடு மட்டுமின்றி, தேசிய

[4] முழு நேரமும் வேலையின்றி இருக்கும் தொழிலாளரின் எண்ணிக்கையைக் கணக்கிடுவது மிகக் கடினம்; அதனால்தான் நாட்டிற்கு நாடு மட்டுமின்றி, பொருளாதார அறிஞர்களிடையேயும் இக் கணக்கெடுக்கும் முறை பல்வேறாக உள்ளது. ஏழை நாடுகளில் கிராமப் புறங்களில் வாழும் தொழிலாளரில் 25, 30 அல்லது 45 சதவீதம் பேர் முழு நேரமும் வேலையின்றி இருப்பதாகவும், அவர்களால் நாட்டின் உற்பத்தி எந்த விதத்திலும் அதிகரிப்பதில்லையென்றும் அனுபவம் கொண்ட சிலர் சான்றுகளோடு நிரூபிக்க முயல்கின்றனர். ஆனால் சில பொருளாதார அறிஞர்களோ இந்த மதிப்பீடு மித மிஞ்சியதென வாதாடுவர். இதைப்பற்றிய ஆய்வின் பின்னணிக்கு மித மிஞ்சிய தொழிலாளர் கொண்ட நாட்டைப் பற்றிய 2 ஆம் அதிகாரத்தைப் பார்க்கவும்.

மனப்பான்மையின் அடிப்படையில், பிறநாட்டு மூலதனம் எப்படிப் பட்டதாக இருக்க வேண்டும், எந்தெந்த நிபந்தனைகளுக்கு உட்பட் டிருக்க வேண்டும் என்றெல்லாம் கட்டுப்படுத்துகின்றன. இவ்விதக் கட்டுப்பாடு இல்லாத ஏழை நாடுகள் ஒரு சிலதான்: அந்த நாடு களில்கூட, பிற நாட்டுத் தொழில்களைத் தேசிய மயமாக்கி விடுதல், பிறநாட்டவரின் சொத்துக்களைப் பறிமுதல் செய்துவிடல் போன்ற மிரட்டல்கள் உள்ளன. இச் சூழ்நிலையில் அமெரிக்க நாட்டு மக்கள், தம் சொத்துக்களுக்கும் உடைமைகளுக்கும் பாதுகாப்புள்ள நாடுகளிலும், முதலீடு செய்து பழக்கப்பட்டுவிட்ட நாடுகளிலும் தான் முதலீடு செய்ய முன்வருகின்றனர். சான்றாக, பொருளாதார முன்னேற்றத்தினால் மென்மேலும் புதிய வாய்ப்புகள் தோன்றும் பொதுச்சந்தை அமைந்துள்ள நாடுகளில்தான் அதிக முதலீடு செய்ய விரும்புகின்றனர்.

இவ்வாறாக, ஏழை நாடுகளுக்குப் பிறநாடுகளிலிருந்து வரும் தனியார் மூலதனம் மிகச்சொற்பம்தான். இதைச் சரிக்கட்டக்கூடிய வகையில் பிறநாட்டு அரசாங்க உதவியை ஓரளவு இவை பெற்று வருகின்றன என்பதை இங்கு குறிப்பிட வேண்டும். கடந்த சுமார் 20 ஆண்டுகளாக அமெரிக்கா போன்ற எத்தனையோ நாடுகள் மட்டு மன்றி, பன்னாட்டு நிதி நிறுவனங்களும் ஏழை நாடுகளின் முன் னேற்றத்தில் அக்கறை கொண்டு, கடனாகவும் மானியமாகவும் உதவி செய்து வந்துள்ளன. எனினும், பிறநாட்டு உதவித் திட்டங்கள் கூடத் தற்போது கவரும் தன்மையினை இழந்து வருகின்றன. இதைப்பற்றிச் சற்று விவரமாகப் பிற்பாடு ஆராய்வோம்.

இன்றுள்ள வளர்ச்சிகுன்றிய நாடுகள் துரிதமாக வளரமுற்படும் போது என்னென்ன பிரச்சினைகளெல்லாம் முக்கியமாக எழுகின்றன என்பதை இதுவரை ஆராய்ந்தோம். நவீனத் தொழில்நுட்ப முறைகள் அனைத்தும் பிறநாடுகளில் இருந்தும் கூட, அவற்றைப் பயன்படுத்துவதற்கு வேண்டிய மூலதனமோ, பயிற்சியும் அனு பவமும் பெற்ற தொழிலாளர்களோ நிர்வாகிகளோ இந்த ஏழை நாடுகளில் மிகக் குறைவுதான். மேலும், ஏழை நாடுகளில் நிலவும் சமுதாய, பொருளாதாரச் சூழ்நிலைகளும் தொழிற்புரட்சியை ஏற்படுத்துவதற்குச் சாதகமாகவோ தயாராகவோ கிடையாது. எனவே, முன்னேற்ற மடைந்துள்ள நாடுகளின் தொழிற்புரட்சியை இந்நாடுகள் அப்படியே பின்பற்றுவது என்பது இயலாத காரியமாக உள்ளது. அதோடு, தீவிரமான மக்கள்தொகைப் பிரச்சினையும் இந்நாடுகளை வாட்டுகின்றது. பிற நாட்டு அரசாங்க உதவியையும் தனியார் முதலீட்டையும் பெறுவதில்கூடப் பலவிதமான சிக்கல்கள் ஏற்பட்டுவிட்டன.

ஏழை நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தை அடைவதற்கு இன்னும் எத்தனையோ விதமான தடைகளும் பிரச்சினைகளும் உள்ளன. நாம் விளக்கியுள்ளவையோ ஒருசில தான்; எனினும், இந் நாடுகள் முன்னேற்றமடையத் தொடங்குவது எவ்வளவு கடினமான தென்பதைப் புலப்படுத்த இந்த விளக்கமே போதுமானது 19 ஆம் நூற்றாண்டில் முன்னேறத் தொடங்கிய நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால், இன்றைய ஏழைநாடுகள் முன்னேற்றத் தடைகளையெல்லாம் தகர்த்தெறிந்துவிட்டு வளர்ச்சியடையத் தொடங்குவது மிகக்கடினமான பிரச்சினைதான் என்பது தெளிவாகிவிட்டது. இந் நாடுகளிலுள்ள 'வறுமைச் சுழற்சி' உண்மையிலேயே கடினமான சுழற்சிதான்; ஆகையால், இந் நாடுகள் வளர்ச்சியை நோக்கித் தம்மைத் தள்ளிவிட வேண்டுமாயின், அது பலம் வாய்ந்த தள்ளுதலாக இருக்க வேண்டுமென்று பொருளாதார அறிஞர்கள் பலர் கூறுகின்றனர். ஏன் அப்படிக் கூறுகின்றனர் என்பது இப்போது புரிகிறது.

## எந்த அளவுக்கு முன்னேற்றமடையக்கூடும்?

பொருளாதார வளர்ச்சி குன்றிய நாடுகள் துரிதமாக வளர்ச்சியடைய வேண்டிய நிர்ப்பந்தமும், அவ்வளர்ச்சிக்கு இடையூறாக இருக்கும் தடைகளும் சேர்ந்து அந் நாடுகளில் சமுதாயச் சீர்கேட்டையும் அரசியல் நெருக்கடியையும் உண்டாக்கியுள்ளன. பொருளாதார வளர்ச்சியில் அக்கறை கொண்டுள்ள மாணவருக்கு இது, மிகக்கடினமான பல பிரச்சினைகளுக்கு வழி வகுக்கின்றது. துரிதமாக முன்னேற வேண்டிய அவசியத்தை இந்த ஏழைநாடுகள் நிறைவேற்றுமா? பொருளாதார வளர்ச்சியடைந்துள்ள நாடுகளுக்கும் இந்த ஏழை நாடுகளுக்குமிடையேயுள்ள ஏற்றத்தாழ்வு மறைந்து விடுவதற்கு அல்லது குறைந்து விடுவதற்காவது நம்பிக்கை உண்டா? பொருளாதார வளர்ச்சி குன்றிய நாடுகள் எந்த அளவுக்கு முன்னேற்றமடையக்கூடும்?

இக் கேள்விகளுக்குத் திட்டவட்டமான பதில் ஒன்றும் கிடையாது. ஆனால், இக் கேள்விகள் புலப்படுத்தும் ஒருசில நிகழ்ச்சிகளை மட்டும் நாம் சிந்தித்துப்பார்ப்பது நல்லது. முதலாவதாக, இந் நாடுகளின் நிலைமைகள் பலவிதமாக இருந்தாலும் கூட, அந்தந்த நிலைமைக்கேற்ப இவை வளர்ச்சியடையக்கூடும் என்றுதான் சொல்லவேண்டும். கடந்தகால அனுபவம் மட்டுமன்றி, இன்றைய அனுபவம்கூட இதைத்தான் புலப்படுத்துகின்றன. அவ்வாறு வளர்ச்சியடைய முடியும் என்பதற்குச் சிறந்த சான்றாக விளங்கு

கிறது ஜப்பான் நாடு. கடந்த 100 ஆண்டுகளாக ஜப்பான் நாடு சாதித்துள்ள சாதனைகள் வரலாற்றுச் சிறப்புடையவை. மிக அண்மையில் வளர்ச்சி குன்றிய பல நாடுகள் துரிதமாக முன்னேற்ற மடைந்து வருவதையும் நாம் புறக்கணிக்க முடியாது. 1960 முதல் 10 ஆண்டுகளுக்குள் எத்தனையோ நாடுகள் துரிதமாக முன்னேற்ற மடைந்து வந்துள்ளன ; அவற்றில் ஒருசிலவற்றை மட்டும் சான்றாகக் கொள்வோம்.

பட்டியல் 5-2.

**முன்னேற்றம் குன்றிய ஒருசில நாடுகளின் வளர்ச்சி வீதம்**

| நாடு | காலம் | ஆண்டொன்றுக்கு சராசரி வளர்ச்சி வீதம் | |
|---|---|---|---|
| | | மொத்த உற்பத்தி | தலா உற்பத்தி |
| சைப்ரஸ் ................ | 1960-69 | 6.4 | 5 3 |
| டொமினிக்கன் குடியரசு ........... | 1960-68 | 3·0 | — 0 6 |
| கானா ................. | 1960-69 | 2·2 | — 0·4 |
| கௌடமாளா .......... | 1960-69 | 5·3 | 2·2 |
| இந்தோனேசியா ....... | 1960-68 | 2·2 | — 0·2 |
| பாகிஸ்தான் .......... | 1960-67 | 5·7 | 3·5 |
| பராகுவே ............... | 1960-68 | 4·5 | 1·3 |
| பிலிப்பைன்ஸ் .......... | 1960-68 | 4·6 | 1·1 |
| சியெரா லியோன்...... | 1960-68 | 5·7 | 4·1 |
| துனிசியா ............... | 1960-68 | 3·9 | 1·6 |
| ஜாம்பியா ............... | 1960-68 | 8·2 | 5·0 |

(மூலம் : United Nations Statistical Yearbook, 1970)

இந்த 5.2 பட்டியலில் எத்தனையோ வகையான வளர்ச்சி வீதங்கள் உண்டெனினும் சராசரியாகப் பார்த்தால் முன்னேற்றம் கணிசமான அளவில் ஏற்பட்டுள்ளது என்பது புலனாகும். 1960 முதல் 1969 வரை வளர்ச்சி குன்றிய நாடுகள், தம் நாட்டின் மொத்த உற்பத்தியை (GNP) ஆண்டொன்றுக்குச் சராசரி 5 சதவீதமும், தலா உற்பத்தியை 2·5 சதவீதமும் அதிகரித்துள்ளன என்று திரு. லெஸ்டர் பியர்சன் (Lester Pearson) அவர்களைத் தலைமையாகக் கொண்ட பன்னாட்டு முன்னேற்றக் குழுவினர் தம் அறிக்கையின்

முடிவில் குறிப்பிட்டுள்ளனர்.[5] இந்த வளர்ச்சி வீதம், கடந்த அதிகாரத்தில் நாம் கண்ட அமெரிக்க நாட்டு வளர்ச்சி வீதத்தைக் காட்டிலும் அதிகம் என்பது குறிப்பிடத்தக்கது. அதோடு மட்டு மன்றி, வளர்ச்சி குன்றிய இந் நாடுகள் 19 ஆம் நூற்றாண்டிலும் 20 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் கூட இந்த அளவுக்கு வளர்ச்சியடையவில்லை என்பதும் தெளிவு.

நிற்க, முன்னர் நாம் கண்ட தடைகள் இருந்தும் கூட, சில நாடுகள் முன்னேற்றமடைய முடியும் என்பதும் வெளிப்படை. சான்றாக, இந் நாடுகளில் தொழில்நுட்ப முன்னேற்றத்தை எடுத்துக் கொள்வோம். நாம் சுட்டிக்காட்டிய மூன்றாவது வகையான தொழில் நுட்பம் இந் நாடுகளில் படிப்படியாக முன்னேற்றமடைந்து வருகிறது என்பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குவது பசுமைப் புரட்சிதான். முன்னேற்றம் குன்றிய பெரும்பாலான நாடுகள் வெப்பம் மிகுந்த நாடுகள் ; அந்தத் தட்ப வெப்ப நிலைக்கும் இதரச் சூழ்நிலைகளுக்குமேற்ப அமோக விளைச்சல் தரும் விதைகளைக் கண்டுபிடித்து விவசாய விளைச்சலையும் பெருக்கியுள்ளன. இந்தப் பசுமைப் புரட்சியைக் குறைகூறுவோரும் உளர். அமோக விளைச்சல் தரும் கோதுமையும் நெல்லும் விரைவில் கெட்டுப்போய் பயன் படாமல் போய்விடுகின்றன என்றும், அவை பயன்படுத்தப்படும் பகுதிகளில் வாழும் உயிரினங்களின் வாழ்க்கைக் சூழ்நிலை பாதிக் கப்பட்டு விடுகிறதென்றும் சொல்கின்றனர். அதோடு மட்டுமன்றி இப் புதுவகையான முறையில் சாகுபடி செய்வதற்கு உரங்களும் நீர்ப்பாசன வசதியும் அதிகம் தேவைப்படுகின்றன என்றும், ஆனால் ஏழை நாடுகளில் இவை வேண்டிய அளவுக்குக் கிடைப்பதில்லை என்றும் கூறப்படுகிறது. நிற்க, இம்மாதிரிப் புதுவகையான சாகு படி முறைக்கு அதிகத் தொழிலாளர் தேவைப்படுவதில்லை என்றும், எனவே இச்சாகுபடி முறையால் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரிக்கும் என்றும், இன்னும் இதுபோல் எத்தனையோ விதமான தீமைகள் பசுமைப் புரட்சியால் ஏற்படுகின்றன என்றும் வாதாடு கின்றனர். எது எவ்வாறிருப்பினும், இப்புதுவகையான விதைகளைப் பயன்படுத்தியதன் மூலம் பல நாடுகள் தம் விளைச்சலைப் பெருக்கி யுள்ளன என்பதை எவரும் மறுக்கமுடியாது. சுமார் 10 ஆண்டு களுக்கு முன்பு இவ்வகையான விதை வித்துக்களைப்பற்றி இந்நாட்டு விவசாயிகள் கனவிலும் நினைத்திருக்க மாட்டார். அதோடு, வளர்ச்சி குன்றிய இந்த நாடுகளில் மக்கள்தொகைப் பெருக்கத்தைச் சமாளிக் கக்கூடிய முறையில் இப்புதுவகையான விதைகள் அதிக மகசூலை

[5] Lester B. Pearson, Partners in Development (Report of the Commission on International Development), Newyork : Praeger Publishers, 1969 P. 12.

விரைவில் தந்து விடுக்கின்றன. இவ்வாறாக சூழ்நிலைகளுக்கேற்ப புதுமாதிரியான தொழில்நுட்ப முறைகளைக் கண்டுபிடிக்கும் ஆற்றலுக்கு எல்லை கிடையாது என்பதற்கு இப் பசுமைப் புரட்சி ஒன்றே போதுமான சான்றாகும்.

இதெல்லாம் நல்லதற்குத்தான்; எனினும் ஏழை நாடுகளிலுள்ள பாதகமான சூழ்நிலையை நாம் மறந்துவிடக்கூடாது. 1960 முதல் சுமார் 10 ஆண்டுகள் வரை வளர்ச்சி குன்றிய பல நாடுகள் தம் உற்பத்தியைப் பெருக்குவதில் ஓரளவு வெற்றியடைந்துள்ளன; எனினும், மக்கள்தொகை மித மிஞ்சிப் பெருகிவருவதால் அவற்றின் தலா உற்பத்தி முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் உள்ளதைக் காட்டிலும் எவ்வளவோ குறைவாகத்தான் இருந்து வருகிறது. இதனால் ஏழை, பணக்கார நாடுகளுக்கிடையே இருந்து வந்த ஏற்றத்தாழ்வு குறைவதற்குப் பதிலாக அதிகரித்துக் கொண்டே வருகிறது என்றுதான் பொருளாகிறது. அப்படியின்றி, இந்த ஏழைநாடுகள்கூட தம் தலா உற்பத்தியை ஓரளவு அதிகரித்துவிட்டதாகவே வைத்துக்கொள்வோம். அப்படியே இருந்தாலும்கூட முன்னேற்றமடைந்துள்ள நாடுகளுக்கு இணையாக வளர்ச்சியடைவதற்கு இன்னும் எத்தனையோ ஆண்டுகள், அல்லது எத்தனையோ நூற்றாண்டுகள்கூட ஆகலாம் என்பது திண்ணம். அதோடு மட்டுமல்ல, மேற்கத்திய நாடுகள் முன்னேற்றமடைந்துள்ள வேகத்தில் இனிமேல் எந்த நாடும் முன்னேற முடியுமா என்பதை 1970 ஆம் ஆண்டிற்குப் பின்னர்தான் உலகமே உணர்ந்து வருகிறது. செல்வமிக்க நாடுகளில் ஏராளமான தொழில்கள் பெருகிவருவதால் உயிர் வாழ்வதற்கு இன்றியமையாத காற்று, நீர் போன்றவை எந்த அளவுக்குத் தூய்மைக் கெட்டு நாசமாகி வருகின்றன என்பதை அனைவருமே அறிவர். அப்படியிருக்க, 2 பில்லியன் மக்கள்தொகைக் கொண்ட ஏழை நாடுகளும் கனிவளங்களைப் பயன்படுத்தி தொழில் வளர்ச்சி பெற்று மேலும் அவற்றின் தூய்மையைக் கெடுத்து நாசமாக்கத் தொடங்கிவிட்டால் இந்தச் சிறிய உலகம் என்ன கதிக்குள்ளாகும்! உலகம் இயங்க முடியாதபடி ஆகிவிடுமே!

இவையனைத்தும் புலப்படுத்துவது இதுதான்: இரண்டாம் உலகப்போர் முடிவடைந்த பின்னர், ஒருசில நாடுகள் எவ்வளவோ துரிதமாக முன்னேற்றமடைந்து வந்துள்ளன; இனிமேல் அந்த அளவுக்கு எந்த நாடும் முன்னேற்றமடைய முயற்சிக்காமல் நிதானமாகதான் முன்னேற வேண்டியுள்ளது. ஏழை நாடுகளுக்கு ஏதோ ஆறுதல் சொல்லவேண்டுமென்பதற்காக இப்படிக் கூறுவதாக யாரும் நினைத்துவிட வேண்டாம். ஏனெனில, வறுமைமிக்க

நாட்டில் மனித வாழ்க்கையின் பெருமையைச் சீர்குலைத்து நாசம் செய்யக்கூடிய வறுமையை ஒழித்துக்கட்டுவதுதான் முன்னேற்றத் தின் முக்கிய குறிக்கோளாக இருக்கவேண்டும், அப்படியின்றி, செல்வமிக்க மேற்கத்திய நாடுகளுக்கு இணையாக முன்னேற வேண்டும் என்பது நெறி அடிப்படையில் வேண்டுமானால் நல்ல தாயிருக்கலாம்; ஆனால் அது முக்கிய குறிக்கோளல்ல. சத்தான உணவின்றி சிறு குழந்தைகள் மடிவதைத் தடுத்து நிறுத்துவதும், வாலிபர்கள் நல்ல உடல் நிலையும் ஆரோக்கியமும் ஓய்வும் பெற்று, நோய் நொடியின்றி மன நிறைவுடன் வாழ்வதற்கான முயற்சி களைச் செய்வதும்தான் முக்கிய குறிக்கோளேயன்றி, மேற்கத்திய நாடுகளோடு போட்டியிட்டு முன்னேற வேண்டுமென்பதல்ல. இன்றைய தொழில்நுட்ப நிலையில், கூடுமானவரை இக்குறிக் கோளை அடைவதுதான் முன்னேற்றத்தின் நோக்கமும் பலனு மாகும். இக்குறிக்கோளுக்காகத்தான் எல்லா நாடுகளுமே பாடுபட வேண்டும். திரு ஜான் கென்னெத் கால்பிரெய்த் (John Kenneth Galbraith) அவர்கள் குறிப்பிட்டுள்ளதுபோல், "இக்குறிக்கோள் தான் மிகமுக்கியமான, மனிதாபிமானம் கொண்ட குறிக்கோள்; இதை அடைவதற்குத்தான் மக்கள் அனைவருமே முயற்சி செய்து வருகின்றனர்"[6].

## அடிப்படையான மூன்று பிரச்சினைகள்

வளர்ச்சி குன்றியதொரு நாடு முக்கியமானதாகக் கருதப்படும் இக்குறிக்கோளை அடைவதுதான் எப்படி? நாம் ஏற்கெனவே சுட் டிக்காட்டிய எத்தனையோ விதமான தடைகளையெல்லாம் தகர்த் தெரிவது எவ்வாறு? இப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு, முன்னேற் றம் குன்றிய பெரிய நாடுகளான இந்தியாவும் சீனாவும் எப்படி எல்லாம் முயற்சிசெய்து வருகின்றன என்பதை அடுத்த அதி காரத்தில் ஆராய இருக்கின்றோம். எனவே வளர்ச்சி குன்றிய எல்லா நாடுகளுக்குமே பொதுவானதாக இருக்கும் அடிப்படை யான மூன்று பிரச்சினைகளை மட்டும் இங்கு ஆராய்வோம். அப் பிரச்சினைகள் வருமாறு: 1) மூலதனத்திரட்சி வீதத்தை அதி கரிப்பதெப்படி? 2) சமநிலை (balanced) முன்னேற்றம் வேண்டுமா அல்லது சமநிலையற்ற (unbalanced) முன்னேற்றம் வேண்டுமா? 3) மக்கள்தொகைப் பெருக்கத்தைச் சமாளிப்பதெப்படி?

6 John Kenneth Galbraith அவர்களின் 'Economic Development in Perspective' (Cambridge: Harvard University Press, 1962) என்ற நூலில் 6 ஆம் பக்கம்.

## முதலீட்டு வீதத்தை அதிகரித்தல்

பொருளாதார முன்னேற்றம் குன்றியநாடு முன்னேற்றமடைய வேண்டுமாயின், அந்நாடு செய்யவேண்டிய முக்கியமான காரியங்களில் ஒன்று, தன் முதலீட்டு வீதத்தை அல்லது மூலதனத் திரட்சி வீதத்தை அதிகரிப்பதாகும். முன்னேற்றம் குன்றியுள்ள எல்லா நாடுகளுமே போதிய அளவு மூலதனம் இல்லாமல்தான் கஷ்டப்படுகின்றன. அதோடு, நவீன தொழில்நுட்ப முறைகளைக் கையாள்வதற்கும் மூலதனம் பெருமளவில் வேண்டியுள்ளது. எனவே, மூலதனமன்றி, தொழில்நுட்ப முன்னேற்றத்தையும் அடையமுடியாது. ஒருநாட்டில் எந்த அளவுக்கு மூலதனம் உள்ளதோ அந்த அளவுக்குத்தான் தொழில்நுட்ப முன்னேற்றம் ஏற்படும்.[7]

ஒரு ஏழைநாடு முதலீட்டு வீதத்தை அதிகரிப்பது என்பது எவ்வளவு சிரமமான காரியம் என்பதை நாம் அறிவோம். முதலீடு என்றாலே நுகர்வுப் பொருட்களை உற்பத்தி செய்திருக்கக்கூடிய சாதனங்களை முதற்கருவிப் பொருட்களை உற்பத்தி செய்வதற்குப் பயன்படுத்துவது என்றுதான் பொருள். எனவே, மூலதனத்தைத் திரட்டுவது என்பது தியாகமும் வேதனையும் கொண்டதுதான்; அதிலும் பெருமளவிற்கு மூலதனத்தைத் திரட்ட முற்பட்டால் அதனால் ஏற்படக்கூடிய வேதனை தாங்கமுடியாததாகிவிடும். மேலும், மூலதனம் சேமிப்பின் வழியாகத்தான் பெறப்படுகிறது. சேமிப்பு என்றால் இன்றைய தியாகத்தை மட்டும் பிரதிபலிப்பதில்லை; அதோடு, இன்றைய உற்பத்தித் திறனுக்கும் வருங்கால உற்பத்தித் திறனுக்குமுள்ள வேறுபாட்டையும் அது புலப்படுத்துகிறது. இன்றைய தொழிலாளருக்கு போதுமான அளவு உண

7 முதலீடு என்பது கண்ணுக்குப் புலனாகக்கூடிய வழியில் செய்யப்படும் முதலீட்டை மட்டுமன்றி, கண்ணுக்குப் புலனாகாத முதலீட்டையும் குறிப்பிடும் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. இன்றைய வளர்ச்சி குன்றிய நாடுகளில் கல்வியும் தொழிற்பயிற்சியும் மிக முக்கியமானவை என்பதை அண்மையில் வெளிவந்துள்ள எத்தனையோ நூல்கள் வலியுறுத்துகின்றன. எனவே, அவற்றின் முக்கியத்துவத்தை நாமும் வலியுறுத்த வேண்டிய அவசியமில்லை. கால்பிரெய்த் அவர்கள் குறிப்பிட்டுள்ளதுபோல் "இயந்திரங்களின் அவசியத்தையும் பயனையும் படித்தவர்கள் நன்கறிவர்; ஆனால் படித்தவர்கள்தான் வேண்டும் என்று இயந்திரங்கள் விரும்புகின்றனவா என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியாது. எனவே சில சந்தர்ப்பங்களில் அணைக்கட்டுகள், தொழிற்சாலைகள், இன்னும் பிற முதற்கருவிப் பொருட்களைக் காட்டிலும் பொதுமக்களின் கல்விக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கவேண்டியுள்ளது." (மேற்குறிப்பிட்ட அதே நூல், பக்கங்கள் 8-9). இவ்வாறாக முதலீட்டு வீதத்தை அதிகரிக்க வேண்டும் என்று நாம் கூறும் போதெல்லாம் இவ்விருவகை முதலீட்டையுமே குறிப்பிடுவதாகத்தான் பொருள்கொள்ள வேண்டும்.

வில்லையென்றால் அவர்கள் திறமையாக வேலைசெய்ய முடியாது; அவர்கள் வாழ்நாள்கூட குறைந்துவிடலாம். அதோடு, ஊக்கத் துடனும் உற்சாகத்துடனும் வேலைசெய்ய வேண்டுமென்ற மனப் பான்மையும் தளர்ச்சியடைந்து விடலாம். வேறுவிதமாகக் கூறின், உயிர்வாழக்கூடிய அளவுக்கு மட்டும் நுகர்ந்தால் போதுமென்று நுகர்ச்சியைப் பெருமளவிற்குக் கட்டுப்படுத்தினால், பொருளாதார வளர்ச்சிக்கு வேண்டிய உற்சாகமும் கடின உழைப்பும் இல்லாமல் போய்விடும்; அவற்றை மறுபடியும் அடைவதற்கு பலாத்கார வழி முறைகளைத்தான் கையாள வேண்டியிருக்கும்.

எனவே, மூலதனத்தைத் திரட்டுவதற்கும் ஒரு வரம்பு உள்ளது; அதையும் மீறி முதலீட்டு வீதத்தை அதிகரிக்க முயற்சித்தால் பொருளாதார முன்னேற்றம் தானாகவே தடைப்பட்டுவிடும். இந்த வரம்பிற்குள் வேண்டுமானால் எத்தனையோ வழிமுறைகளைப் பின் பற்றி முதலீட்டு வீதத்தை மென்மேலும் அதிகரிக்கச் செய்யலாம். ஆனால் அவ்வழி முறைகளில் எது சிறந்ததென்று திட்டவட்டமாகக் கூறமுடியாது. ஏனெனில் ஒவ்வொரு வழி முறையிலும் நன்மைகள் மட்டுமன்றி, குறைபாடுகளும் உள்ளன. எனவேதான் எல்லா வழி முறைகளிலும் மூலதனம் திரட்டப்படுகிறது.

சான்றாக, வேலையில்லாத் தொழிலாளர் ஒருநாட்டில் அதிகமாக இருந்தால், அத் தொழிலாளரைக் குறைந்த ஊதியத்தில் தொழிற் துறையில் அமர்த்தக்கூடிய வகையில் முதலீடு செய்யலாம்; அப்படிச் செய்தால் அத்தொழில்களில் நிறைய இலாபம் கிடைப்ப தற்கும், அந்த இலாபத்தை மறுபடியும் அத்தொழில்களிலேயே முதலீடு செய்வதற்கும் வாய்ப்பு ஏற்படும். வேலையே இல்லாமலிருப் போரையும் முழுநேரமும் வேலை கிடைக்காதாரையும் கொண்டு, கிராமப் புறங்களில் சாலைகள், பாசனக் கால்வாய்கள், அணைகள் போன்றவற்றைக் கட்டி விவசாய முதலீட்டையும் பெருக்கலாம். இப் படிச் செய்வதால் குறைந்த செலவில் வேலையில்லாத் தொழிலாளரை யும் இதரச் சாதனங்களையும் பயன்படுத்த முடிகிறது. இல்லை என்றால் அவை அனைத்தும் பயனின்றி இருந்திருக்கும். இவ்வாறு மூலதனத்தைத் திரட்டுவதில் ஒருசில குறைபாடுகளும் உள்ளன என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. முதலாவது, இப்படி மூலதனத்தைத் திரட்டுவது கடினமானது. விவசாயப் பொருட்கள் போதுமான அளவிற்கு உற்பத்தியாகவில்லையென்றால், தொழிற் துறையில் வேலைசெய்யக்கூடிய தொழிலாளரை குறைந்த ஊதியத் தில் பயன்படுத்த முடியாது. இதைப் பற்றிச் சற்று விவரமாகப் பிற் பாடு பார்ப்போம். அடுத்து, விவசாய உழைப்பாளிகளை ஒன்று

திரட்டி, அவர்களைத தொழிற்துறையில் அமர்த்த வேண்டுமானால், அவர்களுக்கு வேண்டிய கருவிகளும் நிர்வாகிகளும் வேண்டும். அவை போதுமான அளவிற்கு இல்லையென்றால் இவ்வழியைப் பின்பற்றி மூலதனத்தைத் திரட்ட இயலாது. மேலும், விவசாயத் துறையைச் சீர்திருத்தம் பண்ணாமல், அங்குள்ள தொழிலாளரைத் தொழிற்துறைக்கு மாற்றினால் விவசாய உற்பத்தி குறைந்துவிட லாம். சுருக்கமாகக் கூறின், இவ்வழி முறையைப் பின்பற்றுவது சாத்தியமானதெனினும், எளிதானதென்று சொல்ல முடியாது.

வளர்ச்சி குன்றிய நாடுகள் தம் முதலீட்டு வீதத்தை அதிகரிப் பதற்கென்று மேற்கொள்ளக்கூடிய ஏனைய வழிமுறைகளும் இப் படித்தான். அதிகமாக வரிப் போட்டு முதலீட்டைப் பெருக்கக்கூடிய வழியை எடுத்துக்கொள்வோம். நாட்டிலுள்ள சாதனங்களில் ஒரு பகுதியை வரியாக அரசாங்கம் வசூல் செய்து, அதை அரசாங்கத் திட்டங்களிலேயே முதலீடு செய்யலாம், அல்லது தனியார் முதலீட்டிற்குக் கிடைக்கும்படியும் செய்யலாம். சான்றாக, ரஷ்ய நாட்டு அரசாங்கம் பல்லாண்டு காலமாகவே 'புரள் வரி' (turnover tax) என்ற வரியின் மூலமாகத்தான் பெருமளவில் மூலதனத்தைத் திரட்டியது. ஜப்பான் நாடுகூட அப்படித்தான்; முன்னேற்ற மடையத் தொடங்கியபோது மிக முக்கியமான தொழில்களுக்கு வேண்டியிருந்த மூலதனத்தை அதிக நிலவரியின் வாயிலாகத்தான் திரட்டியது. அதேபோல் வளர்ச்சி குன்றிய நாடுகளும் தத்தம் முதலீட்டு வீதத்தை அதிகரிப்பதற்கென்று வரிகளை அதிகப்படுத்த முயற்சிக்க வேண்டும்.

எனினும், வரியை அதிகப்படுத்துவதற்கும் வரம்பு உள்ளது; அதோடு இந்த வழி சிக்கல்கள் நிறைந்ததுமாகும். பொதுவாகக் கூறின், வரிகள் பெரும்பாலும் தொழில் முயற்சியையும் ஊக்கத் தையும் பாதிக்கக் கூடியவை. அதோடு, ஏற்கெனவே வறுமையில் வாடும் மக்களின்மீது அதிக வரியை விதிக்க முடியாது. அதே சமயம் ஏழை நாடுகளிலுள்ள செல்வந்தர்களின் மீது அதிக வரியை விதித்தால், அவர்களுடைய சேமிப்பு சக்தியே வரண்டுபோய் விட லாம்; ஒரு வேளை அவர்கள் வரி ஏய்ப்புச் செய்யலாம்; அல்லது, செல்வந்தர்கள் அரசியல் செல்வாக்குடையோராக இருந்தால் அதிக வரிச் சட்டம் நிறைவேறாமல் செய்தாலும் செய்துவிடக்கூடும். மேலும், பெரும்பாலான மக்கள் விவசாயத்தையே நம்பி வாழும் ஏழை நாட்டில், அம் மக்கள் மீது அதிக வரியை விதிப்பது மிகக் கடினமான காரியமாகும். பொதுவாக, ஏழை நாடுகளில் விவசாயி களின் மீது வரியை விதிப்பதே கடினமானது என்றுதான் சொல்ல

வேண்டும். ஏனெனில், அவர்கள் உற்பத்தி செய்யும் விவசாயப் பொருள்கள் பெரும்பாலும் விற்பனைக்கே வருவதில்லை. இவ்வாறாக, வறுமை நிறைந்ததொரு நாட்டில் மூலதனத்தைத் திரட்டுவதற்காக அதிக வரியை விதிப்பது அவசியமெனினும், அவ்வரி முறையை வெற்றிகரமாகச் செயல்படுத்துவது மிகக் கடினமானது என்பதை மறந்துவிடக்கூடாது.

வளர்ச்சி குன்றிய நாடு மூலதனத்தைத் திரட்டக்கூடிய மூன்றாவது வழியும் இப்படித்தான். ஏழை நாட்டு அரசாங்கம் வரிவிதிப்பில் இருக்கக்கூடிய கஷ்டங்களை உணர்ந்து வரியை உயர்த்தாமலே மூலதனத்தைத் திரட்டுவதுதான் நல்லதென முடிவு செய்யலாம். வரிகளை உயர்த்தாமல் பணப் பெருக்கத்தின் வாயிலாகவும் முதலீட்டை அந்நாடு அதிகரிக்கமுடியும். பணப் பெருக்கம் என்றாலே அதிகப்படியான செலவு என்றுதான் பொருள். எனவே, பண வீக்கம் ஏற்பட்டுவிட்டால் விலைவாசிகள் ஏறிவிடுகின்றன; மக்களிடமுள்ள பணத்தின் மதிப்பு குறைந்துவிடுகிறது. இதனால் மக்கள் முன்பைவிடக் குறைவாகத்தான் நுகரமுடிகிறது. பணவீக்கத்தின் வழியாக முதலீட்டைப் பெருக்க முற்படும்போது ஒரு சில நன்மைகளும் ஏற்படுகின்றன. இப்படிப் பணப் பெருக்கத்தின் வாயிலாக முதலீட்டைப் பெருக்குவது மிக எளிது. தனியார் முதலீடுகூட இதனால் அதிகரிக்கலாம். விலைவாசிகள் ஏறினால் பொதுவாக இலாபமும் அதிகரித்து, பொருளாதார நிலையே மேல்நோக்கிச் செல்லலாம்; அப்படியென்றால் தொழில்கள் தம் இயந்திரத் தளவாடங்களைப் பெருக்கி அபிவிருத்தி அடைவதற்கும் இதுதான் நல்ல சந்தர்ப்பம். சொல்லப் போனால் பொருளாதார முன்னேற்றமடைய முயற்சிக்கும் நாடு, சிறிதளவு பணவீக்கத்தை ஏற்படுத்துவது நல்லதென்றுதான் பெரும்பாலான பொருளாதார அறிஞர்கள் கூறுகின்றனர்.

ஆனால், சிறிதளவு பணவீக்கத்தை உருவாக்குவதிலுள்ள ஆபத்து என்னவென்றால், அந்தச் சிறிதளவு பணவீக்கம் நாளடைவில் பெருமளவாகி விடுகின்றது. இலத்தீன் அமெரிக்காவில் இப்பண வீக்கப் பிரச்சினை நிரந்தரமாகவே இருந்துவருகிறது. சிலி நாட்டிலும்கூட அப்படித்தாம்; 1960–69-ல் விலைவாசிகள் ஆண்டொன்றுக்கு சராசரி 20 முதல் 40 சதவீதம் வரை சிலி நாட்டில் ஏற்றமடைந்து வந்தன. பொலிவியா நாட்டிலோ 1953-லிருந்து 1958 ஆம் ஆண்டிற்குள் வாழ்க்கைச் செலவு குறியீட்டெண் (Cost of living index) 25 மடங்கு உயர்ந்து விட்டது; பிரேஸில் நாட்டில் 1958 முதல் 1963-க்குள் விலைவாசிகள் 5,6 மடங்கு ஏறிவிட்டன;

அதோடு மட்டுமன்றி, பிரேஸிலில் ஒரே ஆண்டிற்குள் (1964) விலைவாசிகள் 2 மடங்கு அதிகரித்துவிட்டன. இந்த அளவுக்குப்பண வீக்கம் பெரியதாக ஆகிவிடும்போது, பல ஆபத்தான விளைவுகள் ஏற்பட்டு விடுகின்றன. எந்த வகையான முதலீடு பெருக வேண்டுமோ, அந்த வகையான முதலீடு அதிகரிக்காமல் ஊகமாகச் செய்யும் முதலீடுதான் அதிகமாகி விடுகின்றது. அதோடு மட்டுமன்றி, பணவீக்கம் அதிகமுள்ள நாட்டிற்கு அயல் நாட்டுச் செலுத்து நிலைப் பிரச்சினைகளும் ஏற்பட்டுவிடலாம். அந்நாட்டுப் பொருள்களுக்குப் பிற நாடுகளில் இருந்துவந்த தேவை குறைந்து விடக்கூடும்; அப்போது, அந்த நாடு முன்னேற்றமடைவதற்கு வேண்டிய முதற்கருவிப் பொருட்களையும் தொழிற்வளர்ச்சிக்குத் தேவையான ஏனைய பொருட்களையும் இறக்குமதி செய்வது கடினமாகிவிடும். அதோடு, விலைவாசிகள் அந் நாட்டில் ஏறிக்கொண்டே போனால் கூலியும் மென்மேலும் உயரமுறப்படும். எனவே, பணப் பெருக்கத்திற்கும் ஒரு வரம்பு உண்டு; அந்த வரம்பிற்குள் பண வீக்கத்தின் வழியாக முதலீட்டை அதிகரிப்பது அவ்வளவு ஆபத்தானதன்று.

பண வீக்கத்தின் விளைவுகளை ஆராயும்போது, பிறநாட்டுக் கண்ணோட்டத்திலும் அதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். வளர்ச்சி குன்றிய நாடு எந்த அளவுக்கு மூலதன வீதத்தை அதிகரிக்க முடியும் என்பது, அந்த நாட்டில் சேமிப்பை அதிகரிப்பதிலுள்ள கஷ்டங்களினால் மட்டுமன்றி, அயல் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவேண்டிய முதற்கருவிப் பொருட்களின் தேவையினாலும் வரையறுக்கப்படுகிறது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. எப்படியெனில், தொழில் வளர்ச்சியை அடைய வேண்டுமென்பதற்காக, ஏற்கெனவே முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் இருந்து தொழில்களுக்கு வேண்டிய சில அடிப்படையான பொருட்களை இறக்குமதி செய்ய வேண்டியுள்ளது. அப்போது, அவ்வாறு இறக்குமதி செய்யப்படும் பொருட்களுக்கு இணையாக அந்த ஏழை நாடு ஏற்றுமதி செய்யமுடியவில்லையென்றால், அதன் மூலதனத் திரட்சி வீதம் குறைந்து விடுவதைத் தவிர வேறு வழியில்லை. அயல் நாட்டு உதவியைப் பற்றிய பிரச்சினைகளை இந்த அதிகாரத்தின் இறுதியில் பார்க்க இருக்கின்றோம்; அப்போது, இந்தப் பிரச்சினையை மறுபடியும் ஆராய்வோம்.

இவ்வாறாக, வளர்ச்சிகுன்றிய நாடு தன் மூலதன வீதத்தைப் பெருக்கக்கூடிய ஒவ்வோர் வழியும் பயனுள்ளதாக இருப்பதோடு, அவ்வழியை மேற்கொள்ளும்போது, அதற்கென்று ஒரு வரம்பும் பல

ஆபத்துக்களும் இருக்கின்றன என்பது தெளிவாகிறது. பெரும் பாலும் ஏழை நாடுகள் அனைத்துமே சகல வழிமுறைகளிலும் மூலதனத்தைப் பெருக்கப் பாடுபடுகின்றன; அப்படியிருந்தும் போது மான அளவுக்கு மூலதனத்தைத் திரட்ட முடிவதில்லை. வரிகளை அதிகரிப்பது இக்கட்டானதாயுள்ளது; வேலையில்லாதோரை ஒன்று திரட்டி தொழிற்துறைகளில் அமர்த்துவது அதைவிடக் கடினமாக இருக்கிறது; பணவீக்கமோ அளவுக்கு மிஞ்சி அதிகமாகி விடலாம் என்ற பயத்தை உண்டு பண்ணுகிறது; அப்படி பெரிதாகி விட்டால் இறக்கு மதியைச் சரிக்கட்டக்கூடிய அளவிற்கு ஏற்றுமதி செய்ய முடியாமல் போய்விடுகிறது. எனவே, ஒருநாடு எவ்வளவுதான் நல்ல மனதுடன் தீவிரமாக முயற்சி செய்தாலும்கூட, போதுமான அளவிற்கு மூலதன வீதத்தை அதிகரிக்க முடியாமல் போய்விடுகிறது. தேவைப்படுகின்ற மூலதனத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, திரட்டப்பட்ட மூலதனம் எவ்வளவோ குறைவானதாகவேதான் உள்ளது. எனவே, மிக வறுமையிலுள்ள நாடுகள், பிற நாடுகளி லிருந்து கணிசமான அளவிற்குப் பெறாமல் சொந்தமாகவே தமக்கு வேண்டிய மூலதனத்தைப் பெருக்குவது மிக மிகக் கடினம். அப்படிப் பெருக்க முடியும் என்பதைச் சிந்தித்துப் பார்க்கக்கூட முடியாது. அப்படியே பிறநாட்டு உதவி ஏதுமன்றி முன்னேற்றமடைய முயற்சித் தால் அம்முன்னேற்றம் மிக மெதுவாகத்தான் ஏற்படும் என்பதில் சந்தேகம் கிடையாது. இல்லையென்றால் வேறொரு வகையில் துரிதமாக முன்னேற்றமடையலாம்; அதாவது, சர்வாதிகார முறை யில் வலுவந்தமான விதத்தில் துரிதமாக வளர்ச்சியடையத் தீர் மானித்து விடலாம்.

### சமநிலை வளர்ச்சியா அல்லது சமநிலையற்ற வளர்ச்சியா ?

வளர்ச்சிகுன்றிய நாடு சமாளிக்க வேண்டிய மற்றொரு பிரச்சினை, அந்நாட்டிலுள்ள பல்வேறு உற்பத்தித் துறைகளை எப்படிப் பேணுவது என்பதுதான். தொழிற்துறை வளர்ச்சிக்கு அதிக முக்கியத்துவம் அளிப்பதா, அல்லது விவசாயத் துறை வளர்ச் சிக்கு அளிப்பதா, அல்லது எல்லாத்துறைகளுமே ஒரே சீராக வளர்ச் சியடையும் விதத்தில் சம நிலை வளர்ச்சியை அடைய முயற்சிப்பதா ? எந்தெந்தத் துறைக்கு எப்படி எப்படி முக்கியத்துவம் தருவது என்பதை நிர்ணயம் செய்வதெப்படி ?

இப் பிரச்சினைகள்தாம் இன்று மிகத் தீவிரமாக விவாதிக்கப் பட்டுவரும் முக்கியமான பிரச்சினைகளாகும். எனவே, வளர்ச்சி குன்றிய நாடுகள் இப்பிரச்சினைகளையும் சமாளிக்க வேண்டி யுள்ளது. இதில் ஒரு கஷ்டம் என்னவென்றால், இப் பிரச்சினை

களுக்குத் தீர்வு காணும் வகையில் கடந்த கால அனுபவம் ஏதும் கிடையாது. இப்பிரச்சினைகளெல்லாம் சமீப காலத்தில் தோன்றிய பிரச்சினைகள். முன்னேற்றமடைந்த நாடுகள் பெரும்பாலும் தொழில்களையும், விவசாயத்தையும் ஒரே சமயத்தில்தான் முன்னேற்றினவென்று சிலர் வாதிக்கக்கூடும். அமெரிக்கநாட்டைப் பொருத்தவரை, அந்நாடு அப்படித்தான் முன்னேற்றமடைந்தது; தொழிற்புரட்சி ஏற்படுவதற்கு முன்புமட்டுமன்றி, அப்புரட்சி ஏற்பட்டு வந்த சமயத்திலும்கூட விவசாயத்துறையும் முன்னேற்றமடைந்து வந்ததால் தொழிற்புரட்சி வெற்றிகரமாக நடைபெற்றது. இதற்கு நேர்மாறான சான்றிற்கு சோவியத் நாடுதான் சிறந்த எடுத்துக்காட்டாக உள்ளது; சோவியத் நாட்டில் மிகச் சமீப காலம்வரை கனரகத் தொழில் வளர்ச்சிக்குத்தான் அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு வந்தது; அப்போதெல்லாம் விவசாயத் துறை முன்னேற்றத்தைப்பற்றி அந்நாடு அக்கறை கொள்ளவில்லை. அப்படியிருந்தும், சோவியத் நாடும் துரிதமாக முன்னேற்றமடைந்து அதன் தலா உற்பத்தியைப் பெருக்கிவிட்டது. அதெப்படி ?

இப் பிரச்சினையைப் பொறுத்தவரை, இவ்விருவகையான முன்னேற்றத்திற்குமே வலுவான வாதங்கள் குவிந்து வருகின்றன என்றுதான் சொல்லவேண்டும். விவசாயத் துறை தானாக வளர்ச்சியடையும்படி விட்டு விட்டு, தொழிற்துறை வளர்ச்சியில் தான் தீவிரமான அக்கறைகாட்ட வேண்டுமெனப் பலர் வாதாடுகின்றனர். அவர்கள் தரும் விளக்கத்தைச் சுருக்கமாகப் பின்வருமாறு கூறலாம் :

> முன்னேற்றம் குன்றியுள்ள நாட்டில் முதலீடு செய்து வளர்ச்சியடைவதற்கு வேண்டிய சாதனங்கள் மிகக் குறைவு. அப்படியிருக்க, ஒரேசமயத்தில் உடனடியாக எல்லாத் துறைகளையும் முன்னேற்றிவிட முடியாது. மிகத் துரிதமாகப் பெருமளவிற்கு முன்னேற்ற மடையக் கூடிய வாய்ப்பு எந்தத் துறையில் உள்ளதோ அந்தத் துறைக்குத்தான் அதிக முக்கியத்துவம் தரவேண்டும். முன்னேற்ற வாய்ப்பு எந்தத் துறையில் அதிகமாயுள்ளது? தொழிற்துறையில் தானேயன்றி, விவசாயத்துறையில் அல்ல. சொல்லப்போனால் நவீன வளர்ச்சி என்றாலே தொழில் மயமாக்குவது என்றுதான் பொருள். விவசாயப் பண்ணைப் பொருட்களை ஏற்றுமதி செய்வதில் உலகப் புகழ்பெற்ற நியூஜிலாந்து, டென்மார்க் போன்ற நாடுகளில்கூட தொழிற்சாலைகளில் வேலை

> செய்யும் தொழிலாளரின் சதவீதம் தான் வளர்ச்சி குன்றிய நாடுகளில் உள்ளதைக் காட்டிலும் எவ்வளவோ அதிகமாக உள்ளது. மேலும், முன்னேற்றமடையாத ஒரு ஏழை நாடு, விவசாயத்துறையை மட்டும் முன்னேற்றி, அந்த விவசாயப் பொருட்களைப் பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து, தனக்கு வேண்டிய ஆலைப் பொருட்களை இறக்குமதி செய்துகொள்ளலாம் என்று வாதாடுவது போலியான வாதம்தான். ஏனெனில், காலப் போக்கில் ஆலைப் பொருள்களின் விலையைக் காட்டிலும் விவசாயப் பொருட்களின் விலைதான் அதிகமாக இறங்க முற்படும். அப்படி என்றால் முன்னேற்றமடையாத இந்த ஏழை நாடு, பிற நாட்டுப் பொருட்களுக்குக் கொடுக்கவேண்டிய விலை மென்மேலும் உயர்ந்துவிடும். வேண்டாம் இந்நிலை. அதற்குப் பதிலாக, உள்நாட்டிலேயே தொழில்களை முன்னேற்றுவதுதான் சிறந்தது. மேலும், தன்னிடமுள்ள சாதனங்களை எல்லாத்துறைகளிலும் பயன்படுத்தினால் ஒருதுறைகூட உருப்படியாக முன்னேறமுடியாது; மாறாக, மிக முக்கியமான தொழிற்துறையில் மட்டும் கவனம் செலுத்தினால்தான் முன்னேறமுடியும். அப்படி முன்னேற்றமடையத் தொடங்கினால்தான் தொழிற் துறையில் திறன்மிக்க, ஆர்வம் கொண்ட, நாடு துரிதமாக முன்னேற்றமடைய வேண்டுமென்ற மனப்பான்மையுள்ள மக்கள் உருவாக்கப்படுவர் ; நாளடைவில் இவ்வித மனப் பான்மை ஏனைய மக்களுக்கும் பரவிவிடும்.

இதற்கு நேர்மாறாக விவசாயத் துறையும் தொழிற்துறையும் ஒன்றையொன்று ஊக்குவிக்கக் கூடிய வகையில் சமநிலை வளர்ச்சி தான் சிறந்ததெனக் கூறுவோரின் வாதம் வருமாறு:

> விவசாயத்தை விட்டு விட்டு, தொழிற்துறையை மட்டும் முன்னேற்றினால்போதும் என வாதாடுவது பயனற்றது ; ஏனெனில் எந்த நாட்டிலும் அப்படி நடைபெற முடியாது. தொழில்கள் பெரும்பாலும் விவசாயத்தைச் சார்ந்தவை; அவற்றிக்கு வேண்டிய கச்சாப் பொருட்களையும் இதர மூலப்பொருட்களையும் வழங்குவதே விவசாயம் தான். அப்படியிருக்க விவசாயத்தை முன்னேற்றவில்லையென்றால் தொழில் வளர்ச்சி பாதிக்கப்பட்டுவிடும். மேலும் ஒரு ஏழை நாடு வளர வளர, அந்நாட்டு மக்களுக்குத் தேவைப்படும் உணவும் அதிகமாக வேண்டும். அப்படியிருக்க, விவசாயத்தை முன்னேற்றுவதற்கு முயற்சிக்காமல்

தொழில்களை மட்டும் துரிதமாக முன்னேற்றப்பாடு பட்டால் என்னவாகும்? யூகோஸ்லாவியா நாட்டிலுள்ள சில தொழில்களுக்கு ஏற்பட்ட கதிதான் மிச்சமாகும்; அந் நாட்டில் அத்தொழில்களுக்கு வேண்டிய மூலப்பொருட்கள் கிடைக்காது போய்விட்டதால் அவை வேலையின்றி சும்மா இருக்கின்றன. அப்படி நேராவிட்டால்கூட அர்ஜென் டைனாவிற்கேற்பட்ட கதிதான் கிடைக்கும். அந்நாடு தொழில் மயமாக்குவதிலேயே முழுமூச்சுடன் பாடுபட்டு வந்ததால் விவசாயமே பாழடைந்து விட்டதோடு, ஓராண்டு காலமாக அமெரிக்காவிலிருந்து கோதுமையை இறக்குமதி செய்துதான் உண்ண வேண்டியிருந்தது. பொதுவாகக் கூறின், தொழில்கள் வளர்ச்சியடையும்போது, விவசாயப் பொருள்களுக்குள்ள தேவையும் விரிவடைந்து, விவசாய உற்பத்தியைப் பெருக்க வேண்டியுள்ளது; அப்படிப் பெருக்க இயலவில்லையென்றால், விவசாயப் பொருட்களின் விலை ஏறிவிடும்; அதோடு மட்டுமன்றி, விவசாயப் பொருட் களைப் பெருமளவில் இறக்குமதி செய்ய வேண்டியிருக்கும். அப்படிப்பட்டதொருநிலை ஏற்பட்டுவிட்டால் அயல் நாட்டுச் செலுத்து இருப்புநிலையில் அந்நாட்டிற்குப் பெரும் சிக்கல் ஏற்பட்டுவிடும். இன்னும் சொல்லப் போனால் பொருளாதார முன்னேற்றத்திற்கு விவசாயம் தான் தொழிற்துறையைக் காட்டிலும் அதிக வாய்ப்புடைய துறை எனலாம்; ஒரு ஏழைநாடு கொண்டுள்ள சிறிதளவு மூலதனத்தை விவசாயத்துறையில் சிறுகச் சிறுகப் பயன் படுத்தி வந்தால்கூட அதன்பலன் மூலதனச்செறிவுள்ள தொழில்களில் கிடைப்பதைக் காட்டிலும் அதிகம் கிடைக் கும். கடைசியாக, விவசாயத்தை முன்னேற்ற முயற்சித் தால் இறக்குமதி செய்யும் ஆலைப்பொருட்களின் விலைகள் ஏறிவிடுமே என்று பயப்பட வேண்டாம். ஏனெனில், அப்படி எங்காவது ஏற்பட்டதென்பதற்கு ஆதாரமே கிடையாது. மாறாக, வருங்காலத்தில் விவசாயத் தில் கிடைக்கும் ஒருசில மூலப் பொருட்களுக்குத்தான் நல்ல கிராக்கி ஏற்படப்போகின்றது.[8]

[8] இவ்விதக் கருத்து முரண்பாடுகள் ஏற்பட்டுள்ளதற்கு, வருங்காலத் தில் உலக அங்காடியில் மூலப்பொருட்களுக்கும் விவசாயப்பொருட்களுக் கும் அதிகக் கிராக்கி இருக்குமா அல்லது ஆலைப்பொருட்களுக்கும் பொறி வழியாக்கப் பொருட்களுக்கும் அதிகக் கிராக்கி ஏற்படுமா என்பதிலுள்ள கருத்து வேறுபாடுதான் முக்கிய காரணமாகும் என்பதை மாணவர்கள்

தொழிலாளர் அளவுக்கு மிஞ்சி இருக்கும் நாட்டில் விவசாயத் துறையும் தொழிற்துறையும் சமவளர்ச்சி அடைந்து, அந்நாடு முன்னேற்றமடைய முடியும் என்பதற்குச் சான்று தர முடியும். அப்படிப்பட்ட நாடு விவசாயத்தில் உபரியாக உள்ள தொழிலாளரை குறைந்த ஊதியத்தில் தொழிற்துறைக்கு மாற்றுவதைப்பற்றி இரண்டாம் அதிகாரத்தில் பார்த்தோம் விவசாயத் துறையில் அளவுக்கு மிஞ்சி தொழிலாளர் இருக்கின்றனர் என்பதைத்தான் குறைந்த ஊதியம் சுட்டிக்காட்டுகிறது என்பதையும் விளக்கினோம். அதோடு, விவசாயத்துறை போதுமான அளவிற்கு முன்னேற்றமடைய வில்லையென்றால், விவசாயப் பொருட்களின் விலை ஏறி விடக்கூடும் என்றும், அதனால் தொழிற்துறையில் வேலை செய்வோரின் ஊதியமும் உயர்ந்து, தொழில் வளர்ச்சி வீதமே குறைந்து விடக்கூடும் என்றும் கண்டோம்.

இவ்வித நிலையைத்தான் 5-2 வரைபடம்காட்டுகிறது. உண்மையில் இவ்வரை படத்திற்கும் 2-2 வரைபடத்திற்கும் ஒரே ஒரு முக்கியமான வேறுபாடு மட்டும்தான உள்ளது. விவசாயத் துறையைக் காட்டிலும் தொழிற்துறை அதிகமாக முன்னேற்றமடை

தெரிந்துகொள்ள வேண்டும். பொருளாதார முன்னேற்றப் பிரச்சினைகளில் இதுதான் மிகக் காரசாரமாக விவாதிக்கப்படும் பிரச்சினையாகும். கடந்த கால நிகழ்ச்சிகளையும் வருங்கால வாய்ப்பையும் எண்ணிப்பார்த்தால் மூலப்பொருட்களை அதிகமாக உற்பத்தி செய்யும் விவசாய நாடுகளின் 'வாணிப நிலைதான்' (ஒருநாடு ஏற்றுமதி செய்யும் பொருட்களுக்காகப் பெறும் விலைக்கும் இறக்குமதி செய்யும் பொருட்களுக்குக் கொடுக்க வேண்டிய விலைக்குமுள்ள விதாச்சாரம்) சீரழியக் கூடுமென்று ஒரு சில பொருளாதார அறிஞர்கள் வாதாடி வருகின்றனர். இவ்வாறு வாதமிடுவோரில் முன்னணியில் நிற்பவர் அர்ஜன்டைனாவைச் சேர்ந்த Dr. Roaul Prebisch என்பவர்தான். இவர் இலத்தீன் அமெரிக்காவிற்காக நியமிக்கப் பட்ட ஐக்கியநாட்டுப் பொருளாதாரக் குழுவின் தலைவராகப் பணியாற்றியவர். சொல்லப்போனால் இவ்வாதமே Prebisch வாதமாகத்தான் அழைக்கப்படுகிறது. ஆனால், வேறு பல பொருளாதார அறிஞர்களோ, 'வாணிபநிலை' இவ்விதம் சீர்கெட்டுப் போய்விடும் என்பதற்குப் போதுமான சான்றுகள் கிடையாதென்றும், குறிப்பிட்ட ஒருசில பொருள்களின் விலைகள் மட்டும் ஏற்ற இறக்கமடைவதைக் கொண்டு இப்படிப் பொதுவாக வாதாடுவது தவறு என்றும் சுட்டி காட்டுகின்றனர். இப்பிரச்சினையைப் பற்றிய வாதங்களை மேலும் விவரமாகத் தெரிந்துகொள்ள விரும்பும் மாணவர்கள் பின்வரும் ஏடுகளின் கட்டுரைக்களைப்பார்க்கவும் Rooul Prebisch அவர்களின் கட்டுரையான, "The Role of Commercial Policies in Underdeveloped Countries" American Economic Papers and Proceedings, XLIV (May 1959); Robert F. Gemmill அவர்களின், "Prebisch on Commercial Policy for Less-Developed Countries," The Review of Economics and Statistics, XLIV (May, 1962); Gottfried Haberler அவர்களின், International Trade and Economic Development. (Cairo: National Bank of Egypt, 1959); Theodore W. Schultz அவர்களின், "Ecomomic Prospects of Primary Products", Economic Development for Latin America (Proceedings of a Conference held by the International Economic Association, London; Macmillan, 1961); Bela Balassa அவர்களின் நூலாகிய, 'Trade and Prospects for Developing Countries' (Homewood, Ill, Irwin, 1964).

யும்போது, தொழிற்துறைப் பண்டங்களில் மதிப்பிடப்பட்ட கூலி வீதமும்[9] அதிகரித்து விடுவதால் என்ன விளைவு ஏற்படும் என் பதைப் பார்த்தோம். கூலி வீதம் W புள்ளியிலிருந்து $W^1$ புள்ளிக்கு உயரும்போது, மறுபடியும் முதலீடு செய்வதற்குரிய இலாபம் $W^1FM$ காட்டும் பரப்பளவிற்குக் குறைந்துவிடுகிறது; தொழிற் துறையில் அமர்த்தப்படும் உழைப்பும் $L^1_2$ க்குக் குறைந்து விடு




வரைபடம் 5—2.

தொழிலாளர் மிகுதியாக உள்ள நாட்டில் சமநிலை வளர்ச்சிப் பிரச்சினை தொழில் முன்னேற்றம் ஏற்படும்போது, விவசாயமும் முன்னேறவில்லையென்றால் விவசாயப் பொருட்களின் விலை ஏறி, அதனால் (தொழில் உற்பத்தியில் அளவிடப்பட்ட) கூலியும் உயர்ந்துவிடும். அப்படி உயர்ந்துவிட்டால் தொழில் வளர்ச்சி நலிந்துவிடும்.

கிறது. இப்படிப்பட்ட சூழ்நிலையிருக்கும்போது, கூலி வீதம் உயராமல் அப்படியே இருந்திருக்குமானால், தொழிற்துறையில்

[9] இங்கு, தொழில் உற்பத்தியில் தான் கூலி அதிகரிக்கிற தென்பதைத் தெளிவுபடுத்திக்கொள்வது நல்லது. இக்கூலி உயர்வு Y அச்சில் அளவிடப் படுகிறது. இப்போது என்ன நடக்கிறதென்றால் (விவசாய முன்னேற்றமே நடைபெறாமல் இருக்கும்போது) தொழில் உற்பத்திப் பொருட்களின் விலைகள் விவசாயப் பொருட்களின் விலைகளைக் காட்டிலும் இறக்க மடைந்து விடுகின்றன. இச்சூழ்நிலையில், எல்லாத்துறைகளிலுமே கூலி வீதம் ஒரே மட்டமாக இருக்க வேண்டுமென்றால் தொழிற்துறையில் நிலவும் கூலியை உயர்த்த வேண்டியுள்ளது. மேலும், நமது சான்றின்படி, உண்மைக் கூலிகூட ஓரளவு உயர்ந்து விடலாம்.

மறுபடியும் முதலீடு செய்வதற்குக் கிடைத்திருக்கக்கூடிய இலாபம் WFB காட்டும் பரப்பளவிற்கு அதிகமாயிருந்திருக்கும்; வேலைக் கமர்த்தப் பட்டிருக்கும் உழைப்பும் $L_2$ அளவிற்கு அதிகமாய் இருந்திருக்கும். சுருங்கக் கூறின், விவசாயத்துறை முன்னேற்ற மடையவில்லையென்றால், அதிக முன்னேற்றம் அடைந்திருக்கக் கூடிய தொழிற்துறை முன்னேற்றம்கூடக் குறைந்துவிடுகிறது.

விவசாய வளர்ச்சி முக்கியமானதா அல்லது தொழில் வளர்ச்சி முக்கியமானதா என்பது பற்றிய விவாதம், ஒரு ஏழைநாடு எல்லாத் துறைகளையும் ஒரே சமயத்தில் முன்னேற்றப் பாடுபட வேண்டுமா அல்லது, அந் நாட்டிற்கு அடிப்படையான அல்லது மிக முக்கியமான துறையை மட்டும் முன்னேற்ற முயற்சிக்க வேண்டுமா என்ற பொதுவான விவாதத்தின் ஒரு பகுதியேயாகும். ஒருவிதத்தில் பார்த்தால், ஒரு நாட்டிலுள்ள பல்வேறு துறைகள் ஒன்றையொன்று சார்ந்துள்ளன என்ற உண்மையிலிருந்துதான் இவ் விரண்டு விவாதங்களுமே தோன்றியுள்ளன என்பது தெளிவாகத் தெரியும். ஒரு நாடு, ஒரே சமயத்தில் எல்லாத் துறைகளையும் முன்னேற்ற வேண்டுமென்று வலியுறுத்தும் சமநிலை வளர்ச்சி வாதமும் இந்த உண்மையிலிருந்துதான் ஆரம்பமாகிறது. அதாவது, எல்லாத் துறைகளும் ஒன்றையொன்று சார்ந்திருப்பதால், குறிப்பிட்டதொரு துறையை மட்டும் முன்னேற்ற முயற்சித்தால் அம்முயற்சி வெற்றியடையாது என்பதுதான் சமநிலை வளர்ச்சியை ஆதரிப்போரின் வாதமாகும். அதேபோல், தொழில் முன்னேற்றம்தான் முக்கியமானதென்று வாதாடுவோரும் இதே உண்மையிலிருந்துதான் தம் வாதத்தைத் தொடங்குகின்றனர்; ஆனால் முற்றிலும் மாறுபட்ட முடிவுக்கு வந்துவிடுகின்றனர். சான்றாக, பேராசிரியர் ஏ. ஓ. ஹிர்ஷ்மன் (A.O. Hirschman) அவர்கள், நமது ஆர்வத்தைத் தூண்டும் வகையில் எழுதியுள்ள நூலில்,[10] எல்லாத் துறைகளுமே ஒன்றையொன்று சார்ந்திருக்கின்ற அதே காரணத்தால், ஏதாவதொரு துறையில் கவனம்செலுத்தி அதை மட்டும் முன்னேற்றப் பாடுபட்டால் போதும் என வாதாடுகிறார். அதாவது, தொழிற்துறையை மட்டும் முன்னேற்றினால் போதும்; அம் முன்னேற்றத்தினால் ஏனைய துறைகளில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களுக்கும் கிராக்கி ஏற்பட்டு, அவையும் முன்னேறத் தொடங்கிவிடும் என்பதுதான் அவரது வாதம். இவ் விதக் கருத்து முரண்பாடுகளைச் சுருக்க

[10] Albert O. Hirschman அவர்களின் நூலான 'The Strategy of Economic Development' (New Haven; Yale University Press, 1958). சமநிலை வளர்ச்சிப் பற்றிய பொதுவான ஆய்விற்கு, நாம் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ள Nurkse அவர்களின் நூலைப் பார்க்கவும்.

மாகக் கூறின், நாட்டின் பல்வேறு துறைகள் ஒன்றையொன்று இழுத்துக்கொண்டு செல்லும்படி விட்டுவிடாமல், எல்லாத் துறைகளையும் ஒரே சீராக முன்னேற்ற வேண்டுமென்பதுதான் சமநிலை வளர்ச்சியை வலியுறுத்துவோரின் கருத்து. மாறாக ஹிர்ஷ்மன் அவர்களின் வாதமோ அப்படியல்ல; நாட்டிலுள்ள பல்வேறு துறைகள் ஒன்றையொன்று இழுத்துக்கொண்டு செல்லும் வகையில் தொழிற்துறையில் மட்டும் கவனம் செலுத்தினால் போதும்; அதனால் ஏனைய துறைகளுக்கும் கிராக்கி ஏற்பட்டு, அவையும் முன்னேற்றமடைந்துவிடும் என்பதுதான் ஹிர்ஷ்மன் அவர்களின் வாதமாகும்.

இக் கருத்து முரண்பாடு கொண்ட இந்த விவாதத்திற்கு இதுவரை முடிவொன்றும் ஏற்படவில்லை; ஒருவேளை இந்த விவாதம் இன்னும் சில ஆண்டுகள் வரைகூட நீடிக்கலாம். எனினும், ஒரு நாட்டிலுள்ள பல்வேறு பொருளாதாரத் துறைகள் தனித் தனியாக இயங்காமல் ஒன்றையொன்று சார்ந்துதான் செயல்படுகின்றன என்ற உண்மையை இரு சாராருமே ஒப்புக் கொள்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. தொழில் முன்னேற்றமடையும்போது, விவசாயத் துறையும் முன்னேற வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிடுகிறது. அப்படியின்றி, ஒரு நாடு, தன் தொழில் துறையைமட்டும் முன்னேற்றப் பாடுபட்டால், அந் நாட்டின் பொருளாதார நிலையில் மட்டுமன்றி, இறக்குமதியைப் பெருக்க வேண்டிய அவசியம் ஏற்படுவதன் வழியாக பன்னாட்டு வாணிப நிலையிலும் அந் நாட்டிற்குப் பல கஷ்டங்கள் ஏற்பட்டுவிடும். இப்படிக் கூறுவதால், தொழிற்துறையை முன்னேற்றுவதற்காக மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள் தவறானவை என்று நினைத்துவிட வேண்டாம். ஆனால், தொழிற்துறை முன்னேற்றத்தினால் மட்டும் ஒரு நாடு வளர்ச்சி அடைந்து விடக்கூடும் என்று சிலர் கருதுவதைத்தான் சுட்டிக்காட்டுகின்றோம். எனினும், வேறெந்தவிதமான கஷ்ட நஷ்டங்களும் ஏற்படாத வகையில், ஒரு நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளை யெல்லாம் வலுவந்தமாகக் கட்டுப்படுத்தி, தொழிற்துறையை மட்டும் முன்னேற்ற வேண்டுமென்று கூறுவதாகவும் நீங்கள் நினைத்துவிடக் கூடாது.

### மக்கள்தொகைக் கொள்கை

நமது அடிப்படையான பிரச்சினைகளில் மூன்றாவது பிரச்சினை மக்கள்தொகை வளர்ச்சி பற்றியது; மக்கள்தொகைப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு என்னென்ன வழிகள் உள்ளன என்பதை நாம் ஆராய வேண்டும். மக்கள்தொகை பெருகும் பிரச்சினை ஆசிய நாடுகளில்தான் மிகத் தீவிரமாக உள்ளது. ஒரு விதத்தில்

பார்த்தால் வளர்ச்சி குன்றிய எல்லா நாடுகளிலுமே பிறப்பு வீதம் அதிகமாயிருப்பதால்தான் மக்கள்தொகை துரிதமாக அதிகரித்து வருகிறது. இப்படி அதிகரித்து வருவதால் அந் நாடுகளின் எதிர் காலம்கூடப் பாதிக்கப்பட்டு விடலாம்.

மக்கள்தொகை பெருகும் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு இரண்டு அடிப்படையான வழிகள் உள்ளன: 1) பிறப்பு வீதம் அப்படியே இருக்க, அதனால் ஏற்படக்கூடிய விளைவுகளைச் சமாளிப்பது; 2) மக்கள்தொகை வளரும் வீதத்தைக் கட்டுப் படுத்துவது.

இவ்விரு வழிகளில், இரண்டாவது வழியாகிய மக்கள் தொகையைக் கட்டுப்படுத்தும் நடவடிக்கைகளுக்கு மதத்தின் அடிப் படையிலோ இலட்சியத்தின் அடிப்படையிலோ எதிர்ப்புகள் ஏற் படும்போது, அரசாங்கம் முதலாவது வழியைத்தான் பின்பற்ற வேண்டியுள்ளது. அப்படியென்றால், அந் நாட்டு மக்கள்தொகை பெருகுவதற்குரிய காரணத்தைப் பற்றிக் கவலைப்படாமல், அப் பெருக்கத்தால் ஏற்படும் விளைவுகளைத்தான் சமாளிக்க வேண்டும். அதாவது, வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட்டுவிடாமல் இருப் பதற்கும், அப்படி அதிகமாக ஏற்பட்டுவிட்டால் அதைக் குறைப் பதற்கும் தீவிரமான நடவடிக்கைகளை அரசாங்கம் மேற்கொள்ள வேண்டும். ஆனால், வளர்ச்சி குன்றிய நாட்டில், தொழிலாளர் களின் எண்ணிக்கை பெருவாரியாகப் பெருகும்போது, அவர்கள் அனைவருக்கும் வேலை கொடுக்கக்கூடிய அளவுக்கு அந் நாட்டில் மூலதனம் இருப்பதில்லை. அதேசமயம், ஏற்கெனவே அதிக மக்கள் வேலை செய்து வரும் விவசாயத்திலும் அவர்களுக்கு வேலைவாய்ப்பு கிடையாது. இந் நிலையில், மனித உழைப்பை மிச்சம் பண்ணக் கூடிய மேற்கத்திய தொழில்நுட்ப முறையைக் கடைப்பிடித்தாலோ வேலையில்லாத் திண்டாட்டம் மேலும் தீவிரமடைந்துவிடும். அப் படியிருக்க, அந் நாட்டின் மிக முக்கியமான பொருளாதாரக் கொள்கை, வேலைவாய்ப்பை அதிகரிப்பதுதான் என்று சொல்லத்தேவை யில்லை. இக்கொள்கையை நிறைவேற்றும் வகையில் அந் நாட்டின் அரசாங்கம் சமுதாயநல அபிவிருத்தித் திட்டங்களுக்கு முக்கியத் துவம் அளிக்கலாம். இத் திட்டங்களின்படி, அந்தந்த ஊர்களுக்குத் தேவையான பொதுப்பணி வேலைகளை கிராம அதிகாரிகளின் ஒத்துழைப்புடன் கிராமப் புறங்களிலுள்ள வேலையில்லாத் தொழி லாளரை அமர்த்தி நிறைவேற்றலாம். அதோடு, அதிக அளவு மூல தனம் தேவைப் படாமல் தொழிலாளிகளே அதிகமாகத் தேவைப் படக்கூடிய தொழில்களுக்கும் முக்கியத்துவம் அளிக்கலாம். சான்றாக,

பெரிய நெசவாலைகளை அமைப்பதற்குப் பதிலாக, கைத்தறித் தொழிலுக்கு ஆதரவளிக்கலாம். நெசவாலைத் தொழிலைக் காட்டிலும் கைத்தறித் தொழில் திறமை குன்றியது தான் ; எனினும், கைத்தறித் தொழிலில்தான் நிறையப் பேர் வேலை செய்யமுடியும் என்பதற்காக அதற்கு ஊக்கமளிக்கலாம். ஆனால், இப்படிச் செய்வதால் ஒரு முக்கியமான பிரச்சினை ஏற்பட்டுவிடுகிறது. வேலை வாய்ப்பை அதிகரிப்பதற்காக இவ்வித நடவடிக்கைகளை மேற்கொள்ளும் போது பொருளாதார வளர்ச்சியை அடைய முடியாமல் போய் விடுகிறது. அதாவது, முன்னேற்றம் குன்றிய அந்நாடு, தன்னிடமுள்ள சிறதளவு மூலதனத்தை நிறையப் பேருக்கு வேலை கிடைக்கும் வழியில் பயன்படுத்த வேண்டுமா, அல்லது, கூடுமானவரை நாட்டின் உற்பத்தியைப் பெருக்குவதற்காகப் பயன்படுத்த வேண்டுமா என்ற பிரச்சினை தோன்றி விடுகிறது. வேலையில்லாத் திண்டாட்டம் அளவுக்கு மிஞ்சி அதிகரித்துக் கொண்டே சென்றால் அந் நாட்டின் அரசியல், சமுதாய அமைப்புகள் நிலைபெற முடியாது; எனவே, பொருளாதார வளர்ச்சிக் குறிக்கோளை சில சமயங்களில் கைவிட வேண்டியுள்ளது.

மக்கள்தொகைப் பிரச்சினையைத் தீர்க்கும் இரண்டாவது வழி, மக்கள்தொகை வளர்ச்சியைக் கட்டுப்படுத்தும் வழியாகும். பொதுவாக, பலவிதமான குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களைப் பிரச்சாரம் செய்வதன் மூலமாகவும் அவற்றைச் செயல்படுத்துவதன் வழியாகவும் ஒரு நாடு பிறப்பு வீதத்தைக் குறைக்க முடியும்.[11] மக்கள்தொகைப் பெருக்கமுடைய ஏழை நாடுகளில் இந்தக் குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளுக்கு மதத்தின் அடிப்படையிலும் சரி, மனச்சாட்சியின் அடிப்படையிலும் சரி, எதிர்ப்பு இருப்பதாகத் தெரியவில்லை. சான்றாக, இந்து மதத்தை எடுத்துக் கொண்டால், அது குடும்பக் கட்டுப்பாட்டிற்குத் தடையாக இருப்பதில்லை. சொல்லப்போனால், குடும்பக் கட்டுப்பாட்டைத் தீவிரமாக ஆதரிக்கும் இந்து மதத்தினர், அம் மதம் குடும்பக் கட்டுப்பாட்டை ஆதரிக்கின்ற மதம் என்றுகூட விளக்கம் தருகின்றனர். இக் குடும்பக் கட்டுப்பாட்டைப் பொறுத்தவரை கம்யூனிச சீனாதான் விசித்திரமான எண்ணம் கொண்டுள்ளதாகத் தோன்றுகிறது; எனினும் அந்

[11] கருத்தளவில் பார்த்தால், இக் குடும்பத் திட்டத்திற்கு நேர்மாறான வழியின் மூலமாகவும் மக்கள்தொகை வளர்ச்சியைக் கட்டுப்படுத்திவிடலாம்; அதாவது, பிறப்பு வீதத்தைக் குறைப்பதற்குப் பதிலாக இறப்பு வீதத்தை அதிகரிக்கச் செய்யலாம். அப்படியென்றால், பொது மக்களின் உடல் நிலைப் பராமரிப்பு, பொதுச் சுகாதாரம் பேணுதல் போன்ற பணிகளை அரசாங்கம் கைவிட்டு விடுவதோடு, இறப்பு வீதத்தை அதிகரிக்கக் கூடிய ஏனைய எல்லா சக்திகளையும் ஊக்குவிக்கலாம். ஆனால் இவ்விதமான நடவடிக்கைகளை எந்த நாடுமே கடைப் பிடிக்க முடியாது; அதோடு இவ்விதமான கொள்கை மனிதாபிமானமற்றதொரு கொள்கையுமாகும்.

நாட்டில்கூட, தற்போது இத்திட்டத்திற்கு ஆதரவு கிடைத்துள்ளது; இதைப்பற்றி அடுத்த அதிகாரத்தில் சற்று விரிவாகப் பார்ப்போம். இவ்வாறாக, குடும்பக் கட்டுப்பாட்டிற்கு இன்று எதிர்ப்பு ஏதும் கிடையாது என்றுதான் சொல்ல வேண்டும்; அதோடு, இத் திட்டம் நடைமுறைக்கும் ஏற்றதாக உள்ளது. எனவேதான் இத்திட்டத்தை நிறைவேற்றப் பல நாடுகள் முயற்சி செய்து வருகின்றன.

எது எவ்வாறிருப்பினும், ஏழை நாடுகளில் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின் வழியாக மக்கள்தொகை வளர்ச்சியைக் கட்டுப்படுத்துவது என்பது அவ்வளவு எளிதான காரியமல்ல; ஒரு வேளை இத் திட்டம் வெற்றியுடன் நிறைவேற இன்னும் எத்தனையோ ஆண்டுகள் ஆகலாம். ஏனெனில், ஏழை நாடுகளில் வாழும் பெரும்பாலான மக்கள் கல்வி அறிவு இல்லாதவர்கள்; அதோடு மட்டுமன்றி, இத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக அந் நாடுகள் அதிகமாகச் செலவிடவும் முடியாது. மேலும், குடும்பக் கட்டுப்பாட்டு முறைகள் அவ்வளவு திருப்தியானவையாகவும் இருப்பதில்லை. எல்லாவற்றையும்விட முக்கியமானது யாதெனில், 'சிறிய குடும்பமே சீரான வாழ்விற்கு வழி' என்னும் மனப்பான்மை மக்களிடம் இன்னும் வேரூன்றவில்லை. இப்படிப்பட்ட மனப்பான்மை, தொழில் வளர்ச்சியின் விளைவாக ஏற்படக் கூடியது என்றே தோன்றுகிறது. இத்திட்டத்தை நிறைவேற்றுவதில் இவ்வளவு கஷ்டங்கள் இருக்கின்றதனால்தான் குடும்பக் கட்டுப்பாட்டைச் செயல்படுத்தத் தீவிரமாகப் பாடுபட்டு வரும் நாடுகளில் கூட பிறப்பு வீதம் எதிர்பார்த்த அளவிற்குக் குறையாமல் மெதுவாகவே குறைந்துவருகிறது. ஆசிய நாடுகளில் ஜப்பானும் தாய்வானும் தான் இத் திட்டத்தில் ஓரளவு வெற்றி பெற்றுள்ளன. ஜப்பான் நாடு, இரண்டாம் உலகப்போர் முடிந்த பின்னர்தான் இக் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தைத் தொடங்கியது; தொடங்கும்போதே தீவிரமான முறையில், கருச்சிதைவை ஆதரிக்கும் சட்டத்தை நிறைவேற்றியதன் மூலமாக பிறப்பு வீதத்தைக் கணிசமான அளவிற்கு குறைத்துவிட்டது. அப்படிக் குறைத்துவிட்டதற்குக் காரணம் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம்தான் என்று கூறமுடியாது. ஏனெனில், ஏனைய ஆசிய நாடுகளைக் காட்டிலும் ஜப்பான் நாடு எவ்வளவோ தொழில் முன்னேற்றமும் நகர வளர்ச்சியும் கொண்டது. எனவே, குடும்பத் திட்டத்தில் ஜப்பான் நாட்டைப் போல் ஏனைய ஆசிய நாடுகளும் வெற்றியடையலாம் என்று சொல்வதற்கில்லை. இப்படிப் பார்த்தால், இக் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்திற்குச்

சிறந்த சான்றாக விளங்குவது தாய்வான் நாடுதான். எனினும், அந் நாட்டில்கூட பிறப்பு வீதம் குறைந்து விட்டதற்குக் காரணம், அந் நாட்டில் ஏற்பட்டுள்ள தொழில் முன்னேற்றமும் நகர வளர்ச்சியும் தானேயன்றி, மிகச் சமீப காலத்தில் அமலாக்கப்பட்ட குடும்பத் திட்டமல்ல என்றும் சிலர் வாதாடுகின்றனர்.[12]

முடிவாகக் கூறவேண்டுமாயின், குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை நிறைவேற்றத் தீவிரமாகப் பாடுபட்டு வரும் நாடுகளில் கூட, பிறப்பு வீதம் குறைய இன்னும் எத்தனையோ ஆண்டுகள் ஆகலாம். இப்படிக் கூறுவதால், மக்கள்தொகை வளர்ச்சியைக் குறைப்பதற்கான இக் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை ஏழை நாடுகள் கைவிட்டுவிட வேண்டும் என்று நினைத்துவிட வேண்டாம். மாறாக, இத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கான எல்லா வழிமுறைகளையும் அந் நாடுகள் தீவிரமாகக் கையாளவேண்டும் என்பதைத் தான் வலியுறுத்துகின்றோம்.

## பிற நாட்டு உதவியின் பங்கு

அடிப்படையான இம் மூன்று பிரச்சினைகளையும் தீர்ப்பதற்கு உலகிலேயே அதிகப்படியான மக்கள்தொகை கொண்டுள்ள ஏழை நாடுகளான இந்தியாவும் சீனாவும் என்னென்ன வழிமுறைகளையெல்லாம் கடைப்பிடிக்கின்றன என்பதை விரிவாக அடுத்த அதிகாரத்தில் காண்போம். இப்போது, பிற நாட்டு உதவியின் பங்கைப்பற்றி ஒரு சில கருத்துக்களை மட்டும் கூறி இவ்வதிகாரத்தை முடித்துக் கொள்வோம். பொருளாதார வளர்ச்சி குன்றிய நாடுகள் முன்னேற்றமடைவதற்கென்று வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளின் உதவியைப் பெறுகின்றன ; அப்படிப் பெறுவதால் வளர்ச்சியடைந்துள்ள நாடுகள் எப்படியெல்லாம் பாதிக்கப்படுகின்றன என்பதுதான் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது.

1970 முதல் ஒரு சில ஆண்டுகளாக அயல் நாடுகளுக்கு உதவி செய்யும் விஷயத்தில் அமெரிக்கா ஓரளவு தெளிவுபெற்று விட்டது. இதற்குப் பல காரணங்கள் உள்ளன: அமெரிக்க நாடு பல்லாண்டு காலமாகவே பிற நாடுகளுக்கு உதவி செய்து வந்துள்ளது. சொல்லப் போனால், இரண்டாம் உலகப் போர் முடிவடைந்த காலம் முதல் பிற

[12] Kingsley Davis அவர்களின் "Population Policy: Will Current Programs Succeed?" ( Science 158 ) என்ற கட்டுரையைப் பார்க்கவும். இக்கட்டுரை, Garrett Hardin அவர்கள் பதிப்பித்துள்ள Population, Evolution and Birth Control ( San Francisco, W. H. Freeman and Co., 1964 ) என்ற நூலிலும் உள்ளது. பக்கம் 352.

நாடுகளுக்கு உதவி செய்வதை ஒரு தொழிலாகவே பாவித்து வந்து விட்டது; அப்படிப் பாவித்ததே ஒரு காரணமாயிருக்கலாம். அதோடு, எவ்வளவோ பலன்கள் ஏற்படுமென்று எதிர்பார்த்து உதவி செய்தும் கூட அமெரிக்காவிற்கு ஏமாற்றம் தான் மிச்சமானது என்பதும் ஒரு காரணமாயிருக்கலாம். சான்றாக, மார்ஷல் திட்டத்தின் கீழ் அமெரிக்கநாடு செய்த உதவியினால் ஐரோப்பிய நாடுகளுக்கு நல்ல பலன்கள் கிடைத்தன; அப்படிப் பலன் கிடைக்குமென்ற நம்பிக் கையில்தான் ஆசிய, ஆப்ரிக்க, இலத்தீன் அமெரிக்க நாடுகளுக்கும் எவ்வளவோ உதவி செய்துவந்தது. ஆனால் அதன் முடிவோ பெரும் ஏமாற்றம்தான். கடைசியாக, பிற நாடுகளுக்குச் செய்து வந்த உதவி, பொருளாதார உதவியாக மட்டுமன்றி இராணுவ உதவி யாகவும் ஆகிவிட்டது; இதனால் வளர்ச்சி குன்றிய சில நாடுகள் தத்தம் சொந்த அரசியல் விவகாரங்களிலும் இராணுவ விவகாரங் களிலும் அமெரிக்கா அனாவசியமாகத் தலையிடுவதாகப் புகார் செய்யும் நிலை ஏற்பட்டுவிட்டது. எனவேதான், அனுபவம் வாய்ந்த அமெரிக்க நாட்டுப் பெரியோர்களில் பலர், ஏழை நாடுகளின் மீது இரக்கம் கொண்டிருந்தும் கூட, அந் நாடுகளுக்கு உதவிசெய்வது நல்லதல்ல என்று வாதித்து, முடிவு கட்டி விட்டனர். அவர்களின் வாதம் இதுதான்: "நமது சொந்த நாட்டிலேயே எத்தனையோ பிரச்சினைகள் இருக்கின்றன; இன்றும்கூட ஓரளவு வறுமை உள் ளது; தொழில் வளர்ச்சியினால் நாம் வாழும் சூழ்நிலையும் சுற்றுப் புறமும் தூய்மைகெட்டு வருகிறது; சில நகரங்களோ மெதுவாகத் தேய்வுற்று வருகின்றன. இப்படியெல்லாம் நமது நாட்டிலேயே இருக்கும் பிரச்சினைகளை விட்டு விட்டு ஏன் பிற நாட்டுப் பிரச்சினை களைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டும்? நமது சொந்தப் பிரச்சினைகளில்மட்டும் கவனம் செலுத்தினால்தான் நமக்கும் நல் லது, பிற நாட்டவர்க்கும் நல்லது'' என முடிவெடுத்து விட்டனர்.

இந்த விழிப்புணர்ச்சியின் விளைவாக, அமெரிக்கா ஏழை நாடு களுக்குச் செய்துவந்த உதவி பெருமளவு குறைந்துவிட்டது. வளர்ச்சி குன்றிய ஏழை நாடுளுக்கு மானியம், கடன், பெரும் திட்டங்களில் கூட்டு என்ற பெயரில் அமெரிக்கா செய்துவரும் உதவி, அதன் மொத்த வருமானத்தில் ½ சதவீதம்கூட இன்று கிடையாது. நிற்க, வளர்ச்சியடைந்துள்ள நாடுகளிடமிருந்து வளர்ச்சி குன்றிய நாடுகள் ஏற்கெனவே பெற்றுள்ள கடனுக்கு வட்டிகூடச் செலுத்த முடிவதில்லை. அமெரிக்கா உதவி செய்யத் தயங்கு வதற்கு இதுவும் ஒரு காரணமாகும். சொல்லப் போனால், அயல் நாடுகளுக்கு உதவி செய்வதையே அமெரிக்கா கைவிட்டுவிட வேண்டுமா என்ற பெரும் பிரச்சினை எழுந்துவிட்டது இன்று.

இப் பிரச்சினை பொருளாதாரப் பிரச்சினை மட்டுமல்ல ; இதில் பொருளாதார சார்பற்ற எத்தனையோ பிரச்சினைகளும் தொக்கி நிற்கின்றன. எனினும், இப்பிரச்சினைக்குத் தீர்வு காணும்போது, அதிலுள்ள பொருளாதார அம்சங்களை நாம் புறக்கணித்துவிட முடியாது. அமெரிக்கா பிற நாடுகளுக்குச் செய்துவந்த உதவிகள் அனைத்துமே வீணாகி விட்டதென்று சொல்ல முடியாது. வளர்ச்சி குன்றிய நாடுகளுக்குச் செய்துவந்த எத்தனையோ விதமான தொழில்நுட்ப உதவிகளால் எதிர்பார்த்ததைக் காட்டிலும் அந் நாடுகள் எவ்வளவோ முன்னேற்றமடைந்துள்ளன. பசுமைப் புரட்சிக்காகச் செய்த தொழில்நுட்ப உதவியே இதற்குச் சிறந்த சான்றாகும். ஏழை நாடுகளுக்கெல்லாம் இவ் விதத் தொழில்நுட்ப உதவி இன்றியமையாததாகும். எனவே, மேற்கத்திய நாடுகள் கிழக்கத்திய நாடுகளுக்குச் செய்து வந்த தொழில்நுட்ப உதவிகள் நல்ல பலன் தந்துள்ள காரணத்தால், அவ்வித உதவியைத் தொடர்ந்து செய்வதோடு மட்டுமன்றி, இன்னும் அதிகமாகச் செய்வதுதான் நல்லது.

இரண்டாவதாக, ஏழைநாடு, தன் பொருளாதார முன்னேற்றப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண வேண்டுமாயின், பிறநாட்டு உதவி இன்றியமையாததாகும் என்பதை நமது பொருளாதார ஆய்வே உறுதி செய்துள்ளது. நாம் ஆராய்ந்த அடிப்படையான மூன்று பிரச்சினைகளில் ஒன்று ஏழை நாடுகள் தம் முதலீட்டு வீதத்தை உயர்த்த வேண்டுமென்பது. இப் பிரச்சினையை நாம் ஆராய்ந்த போது, ஏழைநாடு தன் சேமிப்பு வீதத்தை அதிகரிக்க வேண்டு மென்றும், அதே சமயம், பிற நாடுகளிலிருந்து தேவைப்படும் முதற் கருவிப் பொருள்களை இறக்குமதி செய்வதற்குப் போதுமான அளவு ஏற்றுமதியைப் பெருக்க வேண்டுமென்றும் பார்த்தோம். வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு வேண்டிய சாதனங்களைக் குறிப்பிடும் பொருளாதார அறிஞர்கள், அவற்றை 'இரு–இடைவெளி ஆய்வு' (two-gap analysis)[13] என்றுதான் சுட்டிக் காட்டுவர். முதலில் வருவது 'சேமிப்பு இடைவெளி' : ஒரு ஏழைநாடு வளர்ச்சி அடை வதற்கு வேண்டிய அளவிற்கு அந்நாடு முதலீடு செய்ய முடிவ தில்லை; காரணம், அந் நாட்டவர் போதுமான அளவிற்குச் சேமிக்க முடிவதில்லை என்பதைத்தான் இச் 'சேமிப்பு இடைவெளி' புலப் படுத்துகின்றது. இரண்டாவது வருவது 'வாணிப இடைவெளி'

[13] இதைப் பற்றிய விளக்கத்திற்கு H. B. Chenary அவர்களும் A. M. Stout அவர்களும் சேர்ந்து எழுதியுள்ள "Foreign Assistance and Economic Development என்ற கட்டுரையை வாசிக்க வேண்டும். இக்கட்டுரை, 1966 செப்டம்பரில் வெளிவந்துள்ள American Economic Review என்ற இதழில் உள்ளது. பக்கங்கள் 679-733.

ஏழைநாடு முன்னேற்றமடைய வேண்டுமானால், அதற்குத் தேவையான இயந்திர சாதனங்களை மட்டுமன்றி, இன்னும் எத்தனையோ வகையான பொருள்களையும் பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டியுள்ளது; ஆனால் அவ்வாறு இறக்குமதி செய்வதற்கு வேண்டிய அளவிற்கு அந்நாடு ஏற்றுமதி செய்ய முடியாத நிலையில் உள்ளது என்பதைத்தான் இந்த 'வாணிப இடைவெளி' சுட்டிக் காட்டுகின்றது.[14] இந்த இடைவெளிகளின் முக்கியத்துவம் யாதெனில். நாம் ஆராய்ந்துள்ள கோட்பாட்டின்படி, அயல் நாட்டுச் சாதனங்களைக் கொண்டு இந்த இடைவெளிகளை நிரப்ப முடியும் என்பதுதான். அயல்நாட்டு உதவியின் வழியாக ஒரு ஏழைநாடு 1) தான் சேமிக்கக் கூடியதைக் காட்டிலும் அதிக மாக முதலீடு செய்யவோ, அல்லது 2) தான் ஏற்றுமதி செய்ய முடிவதைக் காட்டிலும் அதிகமாக இறக்குமதி செய்யவோ கூடும். இக் குறைபாட்டால் ஒரு ஏழை நாட்டின் பொருளாதார முன்னேற்றமே தடைப்படும்போது, அயல்நாட்டு உதவியின் வழியாக அத் தடைகளைப் போக்கி, பொருளாதார வளர்ச்சியை அடையமுடியும்.

அதற்காக, முன்னேற்றம் குன்றிய நாடு, அயல்நாட்டு உதவியையே நம்பி இருக்கவும் கூடாது. ஏனெனில் ஜப்பான் போன்ற நாடுகள் அயல்நாட்டு உதவி அதிகமின்றியே முன்னேற்ற மடைந்துள்ளன. இன்றைக்கும் கூட, எத்தனையோ நாடுகள் பிற நாட்டு உதவியின்றியே முன்னேறப் பாடுபட்டு வருகின்றன. அவ் வாறு முன்னேற முயற்சித்து வரும் நாடுகளில் சீனாதான் சிறந்த சான்றாக விளங்குகிறது. எது எவ்வாறிருப்பினும், அயல்நாட்டு

14 வளர்ச்சி குன்றிய எல்லா நாடுகளிலுமே இவ்விரண்டு இடை வெளிகளில் ஒன்றாகிலும் வலிமையாக இருந்து முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கும். இந்தவிதமான 'இடைவெளி ஆய்வு' முறை தோன்றிய காலத்தில் சேமிப்பு இடை வெளியைக் காட்டிலும் வாணிப இடைவெளிதான் சக்தி வாய்ந்த தடையாக உள்ளது என்று பொருளாதார அறிஞர்கள் உணர்ந்தனர்; அப்படி உணர்ந்தது பலருக்கு வியப்பாகக் கூட இருந்தது. ஆனால், உண்மையில் மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சியின் முடிவுகளோ இந்த எண்ணத்தில் சந்தேகத்தைத் தோற்றுவித்துள்ளது. சான்றாக, Thomas Weisskopf அவர்கள், சேமிப்பு இடைவெளிதான் அதிக முட்டுக்கட்டையாக உள்ள தென்று வாதாடுகிறார். அவரது ஆராய்ச்சியின் முடிவில் அவர் குறிப்பிட்டிருப்பது வருமாறு: "பொருளாதார வளர்ச்சித் தடைகளில் வாணிபத் தடைதான் சக்தி வாய்ந்த தடையென்று எல்லோரும் கூறி வந்தனர்; ஆனால் அது அவ்வளவு சக்தி வாய்ந்த தடையல்ல என்பதற்கு நல்ல காரணம் இருப்பதாகத்தான் தோன்றுகிறது........(A) உலகப் போருக்குப் பின்னர் ஏற்பட்டுள்ள நிலைமைகளை ஆராயும்போது ஏழை நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு வாணிபத்தடை அவ்வளவொன்றும் சக்திவாய்ந்த தடையல்ல என்று அந் நாடுகளின் அனுபவத்திலிருந்தே தெரிகிறது. "Thomas E. Weisskopf, An Economic Test of Alternative constraints on the growth of underdeveloped Countries," The Review of Economics and Statistics, VOL XIV No. 1, February 1972, P. 77.

உதவியின்றி முன்னேறும் நாடுகளைக் காட்டிலும் அயல் நாட்டு உதவியுடன் முன்னேறும் நாட்டுகள் துரிதமாக முன்னேறிவிடுமா, அப்படியென்றால், எந்த வீதத்தில் விரைவாக முன்னேற்றமடையும் என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியாது. இருந்தபோதிலும், வேறு விதமான தடைகள் ஒன்றும் இல்லாமலிருந்தால், வளமிக்க நாடுகள் வறிய நாடுகளின் முன்னேற்றத்திற்காகப் பொருளுதவி செய்வது நல்லது ; சில சமயங்களில் இன்றியமையாததுமாகும்.

## சுருக்கம்

செல்வமிக்க நாடுகளுக்கும் ஏழைநாடுகளுக்கு மிடையேயுள்ள ஏற்றத் தாழ்வு, கடந்த நூறாண்டுகளாக அதிகரித்துக் கொண்டே வந்துவிட்டது. ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளில் மட்டுமன்றி, இலத்தின் அமெரிக்காவிலுள்ள பல நாடுகளிலும் கூட, பரம்பரையாக இருந்து வரும் பிற்போக்கான பழக்க வழக்கங்களையும் சமுதாய அமைப்புகளையும் உதறித்தள்ளிவிட்டு, முன்னேற்றத்தைத் தொடங்குவது என்பது மிகக் கஷ்டமான பிரச்சினையாக உள்ளது. இந்த நாடுகளில் பெரும்பாலானவை ஆண்டொன்றுக்கு 100 டாலர்கூட தலாவருமானமின்றி வறுமையில் வாடுகின்றன ; அதே சமயம், உலக மக்கள்தொகையில் பெரும்பாலானோர் இந்த வறுமை நாடுகளில்தான் வாழ்க்கை நடத்துகின்றனர். மொத்தத்தில், உலகமக்களில் மூன்றில் இரண்டு பகுதியினர் வறுமை நிறைந்த நாட்டவர்தான்.

இந் நாடுகளில் வறுமை என்பது ஒன்றும் புதிதன்று ; அதை ஒழித்துக்கட்ட வேண்டுமெனத் தீர்மானித்திருப்பதுதான் புதியது. இத் தீர்மானம்கூட மேற்கத்திய நாடுகளோடு கொண்ட தொடர்பின் பலன் என்றே சொல்லலாம். முன்னேறத் தொடங்குவதற்கு இப்படிப்பட்ட தீர்மானம் அவசியம்தான். ஆனால், துரதிர்ஷ்டவசமாக, முன்னேற முயற்சித்துவரும் நாடுகளில் வலுவான பல தடைகளும் உள்ளன. முன்னேற்றத்திற்கு வேண்டிய தொழில்நுட்ப முறைகள் அனைத்தும் மேற்கத்திய நாடுகளில் தயாராக இருப்பதால் அவற்றைக் 'கடன்' வாங்கி ஏழை நாடுகள் முன்னேறக் கூடும்; என்றாலும், அவ்வாறு முன்னேறுவதற்கும் எத்தனையோ விதமான பிரச்சினைகளைச் சமாளிக்க வேண்டியுள்ளது. முதலாவதாக, மேற்கத்திய தொழில்நுட்ப முறைகளைப் புகுத்த வேண்டுமானால், அதற்கு ஏராளமான மூலதனமும் பயிற்சிபெற்ற தொழிலாளரோடு நிர்வாகிகளும் வேண்டும். ஆனால் ஏழை நாடுகளிலோ மூலதனம் மிகக் குறைவாகத்தான் உள்ளது; பயிற்சியில்லாத தொழிலாளர்

தாம் நிறைய உள்ளனர். எனவே, மேற்கத்திய தொழில்நுட்ப முறைகள் இந்த ஏழை நாடுகளுக்குப் பொருத்தமற்றவையாகி விடுகின்றன. இரண்டாவதாக, தொழில் வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளைப் போல், முன்னேற்றமடைவதற்கான சமூக, பொருளாதார முன்னேற்பாடுகளை இந்த நாடுகள் இன்னமும் மேற்கொள்ள வில்லை ; அதனால், தொழிற்புரட்சியைமட்டுமன்றி, இன்னும் பல விதமான புரட்சிகளை இந் நாடுகள் ஏற்படுத்த வேண்டியுள்ளன. எல்லாப் பிரச்சினைகளுக்கும் மேலாக, ஏழை நாடுகள் மக்கள் தொகைப் பிரச்சினையையும் சமாளிக்க வேண்டியுள்ளன ; குறிப்பாக, ஆசிய நாடுகளில்தான் இப்பிரச்சினை மிகத் தீவிரமானதாக உள்ளது. வளர்ச்சி குன்றிய நாடுகளிலெல்லாம் பொது உடல்நலப் புரட்சி ஏற்பட்டு வருவதால், மக்கள் தொகைப் பெருக்க வீதம் அதிகரித்து வருகிறது ; அதோடு மட்டுமன்றி, இந்த ஏழை நாடுகள் பலவற்றிலுள்ள உற்பத்திச் சாதனங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது மக்கள்நெருக்கடி அதிகமாயுள்ளது என்பதும் தெளிவாகத் தெரியும். இறுதியாக, பிற நாட்டவர் வந்து இந்த ஏழை நாடுகளில் முதலீடு செய்யக்கூடிய சூழ்நிலையும் கெட்டுவிட்டது ; பிற நாட்டு அரசாங்க உதவியைப் பெறுவதும் சிக்கல் நிறைந்ததாகி விட்டது. எனவே, பிற நாட்டு உதவியை நம்பி முன்னேற்றமடைவது என்பது கடினமான காரியம்தான்.

இவ்விதமான தடைகளும் சூழ்நிலையும் இருக்கும்போது வளர்ச்சி குன்றிய எந்த நாடாவது, இன்னும் நூறாண்டுகளில் வளர்ச்சியடைந்துள்ள அமெரிக்க நாடு போன்ற நாட்டிற்கு இணையாக முன்னேறிவிட முடியுமா என்பது சந்தேகம்தான். எனவே, இந்த ஏழை நாடுகள் தத்தம் மக்கள் நிம்மதியாக வாழக்கூடிய வகையில் தம்மை வாட்டும் கொடிய வறுமையை ஒழித்துக் கட்டுவதற்குத்தான் பாடுபட வேண்டுமேயன்றி முன்னேற்றமடைந்துள்ள நாடுகளோடு போட்டியிட்டு வளர்ச்சியடைய முயற்சிப்பது இயலாத காரியம். ஏனெனில், பொருளாதார முன்னேற்றமடைவதில் மூன்று பெரும் பிரச்சினைகளை இந் நாடுகள் சமாளிக்க வேண்டியுள்ளன:

1. முதலீட்டு வீதத்தை எப்படி உயர்த்துவது ? பொதுவாகக் கூறின், ஒரு நாடு வேலையில்லாத் தொழிலாளருக்கு வேலை கொடுத்தும், வரிகளை உயர்த்தியும், பணவீக்கத்தை உண்டு பண்ணியும் தன் முதலீட்டு வீதத்தை உயர்த்தலாம். ஆனால் மூன்று வழிகளுமே ஓரளவுக்குத்தான் பயன் தரும் ; ஏனெனில் இவை ஒவ்வொன்றிலுமே சில முக்கியமான குறைபாடுகளும் உள்ளன. எனினும், ஏழை நாடுகள் அனைத்தும் இம் மூன்று வழிகளையுமே மேற்கொள்ளத்தான் செய்யும் ஆனால் அப்படிச் செய்யும்போது,

தத்தமக்கு வேண்டிய ஆலைப் பொருள்களையும் முதற்கருவிப் பொருட்களையும் பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டியிருப்பதால், அயல்நாட்டுச் செலாவணியில் நெருக்கடி [ஏற்பட்டு விடக்கூடும்.

2. பொருளாதார வளர்ச்சியடைய வேண்டுமானால், விவசாயத் துறை வளர்ச்சிக்கும் தொழிற்துறை வளர்ச்சிக்குமிடையே எந்த வகையில் 'சமநிலையை' அடைய முயற்சிப்பது? தொழில் வளர்ச்சிக்கு மட்டும் முக்கியத்துவம் தருவதா, அல்லது எவ்விதப் பிணக்கமும் ஏற்படாத வகையில் தொழில் வளர்ச்சிக்கும் விவசாய வளர்ச்சிக்கும் சம முக்கியத்துவம் அளிப்பதா? இப் பிரச்சினையைப் பொறுத்தவரை, நாம் தீர்வுகாண உதவும் முந்திய அனுபவம் ஒன்றும் கிடையாது. தொழில் வளர்ச்சிக்கு மட்டும் முக்கியத்துவம் அளித்தால், நாட்டின் பொருளாதார நடவடிக்கைகள் அனைத்தையுமே கட்டுப்படுத்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிடுகிறது.

3. மக்கள்தொகைப் பெருக்கத்தின் சக்திகளையும், அப் பெருக்கத்தால் ஏற்படும் விளைவுகளையும் சமாளிப்பதெப்படி? வளர்ச்சி குன்றியதொரு நாடு, ஏராளமான தொழிலாளர்கள் வேலை செய்யக் கூடிய திட்டங்களை நிறைவேற்றுவதன் வழியாக வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்சினையை சமாளிக்கலாம்; அல்லது, குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களின் மூலமாக மக்கள்தொகைப் பெருக்கத்தைக் குறைக்கப் பாடுபடலாம். இதில் எந்த வழியை மேற்கொண்டாலும், அந்நாடு மக்கள்தொகைப் பிரச்சினையை உடனடியாகத் தீர்த்துவிட முடியாது. அப்படித் தீர்ப்பதற்கு இன்னும் எத்தனையோ ஆண்டுகள் ஆகலாம்.

பொருளாதாரத் தத்துவத்தின் அடிப்படையில் பார்த்தால், ஒரு ஏழைநாடு துரிதமாக முன்னேற்றமடைவதற்கு அயல்நாட்டு உதவி ஊக்கமளிக்கின்றது என்பது உண்மை. இவ்வுதவி பசுமைப் புரட்சிக்குச் செய்ததைப்போல் தொழில்நுட்ப உதவியாக இருக்கலாம், அல்லது அந்த ஏழை நாட்டின் சேமிப்பிலோ வாணிபத்திலோ ஏற்பட்டுள்ள பற்றாக்குறையை நிரப்பும் வகையில் சாதனங்களின் வடிவிலும் அமையலாம். ஆனால், குறிப்பிட்டதொரு காலத்தில் அயல்நாட்டு உதவியால் ஏழைநாடு எந்த அளவுக்கு முன்னேற முடியும் என்பது பொருளாதாரச் சூழ்நிலையைமட்டும் சார்ந்ததல்ல; இன்னும் பிற எத்தனையோ வகையான சூழ்நிலைகளையும் பொருத்தது.

# 6. வளர்ச்சிப் பாதையில் முன்னேற்றம்—இந்தியாவும் சீனாவும்

பொருளாதார வளர்ச்சி குன்றிய எத்தனையோ நாடுகள் தத்தம் முன்னேற்றத்திற்காக எவ்வளவோ முயற்சி செய்து வருகின்றன; எனினும், இந்தியாவும் சீனாவும் மேற்கொண்டுள்ள முயற்சிகள் தான் நமது கவனத்தை அதிகமாக ஈர்க்கின்றன. உலக மக்கள் தொகையில் ஏறக் குறைய மூன்றில் ஒரு பகுதியினர் இவ்விரு நாடுகளில் மட்டும் உள்ளனர். வளர்ச்சி குன்றிய எல்லா நாடுகளிலுமுள்ள மக்கள்தொகையில் பாதிப்பேருக்குமேல் இந்த நாடுகளில்தான் வாழ்ந்து வருகின்றனர். அதோடு மட்டுமன்றி, செல்வம் கொழிக்கும் இந்த 20 ஆம் நூற்றாண்டில்கூட இவ்விரு நாடுகளுமே வறுமையில் சிக்கித் தவித்ததுண்டு. என்றாலும், தாமும் சீக்கிரம் முன்னேற்றமடைய வேண்டுமென்று இவ்விரு நாடுகளுமே விழிப்புணர்ச்சி பெற்றுள்ளன. அப்படி முன்னேற வேண்டுமென்பதற்காக இரண்டு நாடுகளிலுமே அரசாங்கத் திட்டங்கள் தீட்டப்பட்டுள்ளன. எனினும், பொருளாதாரக் குறிக்கோள்கள்தான் இவ்விரு நாடுகளிலும் ஒரே மாதிரியாக இருக்கின்றதே தவிர, ஏனைய நடைமுறை விஷயங்களில் இவ்விரண்டும் இரு துருவங்கள் போல்தான் உள்ளன. எல்லைப் புறத் தகராறின் விளைவாக இவ்விரண்டு நாடுகளும் போர் தொடுத்ததுண்டு; அதோடு, உலக அரங்கில் இவ்விரு நாடுகளும் ஒன்றுக்கொன்று எதிரானவைதான். பொருளாதார முன்னேற்றத்திற்கான வழி முறைகளில்கூட இவ்விரு நாடுகளும் வேறுபட்டுத்தான் உள்ளன. மேலும், இவ்விரு நாடுகளிலும் தீட்டப்பட்டுள்ள ஆண்டுத் திட்டங்களிலும் மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன; குறிப்பாக, சீனாவின் திட்டங்கள்தான் பெருமளவிற்கு மாற்றமடைந்துள்ளன. இக் காரணங்களினால்தான் இவ்விரு நாடுகள் மட்டும் நமது கவனத்தை அதிகமாக ஈர்த்துள்ளன. அதோடு, நவீன முறையில் பொருளாதார முன்னேற்றத்தைத் தொடங்கும் பிரச்சினைகளில் இந்த இரு நாடுகளும்தான் கவர்ச்சியான சில படிப்பினைகளையும் தந்துள்ளன.

---

## அடிப்படைப் பிரச்சினைகள் ஒரே மாதிரிதான்

இந்தியாவும் சீனாவும் எத்தனையோ காரியங்களில் மாறு பட்டவைதான் ; எனினும் பொருளாதார முன்னேற்றப் பிரச்சினை களைப் பொருத்தவரை, இவ்விரு நாடுகளும் ஒரே மாதிரியான பல பிரச்சினைகளைக் கொண்டுள்ளன. இரு நாடுகளுமே மக்கள் தொகை மிகுந்த பெரிய நாடுகள்தான். இந்தியாவைப் பொறுத்த மட்டில் அதன் பரப்பளவு அமெரிக்க நாட்டின் பரப்பளவில் சுமார் ஐந்தில் இரண்டு பங்கு இருக்கும்; அதன் மக்கள்தொகையோ 1972–ல் 580 மில்லியனாக இருந்திருக்கிறது. அதேபோல்தான் சீனாவும். சீனாவின் பரப்பளவு ஏறக்குறைய அமெரிக்காவின் பரப்பளவு இருக்கும் ; அதன் மக்கள்தொகை 1972-ல் 850 மில்லியனாக இருந்திருக்கின்றது. இவ்விரு நாடுகளிலுமே மக்கள் தொகைப் பெருக்கம் ஒரே மாதிரியாகவேதான் உள்ளது. இந்தியா வில் ஆண்டொன்றுக்கு 2½ சதவீதத்தில் மக்களினம் பெருகி வரு கிறது ; சீனாவிலும் ஏறக்குறைய 2 சதவீதத்திற்கு மேல் மக்கள் தொகை அதிகரித்து வருகின்றது. தலா ஒவ்வொருவருக்குமுள்ள நிலத்தை, குறிப்பாகச் சாகுபடி நிலத்தைக் கொண்டு பார்த்தால், இவ்விரு நாடுகளிலுமே மக்கள் நெருக்கடி அபாயகரமாக உள்ள தென்றுதான் சொல்லவேண்டும்.

கடந்த கால வரலாற்றிலும்கூட இவ்விரு நாடுகளும் ஒரே மாதிரிதான் இருந்திருக்கின்றன. ஒரு காலத்தில் இவ்விரு நாடு களுமே வியக்கத்தக்க நாகரீகம் கொண்டு விளங்கின. 19 ஆம் நூற்றாண்டில் மட்டுமன்றி, இந்த 20 ஆம் நூற்றாண்டில் கூட இவ்விரு நாடுகளுமே அந்நியரின் ஆதிக்கத்தில்தான் இருந்து வந் தன. இந்தியாவோ 1947 ஆம் ஆண்டுவரை பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இருந்தது. சீனாவோ, பெயரளவில்தான் சுதந்திர நாடாக இருந்ததேயன்றி, உண்மையில், நான்கிங் உடன்பாடு (Treaty of Nanking) ஏற்பட்ட 1842 ஆம் ஆண்டு தொடங்கி பிற நாட்ட வருக்குக் கொடுத்த சலுகைகளின் மூலமாகவும், அவர்களுடன் செய்த பல உடன்படிக்கைகளின் வழியாகவும் ஒரு குடியேற்ற நாட்டைப் போலவேதான் இருந்து வந்தது. மேலும், இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர், மிக இக்கட்டான சூழ்நிலையில்தான் இவ்விரு நாடுகளுமே புதிய ஆட்சியைத் தொடங்கின. இந்தியாவோ, பாகிஸ் தான் பிரிவினையால் ஏற்பட்ட பிரச்சினைகளையெல்லாம் சமாளிக்க வேண்டியதாயிற்று. அதேபோல், சீனாவும் உள்நாட்டுப் போர் முடிவடைந்தவுடன் கொரியாப் போரில் இறங்கிவிட்டது.

பொருளாதாரக் கண்ணோட்டத்தில் பார்த்தால்கூட இவ்விரு நாடுகளுமே ஒரே மாதிரியாகத்தான் காட்சியளிக்கின்றன. இரண்டாம் உலகப்போர் முடிந்தபோது, இரு நாடுகளுமே பொருளாதார முன்னேற்றமேயின்றி, மிகப் பின்தங்கிய நிலையில்தான் இருந்தன. இரண்டுமே விவசாய நாடுகளாகவேதான் விளங்கின. போதிய மூலதனமின்றி, மிகப் புராதன உற்பத்தி முறையையே கையாண்டு, மிகக் குறைந்த தலா வருமானம் கொண்ட நாடுகளாகத்தான் இரண்டுமே கஷ்டப்பட்டன. அப்போது, ஏறக்குறைய ஒரே மாதிரியான நிலையில்தான் இவ்விரு நாடுகளுமே இருந்தன என்றுகூடச் சொல்லலாம். வேண்டுமானால் இந்தியா தொழில் வளத்தில் சாதகமாக இருந்ததாகவும், சீனா விவசாயத்தில் சாதகமாக இருந்ததாகவும் கொள்ளலாம். மற்றப்படி இவ்விரு நாடுகளுக்கும் வேறெந்த விதமான பொருளாதார ஏற்றத்தாழ்வும் கிடையாது. இவ்விரு நாடுகளிலுமே தலா உற்பத்தி 80 முதல் 120 டாலர் வரைதான் இருந்தது; எனவே, வாழ்க்கைத் தரம் மிக மோசமானதாக இருந்தது என்று சொல்லத் தேவையில்லை.[1]

இறுதியாக, நாம் எதிர்பார்க்கக் கூடிய வகையில், இவ்விரு நாடுகளுமே பொருளாதாரப் பிரச்சினைகளை மட்டுமன்றி, எத்தனையோ விதமான சமுதாயப் பிரச்சினைகளையும், அரசியல் பிரச்சினைகளையும்கூடச் சமாளிக்க வேண்டியிருந்தது. சான்றாக, சீனாவில் குடும்பப் பழக்க வழக்கங்கள் அனைத்தும் பரம்பரை பரம்பரையாக வந்தவை; எனவே, அந்நாட்டு மக்கள் அவற்றை விடாப்பிடியாகப் பின்பற்றி வந்தனர். அதோடு மட்டுமன்றி, சக்தி வாய்ந்த மத்திய அரசாங்கம் என்று ஒன்றும் அந் நாட்டில் இல்லாமலிருந்ததால் எவ்விதச் சீர்திருத்தங்களையும் செய்யமுடியாமல் கஷ்டப்பட வேண்டியிருந்தது. இந்தியாவை எடுத்துக்கொண்டால், அந்நாட்டு மக்களிடையே சாதி, மொழி அடிப்படையில் எவ்வளவோ வேறுபாடுகள் இருந்தன. அதோடு, பழங்காலத்திலிருந்தே பின்பற்றி வந்த சமயச் சம்பிரதாயங்களும் அங்கு வேரூன்றி இருந்தன. அந்தப் பழங்காலச் சம்பிரதாயத்திலிருந்து நவீன இந்திய அரசியல் அமைப்புக்கூடத்

[1] இது பற்றிய ஆய்விற்கு, குறிப்பாக, சீனாவின் உற்பத்தி அளவு பற்றிய பிரச்சினைகளின் ஆய்விற்கு Alexander Eckstein அவர்கள் எழுதியுள்ள, 'The National Income of Communist China' (Glencoe III: The Free Press, 1961) என்ற நூலைப் பார்க்கவும். பக்கங்கள் 65-69.

தப்ப முடியவில்லை[2] என்றால் அவை எவ்வளவு வலுவானவை என்பதை நீங்களே யூகித்துக்கொள்ளுங்கள். சுருங்கக் கூறின், இவ்விரு நாடுகளிலும் தொழிற் புரட்சியை ஏற்படுத்துவது ஒன்றுதான் பிரச்சினை என்று நினைத்துவிட வேண்டாம்; இந் நாடுகளின் சமுதாய அமைப்பையே திருத்தி அமைக்க வேண்டிய இன்னும் எத்தனையோ பிரச்சினைகளும் உள்ளன.

## மாறுபட்ட, முரண்பாடான வழிமுறைகள்

இந்தியாவிலும் சீனாவிலும் இருந்த பிரச்சினைகள் ஒரே மாதிரியானவைதான்; எனினும், அவற்றைச் சமாளிப்பதற்காக இவ்விரு நாடுகளும் மேற்கொண்ட வழிமுறைகளோ நேர்மாறானவை. இயல்பான முறையில் முன்னேறக் கூடிய வாய்ப்புகள் இரு நாடுகளிலுமே இருந்தன; என்றாலும், இவை இரண்டும் இப்படி நேர் மாறான வழிகளைத்தான் பின்பற்றி வந்தன. அதனால் சீனாவில் பெரிய உள்நாட்டுக் கிளர்ச்சிகூட ஏற்பட்டதுண்டு.

எவ்வளவு துரிதமாகச் சமுதாயச் சீர்திருத்தங்களைச் செய்வது என்பதிலும் இவ்விரு நாடுகளுக்கிடையே வேறுபாட்டைக் காணலாம். பொருளாதார முன்னேற்றத்தை விரைவாக அடைய வேண்டுமென்ற குறிக்கோளாயிருந்தாலும் சரி, அல்லது மக்களிடையே ஒரே விதமான மனோபாவத்தை உருவாக்க வேண்டுமென்ற குறிக்கோளாயிருந்தாலும் சரி (இவ்விரு குறிக்கோள்களிடையேகூட சீனாவில் பிணக்கம் இருந்து வருகிறது) அதை அடைவதற்காக மிகத் தீவிரமாகவும் விடாப்பிடியாகவும் பாடுபட்டு வந்தது சீனா. எப்படியாவது இத் திட்டத்தை நிறைவேற்றிவிட வேண்டுமென்பதற்காக வலுவந்தமான முறைகளைக்கூட சீனா கடைப்பிடித்து வந்தது. "இருபது ஆண்டுகளின் சாதனைகளை ஒரேநாளில் சாதிப்பது," "முன்னேற்றத்தை நோக்கி ஒரே தாவாகத் தாவி விடுவது," "மின்சக்தி உற்பத்தியிலும் ஏனையத் தொழில் உற்பத்தியிலும்

[2] இதற்கு மிகச் சிறந்த சான்றாக இருப்பது, பசு புனிதமானது என்பதுதான். இதை வலியுறுத்தும் வகையில் இந்திய அரசியல் அமைப்புக் கூடப் பின்வருமாறு கூறுகிறது: "விவசாயத்தை மட்டுமன்றி, கால்நடைப் பராமரிப்பையும் நவீன, விஞ்ஞான முறையில் திருத்தி அமைக்க அரசு தீவிரமான முயற்சிகளை மேற்கொள்ளும்; குறிப்பாக, கால் நடைகளைப் பராமரிப்பதற்கும் அவற்றை அபிவிருத்தி செய்வதற்கும் பசுக்கள், கன்றுகள், பால் தரும் இதர கால்நடைகள், பாரம் இழுக்கும் கால் நடைகள் ஆகியவற்றைக் கொல்வதைத் தடை செய்வதற்கும் உரிய நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ளும்." இதைக் காணும் மேற்கத்திய நாட்டவருக்கு இது ஒரு முரண்பாடான கூற்று என்றுதான தெரியும். என்ன செய்வது? பொருளாதார முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டு வரும் இந்தியா போன்ற நாடுகளிலுள்ள சமூக, கலாச்சாரப் பிரச்சினைகள் எப்படியெல்லாம் உள்ளன என்பதைத் தான் இது புலப்படுத்துகின்றது.

பத்தே ஆண்டுகளில் பிரிட்டனையே எஞ்சி விடுவது" போன்ற கோஷங்கள் சீனாவில் எழுந்த வண்ணமிருந்தன ; ஆனால் இக் கோஷங்கள் புலப்படுத்தும் அளவிற்குச் சீனா எதையும் சாதித்து விடவில்லை. இருந்தபோதிலும், சீக்கிரம் முன்னேறிவிட வேண்டுமென்ற ஆவேசமும், விடாமுயற்சியும், அதற்காக மேற்கொள்ளப் பட்ட அவசர நடவடிக்கைகளும் சீனாவில் பிரதிபலித்தன. இந்தியாவும் கூடச் சீக்கிரம் முன்னேறிவிட வேண்டுமென்றுதான் உண்மையில் நினைத்திருந்தது; ஆனால் சீனாவைப்போல் அவ்வளவு அவசரப்படவில்லை. இந்தியாவின் சாதனைகளும், குறிக்கோளைவிட எவ்வளவோ குறைவாகத்தான் இருந்தது; ஆனால், அதற்காகச் சீனாவில் ஏற்பட்டது போன்ற குழப்பங்களோ புரட்சிகரமான மாறுதல்களோ இந்தியாவில் தோன்றவில்லை. சீனா மேற்கொண்ட வழிமுறைகளுக்கு நேர்மாறாக, படிப்படியாக முன்னேறுவதற்கான வழிகளைத்தான் இந்தியா மேற்கொண்ட தாகத் தெரிகிறது.

பொருளாதார முன்னேற்றமடைய வேண்டுமென்பதற்காக, இவ்விரு நாடுகளின் மத்திய அரசாங்கமும் மேற்கொண்ட நடவடிக் கைகளிலும் வேறுபாடு இருந்தது என்பதைத்தான் இந்த முரண் பாடான வழிமுறைகள் ஓரளவு பிரதிபலிக்கின்றன. இந்தியாவின் முன்னேற்றத் திட்டங்கள் அனைத்தும் பெரும்பாலும் அரசாங்கத் தின் திட்டங்கள்தாம். இத் திட்டங்களில் 1951-ல் தொடங்கப்பட்ட முதல் ஐந்தாண்டுத் திட்டம்தான் நம்பிக்கையுடனும் உறுதியான மனப்பான்மையுடனும் தொடங்கப்பட்டது. அதைத் தொடர்ந்து, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டமும் (1956-61) மூன்றாவது ஐந் தாண்டுத் திட்டமும் (1961-66) தீட்டப்பட்டன. 1966-71-ல் நிறை வேற்றப்பட்டிருக்க வேண்டிய நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் ஒத்தி போடப்பட்டு விட்டதால் ஓராண்டுத் திட்டங்களாக மூன்றாண்டுகள் வரை தீட்டப்பட்டது. பின்னர், 1973-74-ல்தான் நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தை இந்தியா முடித்தது. மேலும், பொருளாதார வளர்ச்சியை அடைவது மட்டும்தான் இந்தியத் திட்டத்தின் குறிக்கோள் என்று நினைத்து விடாதீர்கள்; 'சோஷியலிச முறைச் சமுதாயம்' (Socialistic Pattern of Society) என்றழைக்கப்படும் சமுதாயத்தை உருவாக்குவதும் அதன் குறிக் கோளாக உள்ளது. சோஷியலிச முறைச் சமுதாயம் என்றா லென்ன? இதற்குரிய விளக்கத்திற்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட அறிக்கையைப் படிக்க வேண்டும். அவ் வறிக்கையில் பின் வருமாறு வரையறுக்கப்பட்டுள்ளது: 'எந்தெந்த வழிகளில் முன்

னேற்றத்தை அடைவது என்பதை நிர்ணயம் செய்யும் அடிப்படையான தத்துவம் சமுதாய நலனேயன்றி, தனியாரின் இலாபமன்று; முன்னேற்றத்திற்கான வழி முறைகள் மட்டுமன்றி, சமூக-பொருளாதார உறவின் அடிப்படையும் சேர்ந்து நாட்டின் வருமானத்தையும் வேலைவாய்ப்பையும் கணிசமாக அதிகரிக்கும் வகையில் மட்டுமன்றி, நாட்டு மக்களின் வருமானத்திலும் சொத்திலுமுள்ள ஏற்றத் தாழ்வுமென்மேலும் குறையும்படியாகவும் திட்டம் அமலாக்கப்படும்.'[3] இவ்வாறாக, தனக்கே சொந்தமானதொரு வகை சோஷியலிசத்தை நோக்கி இந்தியா நடைபோட்டுக் கொண்டிருப்பதாக அந்நாட்டு மக்கள் நினைக்கின்றனர்.

எனினும், இவ்வித விளக்கங்கள் முன்னேற்றத்தின் குறிக்கோளைத்தான் வலியுறுத்துகின்றனவேயன்றி, முன்னேற்றத்தின் சாதனைகளையல்ல. இந்தியாவின் பொருளாதார நடவடிக்கைகளில் பொதுத்துறையின் பங்கு கணிசமான அளவுக்கு அதிகரித்து விட்டது என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. அதேபோல், வரியின் மூலம் அரசாங்கத்திற்குக் கிடைக்கும் வருமானமும் அதிகரித்து விட்டது. வெறும் தொகை அளவில் மட்டுமன்றி, நாட்டின் மொத்த வருமானத்தில் அரசாங்கம் பெறும் வரி வருமானம் எத்தனை சதவீதம் என்ற கணிப்பின் படியும் இந்த வருமானம் அதிகரித்துள்ளது (சான்றாக, முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு முன்னர், நாட்டின் நிகர வருமானத்தில் 7 சதவீதமாக இருந்தது, நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் தொடக்கத்தில் 14 சதவீதமாக அதிகரித்துள்ளது.) இருந்த போதிலும், கலப்புப் பொருளாதார அமைப்பைக் கொண்ட (Mixed economy) பல முன்னேற்ற நாடுகளில் உள்ளதைக் காட்டிலும் இவ் வருமானம் இன்றும் குறைவாகத்தான் உள்ளது. அதேபோல், இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட இறுதியில், இந்தியாவிலிருந்த மொத்த முதலீட்டில் பொதுத் துறை முதலீடு மட்டும் 54 சதவீதமாக இருந்தது. நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் முடிவடையும்போது பொதுத்துறை முதலீடு 64 சதவீதமாக உயரும்படி திட்டமிடப்பட்டுள்ளது. அப்படியிருந்தும் தனியார் துறை பாதிக்கப்பட்டு விட்டதா என்றால், கிடையாது என்றுதான் சொல்ல வேண்டும். இன்றுவரை, தனியார் துறை பெருமளவிலும் திடமாகவும்தான் இருந்து வந்திருக்கின்றது. பொதுத் துறைக்கும் தனியார் துறைக்கும் எவ்விதமான கருத்துப் பிணக்கமும் இதுவரை ஏற்படாமல், இவ்விரண்டு துறைகளுமே நடைமுறைக்கேற்ப இணக்கமாகவேதான் நடைபெற்று வந்

[3] இந்திய அரசாங்கத் திட்டக்குழு வெளியிட்ட Second Five-Year Plan (1956) என்ற அறிக்கையில், அதிகாரம் 2, பக்கம் 22.

துள்ளன.[4] மேலும், இந்தியா இன்றும்கூட ஒரு விவசாய நாடாகத் தான் இருந்து வருகிறது என்பதை மறந்துவிட வேண்டாம்; அதோடு, விவசாயத்தைப் பொறுத்தவரையுள்ள சமுதாய நல அபி விருத்தித் திட்டங்கள் அனைத்தும் மக்கள் தாமாக மனமுவந்து நிறைவேற்றக்கூடிய திட்டங்களாகவேதான் உள்ளன; மற்றப்படி, பண்ணைகளை அரசாங்கமே உரிமையாக்கிக் கொள்வதற்கான திட்டமோ, அல்லது வலுவந்தமான முறையில் கூட்டுப் பண்ணை களை உருவாக்கிவிடக்கூடிய திட்டமோ இந்தியாவில் கிடையாது.

இந்த விஷயங்களிலெல்லாம் இந்தியாவிற்கும் சீனாவிற்கும் எவ்வளவோ வேறுபாடு உள்ளது என்பதைச் சொல்லத் தேவை யில்லை. சீனாவின் பொருளாதாரம் மிகமோசமான நிலையில் இருந்தபோதுதான் சர்வாதிகாரம் கொண்ட மைய அரசாங்கம் அங்குத் தோன்றியது என்பது நினைவிருக்கலாம். அவ்வளவு பெரிய விவசாய நாட்டைச் சர்வாதிகாரம் கொண்ட அரசாங்கமே கட்டுப் படுத்துவது என்பது கடினமான காரியம்தான். இருந்தபோதிலும், அந்நாடு விரைவாக முன்னேற வேண்டுமென்பதற்காக, சீனாவின் கம்யூனிச அரசாங்கம் 1959 வரை எவ்வளவோ முயற்சி செய்து வந்து, கடைசியில் அந் நாட்டின் பொருளாதாரத் துறை ஒவ்வொன்றையும் கட்டுப்படுத்த முயன்றது சான்றாக, தொழில் துறையை எடுத்துக் கொள்வோம்: கம்யூனிச ஆட்சி தொடங்கிப் பத்தே ஆண்டுகளில், அதாவது, 1956-57-க்குள்ளாகவே, அந் நாட்டின் மொத்தத் தொழில் முதலீட்டில் அரசாங்க முதலீடு மட்டும்

[4] இந்தியப் பொருளாதாரத்தில் பொதுத்துறைக்கும் தனியார் துறைக்குமுள்ள உறவு எவ்வளவு சிக்கலானது என்பதைப் பின்வரும் கருத் துரை அறிவுறுத்துகின்றது: 'பொருளாதாரக் கொள்கையளவில் இல்லாமல் நடைமுறைக்கேற்ப அமைந்துள்ள இந்த இணக்கம் ஓரளவு வெற்றிகர மானதுதான்; எனினும், படிப்படியாக மார்க்ஸிய அரசை உருவாக்கக் கூடிய இந்த வழிமுறையில் அரசியல் பிணக்கம் உள்ளது என்பதைக் காண லாம். கலப்புப் பொருளாதாரம் என்ற பெயரில் இந்தியாவிலுள்ள தனியார் துறையும் பெருமளவில் தொழில்களை நடத்திவரும் பேரரசும் சேர்ந்து, மிக முக்கியமான பொருளாதாரப் பணிகளைத் (எனவே அரசியல் பணி களை) தொடர்ந்து மேற்கொள்ளும்போது, அப்பாவித்தனமாகத் தனியார் துறையையும் படிப்படியாகத் தன் அதிகாரத்தின் கீழ் அரசாங்கம் கொண்டு வந்து விடலாம்; அவ்வாறு 'ஜனநாயக முறைப்படி முதலாளித்துவ அமைப் பையே அழித்து விடுவது' என்பது நடைமுறைக் கொவ்வாத திட்டம் தான். எனினும், இன்றைய கொள்கையின் படி பார்த்தால், தனியார்துறைதான் பொதுத் துறையையே விழுங்கிவிடக் கூடும் என்றும் வாதாடலாம். பொதுத் துறையின் நிர்வாகப் பொறுப்பை, தனியார் துறையிலுள்ள தொழில் மேதை களிடம் அரசாங்கம் ஒப்படைத்து வருவதை அரசியல்வாதிகள் பலர் குறை கூறி வருகின்றனர். சான்றாக இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷனின் தலைவராக வட இந்தியாவின் தொழிலதிபரான பாரத்ராம் அவர்களை அரசாங்கம் நியமித்துள்ளது." Jagdish N. Bhagwati and Padma Desai அவர்கள் எழுதியுள்ள 'India: Planning For Industrialization' (London: Oxford University Press, 1970) என்ற நூலில், பக்கம் 146.

96.7 சதவீதமாக அதிகரித்து விட்டது.[5] விவசாயத் தொழிலாளர்கள் மையக் கட்டுப்பாட்டின் கீழ் வேலை செய்யும் வகையில் அவசர அவசரமாகப் பல சட்டங்களை நிறைவேற்றி வந்தது. முதலில், நிலச் சீர்திருத்தம் என்ற பெயரில் நிலச்சுவான்தார்களின் நிலங்களையெல்லாம் பறிமுதல்செய்து, அவற்றை உழுவோருக்கே பகிர்ந்தளித்தது. அதன் பின்னர், உழுவோரிடமிருந்தும் நிலங்களைப் பிடுங்கி அவற்றையெல்லாம் கூட்டுப் பண்ணைகளாக அமைத்தது. இவ்வாறாக, 1956 ஆம் ஆண்டின் இறுதியில் விவசாயப் பண்ணைச் சொத்துக்களில் 87 சதவீதம் 'மேல் மட்டத்திலிருந்த உற்பத்திக் கூட்டுறவுச் சங்கங்களின்' சொத்துக்களாக மாறிவிட்டன. பின்னர் 1958–ல் 'முன்னேற்றத்தை நோக்கி ஒரே தாவு தாவுதல்' என்ற கொள்கையின் பெயரில் வீட்டைச் சுற்றியிருந்த சின்னஞ்சிறு காய்கறித் தோட்டங்களைக் கூடப் பொதுவுடைமையாக்கி, நாட்டிலிருந்த எல்லா விவசாய உற்பத்தியையும் கிராமப்புறங்களில் இருந்த தொழில் உற்பத்தியையும் இராணுவத்தின் கட்டுப்பாட்டிற்குக் கொண்டுவந்து விட்டது. அதன் பின்னர், 'முன்னேற்றத்தை நோக்கி ஒரே தாவு' என்ற கொள்கையை 1960–ல் சிறிதளவு தளர்த்தி விட்டு, கூட்டுப் பண்ணைகளின் தீவிரமான பல அம்சங்களையும் ஓரளவு தளர்த்தி விட்டது. விற்பனைச் சந்தைகளை மறுபடியும் உருவாக்கியதோடு, சின்னஞ்சிறிய காய்கறித் தோட்டங்களையெல்லாம் அதனதன் சொந்தக்காரர்களுக்கே கொடுத்துவிட ஏற்பாடு செய்தது. 1963–ல் பெரிய விவசாயக் கூட்டுப் பண்ணைகளையெல்லாம் ரத்து செய்து விட்டு, அவற்றிற்குப் பதிலாக ஒரு சில விவசாயிகளை மட்டும் கொண்ட சின்னஞ்சிறு பண்ணைகளை உருவாக்கியது ; இருந்தபோதிலும், பொதுவுடைமைத் தத்துவத்தின் அடிப்படையில்தான் விவசாயம் நடைபெற்று வந்தது.

நிற்க, சீனாவில் பொருளாதாரப் புரட்சி ஏற்பட்டுக் கொண்டிருந்த அதே சமயத்தில், சமூகப் புரட்சியை ஏற்படுத்துவதற்கும் அரசாங்கமே பல தீவிரமான நடவடிக்கைகளை மேற்கொண்டது. இந்தியாவிலும் கூட அப்படித்தான். சில முக்கியமான சமூகச் சீர்திருத்தங்களை ஏற்படுத்த இந்திய அரசாங்கம்தான் முயற்சி செய்தது. சான்றாக, பரம்பரையாக இருந்துவந்த சாதி வேற்று

5 1956-57-ல் சீனாவில் தனியாருக்குச் சொந்தமான தொழிலே இல்லாமல் செய்துவிட்டது. தனியார் நடத்தி வந்த தொழில்களில் அரசாங்கமும் கூட்டுச் சேர்ந்து விட்டது, அல்லது தனியாரோடு சேர்ந்து தானும் பங்குகளை வாங்கிக் கொண்டது. வியாபாரிகளுக்குக் கூட கூட்டுறவுச் சங்கங்களை அமைத்துவந்தது; சொல்லப் போனால் தெருக்களில் கூவி விற்பனை செய்த சில்லறை வியாபாரிகளுக்கென்றும் கூட்டுறவுச் சங்கங்களை அமைத்துவந்தது.

மையை ஒழித்துக்கட்டவும், 'தீண்டத்தகாதவர்' என அழைக்கப் பட்டு வந்த தாழ்த்தப்பட்ட மக்களை மேம்படுத்தவும் அரசாங்கமே பாடுபட்டு வந்துள்ளது. எனினும் இம்மாதிரியான சமூகச் சீர்திருத் தங்களைப் பொறுத்தவரை சீனாவின் அரசாங்கம் மேற்கொண்ட தீவிரமான நடவடிக்கைகள்தாம் நல்ல பலனைத் தந்துள்ளன. சான்றாக குடும்பம், பெண்கள் உடல் உழைப்பு, கிராம வாழ்க்கை, நகர வாழ்க்கை, தத்துவம், மதம் ஆகியவை பற்றிச் சீன மக்கள் கொண்டிருந்த மனப்பான்மையை மாற்றி அமைக்க அந்நாட்டு அரசாங்கம்தான் தீவிரமான நடவடிக்கைகளை மேற்கொண்டது; நல்ல பலனும் கிடைத்துள்ளது. இந்தியாவிலோ அப்படிப்பட்ட தீவிரமான நடவடிக்கை ஏதும் மேற்கொள்ளப்படவில்லை.

இந்த வேறுபாட்டிலிருந்து மற்றொரு முக்கியமான வேறுபாடும் புலனாகிறது. அதாவது, மா-சே-துங் அவர்களும் அவருடைய ஆதரவாளர்களும் சேர்ந்து சீனாவில் புதியதொரு சமுதாயத்தை உருவாக்க வேண்டுமென்பதற்காக மேற்கொண்ட தீவிரமான நட வடிக்கைகளின் விளைவாக, பொருளாதாரக் குறிக்கோள்களுக்கும் சமுதாயக் குறிக்கோள்களுக்குமிடையே முரண்பாடுகள் ஏற்பட்டு விட்டதால் பெரும் கலவரங்கள் ஏற்பட்டன. ஆனால் இந்தியாவிலோ அப்படிப்பட்ட நிகழ்ச்சி ஏதும் ஏற்படவில்லை. சீனாவில் 1966-ல் ஏற்பட்ட சமுதாய, கலாச்சாரப் புரட்சியின் போதுதான் கலவரங்கள் தீவிரமடைந்ததாகத் தெரிகிறது. சீனா அறிஞரான டுவைட் பெர்கின்ஸ் (Dwight Perkins) அவர்கள் இதைப்பற்றிக் குறிப்பிடும் போது, பின்வருமாறு விளக்கம் தருகிறார்:

> 1960 ஆம் ஆண்டுகளில் பொருளாதார முன்னேற்றத் தோடு எவ்விதத் தொடர்பும் இல்லாத வகையில் சீனா தன் இராணுவத்தைப் பலப்படுத்துவதில் ஈடுபட்டதால் தான் பொருளாதார முன்னேற்றமே பாதிக்கப்பட்டு விட்ட தென்று கூற முடியாது. மாறாக, தொழில்வள மிக்க இன்றைய நாடுகளிலுள்ள சமுதாயத்தைப்போல் அல்லா மல், ஒரு புதுமாதிரியான சமுதாயத்தை மா-சே-துங் அவர்கள் உருவாக்க முயன்றதனால்தான் பொருளாதார முன்னேற்றம் பாதிக்கப்பட்டது. பொருள்களை ஏராளமாக உற்பத்திசெய்து துரிதமாகப் பொருளாதார முன்னேற் றத்தை அடைந்தால் மட்டும் போதும் என்று எந்த நாடுமே நினைப்பதில்லை. எனவே, துரிதமான பொருளாதார வளர்ச்சிக்கும் முக்கியமான சில சமூகச் சீர்திருத்தங் களுக்கும் தொடர்பே கிடையாது என்று மா-சே-துங்

அவர்கள் 1960 ஆம் ஆண்டுகளில் முடிவு கட்டிவிட்டார் என்றுதான் தோன்றுகிறது. அதனால்தான், இவ்விரு குறிக்கோள்கள் ஒன்றோடொன்று முரண்பட்ட போதெல்லாம், சமுதாயச் சீர்திருத்தங்கள்தாம் முக்கியமென்று, அவற்றிற்கே முதலிடம் தந்தார்.[6]

இவ்வாறாக இன்றைய சீனாவின் பொருளாதார வளர்ச்சி அம்சங்களில், பொருளாதார முன்னேற்றத்திற்கும் கம்யூனிசக் கொள்கைக்கும் உள்ள முரண்பாடு குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

இவ்வித முரண்பாடுகளின் விளைவாகத்தான் சீனாவின் முன்னேற்றம் அடிக்கடி தடைப்பட்டு, மேலும் கீழும் அலைமோத நேரிட்டு விட்டது. இந்தியாவின் முன்னேற்றம் கூட சீரான முறையில் நடைபெறாமல், சில சமயங்களில் தடைப்பட்டது என்பது உண்மைதான். நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தைக் காலம் கடத்தித் தொடங்கியதே இதற்குச் சான்று. எனினும், அதற்குக் காரணம் சீனாவில் இருந்ததைப் போன்ற முரண்பாடுகள் அல்ல. மாறாக, 1960 ஆம் ஆண்டு முடிந்ததும் சீனாவுடன் மட்டுமன்றி பாகிஸ்தானுடனும் இந்தியா போரிட நேரிட்டுவிட்டது; அதோடு, 1965-66 ஆம் ஆண்டில் மட்டுமன்றி 1966-67 ஆம் ஆண்டிலும் இந்தியாவில் பருவமழை தவறிவிட்டதால் வறட்சி நிலை ஏற்பட்டு விட்டது. அதன் பின்னர் பங்களா தேசத்திற்காகப் போரிட்டு, இலட்சக் கணக்கான அகதிகளைப் பராமரிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது. சீனாவிலே இப்படிப்பட்ட நிலை ஏற்படாமல், அந் நாட்டில் ஏற்பட்ட கொள்கைப் பிணக்கங்களினால்தான் முன்னேற்றம் சீராக நடைபெற முடியாமல், வியக்கத்தக்க வகையில் சிலசமயம் மிக வேகமாக முன்னேறி, பின்னர் சரிந்து விழுவதும், அதையடுத்து ஒரே தாவாக மேல் நோக்கி முன்னேறி, பின்னர் கீழ்மட்டத்திற்குச் சரிந்து விழுவதுமாக ஏற்பட்டது.

1930 முதல் 1966வரை இந்தியாவிலும் சீனாவிலுமிருந்த சூழ்நிலைகள் பொருளாதார முன்னேற்றத்திற்குச் சாதகமாக இருந்தனவா அல்லவா என்பதை ஆராய முற்பட்ட பேராசிரியர் பேரி ரிச்மன் (Barry Richman) அவர்கள், 1966 - ல் (அதாவது, கலாச்சாரப் புரட்சி தொடங்குவதற்குச் சற்று முன்னர்) சீனாவைப் பார்வையிட்டுத் திரும்பினார். அவ்வாறு திரும்பி வந்ததும் இவ்விரு நாடு

6 Dwight H. Perkins, "The Economic performance of China and Japan, 1842-1969", Harvard Institute of Economic Research, Discussion Paper No. 177, February, 1971, p. 34,

களின் சூழ்நிலைகளையும் ஒப்பிட்டுப் பார்க்க முயன்றார். அந்த முயற்சியின் பலன்களைத்தான் 6–1 வரைபடம் காட்டுகிறது. இப் படத்தில் y அச்சில் குறிப்பிட்டுள்ள சூழ்நிலை பற்றிய புள்ளிகளைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. ஏனெனில் இப் புள்ளிகள் 'கல்வித்தரம்,' 'சமூகச் சூழ்நிலை' 'அரசியல் சூழ்நிலை' 'சட்ட திட்டச் சூழ்நிலை' 'பொருளாதாரச் சூழ்நிலை' ஆகியவற்றை




வரைபடம் 6—1.
1930-1966 வரை இந்தியாவிலும் சீனாவிலுமிருந்த நீண்ட காலச் சூழ்நிலைப் போக்குகள்

மூலம்: Barry M. Richman அவர்களின், Industrial Society in Communist China, New York: Random House, 1969 என்ற நூல் பக்கம் 669.)

ஆதாரமாகக் கொண்டவை.[7] எனவே, இப் படத்தில் நாம் பார்க்க வேண்டிய முக்கியமான விவரம் யாதெனில், சூழ்நிலைக்கான இப் புள்ளிகள் இந்தியாவைக் காட்டிலும் சீனாவில் எவ்வளவு ஏற்ற இறக்கம் கண்டிருக்கின்றன என்பதுதான். நிற்க, இவ்வளை கோடுகளை நாம் இன்னும் சற்று விரிவு படுத்தினால், சீனாவின்

[7] பொருளாதார முன்னேற்றத்திற்குச் சாதகமான சூழ்நிலைக் குறிகள் மொத்தம் 29 என்று பேராசிரியர் பேரி ரிச்மன் அவர்கள் கணக்கெடுத்துள்ளார்கள். அவற்றில் சில: கல்வியின் தரம், வேலைக்கான சிறப்புத் தேர்ச்சி, தொழில் நுட்பப் பயிற்சி, பொது உயர் நிலைக் கல்வி, சாதனைகள் புரிய வேண்டுமென்ற மனப்பான்மை, வேலை செய்வதுபற்றிய மக்களின் எண்ணம், சமூக இனவேறுபாட்டுநிலை, இடம் பெயரக்கூடிய மக்களின் மனப்பான்மை, வளர்ச்சிக்குச் சாதகமான சட்டதிட்டங்கள், அரசியல் நிலைப்பாடு, அடிப்படையான பொருளாதார அமைப்பு முறை, இயற்கை வளங்கள், இதர உற்பத்திச் சாதனங்கள், அங்காடியின் விரிவு ஆகியவை, Barry Richman அவர்களின் அதே நூல், 60-62 பக்கங்கள்.

சூழ்நிலைப் புள்ளிக்கோடு இன்னும் எவ்வளவோ ஏற்ற இறக்கம் கொண்டதாகத்தான் இருக்கும் என்பதில் சந்தேகம் கிடையாது. ஏனெனில் 1966 முதல் 1969வரை ஏற்பட்ட கலாச்சாரப் புரட்சியினால் சீனாவின் பொருளாதார முன்னேற்றம் மிகப்பெருமளவிற்குத் தடைப்பட்டது. இதற்கு நேர்மாறாக, 1970 – லிருந்து ஒரு சில ஆண்டுகள் வரை அந்நாட்டின் பொருளாதார முன்னேற்றம் எதிர்பாராத அளவிற்கு மிக வேகமாக நடைபெற்றிருப்பதாகத் தெரிகிறது.

இக் குறிப்புகளையெல்லாம் மனத்தில் கொண்டு, சென்ற அதிகாரத்தில் நாம் விளக்கிய 'அடிப்படையான மூன்று பிரச்சினைகளையும்' இவ்விரு நாடுகள் எப்படிச் சமாளிக்க முயற்சித்து வந்துள்ளன என்பதை இப்போது பார்ப்போம்.

## முதலீட்டு வீதத்தை உயர்த்தல்

இந்தியாவும் சீனாவும் தத்தம் முதலீட்டு வீதத்தை உயர்த்துவதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டு வந்துள்ளன; எனினும், இரண்டு நாடுகளும் அதிகரித்துள்ள முதலீட்டு வீதமோ வெவ்வேறாகத்தான் உள்ளது. இவ்விரண்டு நாடுகளின் முதலீட்டை மட்டுமன்றி உற்பத்தி அளவையும்கூட ஒப்பிட்டுப் பார்ப்பது மிகக் கடினமான காரியம் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. அதிலும் குறிப்பாகச் சீனா பற்றிய புள்ளி விவரங்கள் கடந்த சில ஆண்டுகளாகக் கிடைக்கவில்லையாதலால் அப்படி ஒப்பிட்டுப் பார்ப்பதே இயலாத காரியமாகி விட்டது. இருந்தபோதிலும், இவ்விரு நாடுகளும் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளில் முக்கியமான பல மாறுதல்கள் உள்ளன என்பது மட்டும் தெளிவாகிறது.

### இந்தியா

இந்திய அரசாங்கத்தின் மதிப்பீட்டின்படி, முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் தொடங்கியபோது (1951) அந்நாட்டு வருமானத்தில் 5 சதவீதமாக இருந்த நிகர முதலீடு (net investment), இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் தொடக்கத்தில் (1956) சுமார் 8 சதவீதத்திற்கும், பின்னர், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் தொடங்கியபோது (1961) சுமார் 11 சதவீதத்திற்கும் உயர்ந்துவிட்டதாக அறிய வருகிறோம். 1965/1966 ஆம் ஆண்டு மதிப்பீட்டின்படி, நாட்டு வருமானத்தில் 14 சதவீதம் முதலீட்டிற்குச் சென்றதாகத் தெரிகிறது. அதோடு, நான்காவது ஐந்தாண்டுத் திட்ட அறிக்கையின்படி, 1970-க்குப் பின்னர், நாட்டு வருமானத்தில் 18 முதல் 20 சதவீதம் வரை முதலீடு அதிகரிக்கலாம் என எதிர்பார்க்கப்படுகிறது.

இப் புள்ளிவிவரங்களின்படி பார்த்தால், இந்தியாவின் மூல தனத் திரட்சி வீதம் கணிசமான அளவுக்கு உயர்ந்துவிட்டதென்று தான் தெரிகிறது; ஆனால், பொருளாதார முன்னேற்ற வீதமோ இந்த அளவுக்கு இன்னும் அதிகரிக்கவில்லையென்றுதான் கூற வேண்டியுள்ளது. மூலதனத் திரட்சியை அதிகரிப்பதற்கான எல்லா வழி முறைகளையுமே இந்தியா கையாண்டது; எனினும், அவ்வழி முறை ஒவ்வொன்றிலுமுள்ள கஷ்டங்களையும் அந்நாடு அனுபவித்து விட்டது. இந்தியாவில் வேலையே இல்லாதோரும், பகுதிநேரம் வேலை செய்து எஞ்சிய நேரம் வேலையில்லாத தொழிலாளரும் ஏராளமாக இருக்கின்றனர்; அப்படியிருந்தும், அவர்களையெல்லாம் வேலைக்கமர்த்தி மூலதனத்தைத் திரட்ட முடியவில்லை. அடுத்து, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மத்தியில் அயல்நாட்டுச் செலாவணியைச் சம்பாதிப்பதில் ஏற்பட்ட பிரச்சினைகளின் காரணத் தால், பணவீக்கத்தின் வழியாக முதலீடு செய்யும் விஷயத்தில் நிதானமாகச் செயல்படும்படி ஆகிவிட்டது. இறுதியாக, முதலீட்டைப் பெருக்குவதற்கென்று இந்திய அரசாங்கம் வரிகளை அதிகரித்துவிட்டது என்பதும் உண்மைதான்; ஆனால் ஏழை விவசாய நர்டாகிய, அதிலும், குடியரசு அமைப்பைக் கொண்ட இந்திய நாட்டில் கணிசமான அளவுக்கு வரிகளை அதிகரிப்பது என்பது அவ்வளவு எளிதான காரியமன்று அதோடு, எவ்வளவுதான் வரிகளை அதிகரிக்க முடிந்த போதிலும், முன்னேற்றச் செலவுகள் மட்டுமன்றி, வேறு எத்தனையோ வகையான செலவுகளும் அந் நாட்டில் அதிகரித்து வந்துள்ளன. சான்றாக, அந் நாட்டின் எல்லைப் பகுதியை, சீனா மீறி வந்ததனால், இந்தியா தன் இராணுவச் செலவை 800 மில்லியன் டாலரிலிருந்து 2.8 பில்லியன் டாலருக்கு அதிகரிக்க வேண்டியதாயிற்று. அதோடு மட்டுமன்றி, 1965-ல் மட்டுமன்றி, 1971-லும் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கு மிடையே ஏற்பட்ட யுத்தத்தின் விளைவாக, இந்திய அரசாங்கத்தின் செலவு எவ்வளவோ அதிகரித்து விட்டது.

இவற்றின் விளைவாக, இந்திய நாட்டில் அதிகரித்துள்ள முதலீட்டின் அளவுக்குச் சேமிப்பு வீதம் அதிகரிக்க முடியவில்லை. சான்றாக, முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் தொடக்கத்தில் நாட்டு வருமானத்தில் 5 சதவீதமாக இருந்த முதலீடு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் 14 சதவீதத்திற்கு உயர்ந்தும் கூட, இந்தியாவின் சேமிப்போ 10 அல்லது 11 சதவீதத்திற்குத்தான் அதிகரித்தது. எனவே, தன் பொருளாதார முன்னேற்றத்திற்காக இந்தியா எந்த அளவுக்குப் பிற நாட்டு உதவியை நம்பியிருக்க வேண்டியிருந்தது என்பதை இதிலிருந்தே தெரிந்துகொள்ளலாம்.

1961-65-ல் ஆண்டு தோறும் 1·2 பில்லியன் டாலர் என்று பிற நாடுகளிலிருந்து உதவி பெற்று வந்தது. 1966–69 இலோ ஆண்டு தோறும் 1·4 பில்லியன் டாலர் உதவியாகப் பெற்று வந்தது. சொல்லப்போனால், ஒரு சில ஆண்டுகளில் இந்தியாவின் மொத்த முதலீட்டில் 25 சதவீதம் அயல்நாட்டு உதவியாக வந்தது.

இருந்தபோதிலும், இந்தியா பெற்று வந்த அயல்நாட்டு உதவியை மிகைப்படுத்தி விடவும் கூடாது. ஏனெனில், மொத்தத் தொகையில் பார்த்தால் அயல்நாட்டு உதவி அதிகமாகத்தான் தெரியும்; ஆனால் தலா ஒவ்வொருவரும் பெற்ற உதவியைக் கணித்துப் பார்த்தால், அது மிகக் குறைவுதான் என்பது புலனாகும். சான்றாக, 1960-69-ல் இந்தியா பெற்ற அயல்நாட்டு உதவி தலைக்கு 2 அல்லது 3 டாலர்தான்; அதே சமயம், பாகிஸ்தான், கொலம்பியா, எகிப்து, தென் கொரியா, தாய்வான், துருக்கி போன்ற நாடுகள் பெற்ற தலா உதவியோடு ஒப்பிட்டுப் பார்த்தால், இந்தியாவிற்குக் கிடைத்த உதவி மிகக் குறைவு என்றுதான் சொல்ல வேண்டும். அதிலும் இஸ்ரேல் நாடு பெற்ற உதவியுடன் [8] ஒப்பிட்டால் இது மிக மிகச் சொற்பமானதுதான். மேலும், இந்தியா பெற்று வந்த உதவியில் கணிசமான அளவு பழைய கடனைத் தீர்ப்பதற்கும், அதற்குரிய வட்டியைச் செலுத்துவதற்கும் பெறப்பட்டதாகும். இக் கடன் பொறுப்பும் வட்டி செலுத்த வேண்டிய பொறுப்பும் அதிகரித்து விட்டதால் (அதோடு, P.L. 480 திட்டத்தின்படி பெற்றுவந்த உணவு உதவி குறைந்து விட்டதால்), நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போது இந்தியா பெறக் கூடிய அயல்நாட்டு உதவி ஆண்டொன்றுக்கு 500 மில்லியன் டாலர் என்ற அளவுக்கு, அதாவது தலைக்கு 1 டாலர்கூட இல்லாத அளவுக்குக் குறைக்கப் படலாம் என்று இந்தியத் திட்டக் குழுவினர் மதிப்பீடு செய்துள்ளனர். அப்படியென்றால், இந்தியா இனிமேல் அயல்நாட்டு உதவியை முன்போல் அதிக அளவுக்கு நம்பியிருக்கப் போவதில்லை என்றுதான் பொருள்; எனினும், நமது ஆய்வின் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால், அயல்நாட்டு உதவியைப் பொறுத்தவரை இந்தியாவிற்கும் சீனாவிற்கும் எவ்வளவோ வேறுபாடு உண்டு என்பது தெளிவு.

சீனா

சீனா, அயல்நாட்டு உதவியேயின்றித் தானாகவேதான் முன்னேற்றமடைய முயற்சி செய்துள்ளது. தொடக்கத்தில் வேண்டு

[8] சான்றாக, 1960-65-ல் இஸ்ரேல் நாடு ஆண்டுதோறும் பெற்று வந்த உதவி தலைக்கு 45 முதல் 50 டாலர் வரை இருக்கும்.

மானால ரஷ்யாவிடமிருந்து கணிசமான அளவு உதவியைப் பெற்றது எனலாம்; அப்படிப் பெற்ற உதவிகூட, உள் நாட்டிலேயே திரட்டப் பட்ட மூலதனத்தோடு ஒப்பிட்டுப்பார்த்தால் அவ்வளவொன்றும் அதிகமில்லை என்றுதான் சொல்ல வேண்டும். ரஷ்யா அளித்த உதவி எவ்வளவென்று திட்டவட்டமாகத் தெரியாது; எனினும், முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் போது (1953–57) சீன அரசாங்கம் செய்த முதலீட்டில் ரஷ்யாவின் உதவி மிகக் குறைவாக இருந்ததாகவே தெரிகிறது. ரஷ்யாவிடமிருந்து உதவி பெற வேண்டிய இக்கட்டான நிலையில்கூடப் பெரும்பாலும் தொழில்நுட்ப உதவியைத்தான் பெற்றது; அதாவது, பொறியியல் வல்லுநர் களையோ, அல்லது, தான் செய்யவேண்டியிருந்த பணியின் திட்ட அமைப்பையோ அல்லது புதிய இயந்திரத் தளவாடங்களை அமைத்துக் கொடுப்பதற்கும் தொழிலாளருக்குப் பயிற்சி கொடுக்கவும் தேவைப்பட்ட வல்லுநர்களையோதான் ரஷ்யாவிடமிருந்து உதவி யாகப் பெற்றது. மேலும், தனக்கு வேண்டியிருந்த முதற்கருவிப் பொருள்களை ரஷ்யாவிடமிருந்து இறக்குமதி செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டபோது, அப்பொருள்களுக்கு ஈடாக உணவுப் பொருள்களையும் மூலப் பொருள்களையும் ஏற்றுமதி செய்து வந்தது; இதை வேண்டுமானால் வாணிப உதவி என்று வைத்துக் கொள்ள லாம். எது எவ்வாறிருப்பினும், 1960–க்குப் பின்னர் மட்டுமன்றி 1970–க்குப் பின்னரும் ரஷ்யாவிற்கும் சீனாவிற்குமிடையே ஏற்பட்டு விட்ட கொள்கைப் பிணக்கத்திற்குப் பின்னால், ரஷ்யா எவ்வித உதவியையும் செய்ததில்லை. அதோடு, 1960–ல் சீனாவிலிருந்த தன் தொழில்நுட்ப வல்லுநர்களைக்கூட ரஷ்யா வரவழைத்துக் கொண்டது; அதோடு மட்டுமன்றி, தான் ஏற்கெனவே கொடுத் திருந்த கடன்களையெல்லாம் திரும்பப் பெற்றுக்கொண்டு விட்டது. இரு நாடுகளுக்குமிடையே நடைபெற்று வந்த வியாபாரம் கூடச் சரி வடைந்து விட்டது. இவ்வாறாக, சீனா பொருளாதார முன் னேற்றத்தை அடைவதற்கென்று தனது அடிப்படை நுகர்வுத் தேவைகளைக் கூடத் தியாகம் செய்துதான் மூலதனத்தைத் திரட்டி வந்துள்ளது.

இப்படிப்பட்ட இக்கட்டான நிலையில் கூட இந்தியாவைக் காட்டிலும் சீனாதான் அதிகமாக முதலீட்டு வீதத்தை உயர்த்தி யுள்ளது. இது உண்மையில் பாராட்டுக்குரியதுதான். சீனாவும் இந்தியாவும் முன்னேறத் தொடங்கிய நாளிலிருந்து சீனாதான் அதிகமாக முதலீடு செய்துவந்துள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கது. சான்றாக, இவ்விரு நாடுகளின் மொத்த முதலீட்டை எடுத்துக்

கொள்வோம்.[9] இந்தியா, 1950-ல் தன் நாட்டு வருமானத்தில் 9·3 சதவீதமாக இருந்த மொத்த முதலீட்டை 1957-ல் 13·6 சதவீதத்திற்கு உயர்த்தியது; சீனாவோ 1950-ல் தன் நாட்டு வருமானத்தில் 9·7 சதவீதமாக இருந்த முதலீட்டை 1957-ல் 23·9 சதவீதத்திற்கு (அதாவது இந்தியாவைக் காட்டிலும் 75 சதவீதம் அதிகமாக) உயர்த்தி விட்டது.[10] அதற்குப் பின்னர், சீனாவின் மொத்த முதலீடு எவ்வளவென்று திட்டவட்டமாகத் தெரியவில்லை. எனவே சீனாவைப்பற்றிய இதர மதிப்பீடுகளெல்லாம்[11] ஒரே ஆண்டை ஆதாரமாகக் கொள்ளாமல் பல்வேறு ஆண்டுகளை ஆதார ஆண்டுகளாகக் கொண்டு மதிப்பீடு செய்யப்பட்டிருப்பதால், அவை தரும் புள்ளி விவரங்கள் ஒன்றுக்கொன்று முரண்பட்டுள்ளன. எனினும், மிக அண்மையில் மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சியின்படி, முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவடைந்தபோது சீனாவின் மொத்த முதலீடு அந்நாட்டு வருமானத்தில் 20 சதவீதத்தையும் தாண்டி, 26 சதவீதத்திற்குக்கூட உயர்ந்திருக்கக் கூடும் எனத் தெரிகிறது. இந்த முதலீட்டில் கல்வியில் செய்யப்பட்டது போன்ற கண்ணுக்குப் புலனாகாத முதலீட்டையும் சேர்த்துக் கூட்டினால் மொத்த முதலீடு 30 சதவீதத்தைக்கூடத் தாண்டியிருக்கும் என்றுதான் தோன்றுகிறது.[12]

[9] இங்கு மொத்த முதலீடு என்பது பதிவீடு செய்யும் முதலீட்டையும் கிராமப்புறங்களில் பண்டமாற்று அடிப்படையில் செய்யப்படும் பரிவர்த்தனை முதலீட்டையும் கூடக் கொண்டதாகும்.

[10] Wilfred Malenbaum அவர்கள் எழுதியுள்ள, 'India and China: Contrasts in Development' என்ற கட்டுரையிலிருந்து. இக்கட்டுரை, American Economic Review, Vol. XLIX (June 1959) இதழில் வெளிவந்துள்ளது.

[11] சீனாவின் முதலீட்டைப்பற்றி இனிமேல் கூறப்படும் கருத்துகள் பின்வரும் ஆதாரங்களிலிருந்து தொகுக்கப்பட்டவை - T. C. Liu and K. C. Yeh, The Economy of Mainland China (Princeton University Press, 1967). William W. Hollister, "Capital Function in Communist China" in Choh-Ming Li, ed., Industrial Development in Communist China (New York: Praeger, 1964); அதோடு, மேற்கூறிய Dwight Perkins அவர்களின் அதே நூல், பக்கங்கள் 26-28; மேற்கூறிய Barry M. Richman அவர்களின் நூல், பக்கங்கள் 495-499.

[12] கல்விக்கும் ஆராய்ச்சிக்குமென்று சீனா ஏராளமாகச் செலவிட்டுள்ளது. சொல்லப்போனால், 1958-60 வரை தன் நாட்டு வருமானத்தில் 3 முதல் 5 சதவீதம் வரை ஆண்டுதோறும் செலவிட்டு வந்துள்ளது. (இந்தியாவிலோ இதற்கான செலவு 2 சதவீதம் கூட இல்லை.) எனினும் பொருளாதார முன்னேற்றம் ஏற்ற இறக்கம் கண்டு சரிவடைந்து விட்ட காலத்திலெல்லாம் பள்ளிகளும் பல்கலைக் கழகங்களும் கூடப் பெருமளவில் பாதிக்கப்பட்டன. சான்றாக கலாச்சாரப் புரட்சியின் போது; பெரும்பாலான கல்வி நிலையங்கள் மூடப்பட்டுவிட்டன. 1970 ஆம் ஆண்டிற்குச் சற்று முன்னர் தான் அவை மறுபடியும் திறக்கப்பட்டன.
(மூலம்: Harrison E. Salisbury, 'Red Guards Play Diminishing Role' என்ற தலைப்பில் 1972, ஜூன் 11 ஞாயிற்றுக்கிழமை வெளியான New York Time என்ற பத்திரிகையில் பார்க்கவும்).

வளர்ச்சி குன்றியதொரு நாடு இந்த அளவுக்கு முதலீடு செய்தது என்பதை அறியும்போது, உண்மையிலேயே வியப்பாகத் தான் உள்ளது. இவ்வளவு உயர்ந்த சதவீதத்தில் முதலீடு செய்ததை, சீனா அப்படியே தொடர்ந்து செய்து வந்திருந்தால் அது பாராட்டுக்குரியதாகவே இருந்திருக்கும். ஆனால் உண்மையில் நடந்ததோ வேறு மாதிரி. சீனாவின் முதலீட்டு வீதம் ஒரே அளவாக இன்றி, சில சமயங்களில் மிக அதிகமாகவும் வேறு சில சமயங்களில் மிகத் தாழ்வாகவும் மாறி மாறி வந்து விட்டது. இந்த நிலைமையில் 1958-60–ல் சீனா தன் முதலீட்டு வீதத்தை மேலும் உயர்த்திவிடப் பாடுபட்டது. ஏனெனில், 'முன்னேற்றத்தை நோக்கி ஒரே தாவு' என்ற கொள்கையும் விவசாயக் கூட்டுப் பண்ணைத் திட்டமும் நடைமுறைக்கு வந்தது அப்போதுதான். இரண்டு முக்கியமான குறிக்கோள்களுக்காகத்தான் கூட்டுப் பண்ணைகள் தொடங்கப்பட்டதாகத் தெரிகிறது : 1) கிராமத் தொழிலாளர்களையும் உற்பத்திச் சாதனங்களையும் ஒன்று திரட்டி விவசாய முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்துவது ; பிரபலியமான 'கொல்லைப் புறச் சூளைகளை' (backyard blast furnaces) ஏற்படுத்தி இரும்பு, எஃகு உற்பத்தியைப் பெருக்குவது. 1958-60 -ல் சீனாவின் வருமானத்தில் மொத்த முதலீடு 45 சதவீதம் இருந்த தென்று கூட ஒரு சிலர் மதிப்பீடு செய்துள்ளனர் !

சீனா இவ்வளவுதூரம் பாடுபட்டு முன்னேற முயற்சித்ததால் எத்தனையோ விதமான தொல்லைகளும் சிரமங்களும் ஏற்பட்டன. பயனில்லாத வழிகளிலும் பெருவாரியாக முதலீடு செய்யப்பட்டது. 'கொல்லைப்புறச் சூளைகளின்' உற்பத்தியோ எதிர்பார்த்த அளவு இன்றி மிகச் சொற்பமானதாகி விட்டது. விவசாயத்தில் கடுமையான நெருக்கடி ஏற்பட்டு விட்டதால் விவசாய உற்பத்தி சீர்குலைந்து, கூட்டுப் பண்ணை முறையையே மாற்றி அமைக்க வேண்டியதாகி விட்டது. பொதுவாகக் கூறின், சீனாவின் தொழிற்துறையிலும் விவசாயத் துறையிலும் கடுமையான மந்தம் ஏற்பட்டு அந் நாட்டின் மொத்த உற்பத்தியும் முதலீடும் சரிவடைந்து விட்டன. பின்னர் 1965 ஆம் ஆண்டிலிருந்துதான் சீனாவின் பொருளாதாரம் புத்துயிர் பெற்று அதிக அளவில் முதலீடுசெய்ய முடிந்ததாகத் தெரிகிறது. 1966 ஆம் ஆண்டில் ஏற்பட்ட கலாச்சாரப் புரட்சிக்குச் சற்று முன்னர்தான் சீனாவின் மொத்த முதலீடு, 20 சதவீதத்திற்கு அதிகரித்தது. கலாச்சாரப் புரட்சியின் போதோ இம்முதலீடு மறுபடியும் சரிவடைந்து, பின்னர் 1971-72 இலிருந்துதான் மறு படியும் உயர்ந்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

சுருங்கக்கூறின், பிறநாட்டு உதவியே இல்லாமல் சீனா சொந்தமாகவே பாடுபட்டுத்தான் முதலீட்டு வீதத்தை அதிகரித்தது. இந்தியாவைக் காட்டிலும் அதிகச் சிரமப்பட்டு முதலீட்டை உயர்த்திய போதிலும், அம் முதலீடு ஒரே சீராக இல்லாமல், பெரும் ஏற்றத் தாழ்வை அடைந்ததோடு, சில சமயங்களில் பாழடைந்து விடவும் நேரிட்டது.

## விவசாயமா, தொழிலா, எது முக்கியம் ?

சீனா, ஆரம்பத்தில் விவசாயத்தைப் புறக்கணித்துவிட்டு, தொழில்களுக்குத்தான் முக்கியத்துவம் தந்தது ; எனினும், நாளடைவில் அப்படிச் செய்தது தவறு என்பதை உணர்ந்து கொண்டு விட்டது. இந்தியாவோ, இவ்விஷயத்தில் ஓரளவு விவேகமாகவே இருந்துதான் முன்னேற்றத்தைத் தொடங்கியது. எனினும், விவசாயத்துறைக்குத் தொடக்கத்தில் கொடுத்த முக்கியத்துவத்தைக் கைவிடக் கூடாது என்பதை அனுபவத்தின் வாயிலாகத் தான் தெரிந்து கொண்டது. அதிலும், குறிப்பாக, விவசாயத்தில் புதிய உற்பத்தி முறைகளைப் புகுத்தி நல்ல விளைச்சலைப் பெற முடியும் என்று அனுபவத்தின் வாயிலாக நன்கு அறிந்துகொண்டு விட்டது.

### இந்தியா

இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத் திட்டங்களில் விவசாயத்துறைக்கும் தொழிற்துறைக்கும் கொடுக்கப்பட்டிருந்த முக்கியத்துவம் எப்படியெல்லாமோ மாறி வந்துள்ளது. இதை அறிந்து கொள்வதற்கு முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களிலும் இத் துறைகளுக்கு ஒதுக்கப்பட்ட செலவீட்டைப் பார்த்தாலே போதும்.

இந்த ஒதுக்கீட்டின்படி பார்த்தால் முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கும்தான் மிகப் பெரும் மாறுதல் ஏற்பட்டது என்பது தெரியும். முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழில் வளர்ச்சிக்கும் கனிப்பொருள் அபிவிருத்திக்குமென்று ஒதுக்கப்பட்ட நிதி, மொத்தச் செலவீட்டில் 4 சதவீதம்தான் ; ஆனால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலோ இது 20 சதவீதமாக உயர்த்தப்பட்டது. அதே சமயம், விவசாயத்திற்கும் சமுதாய நல அபிவிருத்திக்கும் ஒதுக்கப்பட்டிருந்த நிதியோ 15 சதவீதத்திலிருந்து 11 சதவீதத்திற்கும், நீர்ப்பாசனத்திற்கு ஒதுக்கப்பட்டது 16 சதவீதத்திலிருந்து 9 சதவீதத்திற்கும், மின்சார உற்பத்திக்கு 13 சதவீதத்திலிருந்து 10 சதவீதத்திற்குமாகக் குறைக்கப்பட்டு விட்டன. சுருக்கமாகச் சொன்னால்,

முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாயத்திற்குக் கொடுக்கப் பட்டிருந்த முக்கியத்துவம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத் தில் தொழிற்றுறைக்கு மாற்றப்பட்டு விட்டது. முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவடைந்தபோது, தொழிற்றுறையை விரைவாக முன்னேற்ற வேண்டிய பருவம் வந்து விட்டதெனத் திட்டக்குழுவினர் முடிவெடுத்து விட்டதுதான் இம் மாறுதலுக்குக் காரணமாகும்.

ஆனால், துரதிர்ஷ்டவசமாக, எல்லாம் எதிர்பார்த்ததற்கு மாறாக நடந்துவிட்டது. முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போது இரண்டு முறை எதிர்பார்த்ததைக் காட்டிலும் சாதகமாக பருவ மழை பெய்ததால் விவசாய விளைச்சல் கணிசமான அளவுக்கு அதிகரித்தது. ஆனால், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் போதோ வானிலை தலைகீழாக மாறிவிட்டது. வான் பொய்த்தது; அதனால் 1956-61 ஆம் ஆண்டுகளில் திட்டக் குழுவினர் எதிர் பார்த்தபடி 6 மில்லியன் டன் உணவு தானியங்களை இறக்குமதி செய்வதற்குப் பதிலாக 20 மில்லியன் டன் இறக்குமதி செய்ய வேண்டியதாயிற்று. அதோடு மட்டுமன்றி, தொழில் வளர்ச்சிக்காக இறக்குமதி செய்ய வேண்டிய பொருள்களையும் திட்டக் குழுவினர் குறைவாக மதிப்பீடு செய்து விட்டனர். இதனால் அப்பொருள் களையும் அதிகமாக இறக்குமதி செய்ய நேரிட்டதால் பிரச்சினையும் சிக்கல் நிறைந்ததாகி விட்டது. இவற்றின் பலனாகவும் இன்னும் ஏனைய கஷ்டங்களின் விளைவாகவும் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் இடையிலேயே அயல் நாட்டுச் செலாவணியில் பிரச்சினை ஏற்பட்டு விட்டது; அதனால் திட்டத்தில் குறிப்பிடப் பட்டிருந்த உற்பத்தி இலக்குகளையெல்லாம் மறுபரிசீலனை செய்து குறைக்க வேண்டியது அவசியமாயிற்று.

இந்த அனுபவத்தைக் கொண்டு, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் புனைந்த திட்டக் குழுவினர் மறுபடியும் விவசாயத் திற்கு ஓரளவு முக்கியத்துவம் தந்தனர். அக் குழுவினர் வலியுறுத்திக் கூறியுள்ளது வருமாறு :

> விவசாய உற்பத்தி வளர்ச்சி வீதம்தான் இந்தியப் பொருளாதார முன்னேற்றத்தை வரையறை செய்யும் மிக முக்கியமான காரணி என்பதை முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் வாயிலாக, குறிப்பாக இரண் டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் அனுபவத்தின் வாயி

லாக அறிந்து கொண்டோம். ............... மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் எவ்வளவு தூரம் பலனளிக்கும் என்பது இரண்டு விஷயங்களைப் பொறுத்தது: 1) உணவு உற்பத்தியையும் மூலப்பொருள்களின் உற்பத்தியையும் எந்த அளவுக்கு அதிகரிக்கமுடியும் என்பது - நமக்கு வேண்டியதெல்லாம் கணிசமான முன்னேற்றமே தவிர, திட்டத்தை வேறு விதமாகச் செயல்படுத்துவதல்ல; 2) ஏற்றுமதியினால் கிடைக்கும் வருமானத்தைக் கணிசமாக உயர்த்துவதற்கு வேண்டிய உற்சாகமும் ஆர்வமும் எந்த அளவுக்குக் கிடைக்கக் கூடும் என்பது.[13]

வேறுவிதமாகக் கூறின், ஏற்றுமதி வருமானம் போதிய அளவுக்கு இல்லாததால் பெருமளவுக்கு இறக்குமதி செய்ய முடியாத இச்சூழ்நிலையில் 'சமநிலை' வளர்ச்சிதான் இன்றியமையாதது என்று இந்தியா தீர்மானித்து விட்டது.

ஆனால், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போது விவசாய உற்பத்தி சிறிதுகூட அதிகரிக்காமல், எதிர்பார்த்தது அனைத்தும் மோசமாகிவிட்டது. உணவு தானிய உற்பத்தியோ கொஞ்சம் கூட அதிகரிக்காமல் 1960-61-ல் கிடைத்த அதே விளைச்சல்தான் (81மில்லியன் டன்) 1963-64 -லும் (80.2 மில்லியன் டன்) கிடைத்தது. பின்னர், 1964-65-ல் தான் அமோக விளைச்சல் (88.4 மில்லியன் டன்) கிடைத்தது. ஆனால், 1965-66-ல் மட்டுமன்றி, 1966-67 இலும் பருவமழை எந்த அளவுக்கு ஏமாற்றி விட்டதென்றால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் தொடக்கத்தில் கிடைத்த உணவு உற்பத்திகூட விளையவில்லை; அதே சமயம் திட்டக் குழுவினர் 100 மில்லியன் டன் உணவு உற்பத்தி கிடைக்குமென்று மதிப்பீடு செய்திருந்தனர். இப்பற்றாக் குறையைச் சரிக்கட்டும் வகையில் அமெரிக்காவிலிருந்து பெருமளவு உணவுப் பொருள்களை இறக்குமதி செய்ய வேண்டியதாயிற்று; அப்படி இறக்குமதி செய்யாமல் இருந்திருந்தால் நாட்டில் பெரும் உணவுப் பஞ்சமே ஏற்பட்டிருந்திருக்கும்.

இந்தியாவில் இப்படி நடைபெற்றுக் கொண்டிருந்த சமயத்தில், 'பசுமைப் புரட்சி' ஏற்கெனவே தொடங்கப்பட்டு விட்டதெனினும், பருவமழை தவறியதன் விளைவாக, அப் புரட்சியின் பலன்கள் என்னவென்று தெரியாமல் போய்விட்டன. பின்னர், 1969-70 ஆம் ஆண்டில்தான் உணவு தானிய உற்பத்தி, அதுவரை இல்லாத

[13] Government of India, Third Five Year Plan (1961)p p. 49, 117.

அளவுக்கு 100 மில்லியன் டன்களாகப் (மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இலக்கிற்கு) பெருகியது. அதன் பின்னர் 1970—71-ல் 108 மில்லியன் டன்களாக அதிகரித்தது 1971—72-ல் மேலும் 5 மில்லியன் டன் அதிகரிக்கக் கூடுமென்றும், அப்படி அதிகரித்து விட்டால் உணவுத் தானியம் உபரியாகி, அந்த உபரியான தானியத்தை ஏற்றுமதி செய்ய வேண்டியிருக்கும் என்றும் செய்தித் தாள்கள் அறிவித்தன. மொத்தத்தில் பார்க்கும்போது, 1961—65-ல் ஆண்டொன்றுக்கு 0.4 சதவீதம் மட்டும் அதிகரித்து வந்த விவசாய உற்பத்தி, 1965—70-ல் ஆண்டொன்றுக்கு 4.3 சதவீதமாக அதிகரித்து விட்டது. 1971ஆம் ஆண்டில் 3·3 சதவீதம் அதிகரித்த தாக மதிப்பிடப்பட்டுள்ளது.[14]

இதோடு நம் கதை முடிந்துவிட்டதென எண்ணிவிடாதீர்கள். 'பசுமைப் புரட்சி'யினால் எத்தனையோ பிரச்சினைகளும் தோன்றி யுள்ளன. அதோடு மட்டுமன்றி, பலனுள்ள வகையில் செய்திருக்க வேண்டிய முதலீட்டைச் செய்யாமல், விவசாயத்துறையை இன்றும் கூட ஓரளவு புறக்கணித்து வருவதாகப் பல ஆய்வாளர்கள் கூறு கின்றனர்.[15] எது எவ்வாறிருப்பினும், இன்றைய நிலையில் பார்க்கும் போது, இந்தியாவின் பொருளாதார முன்னேற்றம் தடைப்பட்டு விடாமலிருக்கும் அளவிற்கு விவசாயத் துறை முன்னேற்றமடைந் துள்ளது என்றுதான் சொல்ல வேண்டும்.

**சீனா**

விவசாயத் துறையும் தொழிற்துறையும் 'சமநிலை' வளர்ச்சியை அடைய வேண்டுமென்ற அவசியத்தை இந்தியத் திட்டக் குழுவில் தெரிந்துகொண்டு விட்டனர் ; ஆனால் சீனாவோ, தன் அனுபவத் தில் ஏற்பட்ட தொல்லைகளின் வழியாகத்தான் இப்படிப்பினையை அறிந்துகொள்ள வேண்டியதாயிற்று. சீனாவிலும் அயல் நாட்டுச் செலாவணியைச் சம்பாதிக்கும் பிரச்சினை இருக்கத்தான் செய் கின்றது. அது சம்பாதித்துள்ள அயல் நாட்டுச் செலாவணி மிகக் குறைவுதான். அதோடு, பிற நாட்டு உதவியும் சீனாவிற்குக்

14 World Economic Survey, 1971 (New York: United Nations, 1972) p. 86.

15 Wolf Ladejinsky அவர்களின் "Ironies of India's Green Revolution" என்ற கட்டுரையைப் பார்க்கவும். இக்கட்டுரை Foreign Affairs (Vol. 48, No. 4, July 1970) என்ற இதழில் வெளிவந்துள்ளது. அதோடு, Michael அவர்களின் 'Strategy for Agriculture; Urban Bias and Rural Planning' என்ற கட்டுரையையும் பார்க்கவும். இது Paul Streeten and Michael Lipton பதிப்பான The Crisis in Indian Planning (London: Oxford University Press, 1968) என்ற நூலில் வெளிவந்துள்ளது.

பட்டியல் 6—2

**சீனா : முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் (1953-1957) ஒதுக்கப்பட்ட முதலீடு**

| துறை | பில்லியன் யுவான் | மொத்தத்தில் சதவீதம் |
|---|---|---|
| தொழில் துறைகள் | 24.85 | 58.2% |
| விவசாயம், வனம், நீர்வளப் பாதுகாப்பு | 3.26 | 7.6 |
| போக்குவரத்து, தபால், தொலைபேசி முதலியன | 8.21 | 19.2 |
| வியாபாரம், வங்கிகள், மூலப் பொருள் சேகரிப்பு | 1.28 | 3.0 |
| கல்வி, கலாசாரம், பொது உடல் நலம் | 3.08 | 7.2 |
| நகராட்சிப் பொதுப்பணி முன்னேற்றம் | 1.60 | 3.7 |
| ஏனையவை | 0.46 | 1.1 |

மூலம் : China's First Five Year Plan, Peking, 1956.

கிடையாது. அப்படியிருந்தும், அந் நாடு தன் சாதனங்களையெல்லாம் தொழில்துறையில் மட்டும் பயன்படுத்தி முன்னேறமுனைந்தது. சீனாவின் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் (1953–57) முதலீட்டுச் செலவு எப்படியெல்லாம் ஒதுக்கீடு செய்யப்பட்டுப் பல்வேறு இனங்களுக்குப் பகிரப்பட்டதென்பதை பட்டியல் 6—2 காட்டுகின்றது. இத் திட்டப்படி விவசாயத் துறைக்கு ஒதுக்கியிருந்ததைவிட நடைமுறையில் அதிகமாகவேதான் முதலீடு செய்யப்பட்டது ; எனினும், இன்றும்கூட விவசாய நாடாக விளங்கும் சீனா விவசாயத் துறையைக் காட்டிலும் தொழில் துறைக்குத்தான் அதிக முக்கியத்துவம் தந்தது. அதோடு மட்டுமன்றி, தொழில்துறையில்கூடக் கனரகத் தொழிலுக்கு அதிக முக்கியத்துவம் அளித்ததே தவிர, நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களுக்கல்ல. இவ்வாறாக, நுகர்வோரின் தேவையைச் சீனா புறக்கணித்ததென்றுதான் சொல்லவேண்டும்.

இப்படிக் கனரகத் தொழில்களை மட்டும் முன்னேற்ற வேண்டுமென்று முயற்சி செய்ததால் சீனா பெரும் இக்கட்டிற்கு ஆளாகியிருக்கவேண்டும் என்றுதான் எண்ணத் தோன்றுகிறது. அதனால்தான் 1957-ல், பொதுவாக எல்லா முதலீட்டு இலக்குகள் மட்டுமன்றி, உற்பத்தி இலக்குகளும் குறைக்கப்பட்டன ; விவசாயத் துறைக்கும் தொழில் துறைக்கும் ஓரளவு சமத்துவ முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. அப்படியென்றால் விவசாயத் துறைக்குத் தாற்காலிகமாகத்தான் ஓரளவு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. அடுத்து, 'முன்னேற்றத்தை நோக்கி ஒரே தாவு, என்ற கொள்கை அமலில் இருந்தபோது, தொழில் உற்பத்தியை மட்டுமன்றி, விவசாய உற்பத்தியையும் பெருமளவிற்கு உயர்த்த வேண்டுமென்ற குறிக்கோளைக் கொண்டது. ஆனால் அதே சமயம், தொழில் முன்னேற்றத்திற்கே முக்கியத்துவம் தரும் வகையில் மத்திய அரசாங்கத்தின் தொழில் முதலீட்டுத் திட்டத்தை அப்படியே வைத்துக்கொண்டு, விவசாய உற்பத்தியைப் பெருக்குவதற்கென்று கூட்டுப் பண்ணை முறையை மேற்கொண்டது. எனவேதான், 1968-ல் கூட்டுப் பண்ணைகளில் புதிதாக அதிக முதலீடு செய்யாமல், திட்ட முதலீட்டில் 65 சதவீதம் தொழில்களுக்கும் 13 சதவீதம் போக்குவரத்துக்கும் ஒதுக்கிவிட்டு விவசாயம், வனம், நீர்ப்பாசனப் பராமரிப்பு ஆகிய அனைத்துக்கும் சேர்த்து 10 சதவீதம் தான் ஒதுக்கியது. இவ்வாறாகத் தொழில் முன்னேற்றத்திற்கே அதிக முக்கியத்துவம் தந்துவிட்டு, விவசாயப் பண்ணை முறையைத் தீவிரமாக மாற்றியமைத்து, கெடுபிடியான சட்ட திட்டங்களின் வழியாக விவசாய உற்பத்தியைப் பெருக்க முயன்றது.

ஆனால் உண்மையில் அப்படிச் செய்ததால் எவ்வளவோ கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட்டு, அத் திட்டமே பாழாகிவிட்டது என்பதை எவரும் இன்று மறுக்க முடியாது. எனவே, 'முன்னேற்றத்தை நோக்கி ஒரே தாவு' என்ற கொள்கை உசிதமான முறையில் வகுக்கப்பட்டதன்று என்றும், அதனால் அக் கொள்கை 'பொருளாதாரக் குழப்பம்' நிறைந்த கொள்கை என்றும் சிலர் குறை கூறுவர்.[16] இக் குழப்பம் போதாதென்று, பருவ நிலையும் 1959, 1960, 1961ஆம் ஆண்டுகளில் தொடர்ந்து மோசமானதாகி விட்டதால் விளைச்சல் பெருமளவில் பாதிக்கப்பட்டு விட்டது. 1963ஆம் ஆண்டில்கூட 1957-ல் இருந்த அளவிற்கு உணவுத் தானியங்களை உற்பத்தி செய்ய முடியாமல் போயிற்று. விவசாய உற்பத்தி இந்த அளவுக்கு மோசமாகிவிட்டதால் விவசாயிகளும் கிராமப்புற மக்களும் அவதிப் பட்டனர்; தொழில் துறைகூடப் பெரும் கஷ்டத்திற்கு உள்ளானது. இதனால் அந்நியச் செலாவணியைப் பயன்படுத்தி உணவுப் பொருள்களை இறக்குமதி செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது.

இப்படியெல்லாம் ஏற்பட்டுவிட்டதால்தான் விவசாய முன்னேற்றத்திற்கும் முக்கியத்துவம் தந்து சமநிலை வளர்ச்சிக்காகப் பாடுபடத் தீர்மானித்து விட்டது போலும். எனவே, விவசாயத் துறையில் முன்பைவிட அதிக முதலீடு செய்ததோடு, விவசாய முன்னேற்றத்திற்கு அவசியமான தொழில்களிலும் (சான்றாக, விவசாயக் கருவிகளை உற்பத்தி செய்யும் தொழில்கள், இரசாயன உரத் தொழில்கள் முதலியன) முதலீட்டை அதிகரித்தது. மேலும் இதரத் தொழில்களைப் பொறுத்தவரை, கனரகத் தொழில்களுக்கு முக்கியத்துவம் அளித்து வந்ததை விட்டுவிட்டு நுகர்வுப் பொருள் தொழில்களுக்கே முதலிடம் தந்தது. ரிச்மன் அவர்கள் கூறுவது போல், அப்படிச் செய்தால்தான், வாணிப இடைவெளி ஏற்படா வண்ணம் அந்நியச் செலாவணியைச் சம்பாதித்து, முன்னேற்றத் திற்குத் தேவையான நவீன இயந்திரங்கள், இரசாயனப் பொருள்கள் இன்னும் பிற பொருள்களையும் இறக்குமதி செய்ய முடியுமென்ற நம்பிக்கையில், 1965ஆம் ஆண்டிலிருந்து துணிமணி நெசவுத் தொழில், உணவுப் பொருள்களைப் பக்குவப்படுத்தும் தொழில் போன்ற நுகர்வுப் பொருள் தொழில்களில் அதிகமாக முதலீடு

[16] Dwight Perkins அவர்கள் எழுதியுள்ள 'Market Control and Planning in Communist China' (Cambridge, Harvard University Press, 1966) என்ற நூலில், பக்கம் 19.

செய்யத் தொடங்கிவிட்டது.[17] 1971 ஆம் ஆண்டில் உலகிலேயே அதிகத் துணிமணிகளை உற்பத்தி செய்யும் நாடு சீனாதான் என்று பெருமைப்பட்டுக் கொண்டது.

ஆனால், இன்று இராணுவத்தைப் பலப்படுத்துவதற்காகச் சீனா செய்துவரும் ஏராளமான செலவையும், உலகிலுள்ள சூழ்நிலையையும் பார்த்தால், கனரகத் தொழில்களைச் சீனா அலட்சியம் செய்யாது என்றுதான் எண்ணத் தோன்றுகிறது. அதிலும், தன் நாட்டிலுள்ள எல்லாத் துறைகளுமே ஒரே சீராக வளரவேண்டும் என்ற அவசியத்தையும் சீனா இப்போது புரிந்துகொண்டு விட்டதாகத் தெரிகிறது.

## மக்கள்தொகைக் கொள்கை

சீனாவின் மக்கள்தொகை விரைவில் 1 பில்லியனை எட்டிவிடக் கூடிய அளவுக்கு அந் நாட்டு மக்களினம் பெருகிவருகிறது; அப்படி என்றால் இப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு அந் நாடு எவ்வளவு கெடுபிடியான வழிகளையெல்லாம் மேற்கொண்டு வந்துள்ளது என்று நீங்கள் யூகிக்கலாம். ஆனால் உண்மையில், ஏனைய பிரச்சினைகளைப் போன்றுதான் இப் பிரச்சினையிலும் திட்டவட்டமான நடவடிக்கை எதையும் மேற்கொள்ளாமல் தயக்கம் காட்டியே வந்துள்ளது. அதே சமயம், இந்தியாவோ, சீனாவைப்போல் தயங்காமல், மக்கள்தொகைப் பிரச்சினையை ஒழித்துக்கட்ட ஏற்கெனவே முடிவு செய்துவிட்டது. இருந்தபோதிலும் இன்றும்கூட இப் பிரச்சினை இரு நாடுகளிலுமே பெரும் பிரச்சினையாகத்தான் இருந்து வருகிறது.

### இந்தியா

பொருளாதார முன்னேற்றத் திட்டத்தை இந்தியா தொடங்கிய போது, அந் நாட்டில் எழக்கூடிய மக்கள்தொகைப் பிரச்சினையைச் சரியாக எடை போடாமல் குறைத்துப் போட்டுவிட்டது. சான்றாக, 1975-76-ல் இந் நாட்டில் மக்கள்தொகை 500 மில்லியன்தான் இருக்குமென மதிப்பிட்டு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைத் தீட்டியது. அத் திட்டம் போடப்பட்ட 5 ஆண்டுகளுக்குப் பின்னர், 1961-ல் மக்கள்தொகைக் கணக்கெடுப்பு முடிந்துவிட்டது. அதன் பின்னர்தான், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வகுக்கும்

[17] Barry M. Richman அவர்களின் 'Industrial Society in Communist China' என்னும் நூலில், பக்கங்கள் 500-502.

போது, அதே 1976-ல் மக்கள்தொகை 625 மில்லியனாக அதிகரிக்குமெனத் திட்டக் குழுவினர் மதிப்பிட்டனர். இவ்வாறாக இந்தியாவின் தலா உற்பத்தி எதிர்பார்த்த அளவைக்காட்டிலும் குறைவாகவே இருந்து வந்ததற்கு மக்கள்தொகை வளர்ச்சியைக் குறைவாக மதிப்பீடு செய்ததும் ஒரு காரணமாகும். அதோடு, இந்தியாவில் தீவிரமடைந்துவரும் வேலையில்லாத் திண்டாட்டத்தின் காரணங்களைப் புரிந்துகொள்வதற்கும், இந்த அரைகுறையான மதிப்பீடு துணை செய்கிறதெனலாம். வேலையில்லாத் திண்டாட்டம் நாளுக்கு நாள் அதிகரித்து ஒரு பெரும் பிரச்சினையாக ஆகிவிட்டது. ஆனால், திட்டக் குழுவினரோ இப் பிரச்சினையையும் சரிவர மதிப்பீடு செய்யவில்லை. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில் வேலையே இல்லாதோர் 9 மில்லியன் பேரும், பகுதி நேரம் வேலை செய்து எஞ்சிய நேரம் வேலையின்றி இருப்போர் 15 முதல் 18 மில்லியன் பேர் வரை இருக்கலாமென்றும் மதிப்பிட்டனர். ஆனால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் போதோ மேலும் 15 முதல் 20 மில்லியன் பேர் வரை வேலை தேடத் தொடங்கினர். இவ்வளவு தூரம் மித மிஞ்சிய அளவுக்குத் தொழிலாளர்கள் உள்ள இந் நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்சினையின் தீவிரத்தை மிகைப்படுத்திக் கூறவேண்டிய அவசியமில்லை.

இப் பிரச்சினை இவ்வளவு நெருக்கடியான பிரச்சினையாக இருந்ததால்தான் ஐந்தாண்டுத் திட்டத்தின் குறிக்கோள்களில் வேலைவாய்ப்பை உருவாக்குவதும் ஒன்றாகச் சேர்க்கப்பட வேண்டியதாயிற்று. நெசவாலைப் போட்டியினால் கைத்தறித் தொழில் நசுங்கிவிடக் கூடாதென்று நெசவாளர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டு வருவதே இக் குறிக்கோளுக்காகத்தான். மேலும், குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தைத் தீவிரமாக அமல்படுத்துவதும் முக்கியமானதொரு கொள்கையாக இந் நாட்டில் இருந்துவருகிறது. இக் குடும்பநலத் திட்டம் 'இந்தியாவிலுள்ள ஒவ்வொரு குடிமகனும், ஒவ்வொரு குடும்பமும் மட்டுமன்றி இந்நாட்டுச் சமுதாயமே சீரான வாழ்வு பெறக் கூடிய ஒரு தேசியத் திட்டமாக வளர்ச்சியடையும்' என்பது அரசாங்கத்தின் நம்பிக்கை.

இக் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தைத் தீவிரமாகச் செயல்படுத்த வேண்டுமென்பதற்காக இந்திய அரசாங்கம் மென்மேலும் அதிக நிதியை ஒதுக்கிக்கொண்டுவருகிறது. சான்றாக, முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் குடும்பக் கட்டுப்பாட்டிற்கென்று 7 மில்லியன் ரூபாதான் (நடப்பு விலையில்) ஒதுக்கப்பட்டிருந்தது; ஆனால், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதற்காக ஒதுக்

கப்பட்ட நிதி ரூ. 30 மில்லியனாக அதிகரிக்கப்பட்டது. நான்காம் ஐந்தாண்டுத் திட்டத்திலோ 2 பில்லியன் ரூபா ஒதுக்கப் பட்டுள்ளது. இக் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின்படி மக்கள் தாமாகவே முன்வந்து கருத்தரிக்காமல் இருப்பதற்கான அறுவைச் சிகிச்சை செய்து கொள்வதற்கும், பெண்கள் 'லூப்' (lup) பொருத்திக் கொள்வதற்கும் ஊக்கமளிக்கப்பட்டு வருகிறது. அப்படிச் செய்து கொள்பவர்களின் எண்ணிக்கையை அதிகரிக்க வேண்டுமென் பதற்காகவும் அரசாங்கம் ஊக்கமளித்து வருகிறது. இந்தியாவில் இன்றுள்ள பிறப்பு வீதத்தை 1980-க்குள் சரிபாதியாகக் குறைத்து விட வேண்டுமென்பதுதான் இக் குடும்பநலத் திட்டத்தின் குறிக் கோளாகும். இதற்கான நடவடிக்கைகளின் முக்கியத்துவத்தைப் பட்டியல்6-3-ல் காணலாம். சான்றாக,1000-க்கு 40 என்று இன்றுள்ள பிறப்பு வீதம் 1985–ல் 1000-க்கு 25 என்ற அளவுக்குக் குறைந்து விடும்படியாகச் செய்து வந்தால், இன்றைய பிறப்பு வீதத்தின்படி 1990-ல் இருக்கக்கூடிய மக்கள்தொகையில் 200 மில்லியன் பேர் குறைந்துவிடுவர். 1985 ஆம் ஆண்டிற்கு முன்பே இந்த அளவுக்குப் பிறப்பு வீதம் குறைந்துவிட்டால் நாட்டிற்கு எவ்வளவோ நல்லது.

இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்திற்கு இந்த மக்கள் தொகைப் பிரச்சினைதான் பெரும் தடையாக உள்ளதெனப் பலர் நினைக்கலாம். அவர்களெல்லாம் இக் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தினால் மக்கள்தொகை வளர்ச்சி குறைந்து நாடு முன்னேறி விடுமென எதிர்பார்க்கக்கூடும். ஆனால், உண்மையில் இந்தியாவில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் மிகக் குறைவு என்றுதான் சொல்ல வேண்டும். மக்கள்தொகைப் பிரச்சினையைத் தீர்த்துவிட்டால் மட்டும் நாடு சீக்கிரமாக முன்னேறிவிடுமென்று சொல்வதற்கில்லை. ஏனெனில், இந்தியாவில் தொழிற்பயிற்சி பெற்ற தொழிலாளர் மிகக் குறைவு; அதோடு, இந்நாட்டிலுள்ள 500,000 கிராம மக்கள் அனை வருக்கும் நாட்டின் திட்டங்கள் போய்ச் சேருவது இன்றும்கூடக் கடினமாகத்தான் உள்ளது. மேலும், கிராமப்புறங்களில் அறியாமை இன்றும் ஒழிந்தபாடில்லை. அதோடு 'லூப்' முறை அவ்வளவு நம்பிக்கையான முறையன்று என்பதும் இப்போது தெரியவருகிறது. எனவே, இந்நாட்டு மக்களின் மனப்பான்மையையும் பழக்க வழக்கங் களையும் உடனடியாக மாற்றிவிட முடியாது. அதற்கு இன்னும் எவ்வளவோ காலமாகலாம். எல்லாவற்றையும்விட முக்கியமான காரணம் இதுதான் அதாவது, பொருளாதார முன்னேற்றத்தினால் தான் மக்களின் மனப்பான்மை மாறுகிறதென்பதை நாம் முந்திய அதிகாரத்திலேயே பார்த்தோம். எனவே, மக்களின் மனப்பான் மையும் பழக்கவழக்கங்களும் மாறாமல் அப்படியே இருக்கும்போது

## பட்டியல் 6—3

**கருவளம் (பிறப்பு வீதம்) மாறுபடும் தொலைநோக்கின்படி, இந்திய மக்கள்தொகை வளர்ச்சிப் போக்கின் தொலைநோக்கு, 1965-1990.**

| ஆண்டு | I நிலையான கருவளம் (பிறப்பு வீதம்) | | II ஓரளவு குறைந்துள்ள கருவளம் (1985-ல் 1000-க்கு 25 என்று பிறப்பு வீதத்தில்) | | III விரைவாகக் குறைந்துள்ள கருவளம் (1975-ல் 1000-க்கு 25 என்ற பிறப்பு வீதத்தில்) | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண்டின் நடுவில் மொத்த மக்கள் தொகை (மில்லியன்) | பிறப்புவீதம் (சுமார் ஆயிரத்திற்கு) | ஆண்டின் நடுவில் மொத்தமக்கள் தொகை (மில்லியன்) | பிறப்பு வீதம் (சுமார் ஆயிரத்திற்கு) | ஆண்டின் நடுவில் மக்கள்தொகை (மில்லியன்) | பிறப்பு வீதம் (சுமார் ஆயிரத்திற்கு) |
| 1965 | 484.3 | 41.4 | 484.3 | 41.4 | 484.3 | 41.3 |
| 1970 | 548.8 | 40.5 | 544.1 | 36.5 | 538.7 | 32.2 |
| 1975 | 629.0 | 40.1 | 607.3 | 32.2 | 585.7 | 25.0 |
| 1980 | 725.0 | 40.0 | 669.1 | 28.4 | 621.6 | 19.4 |
| 1985 | 841.4 | 39.9 | 729.0 | 25.0 | 647.0 | 15.1 |
| 1990 | 983.2 | 39.9 | 785.8 | 22.0 | 668.2 | 15 1 |

**மூலம் :** Robert Cassen அவர்களின் 'Population Control : Aims and Policies' என்ற கட்டுரையிலிருந்து. இக் கட்டுரை Paul Streeten and Michael Lipton ஆகிய இருவரும் சேர்ந்து தொகுத்துள்ள 'Crisis of Indian Planning' என்னும் நூலில் உள்ளது. Royal Institute of International Affairs சார்பில் Oxford University Press இந்நூலை வெளியிட்டுள்ளது.

மக்கள்தொகையைக் கட்டுப்படுத்தினால் மட்டும் முன்னேறிவிட முடியுமா என்பது சந்தேகம்தான். இவ்வாறாக, இந்தியாவின் எதிர்காலம் சுபிட்சமானதாக இருக்கும் என்பதற்கு ஓரளவு நம்பிக்கை இருக்கத்தான் செய்கிறது. ஆனால், இன்றும்கூட இந்நாட்டு மக்கள்தொகை ஆண்டொன்றுக்கு $2\frac{1}{2}$ சதவீதமென்று பெருகி வருவதைப் பார்க்கும்போது கவலைதான் ஏற்படுகிறது.

சீனா

மக்கள்தொகை வளர்ச்சியைக் கட்டுப்படுத்த வேண்டும் என்ற கொள்கையைத் தொடக்கத்திலிருந்தே இந்தியா வலியுறுத்தி வந்துள்ளது. ஆனால் சீனாவோ, தீர்மானமான கொள்கை ஏது மின்றி, அடிக்கடி தன் கொள்கையை மாற்றி வந்தது.

பொதுவாகக் கூறின், சீனாவில் கம்யூனிச ஆட்சி தொடங்கிய போது, மக்கள்தொகை அதிகமாயிருப்பது நாட்டிற்கு நல்லது தானேயன்றி அதனால் நட்டம் ஒன்றுமில்லை என்று நினைத்து, மக்கள்தொகை வளர்ச்சியைக் கட்டுப்படுத்தத் தேவையில்லை என்று அரசாங்கம் கருதியதாகத்தான் தெரிகிறது. பின்னர் 1954-ல்தான் சீனாவில் மக்கள்தொகைக் கணக்கெடுப்பு நவீன முறையில் முதன் முதலில் எடுக்கப்பட்டது. அக் கணக்கெடுப்பின்படி மக்கள்தொகை சம்பந்தப்பட்ட விவரங்கள் வெளிவந்த பின்னர்தான், மக்கள் தொகை நினைத்திருந்த அளவைக் காட்டிலும் அதிகமாயிருந்தது அரசிற்குத் தெரியவந்தது. எனவே, மக்கள்தொகை இவ்வளவு விரைவாகப் பெருகி வந்துள்ளதைக் கண்ட அரசங்கம் தன் பழைய எண்ணத்தைப் படிப்படியாக மாற்றிக்கொள்ள வேண்டியதாயிற்று. இதன் விளைவாக, 1957-ல் தேசியக் கருத்தடைத் திட்டத்தைத் தொடங்கி அதைச் செயல்படுத்த முனைந்தது. ஆனால், மறு ஆண்டிலேயே (1958) அத் திட்டத்தைத் திடீரென்று கைவிட்டு விட்டது. அதற்கான காரணத்தைக் குறிப்பிடும் வகையில் சீனா வின் தலைவராயிருந்த மாவோ அவர்கள், 'நம் மக்கள்தொகை துரித மாகப் பெருகி வருவது உண்மைதான். எனினும் அதுதான் நமக்குச் சொத்து' எனக் கூறிவிட்டார். எனவே, 'முன்னேற்றத்தை நோக்கி ஒரே தாவு' என்ற கொள்கை நடைமுறைக்கு வந்தபோது, மக்கள்தொகையைக் கட்டுப்படுத்த வேண்டிய அவசியமில்லை என்ற பழைய கொள்கையையே அரசாங்கம் வலியுறுத்தியது. அதன் பின்னர் இக் கொள்கையையும் மாற்றிக்கொண்டது. காரணம், சீனாவின் செய்தித்தாள்கள் காலம்கடத்தித் திருமணம் செய்வதன் பலன்களை விளக்கிக்கொண்டுவந்தது. 'நாட்டின் முன்னேற்றத் திட்டங்களுக்கெல்லாம் அடிப்படையானது குடும்பநலத் திட்டம்தான்' என்றும், குறிப்பாக, 'நாட்டின் புது அமைப்பிற்கு

ஒத்துழைக்க வேண்டுமாயின் அதிகமாகக் குழந்தைகளைப் பெறக் கூடாது என விரும்பும் பெண்களுக்குக் குடும்பநலத் திட்டம்தான் ஆதாரமான'தென்றும் அச் செய்தித்தாள்கள் விளம்பரம் செய்து வந்தன. எனவே, அரசாங்கமும் கர்ப்பத் தடைக்கான நடவடிக் கைகளை மறுபடியும் மேற்கொண்டுவிட்டது. இவ்வாறாக 1968–க்குப் பின்னர், 1957–ல் இருந்ததைப்போல் குடும்பநலத் திட்டமும் நாட்டின் குறிக்கோள்களில் ஒன்றாகிவிட்டது.

சீனாவில் மிக அண்மையில் என்னென்ன நடந்தது என்ற விவரங்கள் நமக்குச் சரியாகத் தெரிவதில்லை; ஆகையால் அந் நாட்டு அரசாங்கம் மக்கள்தொகைக் கொள்கையை ஏன் அடிக்கடி மாற்றி வந்தது என்ற காரணங்களையும் நாம் திட்டவட்ட மாகக் கூறமுடியாது. எனினும், அப்படி மாற்றியதற்குப் பின்வரும் ஒருசில பொதுவான காரணங்களும்கூட இருந்திருக்கலாம் என்று தெரிகிறது. (1) மக்கள்தொகைப் பிரச்சினை என்பதே மார்க்ஸியத் தத்துவத்திற்கு முரணானதாகும். மால்தஸின் மக்கள்தொகைக் கோட்பாட்டை 'மனித இனத்திற்கே இழிவைத் தரும் கோட்பாடு' என்றுதான் கார்ல் மார்க்ஸ் குறிப்பிட்டார். அதோடு மட்டுமன்றி, மார்க்ஸின் கருத்துப்படி, மக்கள்தொகை வளர்ந்து உற்பத்திச் சாதனங்களில் ஏற்படுத்தும் நெருக்கடியால் பிரச்சினை ஏற்படுவதில்லை; மாறாக, 'முதலாளி' வர்க்கத்தினரால் 'பாட்டாளி' மக்களுக்கு ஏற்படும் நெருக்கடிதான் பிரச்சினைகளை உருவாக்கு கின்றது. அதாவது, (பொருளாதார) 'அமைப்பில்'தான் குறை இருக்கின்றதேயன்றி, இயற்கை விதிகளின்படி மக்கட்பேறு அடைவதிலோ அல்லது வரையறுக்கப்பட்டுள்ள இயற்கை வளங்களிலோ அல்ல. (2) சீன மக்கள் பரம்பரையாகத் தழுவிவந்த மத நம்பிக்கையும் காரணமாயிருந்திருக்கலாம். அவர்களது மத நம்பிக்கையின்படி, இறந்துபோன முன்னோர்களின் ஆன்மா சாந்தியடைய வேண்டுமானால் அவர்களின் வழிவந்தோர் பலி (காணிக்கை) செலுத்தவேண்டும். அப்படியென்றால் குழந்தை களை, குறிப்பாக ஆண் குழந்தைகளைப் பெறுவதைத் தடைசெய்யும் எந்த நடவடிக்கையுமே அந்நாட்டு மக்களுக்குக் கசப்பானதாகவே இருக்கும். (3) மக்கள்தொகைப் பிரச்சினை இருக்கிறது என்றாலே அந்நாட்டு அரசாங்கம் முன்னேற்றத்திற்காக நல்ல முறையில் பாடுபடவில்லை என்றுதான் பொருள். ஆனால், கம்யூனிச அரசாங்கம் இப்படி ஒத்துக்கொள்ளுமா? மக்கள்தொகை எவ்வளவு பெருகினாலும் எல்லா மக்களுக்கும் வேண்டிய உணவு, உடை முதலியவற்றைக் கம்யூனிச அரசால் உற்பத்தி செய்து கொடுக்க முடியுமென்றால் மக்கள்தொகையைப் பற்றி எதற்காகக் கவலைப்பட வேண்டும் ?

இறுதியாக, அதிகரித்துவரும் தொழிலாளர்களையெல்லாம் பயனுள்ள வகையில் வேலைக்கமர்த்திவிட்டால் மக்கள்தொகை வளர்ச்சியினால் நாட்டின் செல்வம் தானே அதிகரிக்கும் என்ற அரசாங்க மனப்பான்மையும் காரணமாக இருந்திருக்கலாம். 'முன்னேற்றத்தை நோக்கி ஒரே தாவு' என்ற கொள்கையைச் சீனா கடைப்பிடித்தபோது, இந்த மனப்பான்மைதான் அரசாங்கத்தின் குடும்பக் கட்டுப்பாட்டுக் கொள்கையை மாற்றியிருக்கும். இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால், மக்கள்தொகைப் பிரச்சினையைத் தீர்க்கக்கூடிய ஓர் உபாயமாகத்தான் கூட்டுப் பண்ணையைத் தொடங்கியது போலும்; நாட்டுப்புறத்திலுள்ள மக்களெல்லாம் ஒழுங்காக வேலைசெய்யும் வகையில், கெடுபிடியான கூட்டுப் பண்ணை முறையை உருவாக்கிவிட்டால், தொழிலாளரின் எண்ணிக்கை எவ்வளவு அதிகரித்தாலும், அவர்களெல்லாம் வேலையின்றிச் சோம்பேறிகளாகத் திரியாமல் உற்பத்தியைப் பெருக்குவதற்கும் மூலதனத்தை அதிகரிப்பதற்கும் பாடுபடுவார்கள் என்று எண்ணி இந்த உபாயத்தைச் சீன அரசாங்கம் மேற்கொண்டதாகத் தெரிகிறது. ஆனால், கூட்டுப்பண்ணைகளால் ஏற்பட்ட தொல்லைகளும், 'முன்னேற்றத்தை நோக்கி ஒரே தாவாகத் தாவ' முயன்ற போது ஏற்பட்ட இடறலுமாகச் சேர்ந்து அரசாங்கத்தின் கொள்கையை மறுபடியும் மாற்றச் செய்துவிட்டன. வேறு வழியில்லாத காரணத்தால், கைவிடப்பட்ட கர்ப்பத்தடைக் கொள்கைக்கே மறுபடியும் திரும்பிவிட வேண்டியதாயிற்று.

சீனாவில் ஏற்பட்ட புரட்சியின் விளைவாக, அந் நாட்டுமக்களின் மனப்பான்மையும் வாழ்க்கை முறையும் எவ்வளவோ மாற்றமடைந்துள்ளன. இந்தியாவிலே, அந்த அளவுக்கு மக்களின் மனப்பான்மை இன்றும் மாறவில்லை. எனவே, வருங்காலத்தில் சீனாதான் குடும்பக் கட்டுப்பாட்டுக் கொள்கையைத் தீவிரமாக அமல்படுத்தி மக்கள்தொகை வளர்ச்சி வீதத்தைக் கணிசமான அளவுக்குக் குறைத்துவிடக்கூடும். இது ஊகமானதொரு நம்பிக்கைதானே தவிர திட்டவட்டமானதன்று. திட்டவட்டமான உண்மை என்னவென்றால், மக்கள்தொகைப் பெருக்கத்தால் ஏற்பட்டுள்ள தடையைச் சீனா இன்றும் தாண்டிவிடவில்லை. ஆண்டுதோறும் சீனாவின் மக்கள்தொகை 15 அல்லது 16 மில்லியன் என்று அதிகரித்துக் கொண்டிருக்கிறது. இந்த நிலை நீடித்தால், இன்னும் ஒருசில ஆண்டுகளில் மக்கள்தொகை பயங்கரமாகப் பெருகி 1 பில்லியன் என்று ஆகிவிடும்.

## கடந்தகாலச் சாதனைகளும் வருங்கால வாய்ப்புகளும்

இந்தியாவிலும் சீனாவிலும் நடைமுறையிலுள்ள முன்னேற்றத் திட்டங்களை ஒப்பிட்டு, அவற்றிற்கிடையேயுள்ள சில மாறுதல்களையும் முரண்பாடுகளையும் இதுவரை பார்த்தோம். இப்போது எழும் கேள்வி, இவ்விரு நாடுகளின் சாதனைகள் என்னென்ன? அச் சாதனைகளைப் பெறுவதற்கு அவை அடைந்த வேதனைகள் யாவை? வருங்காலத்தில் இவ்விரு நாடுகளும் முன்னேறக்கூடிய வாய்ப்பு எப்படியிருப்பதாகத் தோன்றுகிறது?

இக் கேள்விகளுக்கு நிறைவான பதில் ஒன்றே ஒன்று: காலந்தான் பதில் சொல்லவேண்டும். நாம் ஏற்கெனவே குறிப்பிட்டது போல், இக் கேள்விகள் சம்பந்தப்பட்ட பல விஷயங்கள்பற்றி நம்பகரமான விவரங்கள் கிடையா; அதிலும் குறிப்பாக, சீனாவைப் பற்றிய திட்டவட்டமான விவரங்கள் வெளிவருவதில்லை. அப்படி உண்மையான எல்லா விவரங்களுமே நமக்குக் கிடைத்தால்கூட, அவற்றைக் கொண்டு இவ்விரு நாடுகளின் தராதர முன்னேற்றத்தை ஆராய்வது மிகக் கடினமானது.

வேண்டுமானால் பொதுவானதொரு முடிவுக்கு நாம் வரலாம். சில சமயங்களில் இந்தியாவைக் காட்டிலும் சீனா வியக்கத்தக்க அளவுக்கு முன்னேற்றமடைந்ததுண்டு என்றாலும், இந்தியாவைப் போல் ஒரே சீராகவும் திட்டவட்டமாகவும் முன்னேறாமல் சில சமயங்களில் மிக வேகமாக முன்னேறியும், அதன் பின்னர் துரிதமாகச் சரிவடைந்தும் வந்துள்ளது. இந்தியாவைப் பொறுத்தவரை, வான் பொய்த்தாலும் சரி, யுத்தம் நேரிட்டாலும் சரி, முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பமானதிலிருந்து இந் நாடு முன்னேற்றப் பாதையிலிருந்து விலகிவிடாமல் மெதுவாகப் போய்க்கொண்டேதான் இருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கடைசி ஆண்டில் வானிலை மோசமாகிவிட்டதால், அத் திட்டத்தின் வளர்ச்சி வீதம், முந்திய இரு ஐந்தாண்டுத் திட்டங்களின்போது இருந்ததைக் காட்டிலும் குறைந்துவிட்டது என்பது உண்மைதான். அப்படியிருந்தும்கூட, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் ஐந்து ஆண்டுகளையும் சேர்த்துப் பார்த்தால், நாட்டின் மொத்த உற்பத்தி ஆண்டொன்றுக்குச் சராசரி 3 சதவீதமும், தலா உற்பத்தி ஆண்டொன்றுக்குச் சராசரி 0.4 சதவீதமும் அதிகரித்து வந்திருப்பது தெரியும்.[18] மேலும், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் முடி

18 முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போது மொத்த உற்பத்தி 3.5 சதவீதத்திலும், தலா உற்பத்தி 1.6 சதவீதத்திலும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மொத்த உற்பத்தி 4.0 சதவீதத்திலும், தலா உற்பத்தி 1.8 சதவீதத்திலும் அதிகரித்து வந்தது.

வடைந்ததும் (1966-67) விவசாயத்துறை கணிசமான அளவுக்கு முன்னேற்றம் அடைந்ததோடு, பொதுவாக, பொருளாதாரமே மறு படியும் முன்னேறத் தொடங்கிவிட்டது. 1951 முதல் 1971 வரையி லான 20 ஆண்டுகளில் இந்தியாவின் மொத்த உற்பத்தி ஆண் டொன்றுக்குச் சராசரி 4 சதவீதம் அதிகரித்து வந்துள்ளதாகத் தெரி கிறது. அப்படி அதிகரித்து வந்தும், மக்கள்தொகை துரிதமாகப் பெருகிவந்ததால், தலா உற்பத்தியின் வளர்ச்சி எதிர்பார்த்த அள வைக்காட்டிலும் குறைந்துவிட்டது. இருந்தும்கூடத் தலா உற் பத்தி ஆண்டொன்றுக்கு $1\frac{1}{2}$ சதவீதம் அதிகரித்துத்தான் வந் துள்ளது. இந்தியாவின் முன்னேற்ற நாட்டத்தோடும் அந் நாட்டி லுள்ள வறுமை நிலையோடும் ஒப்பிட்டுப் பார்த்தால் இந்த வளர்ச்சி வீதம் குறைவானது என்றுதான் சொல்லவேண்டும். எனினும், முன்னேற்றமடைந்துள்ள நாடுகள் அக்காலத்தில் அடைந்த வளர்ச்சி வீதத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் (சான்றாக, அமெரிக்கா அன்று வளர்ச்சியடைந்த வீதத்தோடு — நான்காம் அதிகாரத்திலுள்ள பட்டியல் 4—4-ல் உள்ள வீதத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால்) இந்த வளர்ச்சி வீதம் அவ்வளவொன்றும் குறைவானதன்று என்று தெரி யும். அதேபோல், பிரிட்டிஷ் ஆதிக்கத்தின்கீழ் இருந்தபோது இந்தியா அடைந்த வளர்ச்சி வீதத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால், இது எவ்வளவோ அதிகம் என்பது புலனாகும்.

சீனாவில்கூட மொத்த உற்பத்தியும் தலா உற்பத்தியும் அதிகரித்துத்தான் வந்துள்ளன. ஆனால், மொத்தத்தில் அதன் வளர்ச்சி வீதம் என்ன என்பதற்குரிய திட்டவட்டமான புள்ளி விவரங்கள் கிடையா. கிடைத்துள்ள புள்ளி விவரங்களைக் கொண்டு பார்த்தால், சீனாவின் முன்னேற்றம் ஒரே சீராக இல்லா மல் சில சமயம் மிகத் துரிதமாகவும் வேறு சில சமயம் திடீரென்று கீழே சரிந்தும் வந்துள்ளது என்பது தெரியும். எனினும், 'முன் னேற்றத்தை நோக்கி ஒரே தாவு' என்ற கொள்கையைக் கடைப் பிடிக்கும் வரை, இந்தியாவைக் காட்டிலும் சீனாவின் வளர்ச்சி வீதம் தான் அதிகமென்று சொல்லவேண்டும். குறிப்பாக, தொழில்துறை உற்பத்தி வீதம் அதிகமாக இருந்தது என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை. 1952 முதல் 1957 வரை சீனாவின் சில தொழில் துறைகள் ஆண்டொன்றுக்கு 15, 20 சதவீதம்கூட வளர்ச்சி பெற்று வந்தன. 1958-ல் விவசாயத்துறையில் நல்ல விளைச்சல் கிடைத்த தால் விவசாய உற்பத்தியும் அதிகரித்தது. இவ்வாறாக, 'முன் னேற்றத்தை நோக்கி ஒரே தாவு' என்ற கொள்கை அமலுக்கு வரு வதற்குச் சற்று முன்னர், சீனாவின் மொத்த உற்பத்தி ஆண் டொன்றுக்கு $4\frac{1}{2}$ சதவீதத்திற்குக் குறையாமல் அதிகரித்து வந்தது.

6 சதவீதத்தைக்கூடத் தாண்டியிருக்குமெனச் சீனா பெருமைப்படக் கூடும்.[19]

அதையடுத்து ஏற்பட்ட நெருக்கடியும், அந்த நெருக்கடிக்குப் பின்னர் தோன்றிய மீட்சியும், அதன் பின்னர் கலாசாரப் புரட்சியின் போது ஏற்பட்ட நெருக்கடியும், அதையடுத்து 1971-ல் தோன்றிய மீட்சியுமாகச் சேர்ந்து சீனாவின் பொருளாதாரத்தை அலைக்கழித்து விட்டன என்பது மட்டும் தெளிவாகத் தெரிகிறது; ஆனால் அவற்றைப்பற்றிய திட்டவட்டமான விவரங்கள் ஏதும் கிடையாது. 1972ஆம் ஆண்டிற்கு முந்திய பத்து ஆண்டுகளாகச் சீனாவின் விவசாய உற்பத்தியைப்பற்றியோ அல்லது தொழில் உற்பத்தியைப் பற்றியோ எந்த விதமான தகவல்களும் அதிகாரப்பூர்வமாக வெளி வரவில்லை. 1972-ல் தான் முதல் தடவையாக அதிகாரப் பூர்வமான புள்ளி விவரங்கள் வெளிவந்தன. அப்படி வெளிவந்த புள்ளி விவரங்களை ஐக்கிய நாடுகள் சபையைச் சார்ந்த பொருளாதார, சமூக விவகாரத் துறையினர் (U. N's Department of Economic and Social Affairs) World Economic Survey, 1971 New York, 1972 என்ற உலகப் பொருளாதாரச் சர்வேயில் தந்துள்ளனர். அந்தச் சர்வேயிலிருந்து எடுக்கப்பட்டதுதான் பட்டியல் 6-4-ல் உள்ள புள்ளி விவரங்கள். இப் பட்டியலிலுள்ள ஒருசில பண்டங்களின் உற்பத்தியை இந்தியாவின் உற்பத்தியோடு தோராயமாக ஒப்பிட்டுப் பார்த்தால் தெரியும் விவரங்கள் வருமாறு :

மேலும், 1971 ஆம் ஆண்டில் 'விவசாய உற்பத்தியும் தொழில் உற்பத்தியும்' சேர்ந்து 10 சதவீதம் அதிகரித்துவிட்டதாகச் சீன

| உற்பத்திப் பண்டம் | ஆண்டு | சீனா | இந்தியா |
|---|---|---|---|
| சிமெண்ட் (மில்லியன் டன்) ... | 1969 ... | 13.0 ... | 13.6 |
| தேனிரும்பு (மில்லியன் டன்) ... | 1969 ... | 15.0 ... | 7.5 |
| உருப்பெறாத எஃகு (மில்லியன் டன்) ... | 1968 ... | 15.0 ... | 6.4 |
| *அலுமினியம் (ஆயிரம் டன்) ... | 1969 ... | 132.6 ... | 120.0 |
| மின்சக்தி (மணிக்கு பில்லியன் கி. வா.) ... | 1969 ... | 65.0 ... | 56.2 |

[19] Ta-Chung Liu and Kung-Chia Yeh அவர்களின் 'The Economy of the Chinese Mainland : National Income and Economic Development' (Princeton : Princeton University Press, 1965) என்னும் நூலைப் பார்க்கவும்; குறிப்பாக 119-124 பக்கங்களைப் படிக்கவும்.

* பட்டியல் 6—4-லிருந்து வேறுவிதமாகத் தொகுக்கப்பட்டுள்ளது.

அரசாங்கம் ஐக்கிய நாடு சபைக்குத் தெரிவித்துள்ளது. இது உண்மையெனின், சீனாவின் வளர்ச்சி வீதம் இந்தியாவைக் காட்டிலும் கணிசமான அளவுக்கு அதிகமாயுள்ளது என்றுதான் சொல்ல வேண்டும். ஏனெனில், இந்தியாவின் வளர்ச்சி வீதமோ 1971-ல் 3 முதல் 5 சதவீதம்தான் என மதிப்பிடப்பட்டுள்ளது.

சீனாவில் அடிப்படையான தொழில் உற்பத்திகூடப் பெருமளவிற்கு ஏற்ற இறக்கம் அடைந்துள்ளதைப் பட்டியல் 6-4ஐப் பார்த்தாலே தெரிந்துவிடும். அப்படியிருக்க, அந்நாடு வருங்காலத்தில் எந்த அளவுக்கு முன்னேறக்கூடும் என்பதை முன்கூட்டியே கூறுவது மிகக் கடினம். ஒரு விதத்தில் பார்த்தால், சீனாவைப்பற்றி மட்டுமன்றி, இந்தியாவின் எதிர்கால வளர்ச்சியைப் பற்றியும், வளர்ச்சி குன்றிய ஏனைய நாடுகளின் வளர்ச்சி பற்றியும்கூட முன்கூட்டியே கூறுவது கடினம்தான். (சான்றாக, பாகிஸ்தானை எண்ணிப்பாருங்கள் : 1960-1969 -ல் பாகிஸ்தான் நல்ல முறையில்தான் வளர்ச்சி பெற்று வந்தது; அதன் பின்னர்க்கூட நல்ல வளர்ச்சி அடையக்கூடிய வாய்ப்பும் கொண்டிருந்தது. ஆனால் 1972-ல் அதன் கதி என்னவாயிற்று? அந் நாடே இரு நாடுகளாகப் பிரிந்துவிட்டதோடு, ஒன்றோடொன்று கடுமையாக மோதிக்கொண்டன.) மேலும், கடந்த கால முன்னேற்றமே திட்டவட்டமாகத் தெரியாத நிலையில், வருங்கால முன்னேற்றத்தைப்பற்றிக் கூறுவது எவ்வளவு கடினமானது என்பதை நீங்களே யூகித்துக் கொள்ளலாம். இருந்தபோதிலும், ஊகமாகக் கூறின், வருங்கால முன்னேற்றம் பின்வருமாறு இருக்கலாம் :

முதலாவது, இரண்டு நாடுகளுமே விவசாயத் துறையில் திருப்தியான அளவுக்கு முன்னேற்றமடைந்துள்ளன என்றுதான் கூற வேண்டும். இது மிக முக்கியமானதோர் உண்மை ; ஒரு விதத்தில் பார்த்தால் இம் முன்னேற்றம் எதிர்பாராதது என்றுகூடச் சொல்லலாம். ஏனெனில், மிக அண்மைக் காலம் வரை இரு நாடுகளிலுமே வானிலை மட்டுமன்றி, விவசாய நிருவாகமும் மோசமாக இருந்து வந்ததால் இரண்டு நாடுகளுமே முன்னேற்றமடைவது கடினம் என்றுதான் பலரும் கூறிவந்தனர். நிற்க, இந்தியாவிலும் சீனாவிலும் விவசாயத்துறையில் தொழில்நுட்ப முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது என்பதும் உண்மை. எனவே, தொழில் முன்னேற்றம் பாதிக்கப்படாத அளவுக்கு விவசாயத்துறை நல்ல முறையில் வளர்ச்சியடைந்துள்ளதாகவே தெரிகிறது.

இரண்டாவது, இவ்விரு நாடுகளுமே தத்தம் மக்கள்தொகைப் பிரச்சினையை இன்றும் தீர்த்தபாடில்லை. எனினும், அப் பிரச்

பட்டியல்

சீனா : பொருளாதார முன்னேற்றத்தைக்

(இதர அளவுகளில் குறிப்பிடப்பட்டவை தவிர

| பண்டம் | 1960 | 1961 | 1962 | 1963 |
|---|---|---|---|---|
| நிலக்கரி ... ... (ஆயிரம் டன்கள்) | 425 | 250 | 250 | 270 |
| பக்குவப்படுத்தப்படாத எண்ணெய் ... ... | 5.5 | 6.2 | 6.8 | 7.5 |
| இரும்புக்கனி ... ... | 30.3 | 19.3 | 16.5 | 19.3 |
| தேனிரும்பு ... ... | 27.5 | 15.0 | 15.0 | 17.0 |
| உருப்பெறா எஃகு ... ... | 18.5 | 9.5 | 10.0 | 12.0 |
| அலுமினியம் ... ... (ஆயிரம் டன்கள்) | 80.0 | 100.0 | 100.0 | 100.0 |
| பருத்தித் துணி ... ... | 7.6 | —— | —— | —— |
| சர்க்கரை ... ... ... | 1.3 | 1.2 | 1.3 | 1.8 |
| இரசாயன உரம் ... ... | —— | —— | —— | —— |
| சிமெண்ட் ... ... ... | 13.5 | 8.0 | 8.0 | 10.0 |
| மின்சக்தி (பில்லியன்கி.வா.) | 58.5 | —— | —— | —— |
| தானியங்கள்[b] ... ... | 157 | 155 | 166 | 170 |

மூலம் : Centre for Development Planning, Projections and Policies Asia and the Far East, Statistical Year Book of Asia and the Far East,

a வளர்ச்சி வீதம்பற்றி அதிகாரப் பூர்வமாக வெளிவந்த புள்ளி
b உணவுப் பொருளாகப் பயன் படுத்தப்பட்ட உருளைக்கிழங்கு உட்பட.

6 – 4

காட்டும் புள்ளி விவரங்கள், 1960—1971

ஏனைய அனைத்தும் மில்லியன் டன்களில் )

| 1964 | 1965 | 1966 | 1967 | 1968 | 1969 | 1970 | 1971 |
|---|---|---|---|---|---|---|---|
| 290 | 299 | 327 | 227 | 299 | 277 | 280-320 | 300-350 |
| 8.5 | 10.0 | 13.0 | 11.0 | 15 | 14.0 | 20.0 | 25.5 |
| 20.4 | 21.4 | 22.0 | 15.4 | 20.9 | —— | —— | 27.0[a] |
| 18.0 | 19.0 | 20.0 | 14.0 | 19.0 | 15.0 | 18.0 | 22.0 |
| 14.0 | 15.0 | 16.0 | 11.0 | 15.0 | 13.0 | 18.0 | 21.0 |
| 100.0 | 100.0 | 100.0 | 80.0 | 90.0 | 95.0 | 100-110 | —— |
| —— | —— | 5.9 | —— | —— | 7.0 | 8.5 | 9.0 |
| 2.0 | 2.2 | 2.4 | 2.6 | 2.5 | 2.7 | —— | —— |
| —— | —— | 8.5 | —— | —— | 9.0 | 14.0 | 16.8 |
| 10.5 | 11.0 | 11.0 | 11.0 | 9.0 | 13.0 | 14-16 | —— |
| —— | —— | 70.0 | —— | —— | 65.0 | 73-75 | —— |
| 180 | 188 | 187 | 196 | 194 | 202 | 240 | 246 |

of the United Nations Secretariat, based on Economic Commission for 1970; China Trade Report, December, 1971; Hsinhua Agency News Reports.

விவர அடிப்படையில் மதிப்பிடப்பட்டது.

சினையை ஒழித்துக் கட்டிவிட வேண்டுமென்று இரண்டுமே முனைந்துள்ளன.

மூன்றாவது, இவ்விரு நாடுகளுமே தத்தம் முதலீட்டு வீதத்தை ஓரளவுக்கு உயர்த்தி வந்துள்ளன; எனினும், அவ்வாறு முதலீட்டு வீதத்தை அதிகரிப்பதற்கென்று இந்தியா வெளிநாட்டு உதவியை யும் பெற்றுள்ளது; சீனாவோ பிற நாட்டு உதவி ஏதுமின்றிச் சொந்த மாகவே முதலீட்டு வீதத்தை உயர்த்தப் பாடுபட்டு வந்துள்ளது. மேலும், கல்வி, ஆராய்ச்சி, தொழில்நுட்பப் பயிற்சி, அறியாமையைப் போக்குதல் இன்னும் இவை போன்ற பிரச்சினைகளைப் பொறுத்த வரை, இந்தியாவைக் காட்டிலும் சீனாதான் மிகத் தீவிரமாகச் சமாளித்து வருவதாகத் தெரிகிறது.

நான்காவது, இந்தியாவும் சீனாவும் கடந்த சில ஆண்டுகளாக அடைந்து வரும் முன்னேற்றத்தை எண்ணிப்பார்த்தால், இவ்விரு நாடுகளுமே இன்னும் பல ஆண்டுகள் தொடர்ந்து முன்னேற வேண்டும் என்பது தெளிவாகத் தெரிகிறது. இன்றைய நிலையில், அரசியல் அடிப்படையில் மட்டுமன்றி, மக்களின் மனப்பான்மை அடிப்படையிலும் பார்க்கும்போது முன்னேற்றமடைவதற்கு வேண்டிய சாதகமான சூழ்நிலைகள் சீனாவில்தான் அதிகமாக இருப்பதாகத் தெரிகிறது. ஏனெனில், அந்நாட்டு மத்திய அரசு தன் நாட்டு மக்களையெல்லாம் கட்டுப்படுத்தக்கூடிய, தன் முன்னேற்றத் திட்டத்திற்கும் அம் மக்கள் ஒத்துழைப்புத் தரும்படி செய்யக்கூடிய சர்வாதிகாரம் கொண்டது. எனவே, சற்றுமுன்னர் நாம் சுட்டிக்காட்டியதுபோல் குடும்பக் கட்டுப்பாடு போன்ற திட்டங்களை இத்தகைய அரசாங்கம் மிகத் தீவிரமாகச் செயல்படுத்தி வெற்றியடையக் கூடும். தற்போது, சீன அரசாங்கம் குடும்பக் கட்டுப்பாட்டில் தீவிரமான அக்கறை கொண்டுள்ளதாகத்தான் தோன்றுகிறது. மேலும், இந்தியாவைக் காட்டிலும் சீன நாடுதான் அதிக முயற்சியுடனும் தீவிரத்துடனும் மட்டுமன்றி ஆர்வத்துடனும் (நீங்கள் விரும்பினால் திறனுடனும்) குறிப்பிட்ட குறிக்கோள்களை எப்படியும் அடைந்துவிட வேண்டுமென்ற உறுதியுடனும் முன்னேற முடியும். மாறாக, இந்திய அரசோ, சீனாவில் உள்ளதைப்போல் அவ்வளவு கெடுபிடியானது அன்று; அதோடு, சீனாவைக்காட்டிலும் முறையான மக்களாட்சி கொண்டது இந்தியா. அதோடு மட்டுமன்றி மொழி, சாதி, சமயம் ஆகியவற்றின் அடிப் படையில் மட்டுமன்றி, பிராந்திய அடிப்படையிலும்கூட இந்திய மக்கள் வேறுபட்டுள்ளனர். இத்தகைய சூழ்நிலையில் அந்நாட்டு மக்களையெல்லாம் ஒன்றுபடுத்தி, முன்னேற்றமடைய வேண்டு

மென்பதற்காக அவர்களைத் தீவிரமாகப் பாடுபடும்படி செய்வது அவ்வளவு எளிதான காரியமன்று.

ஆனால், ஒன்றை நாம் மறந்துவிடக்கூடாது. அதாவது, சீனாவைப்போல் பொருளாதார முன்னேற்றம் ஒன்றுதான் குறிக் கோள் என்று, அம் முன்னேற்றத்திற்காகவே முழுமூச்சாகப் பாடு படுவது நாட்டின் வளர்ச்சிக்கே இடையூறு விளைவித்துவிடலாம். எனவேதான், வருங்கால முன்னேற்றத்தைப்பற்றித் திட்டவட்ட மாகக் கூறுவது மிகக் கடினமான காரியமாக உள்ளது. சீனாவிலுள்ள ஆற்றல் மிக்க சக்திகளைக் கொண்டு சீக்கிரமாக முன்னேறிவிட முடியும் என்பதில் சந்தேகம் கிடையாது ; ஆனால், அதே சக்திகள் உள்நாட்டுக் குழப்பத்திற்கும் கலவரங்களுக்கும் கூடப் பயன்படுத்தப் பட்டு விடலாம். அவ்வாறு அந் நாட்டில் பயன்படுத்தப்பட்டதையும் நாம் மறந்துவிடக்கூடாது. அதே சமயம், இவ்விரு நாடுகளின் எதிர்காலம்தான் அரசியல் வாழ்விற்குமட்டுமன்றி, உலக விவகாரங் களுக்கும் அதிக முக்கியத்துவம் வாய்ந்தவை என்பதையும் நினைவு கொள்ள வேண்டும். இவையனைத்தையும் விட, இந் நாடுகளின் முன்னேற்றம்தான் உலக சமுதாயத்திற்கே முக்கியமானதாகும். எவ்வாறெனில், இந்தியாவும் சீனாவும், தத்தம் நாட்டிலுள்ள வறுமையை ஒழித்துக் கட்டிவிட்டால் போதும், அல்லது அவ்வறுமையைப் பெருமளவிற்குக் குறைத்துவிட்டால்கூடப் போதும், இவ்வுலகிலுள்ள வறுமையே பெரும்பாலும் குறைந்துவிட்டதுபோல் ஆகிவிடும். அதனால்தான், உலகிலுள்ள நன்மனதுடையோர் அனைவரும், இவ்விரு நாடுகளுமே முன்னேற்றமடைந்துவிட வேண்டுமென்று வாழ்த்துவதோடு, கடந்த 20 ஆண்டு காலமாக இவை இரண்டும் அடைந்துள்ள முன்னேற்றத்தைக் கண்டு, இரண்டுமே விரைவில் முன்னேறிவிடக் கூடுமென்று ஓரளவுக்கு நம்பிக்கையும் கொண்டுள்ளனர்.

# மேற்கோள் நூற்பட்டியல்

## ( Bibliography )

**Bergson,** Abram—*Planning and Productivity Under Soviet Socialism*, Columbia University Press (New York, 1968).

**Deane,** Phyllis - *The First Industrial Revolution*: Cambridge University Press (Cambridge, 1965).

**Fei,** John and Ranis, G. — *Development of the Labour Surplus Economy* (Homewood, Ill. Irwin, 1964).

**Higgins,** Benjamin — *Economic Development*, Norton (New York, 1968).

**Hirschman,** Albert, O. — *The Strategy of Economic Development*, Yale University Press (New Haven, 1958).

**Kuznets,** Simon — *Six Lectures on Economic Growth* - Ill, The Free Press (Glencoe, 1959).

**Lockwood,** W. W. — *The Economic Development of Japan: Growth and Structural Change, 1869-1938.* Princeton University Press, (Princeton, 1954).

**Maddison,** Angus — *Economic Progress and Policy in Developing Countries* ( Norton, New York, 1970).

**North,** Douglass, C. — *Growth and Welfare in the American Past* (Englewood Cliffs, N.J. Prentice-Hall, 1966).

**Nurske,** Ragner — *Problems of Capital Formation in Underdeveloped Areas* (Oxford University Press, New York, 1953).

**Pirenne,** Henri — *Economic and Social History of Medieval Europe*, Harcourt, Brace (New York, 1956).

# தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

## சென்னை - 600 031

தமிழில் பயில்பவர்க்குக் கல்லூரிப் பாடநூல்கள்

(Tamil Medium Books for Colleges)

1981 ஏப்பிரல் முடிய 906 நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன.

## மேலும் விரைவில் வெளிவருபவை

| | | | நூல் |
|---|---|---|---|
| கணிதவியல் | — | 1 | ,, |
| புள்ளியியல் | — | 1 | ,, |
| மருத்துவவியல் | — | 1 | ,, |
| வணிகவியல் | — | 1 | ,, |

கிடைக்குமிடங்கள் :

1. **தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனக் கிடங்கு**
விக்ரம் சாராபாய் மின்னணு வளாகம்
பலகை வாராவதி, திருவான்மியூர்
சென்னை - 600 041.

2. **தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்**
62, ஸ்பர்டாங்க் சாலை, சேத்துப்பட்டு
சென்னை - 600 031.

கிடங்கில் வாங்குவோர்க்கு 20% கழிவு வழங்கப்படும்.
பாடநூல் நிறுவனத்தில் வாங்குவோர்க்கு 10% கழிவு வழங்கப்படும்.